கழக வெளியீடு : கரு

உ
திருச்சிற்றம்பலம்
மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க

# சிவஞான சித்தியார்

## சுபக்க மூலமும்

௳

சிவஞான சுவாமிகள்
அருளிச்செய்த
## பொழிப்புரையும்

ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்
அருளிச்செய்த
## பதவுரையும்

௳

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை - 1.

# பதிப்புரை

சிவஞானசித்தியார் 'சிவாகமார்த்தங்களுக் கெல்லாம் உரையாணி' யாகும். அவ்வரிய நூற்கு மறைஞான தேசிகர், சிவாக்கிர யோகியர், நிரம்பவழகியர், ஞானப்பிரகாசர், சிவஞானசுவாமிகள் என்பவர்களால் இயற்றப்பட்ட உரைகள் வெளிவந்திருக்கின்றன. அவ்வுரைகளுள் ஞானப்பிரகாசருரை மட்டும் மூலத்திற்கு மாறுபாடாகச் சிவசமவாதங் கூறுவது. ஏனைப்பிறவற்றுள், முதனூல் சார்புநூல்களின் பொருள்களையும், வேதசிவாகமங்களின் பொருள்களையும், திருநெறித் தமிழ்வேதத்தின் பொருள்களையும் பொருத்தி முன்னொடுபின் மலைவுறுவகை விளக்குதலானும், இலக்கணப்பொலிவும் தருக்கவரம்பும் தம்முள் இயைந்தொளிருமாறு மூலத்தின் மெய்ப்பொருளை வடித்தெடுத்துரைக்கும் ஆதலானும் மிகச் சிறந்து நிற்பது மாபாடியகாரராகிய சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த பொழிப்புரையே யாகும்.

அப் பொழிப்புரையைத் தழுவித் திருவாவடுதுறையாதீனத்து கசு-வது மகாசந்நிதானமாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் பதவுரை இயற்றி யருளினார்கள்.

சிவஞானசித்தியார் படிக்க விரும்புவார்க்கு முன்பதிக்கப் பெற்ற பொழிப்புரை இப்பொழுது கிடைத்தல் அருமையாகின்றது. அதனால் புதிய பதிப்பொன்று எங்களாற் பதிக்கப்பெற்றிருக்கின்றது. இப்பதிப்பில் பொழிப்புரையுடன் பதவுரையுஞ் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இதனாற் சித்தியார் படிப்பவர்க்கு மிக்க நன்மையுளதாமென்பது சொல்லாமலே அமையும். இப் புதிய பதிப்பில் முற்பதிப்புக்களில் விளங்கலாகாப் பல மேற்கோள்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. அன்றியும் நூலாசிரியர் உரையாசிரியர்களிருவராகிய மூவர் வரலாறுகளும், அவர்களின் திருவுருவப்படங்களும் புதிய பதிப்புக் கேற்பப் புதியனவாய்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இப் பதிப்பு வெளிவருவதற்கண் எங்கட்குதவி புரிந்த பெரியார் பலர். அவர்களுள், இக்கழக வெளியீ டனைத்தினும் மிக்க மகிழ்ச்சிகொண்டு அச்சுப்பிரதிகளைப் பார்வையிட்டுப் பிழை திருத்தங்கள் செய்துவந்த காலஞ்சென்ற திருவாளர் தி. த. கனகசுந்தரம்பிள்ளை, பி. ஏ., யவர்களுக்கு மிகவும் நன்றி பாராட்டுகின்றோம். அவர்களுக்குப்பின் அச்சுப்பிழை முதலியன திருத்தி

எங்கட்குதவி புரிந்த சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர் திருவாளர் மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களுக்கும், ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் சரித்திரம் எழுதுதற்குக் குறிப்புப்பொருள்கள் உதவிய திருநெல்வேலி இந்து கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் மே. சோ. சுப்பிரமணியக் கவிராசரவர்களுக்கும், அக்குறிப்புக்களை ஒழுங்குபட அமைத்துச் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் சரித்திரம், அருணந்தி சிவம் சரித்திரம், சிவஞான சுவாமிகள் சரித்திரம் இவற்றை யெழுதி உதவிபுரிந்த ஷை இந்து கலாசாலைத் தமிழாசிரியர் திருவாளர் வி. சிதம்பர ராமலிங்கம் பிள்ளை யவர்களுக்கும் எங்கள் நன்றி கூறுகின்றோம்.

திருவெண்ணெய் நல்லூரில் உள்ள அருணந்தி சிவத்தின் சிலா விக்கிரகத்தை ஓவியம் எழுதுவோரைக் கொண்டு எழுதி யனுப்பி உதவிபுரிந்த பண்ணுருட்டி, புதுப்பேட்டை, ஸ்டாம்பு வெண்டர், திருவாளர் ச. அ. சிவசிதம்பரஞ் செட்டியார் அவர்கட்கும் எங்கள் நன்றியை உரிமைப்படுத்துகின்றோம்.

எங்கள் நன்முயற்சியிற் பெரியார் பலரும் உடனின் றுதவி புரியுமாறு முழுமுதற் கடவுளாகிய சிவபிரான் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

திருநெல்வேலி, } க. தை. எா. }

இங்ஙனம்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## இரண்டாம் பதிப்பு

முதற் பதிப்பினைப் பிழைபார்த்தும் கடின சந்திகளைப் பிரித்தும் உதவிய வித்வான் சைவத் திருவாளர் வே. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்களுக்கு எங்கள் நன்றி யுரியதாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

---

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடிவாழ்க.

# அருணந்தி சிவாசாரியர்

## சரித்திரச் சுருக்கம்

புண்ணிய பூமியாகிய தமிழ் நாட்டின் ஒரு பகுதியாகிய நடு நாட்டிலே, பெண்ணையாற்றின் வடகரையிலேயுள்ள **திருத்துறையூரிலே**, ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகட்குமுன், முப்பொழுந் திருமேனி தீண்டும் பெருவாழ்வும் புத்திர பரம்பரையாக ஆசாரியத் தன்மை யெய்துஞ் சிறப்பும் வாய்ந்த ஆதிசைவமரபிலே சைவசமயந் தழைத்தோங்குமாறு ஒருவர்[1] திருவவதாரஞ் செய்தருளினர். அவர் உரிய பருவங்களிலே உபநயன முதலாயினவும் சமயதீக்ஷை, விசேடதீக்ஷை, நிர்வாணதீக்ஷை, ஆசாரியாபிடேகங்களுஞ் செய்யப்பெற்று வேதாகம முதலிய சாத்திரங்களை ஓதி மெய்யறிவுடையராய்ச் **சகலாகமபண்டிதர்** என்னுஞ் சிறப்புப்பெயரெய்தித் தம் மாணாக்கர்களுக்குச் சித்தாந்த உபதேசஞ் செய்து வருவாராயினர்.

இங்ஙனம் நிகழுநாளிலே அந் நடுநாட்டிலேயுள்ள **திருப்பெண்ணாகடத்திலே** பரம்பரைச் சைவவேளாள குலத்திலே சிவபத்தி, அடியார் பத்திகளிலும், கல்வி செல்வங்களிலுஞ் சிறந்தவராகிய **அச்சுதகளப்பாளர்**[2] என்பவர், அச்சகலாகம பண்டிதர் மாணாக்கராய் விளங்கினர். அவர் நெடுங்காலமாகத் தமக்குப் பிள்ளைப்பேறில்லாக் குறையினால் வருந்தியவராய்த் திருத்துறையூர் வந்து, அக்குறை தீர்தற்கு ஒருவழி யருளிச் செய்யுமாறு தமதாசிரியரைப் பிரார்த்தித்தார். ஆசாரியர் அப் பிரார்த்தனைக் கிரங்கித் **திருநெறித் தமிழ்வேதமாகிய** தேவாரத்திருமுறையைப் பூசித்துக் கயிறு சாத்திப் பார்த்தபொழுது,

---

1. அவரது பெயர் **சதாசிவ சிவாசாரியர்** என்பது திருநெல்வேலி திருவாளர். S. **பால்வண்ண முதலியாரவர்கள்** கண்டது. அவர் **சுந்தரமூர்த்தி நாயனாரின்** மாமனார் **சடங்கவி சிவாசாரியர்** மரபில் இருபத்தோராந் தலைமுறையினரென்ப ஒருசாரார்.

2. இக்காலத் தாராய்ச்சியாளரில் ஒருசாரார் அச்சுதகளப்பாளர் முதலியாரெனவும், மற்றொரு சாரார் அவர் கார்காத்தாரெனவும் கூறுப.

[1]'பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே'

என்னுந் திருப்பாசுரம் எழுந்தது. ஆசாரியர் அதன் பொருளை யுணர்ந்து அச்சுதகளப்பாளரை நோக்கி, 'அன்பனே, உன் எண்ணம் நிறைவேறும். நீ திருவெண்காடு சென்று அங்கே யுள்ள[2] முக்குளதீர்த்தத்திலே நீராடிப் பிரமவித்தியா நாயகியா ரையும் சுவேதவனப் பெருமானையும் மிக்க பேரன்போடு வழி பட்டு வருவாயாக' என்றருளிச்செய்து அவருக்கு விடை கொடுத்தனர். அச்சுதகளப்பாளரும் தமதாசிரியர் கட்டளை யைச் சிரமேற் றாங்கித் தம் மனைவியாரோடும் திருவெண்காடு சென்று முக்குள தீர்த்தத்திலே நீராடி எம்பெருமானையும் பெரு மாட்டியையும் விதிப்படி வழிபட்டு வருவாராயினர். அந்நாளிலே ஒருநாள் சுவேதவனப்பெருமான் அவர் கனவிலே எழுந்தருளி வந்து, 'அன்பனே, உனக்கு இப்பிறவியிலே பிள்ளைப்பேறு அரிதாயினும், வேண்டிய வேண்டியாங் கருள்வதாய் நமக்கு மிக்க பிரீதி தருவதாயுள்ள தேவாரத் திருமுறையைச் சிறந்த பிரமாணமாகக் கொண்டு நீ ஒழுகுகின்றமையால், அத்தேவா ரத்தைப் பாடிச் சைவசமயமே மெய்ச்சமயமெனப் பல அற்புதங் களால் நிலைநிறுத்திய திருஞானசம்பந்தப்பிள்ளை போல்பவ னைத் தேவாரத்தின் மெய்ப்பொருளைச் சாத்திர வாயிலாய் வெளியிட்டுச் சைவஸ்தாபனஞ் செய்பவனாகிய ஒரு சற்புத் திரன் நமது திருவருளால் இத்தமிழ்நாட்டா ருய்யும்படி தோன் றுவான்' என்றருளிச்செய்து மறைந்தனர். அச்சுதகளப்பாளர் சிவபெருமான் தமக்கு அருள்செய்ததற்கு மிக மகிழ்ந்து அப் பெருமானை வழக்கம்போல வழிபாடுசெய்து வந்தார். இப்படிச் சில காலம் சென்ற அளவிலே அச்சுதகளப்பாளரின் திருமனைவி யார் உலகமெல்லாம் உய்தற்பொருட்டு வயிறு வாய்த்தார். அச்சுதகளப்பாளர் அது முதற் செய்யவேண்டுஞ் சடங்குகளைச் சிவாகம விதிப்படி இயற்றி வருவாராயினர். பத்து மாதங்களும் நிரம்பவே தமிழ் செய்த மாதவம் நிரம்பவும் சைவசமயந் தழைத்தோங்கவும் நல்ல சுப வேளையிலே ஒரு சற்புத்திரர் தோன்றியருளினார். அக்குழந்தைக்குச் சிவாகம விதிப்படி சாத கன்ம முதலியன செய்து, ஸ்ரீ சுவேதவனப்பெருமான் திருவரு ளாற் பிறந்தமையின் **சுவேதவனப் பெருமான்** என நாமகரணமு மிட்டு அச்சுதகளப்பாளர் அருமையாய் வளர்த்து வந்தனர்.

---

1. திருஞா., திருவெண்காடு., பண் சீகாமரம்., 2-ம் திருப்பாசுரம்.
2. சோம சூரிய அக்கினியென்னு முச்சுடர்களின் பெயர்பெற்ற குளம்.

இஃதிவ்வாறாகச் சுவேதவனப் பெருமானாரின் நன்மாமனார் திருவெண்ணெய் நல்லூரிலிருந்து வந்து குழந்தையைக் கண்டு மிக மகிழ்ந்து நம் இளம்பெருவாழ்வை அச்சுதகளப்பாளர்பாற் கேட்டுப் பெற்றுத் தாம் கொண்டு போய்த் தம்மூரிலே வளர்ப்பாராயினர். சுவேதனப் பெருமானும் நன் மாமனார் வீட்டிலே செல்வமாய் வளர்ந்து சிற்றில் அழித்தல், சிறுதேர் உருட்டுதல் முதலிய இளம்பருவச் செயல்கள் புரிந்து யாவரையும் உவப்பிப்பாரானார். ஆயினும் அவர் தம்மளவில் மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் விளங்கினர். இவ்வாறு அவர் இரண்டாண்டெய்தினர்.

அந் நாளிலே திருக்கைலாச மலையிலே கல்லால மர நீழலிலே தக்ஷிணாமூர்த்தியா யெழுந்தருளியிருந்த சிவபெருமான்பால் எல்லா ஆகமப் பொருள்களையும் மலைவற விளக்கும் சிவஞான போதத்தை உபதேசம் பெற்ற திருநந்திதேவர் மரபிலே வந்த பரஞ்சோதி மகாமுனிவர் திருவெண்ணெய்நல்லூர் வந்து மெய்யுணர்வின் முற்றுப்பேறுடைய சுவேதவனப் பெருமானைக் கண்டு அவர்க்குத் தீக்ஷை புரிந்து தாம் தம் குருவாகிய சத்திய ஞான தரிசனிகள்பாற் கேட்டவாறே சிவஞானபோதத்தை விளங்க உபதேசித்து அதனைத் தமிழ்நாட்டார் உய்யும்படி நூலாக்கி நல்குமா றருளிச்செய்து, பொய்ச்சமயங்களைக் கண்டுகழித்து மெய்ச்சமயமாகிய சைவத்தின் உண்மை உணர்ந்து அதனை நிலைநிறுத்துங் காரணத்திற்கும் தம் ஆசிரியர் திருப்பெயராகிய சத்தியஞானதரிசனிக ளென்பதற்கு மிணங்கச் சுவேதவனப் பெருமானுக்கு மெய்கண்டதேவர் எனத் தீக்ஷாநாமம் சாத்திச்சென்றனர். மெய்கண்டதேவர் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள பொல்லாப் பிள்ளையார் சந்நிதியில் சிவஞானபோதப் பொருளைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடித் தம் ஆசிரியராணையை மேற்கொண்டு தமிழ்நாடு உய்யும் வண்ணம் சிவஞான போதத்தை யாத்தருளிப் பல வுண்மைகளைத் தம்மை யடைந்த உத்தம பரிபக்குவிகளுக்குத் தெரிவித்து, சைவத்தை நிறீஇ விளங்குவாராயினர்.

இச்செய்தி குலகுருவாகிய சகலாகம பண்டிதர் செவிக்கும் எட்டியது. அவர் மிகவும் மகிழ்ச்சியடைந்து மெய்கண்டதேவரைக் காணுமாறு திருவெண்ணெய் நல்லூர் வந்து சேர்ந்தார். அச்சமயம் மெய்கண்டதேவர் தம் மாணாக்கர்களுக்குப் பதி, பசு, பாச மென்னும் முப்பொருள்களின் பொதுவியல்பு சிறப்பியல்புகளை அருளிச்செய்து கொண்டிருந்தார். சகலாகமபண்டிதர் அவ்விடம் வந்தவர் மெய்கண்டாரது கர்ணாமிர்தமான உபதேசங்களைக் கேட்டதும் அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கித்

தம்மை யாட்கொண்டருளுமாறு பிரார்த்தித்தார். மெய்கண்ட தேவரும் அவருக்கிருந்த பக்குவத்தைப் பார்த்து, அவருக்குத் தாம் அருளிச்செய்த சிவஞானபோதத்தை உபதேசம் செய்து, அருணந்தி சிவாசாரியர் என்னும் தீக்ஷா நாமம் சாத்தி, 'நீ இச் சிவஞானபோத நூற்பொருளை விரித்துப் பிற்காலத்தார்க்கினிது விளங்குமாறு ஓர் நூல்செய்க' என்றருளிச் செய்தனர். அவ் வாணையைச் சிரமேற்கொண்டு அருணந்திதேவ நாயனார் சிவஞான சித்தியாரென்னும் அரிய இந்நூலை அருளிச்செய்தனர். இந்நூல் சிவாகமங்களுக் கெல்லாம் உரையாணியென்று சொல்லப்படும் பெருமை வாய்ந்தது. இதுவேயுமன்றி இருபா இருபஃது என்னும் ஒரு சிறந்த நூலையும் இயற்றியருளினார். பின்பு அருணந்தி சிவா சாரியர் அவ் விருநூல்களையும் சிவஞானபோதத்தையும் திருப் பெண்ணாகடத்திலே அவதரித்த மறைஞானசம்பந்தருக்கு உபதே சித்து, சிவபெருமான் திருவடி நீழலெய்தினர். அந்நாள் புரட்டா சித் திங்கள் பூர நக்ஷத்திரம்.

## சைவசித்தாந்த சந்தானாசாரியர்கள்.

அகச் சந்தானாசாரியர் நால்வர்:

### தட்சிணாமூர்த்தி வழி

க. திருநந்தி தேவர், உ. சனற்குமார முனிவர், ந. சத்தியஞான தரிசனிகள், ச. பரஞ்சோதி முனிவர்.

புறச் சந்தானாசாரியர் நால்வர்:

### பரஞ்சோதிமுனிவர் வழி

க. மெய்கண்ட தேவர், உ. அருணந்தி சிவாசாரியர், ந. மறை ஞான சம்பந்தர், ச. உமாபதி சிவாசாரியர்.

### உமாபதிசிவம் வழி

க. அருணமச்சிவாய தேசிகர், உ. சித்தர் சிவப்பிரகாசர், ந. திரு வாவடுதுறைப் பிரதமகுரு மூர்த்திகளான ஸ்ரீநமச்சிவாய தேசிக மூர்த்திகள்.



சிவஞானமுனிவர்

[கா. பு.

உ

திருச்சிற்றம்பலம்.

திராவிடமாபாடிய கர்த்தராகிய

# சிவஞான சுவாமிகள்

## சரித்திரச் சுருக்கம்

*கருணைபொழி திருமுகத்திற் றிருநீற்று நுதலுங்*
*கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்*
*பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே*
*பிஞ்ஞகனர் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்*
*மருவினர்க ளகலாத ஞானமே வடிவாம்*
*வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தா*
*ளொருபொழுது நீங்காம லெமதுளத்திற் சிரத்தி*
*லோதிடுநா வினிலென்று முன்னிவைத்தே யுரைப்பாம்.*

பாண்டிய நாட்டிலே பொதியமலைச் சாரலிலே பாபவிநாச மென்னும் தலத்துக்கு அருகிலே விக்கிரமசிங்கபுரமென்னும் ஓர் ஊர் உள்ளது. அவ்வூரிலே சற்றேறக்குறைய இருநூறு ஆண்டு கட்குமுன் ஆனந்தக்கூத்த பிள்ளை யென்ற சைவவேளாளர் ஒருவர் இருந்தார். அவர் சிவபெருமானிடத்தும், அடியார்க ளிடத்தும் மிகுந்த பத்தியுள்ளவர். அவருடைய பத்தினியார் மயிலம்மையா ரென்னும் பெயருடையவர். அவ்வம்மையார் அருந்ததிக்கு ஒப்பான கற்பு உடையவர். இவர்களுடைய வம்சத்து முன்னோர்கள் அகத்திய மகாமுனிவரை நோக்கித் தவஞ் செய்து தமதுகுடும்பத்திலே ஏழு தலைமுறையளவும் அருட்கல்வி நிரம்பிய புத்திரர்கள் பிறக்க வரம்பெற்றிருந்தார்கள். அவ்விதம் ஏழாவது தலைமுறையாகத் தமிழ்நாடு செய்த தவத்தினாலே ஆனந்தக்கூத்தருக்கு மயிலம்மையார் திருவயிற்றிலே ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார். பெற்றோர்கள் அவருக்கு 'முக்களாலிங்கர்' எனப் பெயரிட்டார்கள். முக்களாலிங்கர் ஒழுக்கம், அன்பு, அருள் முதலிய நற்குணங்களோடு வளர்ந்துவந்தார்.

முக்களாலிங்கர் சிறுபிராயமா யிருக்கும்போது ஒருநாள் பாடசாலையில் படித்துவிட்டு வீட்டுக்குப் புறப்பட்டார். அப்பொழுது திருவாவடுதுறை ஆதீனத்திலுள்ள முனிவர்கள் சிலர் அப் பாடசாலை வீதிவழியாகச் சென்றார்கள். முக்களாலிங்கர் அவர்களைச் சந்தித்து வணங்கி, 'சுவாமிகளே! தாங்கள் அடியேன் வீட்டுக்கு எழுந்தருளித் திருவமுதுசெய்து செல்லுதல் வேண்

டும்' என்று பிரார்த்தித்தார். அம்முனிவர்கள் முக்களாலிங்கருடைய வேண்டுதலுக்கு இசைந்து அவர் வீட்டுக்குச் சென்றார்கள். அச்சமயம் அவர் தந்தையாராகிய ஆனந்தக்கூத்தர் வெளியே சென்றிருந்தார். மயிலம்மையார் அம்முனிவர்களை உபசரித்துத் திருவமுது செய்வித்தார். முக்களாலிங்கர் தமது கருத்துப்படி முனிவர்களை உபசரித்த தாயாரை,

'அருந்ததியென் னம்மை அடியவர்கட் கென்றுந்
திருந்த அமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு
மானந்த வாத மயில்'

என்று பாடினர். வெளியே சென்றிருந்த ஆனந்தக்கூத்தர் வீட்டுக்கு வந்து அங்கு நிகழ்ந்தவற்றைக் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்.

பின்பு, அம்முனிவர்களை ஆனந்தக்கூத்தர் வணங்கி நின்றனர். அப்பொழுது முக்களாலிங்கர் தாமும் அம்முனிவர்களோடு செல்லவேண்டுமென்று தெரியப்படுத்தினர். தகப்பனருக்குத் தம் புத்திரரை விட்டுப் பிரியச் சிறிதும் மனம் இல்லை. என்றாலும், தம்முடைய புத்திரர் நல்ல வழியிலே செல்கின்றாரென்னும் எண்ணத்தினலே முக்களாலிங்கரை முனிவர்களோடு செல்ல அவர் சம்மதித்தார். முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு அவ்வூரை நீங்கி வழியிலுள்ள சிவாலயங்களை வணங்கிக்கொண்டுசென்று திருவாவடுதுறையை அடைந்தார். அவர் மடாலயத்தினுள்ளே சென்று ஆதீன முதற்குருவாகிய நமச்சிவாய மூர்த்திகளைத் தரிசித்தார். பின்பு சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த **பின்வேலப்பதேசிக சுவாமிகளை** அவர் தரிசித்து அன்போடு வணங்கினர். பின்வேலப்பதேசிக சுவாமிகள், முக்களாலிங்கருடைய பக்குவமுதிர்ச்சியைக் கண்டு அவருக்குச் சைவசந்நியாசம் கொடுத்து சிவதீக்ஷை செய்து **சிவஞான யோகிகள்** என்னும் தீக்ஷைநாமம் இட்டு **மெய்கண்ட** சாத்திரத்தையும், **பண்டார** சாத்திரத்தையும் உபதேசித்தருளினர். சிவஞான யோகிகள் அகத்திய மகாமுனிவருடைய வரத்தால் அவதரித்தவராதலால், வடமொழிக்கடலும் தமிழ்மொழிக்கடலும் எளிதில் நிலைகண்டு உணர்ந்து மகா ஞானியாய் வீற்றிருந்தருளினர்.

சிவஞான யோகிகள் பின்பு உலகோபகாரமாகச் சிவஞான போதத்திற்குத் **திராவிட மாபாடிய** மென்னும் பேருரையும், **இலகு வியாக்கியானமாகிய சிற்றுரையும், சிவஞான சித்தியாருக்குப்** பொழிப்புரையும் செய்தருளினர்கள். இவையல்லாமலும்,

க. தொல்காப்பியச் சூத்திரவிருத்தி,
உ. சோமேசர் முதுமொழி வெண்பா,
௩. திருவேகம்பர் அந்தாதி,
ச. வடதிருமுல்லைவாயில் அந்தாதி,
ரு. குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி,
சு. கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி,
எ. செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்,
அ. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்,
கூ. கச்சி ஆனந்தருத்திரேசர் பதிகம்,
க0. செப்பறை அகிலாண்டேசுவரி பதிகம்,
கக. திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு,
கஉ. திருத்தொண்டர் திருநாமக்கோவை,
க௩. பஞ்சாக்கர தேசிகர் மாலை,
கச. தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பு,
கரு. ஹரதத்தாசாரியர்செய்த சுலோகபஞ்சகத்தின் மொழிபெயர்ப்பு,
கசு. அப்பயதீக்ஷிதர் செய்த சிவதத்துவவிவேக மூலமொழிபெயர்ப்பு,
கஎ. காஞ்சிப்புராண முதற்பாக மொழிபெயர்ப்பு,
கஅ. சித்தாந்தப் பிரகாசிகை மொழிபெயர்ப்பு,
ககூ. கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தரவிருத்தி,
உ0. இலக்கண விளக்கச் சூறாவளி,
உக. மரபட்டவணை மறுப்பின் மறுப்பு,
உஉ. எடுத்தென்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக் குப்பாயம்,
உ௩. சிவஞான சித்தியாருக்கு ஞானப்பிரகாச முனிவரியற்றிய சிவசமவாதவுரைமறுப்பு

என்பனவற்றை அருளிச்செய்தார்.

ஒரு சமயம், திருப்பாதிரிப்புலியூரிலுள்ள வித்வான்களும், பிரபுக்களும் ஒரு சபை கூடி நூறு பொன்னை ஒரு முடிப்பாக வைத்துக் 'கரையேற விட்ட முதல்வாவுன்னை யன்றியுமோர் கதி யுண்டாமோ' என்ற கடைசியடி வரும்படி ஒரு பாட்டுப் பாடின வர்கள் அந்தமுடிப்பை எடுத்துக்கொள்ளலாமென்று சொன்னார்கள். இச்செய்தியை அறிந்த ஒரு பிராமணன் அதைப் பெற விரும்பினான். அச்சமயம் சிவஞான யோகிகள் சுவாமி தரிசனம் செய்வதற்காக அவ்விடம் வந்திருந்தார். பிராமணன் அவர்களிடம் சென்று வணங்கித் தனது விருப்பத்தைத் தெரியப்படுத்தினான். அருள்வள்ளலாகிய யோகிகள், அவனுடைய

நிலைமையை யுணர்ந்து அப்பொன்முடிப்பை எடுத்துக்கொள்ளச் சொல்லிவிட்டு,

'வரையேற விட்டமுதஞ் சேர்ந்தனிட வருந்தினைவல் வினமென்றாலும்
உரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென் றுரைக்கிலென்னும்
நரையேற விட்டமுத ளைவனைக் கொண்டுநறும் புலிசைமேவும்
கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண்டாமோ'

என்று செய்யுளைப் பேசுவதுபோலப் பூர்த்தி செய்தருளினார்.

இவ்விதம் சிவஞானயோகிகள் உலகோபகாரமாக அநேக சாத்திரங்களையும், உரைகளையும், மறுப்புக்களையும் அருளிச் செய்து அவற்றையும் ஏனைய நூல்களையும்,

திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர், மதுரகவி தொட்டிக் கலை சுப்பிரமணிய முனிவர், காஞ்சிபுரம் சிதம்பர முனிவர், இலக்கணம் சிதம்பரநாத முனிவர், காஞ்சிபுரம் முத்துக்குமார சுவாமி தேசிகர், காஞ்சிபுரம் சரவணபத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை, திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார், கரவாந்தண்டலம் அடைக்கலங்காத்த முதலியார், கடம்பார் கோயில்ஸ்தானிகர் கலியாணசுந்தர உபாத்தியாயர் முதலிய நன்மாணாக்கர்களுக்குப் போதித்தருளினார்.

பின்பு தவமே திருவுருக்கொண்டு விளங்கிய சுவாமிகள் கிட்டையில் வீற்றிருந்தருளிச் சுத்தாத்துவித சித்தாந்த முத்தியடைந்தனர். சுவாமிகள் முத்தியடைந்த நாள் கொல்லம் ௯௱௬௰-ம்ஹு (மெய்கண்டான் ஆண்டு ௫௱௬௰௨) விசுவாவசு வருடம் சித்திரைமீ ஞாயிற்றுக்கிழமை ஆயிலிய நட்சத்திரமாம்.

[1]கலைதேர் நமச்சி வாயகுரு கருணைக் கடலிற் றிளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக் காமத் தறியை யறவீழ்த்தி
யலையுஞ் சமயத் தருக்களைக்கீ ழடிவே ரோடு மகழ்ந்தெறிந்திட்
டருளின் படாத்தை முகமேற்கொண் டாதிவேதா கமங்களெனுந்
தொலையா மணிக ளிருமருங்குந் தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்கமோடு முலகமுற்றுஞ் சுற்றும் வெற்றி வாரணமே
மலையா தருளு முனிவர் சிகா மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான வள்ளால் வருக வருகவே.

சிவஞான யோகிகள் சரித்திரச் சுருக்கம்

முற்றிற்று

---

1. இச்செய்யுள் பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் இயற்றியது.



திருவாவடுதுறை யாதீனத்து, ௧௯-வது, மகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ. சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்.

திருச்சிற்றம்பலம்

மெய்கண்ட தேசிகன் திருவடிவாழ்க

# சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

## சரித்திரச் சுருக்கம்

பாண்டிவள நாட்டிலே திரிகூடமலைச் சார்பிலே, 'போதும் பொன்னு முந்தியருவி புடைசூழக், கூதன்மாரி நுண்டுளி தூங் கும் குற்றாலம்' என்று திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் தேவாரம் அருளிச்செய்யும் பெருமை வாய்ந்த திருக்குற்றாலத் திருப்பதிக் கருகிலே யுள்ள மேலகரத்திலே பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே குற்றாலத் தலபுராண முதலிய பதினான்கு நூல்கள் செய்தருளி மிகுந்த பிரசித்தி பெற்ற திருகூட ராசப்பக் கவிராசருக்கு நான்காவது தலைமுறையிலே வந்த சுப்பிரமணியக் கவிராசரென்பவர் அடியார்பத்தி சிவபத்திகளிற் சிறந்து விளங்கித் தமக்குரிய இல்லற வொழுக்கத்திற் றவறாது, தமக்கு வழிவழிவந்த திருக்குற்றாலநாதர் கோயிலதிகாரத்தைச் செம்மையாக நடத்திவருவாராயினர். அவ்வாறு நடத்திவருங் காலத்திலே திருக்குற்றாலநாதர் திருவருளினாலே அவரின் இரண் டாவது மனைவியார் திருவயிற்றிலே இரண்டாவது புதல்வராகச் சாலிவாகன சகாப்தம் ௧௭௫௩-க்குச் சரியான விஜய வருடம் தைமீ ௩௨ ஞாயிற்றுக்கிழமையும் அவிட்ட நக்ஷத்திரமும் மீனலக்கினமுங் கூடிய சுபதினத்திலே பிறந்தனர் பிதா அக் குமாரருக்குச் செய்யவேண்டிய சடங்குகளனைத்தையும் சிவாகம விதி தவறாது பருவந்தோறுஞ் சிறப்புறச்செய்து குற்றாலலிங்க ரெனத் திருப்பெயர் சாத்தி ஐந்தாவது வயதிலே வித்தியாரம்பஞ் செய்வித்தனர். குற்றாலலிங்கரும் அக்கால வழக்கப்படி தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு என்னும் மூன்று மொழிகளையும் பயின்று வருவாராயினர்.

அவர் பன்னிரண்டாண்டு எய்திய காலத்திலே அவரின் பிதா திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துச் சின்னப்பண்டாரச் சந்நிதிகள் வாசஸ்தானமாகிய கல்லிடைக் குறிச்சித் தனிகை மடாலயத்திற்கு வந்து அங்கே வித்துவான் தம்பிரானாகி விருந்த இலக்கணம் அம்பலவாணத் தம்பிரான் சுவாமிக ளிடத்தே அவரை ஒப்புவித்து அவர்க்குத் தமிழ் கற்பிக்குமாறு வேண்டினர். சுவாமிகள் அதற்குடம்பட்டு அவர்க்குத் தாம் தமிழ் கற்பித்து வந்ததோடு ஆதீன வடமொழி வித்துவானா

யிருந்த வேதாந்தசாஸ்திரிகளிடம் வடமொழி பயிலுமாறும் செய்தனர். குற்ருலலிங்கக் கவிராயர் ஏனைய மாணுக்கர்களினும் சிறந்து தம் ஆசிரியர்கள் வியந்து மெச்சுமாறு கல்வி யறிவு ஒழுக்கங்களில் மேம்பட்டு விளங்கினுர்.

இஃதிவ்வாருகத் திருவாவடுதுறை யாதீனத்து மகாசந்நிதானமாக அப்பொழுது எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் தக்ஷிண தேச யாத்திரை புறப்பட்டுப் பல திருப்பதிகளும் சென்று 'சிவபுர' மாகிய திருநெல்வேலிக்கு வந்து ஈசான மடாலயத்தி லெழுந்தருளியிருந்தார்கள். அதனை யறிந்த நம் குற்ருலலிங்கக் கவிராயரும் அவரது பிதா முதலியோரும் திருநெல்வேலி வந்து குருமூர்த்திகளைத் தரிசித்துப் பிரியாதுடனுறைந்து வந்தார்கள். பின்னர்க் குருமூர்த்திகள் கல்லிடைக்குறிச்சி சென்றிருந்தபொழுது குற்ருலலிங்கக் கவிராயரது கல்வி யறிவொழுக்கங்களையும் தீவிரமான பக்குவத்தையுங் கண்டு அவர்க்கு ஆதீன சம்பிரதாயப்படி ஞானவழி தீக்கை செய்து அவரைச் சின்னப்பட்டமாக அபிடேகம் செய்து தம் ஞானசாரியர் திருநாமமாகிய சுப்பிரமணியதேசிகர் எனத் தீக்ஷா நாமஞ் சாத்தியருளினுர். அப்பொழுது சுவாமிகளுக்கு வயது பதினுன்கு.

ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் தளிகை மடாலயத்திலே ஒரு வருடமிருந்து தம் ஞானசாரியர்பால் ஆதீன சம்பிரதாய சாத்திரங்களை ஐயந்திரிபற ஓதியுணர்ந்தார்கள். அப்பால் நம் தேசிக சுவாமிகள் ஞானசாரியருடன் துறைசை சென்று மெய்கண்ட சந்தானந் தழைக்குமாறு வந்த ஆதீன பிரதம குருமூர்த்திகளாகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துச் சிலகாலமங்கிருந்து பின்னர் தக்ஷிணம் வந்து தமது மடாலயத்தி லெழுந்தருளியிருந்து அநேக நன்மாணுக்கர்கட்கு வித்துவான் தாண்டவராய சுவாமிகள், வேதாந்த சாஸ்திரிகளென்பவர்கள் பாடஞ் சொல்வதோ டமையாது தாமும் பாடங் கற்பித்து வந்தனர். அக்காலமே தமிழ்க்கல்வியும் சமயக்கல்வியும் நண்பினிகளிவளரத் தொடங்கிய காலமாகும்.

இவ்வாறு பன்னிரண்டு வருடங்கள் கழியவும் தேசிக சுவாமிகள் தம் ஞானசாரியரைத் தரிசிக்க வேண்டுமென்று விரும்பித் துறைசை சென்று ஞானசாரியரைத் தரிசித்தும், பின்னர்த் திருவண்ணமலை யாத்திரை செய்தும், தம் சந்தான ஆசிரியர்களாகிய மெய்கண்டதேவர் முதலிய நால்வர்களையும் திருவெண்ணெய்நல்லூர் முதலிய தலங்களிற் சென்று தரிசித்தும் துறைசைக்கு மீண்டெழுந்தருளியிருந்தனர். இக்காலத்திலே தான் திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஆதீன மகா

வித்துவானகக் கௌரவிக்கப்பட்டனர். பின்னர்த் திருப்பனந்தாளாதீனம் காசிவாசி இராமலிங்க சுவாமிகள் பிரார்த்தனைக்கிணங்கி உபய சந்நிதானங்களும் ஆங்குச் சென்று அச்சுவாமிகளுக் கனுக்கிரகித்து மீண்டார்கள. பின்பு நம் தேசிகசுவாமிகள் சிவஞான சித்தியாருக்கு மாதவச் சிவஞான சுவாமிகளருளிச் செய்த பொழிப்புரையைத் தழுவிப் பதவுரை பல அன்பர்கள் வேண்டுகோட் கிணங்கிச் செய்தருளினர்கள்.

அப்பால் நம் சுவாமிகள் சேதுமன்னரும் பிறரும் செய்த பிரார்த்தனைக்கிரங்கி இராமநாதபுரஞ் சென்று தரிசித்துத் திருப்பெருந்துறையி லெழுந்தருளியிருக்கும் நாளில் தக்ஷிணத்திலுள்ள அடியார்கள் வேண்டுகோட்படி தளிகை செல்லப் பிரயாணமாய் மதுரை வந்துசேரவும் தம் ஞானசாரியர் பரிபூரணமான செய்தி எட்டியது. அதனல் அவர்கள் துறைசைக்கு மீண்டு தம் குருமூர்த்திகளுக்குச் செய்யவேண்டிய கைங்கரியங்களனைத்தும் சிவாகம விதிப்படி செய்து பத்தாநாட் குருபூசையையும் மிக்க சிறப்புடன் செய்து அன்று முதல் ஆதீன பெரிய பட்டமாக எழுந்தருளியிருந்தார்கள்.

இஃதிவ்வாறுகத் திருநெல்வேலிக்கு மேற்காக மூன்று காவதத்திலுள்ள 'மங்கலப்பேட்டை' யென்று சொல்லப்படும் பேட்டை யென்னும் மூதூரிலே பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே தோன்றி இளமைப்பருவத்திலே திருவாவடுதுறையடைந்து வடமொழிக்கடலும் தமிழ்க்கடலும் நிலைகண்டுணர்ந்து தம் ஆசிரியராகிய அம்பலவாண தேசிகரிடத்தே மூவகைத் தீக்ஷையும் பெற்றிருந்து நமச்சிவாய சுவாமிகளென்பவர் ஆசிரிய விலக்கண மனைத்தும் அமைந்து அதிதீவிர பக்குவமுடையராய் விளங்குதல் கண்டு, அப்பெரியாரை நம் தேசிக சுவாமிகள் ஆதீன சம்பிரதாயப்படி பிரமோதூத வருடம் சித்திரைமீ சின்னப் பட்டமாக அபிடேகஞ் செய்தனர். அப்பால் தக்ஷிண யாத்திரை செய்யத் திருவுளங்கொண்டு நமச்சிவாய தேசிகரையும் உடன்கொண்டு திருப்பெருந்துறை, பிரான்மலை, திருக்கானப்பேர், திருவாலவாய் முதலிய திருப்பதிகளை வணங்கித் திருநெல்வேலி வந்து தளிகை மடாலயஞ் சென்று அங்கே ஆதீன வழக்கப்படி நமச்சிவாய தேசிகரை யிருக்கச்செய்து நம் சுவாமிகள் செவ்வந்திபுரத்தி லெழுந்தருளியிருந்து நாடோறும் பாபவிநாசப்பதி சென்று உலகம்மை சமேத முக்களாலிங்கப் பெருமானை வழிபட்டு வந்தார்கள். அக்காலத்திலே நம் சுவாமிகள், தமிழும் சைவமும் செய்த தவப்பயனக வந்த மாபாடியகாரராகிய சிவஞான சுவாமிகள் திருவவதாரஞ்செய்த விக்கிரமசிங்கபுரத்திலே அவர்கள் அவதாரஞ் செய்த கிருகத்தை

ஆதீனத்துக் குரிமையாக்கி அங்கே மாபாடியகாரரைப் பிரதிட்டை செய்து இரண்டு கால பூசைக்கு வேண்டும் நிபந்தம் அமைத்தருளினார்கள்.

சின்னாட் சென்றபின்பு தேசிகசுவாமிகள் நமச்சிவாய தேசிகருடன் மலைநாட்டுக்கு எழுந்தருளி ஆதீனச் சின்னப்பட்டத்திற்குரிய பழைய மடாலயமாகிய சுசீந்திர மடாலயத்தில் வீற்றிருக்கும்பொழுது அதனை யறிந்த அக்காலத்தரசராகிய ஆயிலியந்திருநாள் மகாராஜா அவர்கள் உபய சந்நிதானங்களையும் திருவனந்தபுரத்திற்கு எழுந்தருளுமாறு வேண்டினர். அதற்கிணங்கி உபய குருமூர்த்திகளும் அங்கு எழுந்தருள மகாராஜா அவர்கள் தமது அரண்மனையில் 'இலட்சுமி விலாசத்' தில் அவர்களை வரவேற்று உபசரித்தனர். ஒருவாரகாலம் உபய சந்நிதானங்களும் அவ்விடமெழுந்தருளியிருந்தார்கள். அரசர்பிரான் குருமூர்த்திகளுடன் அளவளாவி மகிழ்ந்து நாடோறும் நகர்வலம் செய்வித்தனர். அதுவுமன்றிச் சந்நிதானங்கள் மீளுங்காலத்துத் தந்தச்சிவிகை, குடை, கட்டிய வெள்ளித்தடி முதலியன சமர்ப்பித்துத் தாமும் சிறிதுதூரம் பின்சென்று விடுத்தனர். இந்நிகழ்ச்சியை அக்காலத்துச் சேதுவேந்தர்,

'திருமுகங்கொண் டணைந்தவர்க்கெச் சிறப்புமருள் கோதைநல் [குந் தேவே தன்பா
லொருமுகங்கொண் டணையிலவ னுதவியதோ வடிகள்புகுந் [துளதோ வின்ன
விருமுகனி லிறும்பூதிங் கேதுவென்பேன்'

என்று பாராட்டினர். அப்பால் தேசிக சுவாமிகள் பாண்டி நாட்டுக் கெழுந்தருளி, தளிகை மடாலயத்தில் நமச்சிவாய தேசிகரை அமரச்செய்து தாம் துறைசைக்கு மீண்டார்கள்.

நம் தேசிக சுவாமிகள் அருங்கலை விநோதர். மடாலயத்தில் எப்பொழுதும் தமிழ்ப்புலவர் குழாமும் வடமொழிப் புலவர் குழாமும் நிறைந்திருக்கும். சுவாமிகள் ஒவ்வொரு புலவருக்கும் அவரவர் தகுதி நோக்கிப் பரிசளித்து 'நீவிர் இன்னும் நன்கு கற்றுவரின் இதனினுஞ் சிறந்த பரிசு பெறுவிர்' என்று அவரை யூக்கி விடுத்தருளுவர். நம் சுவாமிகள் தமிழ்ப் புலவர்க்கோர் தாமரை நிதியம்; சமஸ்கிருதப் புலவர்க்கோர் சங்க நிதியம்; பொதுவாகக் கற்றாரனைவர்க்குங் கற்பகம். மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, காசிவாசி பரமசிவ சுவாமிகள், தில்லையம்பூர் சந்திரசேகர கவிராசர், சேதுபதிகள், வேதநாயகம் பிள்ளை, மகா வைத்தியநாதய்யர், ராஜு சாஸ்திரிகள், முத்து சாஸ்திரிகள் முதலிய பலரும் நம் சுவாமிகளை மிகவும் புகழ்ந்து போற்றிக் கொண்டாடினரென்றால், வேறு கூறற்

பாலது யாது? யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் மூன்று முறை யாதீனத்திற்கு வந்து சுவாமிகளைத் தரிசித்து மாபாடியத்தின் பெருமையையும் சந்நிதானம் மகாவித்துவா னென்பவர்களது இலக்கண விலக்கிய சாஸ்திர வாராய்ச்சி வன்மையையுங் கண்டு பெரிதும் பாராட்டி வணங்கிச் சென்றனர்.

ஆயிலியந் திருநாள் மகாராஜாவுக்குப் பின் வந்த அரசர் பிராகிய விசாகந் திருநாள் மகாராஜா அவர்கள் காசியாத்திரை முடித்து மீண்டு வரும்போது யாத்திரையின் பயன்காண்பா ரெனச் சித்திரபானுஸு தைமீ திருவாவடுதுறைக்கு வந்து குருமூர்த்திகளைத் தரிசித்து அங்கு ஒருநாளிருந்து கையுறை யாகக் கங்காஜலம், காண்டாமிருகக்கொம்பு, இரண்டு யானைகள் முதலியன சமர்ப்பித்துச் சென்றனர்.

'நாவலரேறு' என்று சொல்லப்படும் யாழ்ப்பாணத்து வடகோவைச் சபாபதி நாவலரவர்கள் நம் தேசிக சுவாமிக ளிடத்தே உபதேசம் பெற்று ஆதீனவித்துவானாய் விளங் கினார்கள்.

இனிச் சூரியனார்கோவி லாதீன மகாசந்நிதானமா யெழுந் தருளி மாபாடியம் வெளிவருவதற்குக் காரணராயிருந்த ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமார தேசிக சுவாமிகளும் நம் தேசிக சுவாமிகளிடத்தே அருளுபதேசம் பெற்றுச் சூரியனார் கோவிலுக்கு மகாசந்நிதான மாக அபிடேகஞ் செய்யப்பட்டவர்களே. திருப்பனந்தா ளாதீனத்து வீற்றிருந்தருளிய குமாரசுவாமி சுவாமிகளும் நம் தேசிக மூர்த்திகளின் மாணாக்கரே. நைட்டிகப் பிரமசாரியராய் விளங்கித் தேவாரத் திருமுறையை அச்சிட்டுபகரித்த மதுரை ஞானசம்பந்தப்பிள்ளையென்ற இராமசுவாமிப் பிள்ளையும் ஆதீன சீடரே. மகா வித்துவான்களாகிய பழனிக் குமாரசுவாமிகளும், ஆறுமுக சுவாமிகளும், மகாலிங்க சுவாமிகளும் ஆதீன வர்க்கத் தினரே. இவ்வாறாயின் நம் தேசிக சுவாமிகள் பெருமையை யளவிட்டுரைப்பதற்கு யாமா வல்லம்? சுருங்கக் கூறின் ஆதீன மாகிய சூரியன், தனது நண்பக னிலையினின்ற காலமே நம் சுவாமிகளது கௌரவ காலமாகும். இவ்விதம் விளங்கிய சுவாமிகள் சாலிவாகன சகம் கஎ௫௬ சர்வசித்து வருடம் கஅ௬௦ மார்கழித் திங்கள் உ௫-ம் நாள் சனிக்கிழமையும் நவமி திதியும் சுவாதி நக்ஷத்திரமுங் கூடிய நாளன்று பிற்பகல் சுத்தாத்துவித சித்தாந்த முத்தி யெய்தினர்.

சுப்பிரமணியதேசிக சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்

முற்றிற்று.

## சிவஞானசுவாமிகள் எடுத்தாண்ட நூல்கள்

| | |
|---|---|
| இரத்தினத்திரயம் | திரிகடுகம் |
| உண்மைவிளக்கம் | திருக்குறள் |
| காரைக்காலம்மை திருவந்தாதி | திருச்சிற்றம்பலக்கோவையார் |
| சங்கற்ப நிராகரணம் | துகளறுபோதம் |
| சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் | தேவாரம் |
| சர்வஞானோத்தரம் | தொல்காப்பியம் |
| சிவஞானபோதம் | தைத்திரீயம் |
| சிவப்பிரகாசம் | நன்னூல் |
| சிவகீதை | நாலடியார் |
| சிற்றம்பலநாடிகள் கலித்துறை | பெரியபுராணம் |
| ஸ்ரீகண்டபாடியம் | போற்றிப் பஃறொடை |
| சுவேதாசுவதரம் | வருணபத்ததி |
| சோமசம்பு பத்ததி | வாதுளாகமம் |
| ஞானாமிர்தம் | வாயுசங்கிதை |

# உள்ளுறை

## உரைப்பாயிரம்

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந்
    தீயிரும்பு பாணியுப்பு,
விண்ணனில முடலுயிர்நீர் நிழலுச்சிப்
    பளிங்குபகல் விளக்குப் பானீர்,
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிறிவரிய
    வத்துவிதக் கலவிகாட்டித்,
தண்ணணிவைத் தெனையாண்ட துறைசை நமச்
    சிவாயகுரு சரணம்போற்றி.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞான சித்தியார்

## சுபக்கம்

### மூலமும் உரையும்



சிவஞானபோத நூற்பொருள் பிற்காலத்தார்க்கு இனிது விளங்குமாறு விரித்தல் யாப்பான் நூல்செய்வான் புகுந்த ஆசிரியர், எடுத்துக் கொண்ட பொருள் இடையூறுதீர்ந்து இனிது முடிதற்பொருட்டும், இந் நூல் நின்று நிலவுதற்பொருட்டும், முதற்கட் செய்துகொண்ட கடவுள் வாழ்த்து மாணாக்கர்க்கு அறிவுறுத்தற் பொருட்டுச் செய்யுளால் தெரிக்கின்றார்.

### காப்பு

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
நால்வாய்ஐங் கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
தரும்ஒருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே
இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமும்ஒன்
றேவென்னச் செய்யுந் தேவே.

**சிவஞான முனிவரனார் இயற்றிய பொழிப்புரையின்படி**
**சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் எழுதிய பதவுரை**

**(பதவுரை.)** ஆறு - கங்கையும், தருகோட்டு அம் பிறை - தன்னால் தரப்பட்ட வளைவான் அழகுபெற்ற பிறையும், இதழி - கொன்றை மாலையும் (அணிந்த), தாழ் சடையான் தரும் - தாழ்ந்த சடையையுடைய சிவபிரான் அளித்தருளிய, ஒருகோட்டன் - ஒற்றைக் கொம்பையுடையனும், இரு செவியன் - இரண்டு (முறம் போலுஞ்) செவிகளையுடைய

னும், மும்மதத்தன் - மூன்று மதங்களை யுடையனும், நால்வாய் ஐங்கரத்தன் - நான்றவாயை யுடையனும் ஐந்து கரங்களை யுடையனுமாகிய, ஒரு வாரணத்தின் தாள்கள் - ஒப்பற்ற வாரண முகத்தானுடைய திருவடிகள், உருகு ஓடு அன்பொடும் - உருகுதலுடன் ஓடப்பெற்ற பேரன்பான், ஓவாதே வணங்கி - இடையறாது (தம்மை) வழிபட்டு, இரவு பகல் - இரவும் பகலும், உணர்வோர் சிந்தை - தியானிப்போர் அறிவின் கண்ணதாகிய, திருகு ஓட்டும் - மலக்கோணைத் துரக்கும், (அதுவேயு மன்றி), அயன் திருமால் செல்வமும் ஒன்றோ என்ன - அயன் அரி முதலியோர் வாழ்வும் ஒருபொருளன்றென வெறுப்ப, தேவே செய்யும் - சிவமாந்தன்மைப் பெருவாழ்வையுந் தரும் என்க.

## சிவஞான முனிவரனுர் இயற்றிய பொழிப்புரை

**(பொழிப்புரை.) கங்கையும் பிறையுங் கொன்றையும் அணிந்த சடையான் அளித்தருளிய ஒருகோடு முதலியவற்றை யுடையவனாகிய வாரணமுகத்தானுடைய திருவடிகள், பேரன்பான் இடையறாது தம்மை வழிபட்டுத் தியானிப்போர் அறிவின் கண்ணதாகிய மலக்கோணைத் துரக்கும்; அதுவேயுமன்றி அயன் அரி முதலியோர் வாழ்வும் ஒருபொருளன்றென வெறுப்பச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வையுந் தருமென்பதாம்.**

சிந்தைத் திருகோட்டித் தெய்வத்தன்மை செய்யவல்ல தாள்களுக்கு இடையூற்றை யோட்டி இந்நூன் முடிவுபெறச் செய்தல் அருமையன்று என்பது கருத்து.

கங்கையின் செருக்கடக்கிப் பிறையை வாழ்வித்த பெருமான் மகனாதலானும் அச்சீலமுடைமை தெளியப்படு மென்பார், ஆறுதரு கோட்டம் பிறையிதழித் தாழ்சடையான் தருமொரு வாரணமென்றார்.

இதழியுமுடன் கூறினர், திருவடையாள மாலையாதலின். இதழித் துணர்போலத் தாழ்ந்தசடையானென்ன உவமத்தொகையாகக் கொண்டுரைத்தலு மொன்று.

தருகோட்டு அம்பிறை: தன்னாற்றரப்பட்ட வளைவான் அழகுபெற்ற பிறை.

இருசெவியனென்றது, இசையெச்சத்தால், இரண்டு முறம் போலுஞ் செவியனெனப் பொருள்தந்து நிற்றலின், ஒருகோடு முதலியனபோலப் பிறிதின் இயைபுநீக்கிய விசேடணமாதற்கு இழுக்கின்மை யுணர்க.

யானையுறுப்புக் கழுத்திற்கு மேலன்றி இன்மையான் மும்மதத்தனாதல் யாங்ஙனமென்பார்க்கு, மும்மதம் யானைக்கு அடையென்பாரும், ஒருகோட்டன் முதலியனபோல மும்மதத்தனென விநாயகப்பிரானுக்கேயடையாய் நிற்றலின் யானைக்கடையாமாறு யாங்ஙனமென மறுத்து இச்சா ஞானக்கிரியைகள் ஈண்டு மும்மதமென உருவகஞ் செய்யப்பட்டனவென் றுரைப்பாரும், ஒருகோடு முதலிய ஏனையடையெல்லாம் உறுப்பினையே யுணர்த்தி நிற்றலின் இதுமாத்திரம் இனம் பற்றாது உருவகமாதல் செல்லாமையானும் உருவகஞ்செய்தற்குரிய

தோர் இயைபுவிசேடம் இன்மையானுங் கந்தன் முதலியோரையும் அக்கருத்துப்பற்றி மும்மதத்தனெனல் யாண்டும் இன்மையானும் அதுவும் உரையன்றென மறுத்துப் பஞ்சாக்கரத்தின் பேதமாகிய எட்டெழுத் தாறெழுத்து நாலெழுத்து முதலியனவும் பஞ்சாக்கரமென வழங்கப்படுமாறுபோல மும்மதத்தின் வகையாகிய ஒருமதமும் இருமதங்களும் மும்மதமென வழங்கப்படுமாகலின் அதுபற்றி ஆசங்கை யென்னையென்று ஒழிவாருமுளர்.

வாரணமுஞ் சிந்தையும் ஆகுபெயர். திருகு முதனிலைப்பெயர். ஓகாரம் எதிர்மறை. இஃதெண்ணலங்காரம்.

ஈண்டு [1]"இறைவனையும் இறைவனுலியம்புநூலும் ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி-முறைமைகளும் பெத்தமொடு முத்தியெல்லாம்" என்றெடுத்துக்கொண்ட முறையே வைத்துப் பரபக்கங்களை எடுத்தோதி மறுத்த ஆசிரியர், இனி அம்முறையே சுபக்கங் கூறுகின்றார்.

---

1. இந்நூற் பரபக்கம், பாயிரம், இறைவனையும், க0.

# பாயிரம்

## மங்கலவாழ்த்து

### சிவபெருமான்

அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது உடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்கு
அறிவினி லருளான் மன்னி அம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.

(ப - ரை.) *அறுவகைச் சமயத்து* - (புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னும் நான்கனுள் அகச்சமயம் ஒழித்து ஒழிந்த முக்கூற்றுப் புறங்களிலே தனித்தனி) அறுவகைப்பட்ட சமயங்களினின்றுகொண்டு, ஓர்க்கும் - (அவற்றுள்ளும் பலவேறு வகைப்பட) ஆராய்ந்தறிகின்ற, அவ்வவர் பொருளாய் - அவரவர் கொண்ட முதற்பொருளாய், வேறுங் குறியது உடைத்தாய் - அவரின் வேறாகிய (பாடாண்வாத முதலிய அகச்சமயத்தார்க்கு இலயம் போகம் அதிகாரமென்னும் மூன்றவத்தை யின் முறையே [1]**சத்தியும் உத்தியோகமும் பிரவிருத்தியு** மென்னுந் தொழில் வேறுபாடுபற்றிச் சிவன் சதாசிவன் மகேசனென்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவமென்னுந் (தடத்தக்) குறியே குறியாகவுடைத்தாய், வேதாகமங்களின் குறி இறந்து - (சித்தாந்த சைவர்க்கு அத் தடத்தக்குறியேயன்றி) வேதாகமங்களின் கருத்திற்கு அதீதமாய், அறிவினில் அருளான் மன்னி - உயிர்க்குயிராய், அங்கு அம்மையோடு அப்பன் ஆகி - (உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும்) அம்மை அப்பனுமாகி, செறிவு ஒழியாது நின்ற - (எங்கணும் எக்காலமுஞ்) செறிந்து வியாபகமாய் நின்ற, சிவன் அடி சென்னி வைப்பாம் - சிவபிரான் திருவடியைச் சிரமேற்கொள்வாம் என்க.

(பொ - ரை.) புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னும் நான்கனுள் அகச்சமயம் ஒழித்தொழிந்த முக்கூற்றுப் புறங்களில் தனித்தனி அறுவகைப்பட்ட சமயங்களில் நின்றுகொண்டு அவற்றுள்ளும் பலவேறுவகைப்பட ஓர்த்துணர்கின்ற அவரவர் கொண்ட முதற்பொருளாய், அவரின் வேறாகிய பாடாணவாத முதலிய அகச்சமயத்தார்க்கு இலயம் போகம் அதிகாரம் என்னும் மூன்றவத்தையின் முறையே சத்தியும் உத்தியோகமும் பிரவிருத்தியுமென்னுந் தொழில் வேறுபாடுபற்றிச் சிவன் சதாசிவன் மகேசனென்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவமென்னுந் தடத்தக் குறியே குறியாகவுடைத்தாய்ச், சித்தாந்த சைவர்க்கு அத்தடத்தக்குறியேயன்றி வேதாகமங்களின் கருத்திற்கு அதீதமாய், உயிர்க்குயிராய், உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும் அம்மையப்பனுமாகி, எங்கணும் எக்காலமுஞ் செறிந்து வியாபகமாய்நின்ற சிவபிரான் திருவடியைச் சிரமேற் கொள்வாம் எ - ம்.

---

1- அறிவுநேர்க்கம், ஊக்கம், உழைப்பு.

பரபக்கத்துட் புறப்புறச் சமயத்தாரையும் புறச் சமயத்தாரையும் மறுப்பவே, அம்முறைபற்றி அகப்புறச் சமயத்தாரும் மறுக்கப்பட்டாரே யாவரென்னுங் கருத்தான் அவரையு முடன்றழுவ அறுவகைச் சமயத் தெனப் பொதுப்படக் கூறினர்.

ஓர்த்தல் - ஆராய்தல். விசேடியம் அடியாகலின் உடைத்தா யென்றார். சிவனடி என்றது உபசாரம்.

இதனுள், அறுவகைச் சமயத்து ஓர்க்கும் அவ்வவர் பொருளா யெனவே மேற்கூறிப்போந்த பரபக்கத்துப்பொருளும், வேறாங்குறியது வுடைத்தாயெனவே முதற்சூத்திர முதலிய ஐந்து சூத்திரத்திற் பெறப்படுந் தடத்தப்பொருளும், வேதாகமங்களின் குறியிறந்தெனவே இரண்டும் அன்றி ஏனைச் சொரூபலக்கணங் கூறும் ஆறாஞ் சூத்திரப் பொருளும், அறிவினிலெனவே ஆன்ம சொரூபங்கூறும் ஏழாஞ் சூத்தி ரப்பொருளும், அருளான் மன்னியெனவே ஞானதரிசனங் கூறும் எட்டாஞ் சூத்திரப் பொருளும், அம்மையோ டப்பனாகியெனவே ஞானமு ஞேயமு ஞாதிருவுமாகக் காணப்படும் ஒன்பதாஞ் சூத்திரப் பொருளும், செறிவொழியாது நின்றவெனவே ஏகனாகி நிற்றல் கூறும் பத்தாஞ் சூத்திரப் பொருளும், சிவனடி சென்னி வைப்பாமெனவே அரன்மலரடிக்கீழ் இருத்தல் கூறும் பதினோராஞ் சூத்திரப் பொருளும், சென்னி வைப்பாமென்னுஞ் சொல்லியல்பான் அணைந்தோர் தன்மை கூறும் பன்னிரண்டாஞ் சூத்திரப்பொருளுங் குறிப்பான் அறியக் கிடந்தன.

இங்ஙனந் தொகுத்துக்காட்டுதல் மங்கல வாழ்த்துக்கு இலக்கண மென உணர்க.

இனி, இதனுட் கூறப்படும் அறுவகை வினையெச்சங்களானும் முதல்வனுடைய அறுவகைக் குணங்களுங் கூறப்பட்டனவென் றுரைத் தலுமொன்று.

அது காட்டுதும்: அவ்வவர் பொருளாயென்றதனால் அங்ஙனம் பல வேறு வகைப்பட நிற்கும் அநந்த சத்தியாகிய அளவிலாற்றலுடைமை கூறப்பட்டது; வேறாங்குறியது வுடைத்தாயென்றதனால் அநாதிபோதம் அநாதி முத்தத்தன்மை யெனப்படும் இயல்பாகவே பாசங்களினீங்குதல் கூறப்பட்டது—நிராமயான்மா வெனப்படும் இயற்கையுணர்வினனாதலு மீண்டே யடங்கும்; வேதாகமங்களின் குறியிறந்தென்றதனாற் சுதந்திர ரெனப்படுந் தன்வயத்தனாதல் கூறப்பட்டது; அறிவினிலருளான் மன்னியென்றதனாற் சர்வஞ்ஞத்துவமெனப்படும் முற்றுமுணர்தல் கூறப்பட்டது; அம்மையோடப்பனாகி யென்றதனால் அலுத்தசத்தி யெனப்படும் பேரருளுடைமை கூறப்பட்டது—விசுத்த தேகமெனப் படுந் தூயவுடம்பினனாதலும் ஈண்டே அடங்கும்; செறிவொழியாது என்றதனாற் பூர்த்தியெனப்படும் வரம்பிலின்பமுடைமை கூறப்பட்ட தென்றுணர்க. இன்னும் விரிப்பிற் பெருகும். (க)

---

## முன்னூற் சிறப்பு

என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி னாலே தாள்இணை தலைமேற் சூட்டும்
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண்டான்
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றாம். [நூல்

(ப - ரை.) என்னை - (பவமாயக் கடலிலழுந்துகின்ற) என்னை, இப்பவத்திற் சேராவகை அருளினாலே எடுத்து - அதன்கண் அழுந்தாத வண்ணம் கருணைக்கையாலெடுத்து, என் சித்தத்தே தன்னை வைத்து - என்னறிவின்கண்ணே தற்சொரூபத்தை விளக்குதற் கெழுந்தருளி வந்து, தாள் இணை தலைமேற் சூட்டும் - திருவடிகளைச் சென்னியிற் சூட்டித் தீக்கை செய்தருளிய, மின் அமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் - மின்னலையுடைய மேகந் தங்குதற்கிடமாகிய சோலைகள் சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூரென்னுந் திருப்பதியில் விருப்பமுற்று வாழ்கின்ற, மெய்கண்டான் நூல் - மெய்கண்டதேவ நாயனார் அருளிச் செய்த) சிவஞானபோத நூலை, சென்னியின் கொண்டு - (ஏனை ஆசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட்கெல்லாஞ்) சிரத்தானமாகக் கொண்டு, சைவத்திறத்தினைத் தெரிக்கலுற்றாம் - (அதனிற் கூறப் படுஞ்) சைவாகமப் பொருட்கூற்றை விளக்குவாம் என்க.

(பொ - ரை.) பவமாயக்கடலி லழுந்துகின்ற என்னை அதன் கண் அழுந்தாதவண்ணங் கருணைக்கையாலெடுத்து என்னறி வின்கண்ணே தற்சொரூபத்தை விளக்குதற் கெழுந்தருளிவந்து திருவடி சென்னியிற் சூட்டித் தீக்கைசெய்தருளிய வெண்ணெய் மெய்கண்டதேவ நாயனார் அருளிச்செய்த சிவஞானபோத நூலை, ஏனையாசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட்கெல்லாஞ் சிரத்தானமாகக் கொண்டு, அதனிற் கூறப்படுஞ் சைவாகமப் பொருட்கூற்றை விளக்குவாம் எ - ம்.

இந்நூலுக்கு வழி கூறியவாறு. எடுத்தென்றது தறிப்புருவகம். வைத்து என்றது உபசாரவழக்கு [1]"அன்போ டியைந்த வழக்கு" என்றாற்போல. சென்னியின் இன் உவமவுருபு. (உ)

---

1. திருக்குறள், அன்புடைமை, அன்போ, ௩.

## நுதலிய பொருள் முதலியன

பண்டைநற் றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்
தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன் மார்க்கர்
கண்டநூல் ஓதி வீடு காதலிப் பவர்கட்கு ஈசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றாம்.

(ப - ரை.) (சாமுசித்தர் வைநயிகர் பிராகிருதரென்னு மிவருள் ஆற்றலும் அறிவுங் காதலுமில்லாத பிராகிருதரை ஒழித்து ஒழிந்த இருவரின்) பண்டை நல்தவத்தால்-முற்செய் தவவிசேடத்தால், தோன்றி - (சாமுசித்தராய்ப்) பிறந்து, பரமனைப் பத்திபண்ணும் தொண்டரை - முதல்வனிடத்தே (வீடுகாதலித்துப்) பத்திபண்ணுகின்ற சிவபத்தரை, தானே - (விஞ்ஞானகலர் பிரளயாகலரைப்போல நூல்வழியாலன்றித்) தானே, தூய கதியினில் தொகுப்பன் - சிவகதியிற் சேர்த்துவனாகலின் (அவர்க்கு நூல் வேண்டாமையான்), மார்க்கர் - ஞானிகளெல்லாம், கண்ட நூல் ஓதி - பிரமாணமென்றறிந்து கைக்கொண்ட நூலை ஓதி (அதன்வழியான்), வீடு காதலிப்பவர்கட்கு - (முறைமையின் மந்ததர முதலிய சத்திநிபாத முடையராய்) முத்திபெற விரும்பும் வைநயிகராயினார்க்கு, ஈசன் புண்டரிகத்தாள் சேரும் பரிசினை - சிவபெருமானுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடி கூடு முறைமையினை, புகலலுற்றாம் - (ஈண்டு வகுத்துக்) கூறுகின்றாம் என்க.

(பொ - ரை.) சாமுசித்தர் வைநயிகர் பிராகிருதரென்னு மிவருள், ஆற்றலும் அறிவுங் காதலுமில்லாத பிராகிருதரை யொழித்து, ஒழிந்த இருவரின் முற்செய் தவவிசேடத்தாற் சாமுசித்தராய்ப் பிறந்து வீடு காதலிக்குஞ் சிவபத்தரை விஞ்ஞானகலர் பிரளயாகலரைப்போல நூல்வழியானன்றித் தானே சிவகதியிற் சேர்த்துவனாகலின் அவர்க்கு நூல் வேண்டாமையான், முறைமையின் மந்ததரமுதலிய சத்திநிபாதமுடையவராய் நூல்வழியான் முத்திபெற விரும்பும் வைநயிகராயினார்க்குச் சிவகதி கூடுமுறைமையினை ஈண்டு வகுத்துக் கூறுகின்றாம் எ-ம்.

சன்மார்க்கரை மார்க்கரென்றது தலைக்குறை. சன்மார்க்கராவார் ஞானிகள். கண்டநூல் அவர்களெல்லாம் பிரமாணமென்றறிந்து கைக்கொண்ட நூல். நுதலியபொருளுங் கேட்போரும் பயனுங் கூறியவாறு. (௩)

---

## அவையடக்கம்

மறையினன் அயனன் மாலான் மனத்தினன் வாக்கான் மற்றுங்
குறைவிலா அளவி னலுங் கூறுெண தாகி நின்ற
இறைவனர் கமல பாதம் இன்றுயான் இயம்பும் ஆசை
நிறையினர் குணத்தோர்க் கெல்லாம் நகையினை நிறுத்து மன்றே.

(ப - ரை.) *மறையினல் - வேதங்களினலும், அயனல் - அயன லும், மாலால் - மாலாலும், மனத்தினல் - மனத்தினலும், வாக்கால் - வாக்கினலும், மற்றும் குறைவு இலா அளவினலும் - வேறுங் குறைவில் லாத அநுமானப் பிரமாணத்தாலும், கூற வொணுது ஆகிநின்ற - அறி தற்கு அரிதாய் நின்ற, இறைவனர் கமல பாதம் - முதல்வனது கமல மலர்போலும் பாதமென்றுபசரித்துக் கூறப்படும் இயல்பை, இன்று யான் இயம்பும் ஆசை - இன்று யான் சொல்லுவலென்றெழுந்த எனது புல்லிய ஆசை, நிறையினர் குணத்தோர்க்கெல்லாம் - சால்புடையாராய குணத்தினையுடையா ரெல்லார்க்கும், நகையினை நிறுத்தும் அன்றே - ஏ ஏ இஃதோ இவன் அறிவென்று எள்ளி நகையாடுதற்கு ஏதுவாம் என்க.*

*இனி, மறையினல் - வேதங்களாலும், அயனல் - அவ்வேதத்திற்கு அங்கமாய் அயனற்செய்யப்பட்ட பதினெண்புராண நூல்களாலும், மாலால் - மாயோனவதாரமாகிய வியாசனற் செய்யப்பட்ட இதிகாச நூலாலும், மனத்தினல் - மனுமுதலிய இருடிகள் மனத்தான் நினைந்து செய்யப்பட்ட மிருதிநூல்களாலும், வாக்கால் - அவ்வேதத்தைக் கரும காண்டம் ஞானகாண்டமென்று இருவகைப்படுத் தெடுத்துக்கொண்டு அதன் பொருளை நிச்சயித்துரைக்குஞ் சாத்திரமாகிய பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சைகளாலும், மற்றுங் குறைவு இலா அளவினலும் - வேறுங் குறைவில்லாத அளவை நூலாகிய தருக்கசாத்திரங்களாலும், கூற ஒணுது ஆகி நின்ற இறைவனர் கமலபாதம் - சொல்லுதற்கு அரி தாய் நின்ற சிவபிரான் கமலபாத மென்றலுமொன்று.*

**(பொ - ரை.) வேதமுதலியவற்றுனும் அறிதற்கரிய முதல்வ னது இயல்பை யான் சொல்லுவல் என்றெழுந்த எனது புல்லிய ஆசை, சால்புடையாரெல்லாரும் ஏ ஏ இஃதோ இவன் அறி வென்று எள்ளி நகையாடுதற்கு ஏதுவாம் எ - ம்.**

*அயனன் மாலான் மனத்தினன் வாக்கானென்புழி, ஆனுருபு முன் னைய இரண்டும் வினைமுதற்பொருண்மையினும், பின்னைய இரண்டுங் கருவிப்பொருண்மையினும் வந்தன; சாத்தனற் கண்ணன் நோக்கப் பட்டது என்றாற்போல.*

*ஈண்டு அளவென்றது அநுமானப்பிரமாணத்தை. அயன்மா லென்றது* **உபலக்கணம். கூறுெணுதென்றது உபசாரம்.**

**இனி, அயனென்றது அவ்வேதத்திற்கு அங்கமாய் அயனற் செய் யப்பட்ட பதினெண் புராணநூலையும், மாலென்றது மாயோனவதார**

மாகிய வியாதனாற் செய்யப்பட்ட இதிகாச நூலையும், மனமென்றது மனுமுதலிய இருடிகளான் மனத்தான் நினைந்து செய்யப்பட்ட மிருதி நூலையும், வாக்கென்றது அவ்வேதத்தைக் கருமகாண்டம் ஞானகாண்டமென் றிருவகைப் படுத்தெடுத்துக்கொண்டு அதன்பொருளை நிச்சயித் துரைக்கும் சாத்திரமாகிய பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சைகளையும், அளவென்றது அளவைநூலாகிய தருக்கசாத்திரத்தையும், ஆகுபெயரான் உணர்த்தின எனக்கொண்டு வேதத்தானும் அதற்கங்கமான புராணம் இதிகாசம் மிருதி மீமாஞ்சை தருக்கங்களானுங் கூறுணாத பாதமென் றுரைத்தலு மொன்று.

அவையடக்கங் கூறியவாறு. (சு)

---

## ஆசங்கை நீக்கல்

அருளினால் ஆக மத்தே அறியலாம் அளவி னாலுந்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலாம் இரிக்க லாகும் அடியரோடு இருக்க லாமே.

(ப - ரை.) (இறைவனியல்பு அப்பெற்றித்தாயினும்) சிவனை - அவ் விறைவனை, ஆகமத்தே - (அவனருளிய நூலெனப்படும் வேதசாரமாகிய) சிவாகமத்தின், அருளினால் அறியலாம் - (அனுபவமுடைய தேசிகர்) அருளிச்செய்யும் உபதேசத்தாற் கேட்டறியலாம், அளவினாலும் தெருளலாம் - (கேட்டதனை அதற்கனுகூலமான) அளவையாற் சிந்தித்தும் அறியலாம், சிந்தையுள்ளே - (சிந்தித்ததனைத்) தன்னறிவின் கண்ணே, ஞானச் செய்தியால் மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம் - சிவஞானத்தான் மாசறத் தெளிந்தும் அறியலாம், பிறவி மாயா இருளெலாம் இரிக்கல் ஆகும் - (அதனாற்) பிறவி மாயாமைக்கு ஏதுவாகிய [1]பாசக்ஷயமும் பண்ணலாம், அடியரோடு இருக்கலாமே - (அதனால்) அவனடியாரோடு கலந்து (நிட்டைகூடிச் சிவானந்தானுபூதியும்பெற்று) இருக்கலாம் என்க.

(பொ - ரை.) இறைவனியல்பு அப்பெற்றித்தாயினும், அவனை அவ்விறைவன் நூலெனப்படும் வேதசாரமாகிய சிவாகமத்தின் அனுபவமுடைய தேசிகர் அருளிச்செய்யும் உபதேசத்தாற் கேட்டறியலாம்; கேட்டதனை அதற்கு அனுகூலமான அளவையாற் சிந்தித்தும் அறியலாம்; சிந்தித்ததனைத் தன்னறிவின்கண்ணே சிவஞானத்தான் மாசறத் தெளிந்தும் அறியலாம்; அதனாற் பாசக்ஷயம் பண்ணி நிட்டைகூடிச் சிவானந்த அனுபூதியும் பெறலாம் எ - ம்.

---

1. பாசத்தையும் தேய்க்கலாம்.

உம்மை எண்ணின்கண் வந்தது. மேல் அவையடக்கத்துட் கூறியதுபற்றி நிகழும் ஆசங்கையை நீக்கிற்று.

இக்கடவுள் வணக்கம் முதலாயினவெல்லாம், பரபக்கத்து நூன் முகத்தாற் கூறிப்போந்தனவே ஆயினும், பரபக்கம் சுபக்கமென இதனை இருநூலாதலுங் கொள்ளவைத்தமையின், ஈண்டும் வேறு கூறினார்.

அறுவகைச் சமயத்தென்னும் முதற்செய்யுளிற் கடவுள் வணக்கங் கூறுமுகத்தாற் சுபக்கத்தின் இறைவனுவான் இவனென்பதூஉம், ஏனை நான்கு செய்யுளினும் வழிமுதலியன கூறுமுகத்தான் அவ்விறைவனால் இயம்பப்படும் நூலிவையென்பதூஉம், அவற்றுட் பொதுநூல் சிறப்புநூலென்னும் வேறுபாடும் உணர்த்தப்பட்டன. (ரு)

பாயிரம் முடிந்தது.

# அளவையிலக்கணம்

இனி, நிறுத்தமுறையானே பொருளுண்மைக்கு அளவு கூறுவான் தொடங்கி, அவ்வளவையின் இயல்புணர்ந்தார்க்கு அன்றி அதனை யெடுத்துக் காட்டல் ஆகாமையின், முதற்கண் அளவையின் இயல்பு பதினான்கு செய்யுளாற் கூறுகின்றார்.

அளவை காண்டல் கருதல்உரை அபாவம் பொருள்ஒப்பு ஆறென்பர்
அளவை மேலும் ஒழிபுண்மை ஐதி கத்தோ டியல்பெனநான்கு
அளவை காண்பர் அவையிற்றின் மேலும் அறைவர் அவையெல்லாம்
அளவை காண்டல் கருதல்உரை யென்றிம் மூன்றின் அடங்கிடுமே.

(ப - ரை.) அளவை - பிரமாணமாவது, காண்டல் - காட்சியும், கருதல் - அனுமானமும், உரை - ஆகமமும், அபாவம் - இன்மையும், பொருள் - அருத்தாபத்தியும், ஒப்பு (என) - உவமையுமென, ஆறு என்பர் - அறுவகைப்படு மென்பாரும், அளவை மேலும் - அவ்வறு வகைப்பிரமாணங்கட்கு மேலும், ஒழிபு - பாரிசேடமும், உண்மை - சம்பவமும், ஐதிகத்தோடு - உலகவாதமும், இயல்பு என - சகசமுமென, நான்கு அளவை காண்பர் - நான்கு பிரமாணமுள வென்பாரும், அவை யிற்றின் மேலும் அறைவர் - அப்பத்துக்கு மேலும் (பிரமாணங்களுள) என்பாருமுளர், அவை யெல்லாம் அளவை - அவையெல்லாம் பிரமா ணமே யாயினும், காண்டல் - காட்சியும், கருதல் - அனுமானமும், உரை என்ற - ஆகமமு மென்ற, இம்மூன்றின் அடங்கிடுமே - இம் மூன்றனுள் அடங்குவன (அன்றி வேறாவனவல்ல) என்க.

(பொ - ரை.) பிரமாணமாவது காட்சிமுதல் அறுவகைப் படும் என்பாரும், அவ்வறுவகைப் பிரமாணங்கட்குமேலும் பாரி சேடமுதலிய நான்கு பிரமாணமுள என்பாரும், அப்பத்துக்கு மேலும் பிரமாணங்களுளவென்பாரும் உளர். அவையெல்லாம் பிரமாணமேயாயினுங் காட்சிமுதலிய மூன்றனுளடங்குவன அன்றி வேறாவன அல்ல எ - ம்.

இம்முறைபற்றி ஆகமமும் அனுமானத்தில் அடங்குமெனப் புத்தர் முதலாயினோர் கூறுப; அஃது அதனுளடங்காதென்பது [1]"நூலுரைத் தான் ஒருவன் உளன்" என்னும் பரபக்கத்துச் செய்யுளான் உணர்க.

இது சொற்பொருட்பின்வருநிலை. இதனானே பிரமாணம் இனைத்து என்பது கூறப்பட்டது. (க)

மாசறு காட்சி ஐயந் திரிவின்றி விகற்ப முன்னா
ஆசற அறிவ தாகும் அனுமானம் அவினா பாவம்
பேசுறும் ஏதுக் கொண்டு மறைபொருள் பெறுவ தாகும்
காசறும் உரையிம் மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும்.

---

1. இந்நூற்பரபக்கம், சௌத்திராந்திகன்மத மறுதலை, கஉ.

(ப - ரை.) (அம்மூன்றனுள்) விகற்பம் முன்னா - நிருவிகற்ப வுணர் வைத் தனக்கு முன்னாகக்கொண்டு, ஐயம் திரிவு இன்றி - ஐயவுணர்வும் விபரீதவுணர்வும் இன்றி, ஆசு அற அறிவது - (விடயங்களை) நேரே அறிவதாய ஆன்மாவினது ஞானசத்தி,[1] மாசு அறு காட்சி ஆகும் - குற்றமற்ற காட்சி யளவை யெனப்படும், மறை பொருள் - (அங்ஙனம் நேரே யறியப்படுவதன்றிச் சாதித்துப் பெறற் பாலதாய்) மறைந்து நின்ற பொருளை, பேசுறும் அவினாபாவம் ஏதுக்கொண்டு - சொல்லப் பெற்ற (அதனை) விட்டு நீங்காது (யாண்டும் உடனாய் நிகழும்) ஏதுவைக் கொண்டு, (விகற்பம் முன்னா ஐயம் திரிவு இன்றிப்) பெறுவது - (அவ் வாறு நிருவிகற்ப உணர்வைத் தனக்கு முன்னாகக் கொண்டு ஐய விபரீதக் குற்றமின்றி) உணர்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி, அனு மானம் ஆகும் - கருதலளவை யெனப்படும், இம் மானத்து அடங்கிடாப் பொருளை - இவ்விரண்டு பிரமாணங்களாலும் அறியப்படாத (பரலோக பாதாளலோக முதலிய) பொருள்களை, (விகற்பம் முன்னா ஐயம் திரிவு இன்றிக்) காட்டும் - (ஆத்தவாக்கியங்கொண்டு) (அவ்வாறு நிருவிகற்பத் தைத் தனக்கு முன்னாகக் கொண்டு ஐய விபரீதக் குற்றமின்றி) யுணரச் செய்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி, காசு அறும் உரை - குற்றமற்ற உரையளவை யெனப்படும் என்க.

**(பொ - ரை.)** அம்மூன்றனுள், நிருவிகற்ப வுணர்வைத் தனக்கு முன்னாகக்கொண்டு ஐயவுணர்வும் விபரீதவுணர்வும் இன்றி விடயங்களை நேரே யறிவதாகிய ஆன்மாவினது ஞான சத்தி காட்சியளவை யெனப்படும். அங்ஙனம் நேரே யறியப் படுவதன்றிச் சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்து நின்ற பொருளை அதனை விட்டுநீங்காது யாண்டும் உடனாய் நிகழும் ஏதுவைக்கொண்டு அவ்வாறுணர்வதாகிய ஆன்மாவினது ஞான சத்தி கருதலளவையெனப்படும். இவ்விரண்டானும் அறியப் படாத பொருள்களை ஆத்தவாக்கியங்கொண்டு அவ்வாறுணரச் செய்வதாகிய ஆன்மாவினது ஞானசத்தி உரையளவை யெனப் படும் எ - ம்.

அடங்கிடாப்பொருள் பரலோக பாதாளலோக முதலாயின.

இம்மானத்தடங்கிடும் பொருளையும் ஆத்தவாக்கியங் கொண்டறி வது அருத்தவாதம். ஐயந்திரிவின்றி விகற்பமுன்னாவென்பதனை யாண்டுங்கூட்டி யுரைத்துக்கொள்க. விகற்பமென்றது தலைக்குறை.

இதனானே அம்மூன்றற்கும் இலக்கணங் கூறப்பட்டது. (உ)

கண்ட பொருளை யிரட்டுறவே கருதல் ஐயந் திரியவே
கோண்டல்திரிவாம் பெயர்சாதி குணமேகன்மம் பொருளெனஐந்து
உண்டவ் விகற்ப உணர்வினுக்குப் பொருளின் உண்மை மாத்திரத்தின்
விண்டல் இல்லா அறிவாகும் விகற்பம் இல்லாக் காட்சியே.

(ப - ரை.) (மேற் கூறிப்போந்த நிருவிகற்பமுதலிய நான்கனுள்) விண்டல் இல்லா - (பெயர் முதலியவற்றாற்) பகுத்தறிதலின்றி, பொரு

1. ஞானசத்தி = அறிவாற்றல்,

ளின் உண்மை மாத்திரத்தின் அறிவு - (இஃதொன்று தோன்றுநின்ற தெனப்) பொருளுண்மை மாத்திரையே அறியும் ஞானசத்தி, விகற்பம் இல்லாக் காட்சியே ஆகும் - நிருவிகற்பக்காட்சி யெனப்படும், கண்ட பொருளை - அங்ஙனமறிந்த பொருளை, இரட்டுறவே கருதல் - இஃது யாதோவென ஒன்றில் துணிவுபிறவாது ஆராயும் ஞானசத்தி, ஐயம் - ஐயக்காட்சி யெனப்படும், திரியவே கொண்டல் - அதனை யதனோ டொப்புமையுடைய வேறுபொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஞானசத்தி, திரிவுஆம் - திரிவு காட்சி யெனப்படும், பெயர் சாதி குணமே கன்மம் பொருள் என ஐந்து - பெயருஞ் சாதியுங் குணமுங் கன்மமும் பொருளு மாகிய ஐந்தும் (பொருள்தோறும் உண்மையின் அவ்வைந்தும் அப் பொருட்கண் உள்ளவாறு இனிதுவிளங்க உணரும்) ஞானசத்தி, அவிகற்ப உணர்வினுக்கு உண்டு - அந்தச் சவிகற்பக்காட்சிக்கு உண் டென உணரப்படும் என்க.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த நிருவிகற்பமுதலிய நான் கனுள், பெயர் முதலியவற்றாற் பகுத்தறிதலின்றி இஃதொன்று தோன்றுநின்றது எனப் பொருளுண்மை மாத்திரையேயறியும் ஞானசத்தி நிருவிகற்பமெனப்படும். அங்ஙனமறிந்த பொருளை இஃதியாதோவென ஒன்றில் துணிவு பிறவாது ஆராயும் ஞான சத்தி ஐயமெனப்படும். அதனை அதனோடொப்புமையுடைய வேறு பொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஞானசத்தி திரிவெனப் படும். பெயர் முதலிய ஐந்தும் பொருள்தோறும் உண்மையின் அவ்வைந்தும் அப்பொருட்கண்ணுள்ளவாறு இனிதுவிளங்க உணரும் ஞானசத்தி சவிகற்பம் எனப்படும் எ - ம்,

முன்கண்ட வாதனைபற்றித் தோற்றுவதாகிய நினைவுணர்வு இவ் விடத்துக்கண்ட பொருளின்கண் நிகழ்வதன்மையின், அதனை ஈண் டெடுத்தோதிவிலக்காராயினர் இதனானே காட்சிமுதலிய மூன்றினுஞ் சேறற்குரிய நிருவிகற்ப முதலிய நான்கின் இலக்கணங் கூறப்பட்டது.

காண்டல் வாயின் மனந்தன்வே தனையோடு யோகக் காட்சியென
ஈண்டு நான்காம் அனுமானந் தனக்கும் பிறர்க்கும் என்றிரண்டாம்
மாண்ட வுரைதந் திரமந்திரத்தோ டுபதே சச்சொ லெனமூன்றாம்
பூண்ட அளவைக் கெதிர் புலன்தன் னியல்பு பொதுவென் றிரண்டாமே.

(ப - ரை.) (அம்மூன்றனுள்) காண்டல் - காட்சியளவையாவது, வாயிற் (காட்சி) - வாயிற்காட்சியும், மன (க்காட்சி) - மானதக்காட்சியும், தன் வேதனை (க்காட்சி) யோடு - தன் வேதனைக் காட்சியும், யோகக் காட்சியென - யோகக் காட்சியுமென, ஈண்டு நான்காம் - இங்ஙனம் நான்கு வகைப்படும், அனுமானம் - கருதலளவையாவது, தனக்கும் பிறர்க்கும் என்று - தன்பொருட்டனுமானமும் பிறர் பொருட்டனு மானமுமென, இரண்டாம் - இரண்டு வகைப்படும், மாண்ட உரை - மாட்சிமைப்பட்ட உரையளவையாவது, தந்திர (ச்சொல்) - தந்திர கலையும், மந்திரத்து (ச்சொல்) லோடு - மந்திரகலையும், உபதேசச் சொல் என - உபதேசகலையுமென, மூன்றாம் - மூன்று வகைப்படும், பூண்ட அளவைக்கு எதிர்புலன் - பொருந்திய இப்பிரமாணங்களான்

அறியப்படும் பிரமேயங்களதியல்பு, தன் இயல்பு பொது (இயல்பு) என்று - சிறப்பியல்பு பொதுவியல்பென, இரண்டாமே - இரண்டு வகைப்படும் என்க.

**(பொ-ரை.) அம்மூன்றனுள், காட்சியளவை வாயிற்காட்சி முதல் நான்கு வகைப்படும்; கருதலளவை தன்பொருட்டுப் பிறர் பொருட்டென இரு வகைப்படும்; உரையளவை தந்திரகலை முதன் மூவகைப்படும். இப்பிரமாணங்களான் அறியப்படும் பிரமேயங்களதியல்பு சிறப்பியல்பு பொதுவியல்பென இருவகைப் படும் எ - ம்.**

இதனானே, காட்சி முதலிய மூன்றும் படும் பாகுபாடும், அவற்றான் அளக்கப்படும் பொருள்களின் பாகுபாடும் தொகுத்துக் கூறப்பட்டன.

அன்னிய சாதி யுந்தன் சாதியும் அகன்று நிற்றல்
தன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்துதன் சாதிக் கொத்தல்
துன்னிய பொதுஇயற்கை சொன்னஇவ் விரண்டி னுள்ளே
மன்னிய பொருள்கள் யாவும் அடங்கிடு மான முற்றால்.

(ப-ரை.) (சிறப்பியல்பு பொதுவியல்பு என்ற இரண்டனுள்) அன்னிய சாதியும் - (ஒரு பொருட்கு) வேற்றுச்சாதிப் பொருளினும், தன்சாதியும் - தன் சாதிப் பொருளினும், அகன்று நிற்றல் - செல்லாது (தனக்கு மாத்திரையே யுரித்தாய்) நிலைபெறுந் தன்மை, தன் இயல்பு - சிறப்பியல் பெனவும், அன்னியத்தைத் தவிர்ந்து - வேற்றுச் சாதிப் பொருண் மாத்திரையிற் செல்லாது, தன் சாதிக்கு ஒத்தல் - தன்சாதிப் பொருட்கெல்லாம் ஒப்ப நிலைபெறுந் தன்மை, துன்னிய பொது இயற்கை - பொருந்திய பொது இயல்பெனவுங் கூறப்படும், மானம் - காட்சி முதலிய பிரமாணங்களால், மன்னிய பொருள்கள் - பொருந்திய பிரமேயப்பொருள்களை, உற்றால் - அறியலுறுமிடத்து, யாவும் - அவை யெல்லாம், சொன்ன இவ்விரண்டினுள்ளே அடங்கிடும் - ஈண்டுக்கூறிய இவ்விரண்டியல்பினுள் ஒன்று பற்றி அறியப்படும் என்க.

**(பொ-ரை.) சிறப்பியல்பு பொதுவியல்பென்ற இரண்டனுள், ஒருபொருட்கு வேற்றுச்சாதிப் பொருளினுந் தன்சாதிப் பொருளினுஞ் செல்லாது தனக்குமாத்திரையே உரித்தாய் நிலை பெறுந்தன்மை சிறப்பியல்பு எனவும், வேற்றுச்சாதிப் பொருள் மாத்திரையிற் செல்லாது தன்சாதிப் பொருட்கெல்லாம் ஒப்ப நிலைபெறுந்தன்மை பொதுவியல்பு எனவுங் கூறப்படும். காட்சி முதலிய பிரமாணங்களாற் பிரமேயப்பொருள்களை அறியலுறு மிடத்து அவையெல்லாம் இவ்விரண்டியல்பினுள் ஒன்றுபற்றி அறியப்படும் எ - ம்.**

எனவே, இவ்விரண்டின் வேறாகிய வேற்றியல்புபற்றி அறியப்படு மாயின், அவ்வறிவு பிராமாணியமன்றாய்ப்போ மென்பதாயிற்று.

பிரமேயத்தை யறிந்த அறிவேதான் பிராமாணியம் என்பதனையும் அறியுமெனவும், தான் பிராமாணியம் ஆகாதவழி அவ்வாகாமை மாத்

திரையே பிறிதொன்றான் அறியப்படுமெனவும், இவ்வாறன்றித் தனது பிராமாணியம் பிறிதொன்றான் அறியப்படுவதே யென்னுந் தார்க்கிகர் முதலியோர் மதம் அடாதெனவுங் கொள்க.

இவற்றை வடநூலார் சுதத்துவம் பரதத்துவமென வழங்குப. சாதியாவது ஒரு நிகரனவாகிய பல பொருட்குப் பொதுவாவதோர் தன்மை.

இதனானே மேல் தன்னியல்பு பொதுஇயல்பு என்றவற்றின் இலக்கணங் கூறப்பட்டது. இச்செய்யுள் சூசிகடாகநயம்பற்றி முன்வைத்தவாறு. (ரு)

உயிரின்ஓ டுணர்வு வாயில் ஒளியுரு ஆதிபற்றிச்
செயிருறு விகற்பம் இன்றித் தெரிவதிந் திரியக் காட்சி
அயர்விலிந் திரிய ஞானம் ஐம்புலன் சார்ந்து உயிர்க்கண்
மயர்வற வந்தஞானம் மானதக் காண்ட லாமே.

(ப - ரை.) (மேற்கூறிப்போந்த காட்சி நான்கனுள்ளும்) உயிரின் - (தன்னை நோக்கி நிற்கு மறிவாகிய) ஆன்மாவினின்றும், ஓடு உணர்வு - (விடயங்களை நோக்கி) ஓடும் அறிவாகிய சிற்சத்தி, வாயில்-கண்முதலிய பொறிகளையும், ஒளி (ஆதி) - (அவற்றிற்குத் துணையாய் வலிசெய்துடன் நிற்குந்) தேயு முதலிய பூதங்களையும், உரு ஆதி பற்றி - (அப்பூதங்களுக்கு முதற்காரணமாய் அவற்றை விட்டுநீங்குதலின்றி யுடனாகிய) உருவமுதலிய தன்மாத்திரைகளையும் அதிட்டித்துக்கொண்டு, செயிர் - ஐய விபரீதக்குற்றங்களும், உறு விகற்பம் இன்றி - பொருந்திய பெயர் சாதி முதலிய விகற்பமுமின்றி, தெரிவது - (உருவமுதலிய ஐம்புலன்களை நிருவிகற்பமா) யறியும் அறிவு, இந்திரியக் காட்சி - வாயிற் காட்சி யெனப்படும், ஐம்புலன் சார்ந்து - அங்ஙனம் ஐம்புலன்களை இயைந்தறிந்த பின்னர், அயர்வு இல் - மீள மறத்தலின்றி, இந்திரிய ஞானம் - (சித்தத்தாற் சிந்திக்கப்பட்டு நிலைபெறுவதாகிய அவ்) வாயிற்காட்சியறிவு, மயர்வு அற - (பெயர் சாதி முதலியவற்றான்) விபரீதமாதலின்றி (நிச்சயமாய்), உயிர்க்கண் - புத்திதத்துவத்தின்கண், வந்த ஞானம் - வருதலானாகிய சவிகற்பஉணர்வாய் உயிரின் ஓடு உணர்வு தெரிவது, மானதக்காண்டல் ஆமே - மானதக்காட்சி யெனப்படும் என்க.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த காட்சி நான்கனுள்ளும், தன்னைநோக்கி நிற்கும் அறிவாகிய ஆன்மாவினின்றும் விடயங்களை நோக்கியோடும் அறிவாகிய சிற்சத்தி, கண்முதலிய பொறிகளையும், அவற்றிற்குத் துணையாய் வலிசெய்து உடன்நிற்குந் தேயுமுதலிய பூதங்களையும், அப்பூதங்களுக்கு முதற்காரணமாய் அவற்றை விட்டுநீங்குதலின்றி உடனுய உருவமுதலிய தன்மாத்திரைகளையும் அதிட்டித்துக் கொண்டு, ஐயவிபரீதக் குற்றங்களும் (பாடியம் 163) பெயர் சாதி முதலிய விகற்பமும் இன்றி, உருவமுதலிய ஐம்புலன்களை நிருவிகற்பமாயறியும் அறிவு வாயிற் காட்சி யெனப்படும்; அங்ஙனம் ஐம்புலன்களை இயைந்தறிந்த பின்னர் மீளமறத்தலின்றிச் சித்தத்தாற் சிந்திக்கப்பட்டு நிலை

பெறுவதாகிய அவ்வாயிற்காட்சியறிவு, பெயர் சாதி முதலிய வற்ருன் விபரீதமாதலின்றி நிச்சயமாய்ப் புத்திதத்துவத்தின் கண் வருதலான் ஆகிய சவிகற்ப உணர்வாய் உயிரிஞேடு உணர்வு தெரிவது மானதக்காட்சி யெனப்படும் எ - ம்.

ஐம்புலன்சார்ந்து அயர்வில் இந்திரிய ஞானம் என மாறுக.

உயிரின். இன் ஐந்தாம் உருபு. ஒடு உணர்வு வினைத்தொகை. ஒளி ஆகுபெயர். ஆதியென்பதனை ஒளியோடுங் கூட்டுக.

சார்ந்தபி னென்பது சார்ந்தெனத் திரிந்து காரியத்தின்மேனின் றது. உயிர்க்குப் பற்றுக்கோடாகிய புத்தியை உயிரென்றுபசரித்தார். வந்தஞான மென்னும் பெயரெச்சம், "ஆறுசென்றவெயர்" என்ருற் போல நின்றது.

மனத்தின் தொழிற்பாடு முன்ஞக நிகழ்தலின் மானதக்காட்சி யெனப்பட்டது.

அதிகாரமுறைமை யென்னும் உத்தியான் உயிரிஞேடு உணர்வு தெரிவது என்பதனை அளவையதிகார முழுதினும் உய்த்துரைக்க.

இதஞனே வாயிற்காட்சி மானதக்காட்சிகளது இயல்பு கூறப் பட்டது. (சு)

அருந்தின்பத் துன்பம் உள்ளத் தறிவினுக் கராகம் ஆதி
தருந்தன்வே தனையாங் காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்
பொருந்திய தேச கால இயல்பகல் பொருள்க ளெல்லாம்
இருந்துணர் கின்ற ஞானம் யோகநற் காண்ட லாமே.

(ப - ரை.) (அம்மானதக்காட்சி விசேடம்பற்றி மேம்பட்டு நிகழுஞ் சத்துவகுண முதலியவற்றின் விளக்கமாகிய) அருந்து இன்பத் துன்பம் - நுகரப்படும் இன்பதுன்பங்கள், உள்ளத்து அறிவினுக்கு - புருடனதறி விற்கு (விடயமாம்படி), அராகம் ஆதி தரும் - அராக முதலிய ஐந்து தத்துவங்களானும் புணர்க்கப்படுவதனை உயிரிஞேடு உணர்வு தெரிவது, தன்வேதனைக் காட்சி ஆம் - தன்வேதனைக் காட்சி யெனப்படும், மலங் கள் - (இவ்வாறன்றி அறிவைத் தடைசெய்து நின்ற) மலசத்திகளை, சமாதியான் வாட்டி - இயம நியம முதலிய அட்டாங்கயோக சமாதி யான் ஒருவாறு கெடுத்து, இருந்து - (ஓரிடத்தொருகாலத்து) இருந் தாங் கிருந்து, பொருந்திய தேச கால இயல்பு அகல் பொருள்கள் எல்லாம் - பொருத்தப்பட்ட மூவிடத்தும் முக்காலத்தும் இயல்பாக விரிந்த பொருள்களெல்லாவற்றையும், உணர்கின்ற ஞானம் - காண் கின்ற காட்சியாய் உயிரிஞேடு உணர்வு தெரிவது, நல் யோகக் காண்டல் ஆமே - நன்மையாகிய யோகக்காட்சி யெனப்படும் என்க.

(பொ - ரை.) அம்மானதக்காட்சி விசேடம்பற்றி மேம் பட்டு நிகழுஞ் சத்துவகுண முதலியவற்றின் விளக்கமாகிய இன்ப துன்பங்கள் புருடனது அறிவிற்கு விடயமாம்படி அராக முதலிய ஐந்து தத்துவங்களானும் புணர்க்கப்படுமதனை உயிரி ஞேடு உணர்வு தெரிவது தன்வேதனைக்காட்சி யெனப்படும்;

இவ்வாறன்றி அறிவைத் தடைசெய்து நின்ற மலசத்திகளை இயமம் நியமம் முதலிய அட்டாங்கயோகசமாதியான் ஒருவாறு கெடுத்து ஓரிடத்து ஒருகாலத்து இருந்தாங்கு இருந்து மூவிடத்தும் முக்காலத்துப் பொருள்களையுங் காண்கின்ற காட்சியாய் உயிரினோடு உணர்வு தெரிவது யோகக்காட்சியெனப்படும் எ-ம்.

இவையிரண்டு செய்யுளானும் மேலெடுத்துக் கொண்ட நால்வகைக் காட்சிகளதியல்பு கூறப்பட்டது. (எ)

பக்க மூன்றின் மூன்றேது வுடைய பொருளைப் பார்த்துணரத்
தக்க ஞானந் தன்பொருட்டாம் பிறர்தம் பொருட்டாம் அனுமானந்
தொக்க இவற்றுற் பிறர்தெளியச் சொல்ல லாகும் அச்சொல்லும்
மிக்க அன்னு வயத்தினோடு வெதிரே கச்சொல் லெனஇரண்டாம்.

**(ப - ரை.)** மூன்று எதுவுடைய பொருளை - இயல்பு முதலிய மூன்றனுள் ஒரேதுவுடைய சாத்தியத்தை, பக்கம் மூன்றின் - பக்க முதலிய மூன்றின் வைத்து, பார்த்து உணரத்தக்க ஞானம் - (அவினாபாவம்பற்றி) ஆராய்தற்குரிய ஞானமாய் உயிரினோடு உணர்வு தெரிவது, தன்பொருட்டாம் (அனுமானம் ஆகும்) - தன்பொருட் டனுமானமாம், தொக்க இவற்றுற் பிறர் தெளியச் சொல்லல் - பொருந்திய அவ்வேதுக்களானே (தானறிந்ததனைப்) பிறர் அறியப் போதித்தலை உயிரினோடு உணர்வு தெரிவது, பிறர்தம் பொருட்டாம் அனுமானம் ஆகும் - பிறர்பொருட் டனுமானமாம், அச்சொல்லும் - அங்ஙனம் பிறர் அறியப் போதித்தலாகிய சொல்லும், மிக்க அன்னுவயத்தினொடு வெதிரேகச் சொல் என - மேலாகிய உடம்பாட்டுச்சொல்லும் மறைச்சொல்லுமென, இரண்டு ஆம் - இரண்டுவகைப்படும் என்க.

**(பொ - ரை.)** இயல்பு முதலிய மூன்றனுள் ஒரேதுவுடைய சாத்தியத்தைப் பக்க முதலிய மூன்றின் வைத்து அவினாபாவம் பற்றி ஆராய்தற்குரிய ஞானமாய் உயிரினோடு உணர்வு தெரிவது தன்பொருட்டனுமானமாம்; அவ்வேதுக்களானே தானறிந்ததனைப் பிறரறியப் போதித்தலை உயிரினோடு உணர்வு தெரிவது பிறர்பொருட்டனுமானமாம். அங்ஙனம் பிறரறியப் போதிக்குஞ் சொல்லும் உடம்பாடு மறை யென்று இருவகைப்படும் எ - ம்.

இதனானே மேலெடுத்துக்கொண்ட இருவகை யனுமானங்களதியல்பு கூறப்பட்டது. (அ)

மூன்று பக்கம் பக்கம் நிகர் பக்கம் நிகரில் பக்கமெனத்
தோன்றும் பக்கந் துணிபொருளுக் கிடமாம் உவமை நிகர்பக்கம்
ஆன்ற பொருள்சேன் றடையாத இடமாம் நிகரில் பக்கம்முதல்
என்ற இரண்டும் பொருளுண்மைக் கிடமாம் ஒன்று பொருளின்றும்.

**(ப - ரை.)** பக்கம் மூன்று - பக்க மூன்றுவன, பக்கம் நிகர்பக்கம் நிகரில்பக்கம் எனத் தோன்றும் - பக்கமுஞ் சபக்கமும் விபக்கமு

மென்பனவாம், துணி பொருளுக்கு இடம் பக்கம் ஆம் - அவற்றுள் (ஐயுற்றுத்) துணியற்பாலதாய பொருளிருக்கும் இடம் பக்கமெனப்படும், உவமை நிகர்பக்கம் - அதற்கெடுத்துக் காட்டப்படுவதாய்த் துணியப் பட்ட பொருளிருக்கும் இடஞ் சபக்கமெனப்படும், ஆன்ற பொருள் சென்று அடையாத இடம் நிகரில் பக்கம் ஆம் - மாட்சிமையாகிய அப் பொருளில்லாத இடம் விபக்கமெனப்படும், முதல் என்ற இரண்டும் - (இம்மூன்றனுள்) முதற்கட்பொருந்திய பக்கஞ் சபக்கம் இரண்டும், பொருள் உண்மைக்கு இடம் ஆம் - பொருளுண்டென அறிதற்கு இடமாம், ஒன்று - ஏனை விபக்கம், பொருள் இன்று ஆம் - அஃதில்லை யென்றறிதற்கு இடமாம் என்க.

(பொ - ரை.) பக்கமூன்றாவன பக்கஞ் சபக்கம் விபக்க மென்பனவாம். அவற்றுள், ஐயுற்றுத் துணியற் பாலதாய பொருளிருக்கும் இடம் பக்கம் எனப்படும்; அதற்கு எடுத்துக் காட்டப்படுவதாய்த் துணியப்பட்ட பொருளிருக்கும் இடம் சபக்கமெனப்படும்; அப்பொருளில்லாத இடம் விபக்கம் எனப் படும். இம்மூன்றனுட் பக்கஞ் சபக்கமிரண்டும் பொருளுண் டென அறிதற்கிடமாம்; விபக்கம் அஃதில்லையென்றறிதற்கிட மாம் எ - ம்.

துணிபொருள் எதிர்கால வினைத்தொகை.

அவினாபாவம் அறிதற்கண் ஐயமறுத்தற் பொருட்டுச் சபக்கம் விபக்கம் இரண்டும் வேண்டப்படும் என்பார், முதலேன்ற இரண்டும் பொருளுண்மைக்கு இடமாம் ஒன்று பொருளின்றாம் எனவுங் கூறினார்.

இதனானே மேற் பக்கம் மூன்று என்றவற்றின் பெயரும் இயல்புங் கூறப்பட்டன. (௯)

ஏது மூன்றும் இயல்புகா ரியத்தோ டநுப லத்தியிவை
ஓதின் இயல்பு மாமரத்தைக் காட்டல் உறுகா ரியம்புகைதன்
ஆதி யாய அனல்காட்ட லாகும் அநுப லத்தியது
சீத மின்மை பனியின்மை காட்டல் போலுஞ் செப்பிடினே.

(ப - ரை.) மூன்று ஏது - (மேலெடுத்துக்கொண்ட) மூன்று ஏது வாவன, இயல்பு காரியத்தோடு அநுபலத்தி ஆம் - இயல்புங் காரியமும் அநுபலத்தியுமாம், இவை ஓதின் - இவற்றிற் கிலக்கணங் கூறுமிடத்து, மா மரத்தைக் காட்டல் - மா முதலிய சொற்கள் மர முதலிய பொருளை உணர்த்துதற்கண் (வேறு காரணமின்றி அச்சொற்களின் இயல்பான் உளதாகிய ஆற்றல்), இயல்பு - சகச ஏது எனப்படும், புகை தன் ஆதியாய அனல் காட்டல் - புகை முதலிய காரியங்கள் நெருப்பு முதலிய தத்தங் காரணங்களை உணர்த்துதற்கண், உறு காரியம் ஆகும் - (அவை) பொருந்திய காரியவேது எனப்படும், செப்பிடினே - சொல்லுமிடத்து, சீதம் இன்மை பனி இன்மை காட்டல் போலும் - குளிரில்லாமை முதலிய காரிய அபாவங்கள் பனியில்லாமை முதலிய காரண அபாவங்களை உணர்த்துதற்கண்ணும் பனியில்லாமை முதலிய காரண அபாவங்கள் குளிர்வாராமை முதலிய காரிய அபாவங்களை உணர்த்துதற்கண்ணும், அநுபலத்தி யது - (அவை) அநுபலத்தியேது வெனப்படும் என்க.

(பொ - ரை) மேலெடுத்துக் கொண்ட மூன்று ஏதுவாவன இயல்புங் காரியமும் அநுபலத்தியுமாம். அவற்றுள், மாமுதலிய சொற்கள் மரமுதலிய பொருளையுணர்த்துதற்கண் வேறு காரணமின்றி அச்சொற்களின் இயல்பான் உளதாகிய ஆற்றல் சகச ஏது எனப்படும்; புகைமுதலிய காரியங்கள் நெருப்புமுதலிய தத்தங் காரணங்களை யுணர்த்துதற்கண் அவை காரிய ஏது எனப்படும்; குளிரில்லாமை முதலிய காரிய அபாவங்கள் பனியில்லாமை முதலிய காரண அபாவங்களை உணர்த்துதற்கண்ணும் பனியில்லாமை முதலிய காரண அபாவங்கள் குளிர் வாராமை முதலிய காரிய அபாவங்களை உணர்த்துதற்கண்ணும், அவை அநுபலத்தி ஏது வெனப்படும் எ - ம்.

இங்ஙனம் உணர்ச்சி மூவகைப்படுதலின் ஏதுவும் மூவகைப்பட்டன.

காரிய ஏதுக் கூறவே, ஒற்றுமைபற்றிக் காரண ஏதுவுங் கொள்ளப்படும். அஃதாவது, இடித்து மின்னி இருண்டெழுந்த மேகம் மழை பெய்தலைக் காட்டுதல் போல்வது.

[1]சீதம் இன்மை பனியின்மை காட்டலென்பது [2]"வாளைமீ னுள்ளல் தலைப்படல்" என்றாற்போல நின்றது. போலும் அசை.

இதனானே ஏதுமூன்று என்றவற்றின் பெயரும் இயல்புங் கூறப்பட்டன. (கOP)

புகையால் அனல்உண் டடுக்களைபோல் என்னப் புகறல் அந்நுவயம்
வகையாம் அனலி லாஇடத்துப் புகையின் றாகும் மலரினொடு
முகையார் நீரிற் போலென்று மொழிதல் வெதிரே கச்சொலிவை
தொகையார் உறுப்பைந் தொடுங்கூடச் சொல்லுவாரும் உளர்துணிந்தே.

(ப - ரை.) (மேலெடுத்துக்கொண்ட சொல்லிரண்டனுள்) புகையால் அனல் உண்டு - புகையுள்ள இடத்தே அனல் உண்டென (உடம்பாடுபற்றி), அடுக்களைபோல் என்னப் புகறல் - அட்டிலை உவமை கூறுஞ்சொல், அந்நுவயம் - அந்நுவயச்சொல்லாம், வகையாம் அனல் இலா இடத்துப் புகை இன்றாகும் - விளக்கமாகிய நெருப்பில்லாத இடத்துப் புகையில்லை யென (மறுதலைபற்றி), மலரினொடு முகை ஆர் நீரிற்போல் என்று மொழிதல் - மலரும் அரும்பும் நிறைந்த தாமரை யோடையை உவமை கூறுஞ்சொல், வெதிரேகச் சொல் - வெதிரேகச் சொல்லாம், இவை - இவ்விருவகைச் சொற்களையும், தொகை ஆர் ஐந்து உறுப்பொடுங்கூட - தொகைபொருந்திய மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் உபநயமும் நிகமனமும் என்னும் ஐவகை உறுப்புக்களான் இணங்க வைத்து, துணிந்தே சொல்லுவாரும் உளர் - தெளியக் கூறுவாரும் உளர் என்க.

---

1. சீதம் இன்மை பனியின்மையைக் காட்டல்
சீதம் இன்மையைப் பனியின்மை காட்டல்
வாளைமீன் உள்ளலைத் தலைப்படல்
வாளைமீனை உள்ளல் தலைப்படல்.

2. 'வாளைமீன்' திரிகடுகம். செ - எ.

(பொ - ரை.) மேலெடுத்துக்கொண்ட சொல்லிரண்டனுள், புகையுள்ளவிடத்து அனல் உண்டு என உடம்பாடுபற்றி அட்டிலை உவமைகூறுஞ் சொல் அந்நுவயச் சொல்லாம்; நெருப்பில்லாதவிடத்துப் புகையில்லையென மறுதலைபற்றித் தாமரையோடையை உவமைகூறுஞ் சொல் வெதிரேகச் சொல்லாம். இவ்விருவகைச் சொற்களையும் மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டும் உபநயமும் நிகமனமுமென்னும் ஐவகையுறுப்புக்களான் இணங்கவைத்துத் தெளியக் கூறுவாருமுளர் எ - ம்.

அவ்வாறு சொல்லுவர் தார்க்கிகர் முதலியோர்.

இதனானே சொல்லிரண்டு என்றவற்றின் இயல்பு கூறப்பட்டது.

போது நாற்றத் தாலறிதல் பூர்வக் காட்சி யனுமானம்
ஓதும் உரையால் அறிவினள வுணர்தல் கருதல் அனுமானம்
நீதி யான்முற் கன்மபலம் நிகழ்வ திப்போ திச்செய்தி
ஆதி யாக வரும்பயனென் றறிதல் உரையால் அனுமானம்.

(ப - ரை.) நாற்றத்தால் போது அறிதல் - நாற்றமுதலிய ஏதுப்பற்றிப் போதுமுதலிய (காட்சிப் புலனாதற் குரிய) பொருளை உயிரினோடுணர்வு தெரிவதெல்லாம், பூர்வக்காட்சியனுமானம் - பூர்வக்காட்சியனுமானமெனப்படும், ஓதும் உரையால் அறிவின் அளவு உணர்தல் - ஓதப்பட்ட உரைமுதலிய ஏதுப்பற்றி அறிவின் அளவுமுதலிய (கருத்துப் புலனாதற்குரிய) பொருள்களைத் (தன்குறிப்பொடு சார்த்தி) உயிரினோடு உணர்வு தெரிவதெல்லாம், கருதலனுமானம் - கருதலனுமானம் எனப்படும், நீதியான் இச்செய்தி முன் கன்மபலம் - (இவ்விரண்டினும் வேறாய்) முறைமையின் (முன்வினை யெனப்படும்) இதம் அகிதங்களாவன முற்பிறவியின் அவ்வாறுநிகழும் முயற்சியே யாமாதலால், இப்போது நிகழ்வது ஆதியாகவரும் பயன் என்று அறிதல் - இங்கும் அவை செயின் மேலைக்காகு மென்றாற்போல வேதாகமங்களுட் சொல்லியது கொண்டு சொல்லாத பொருளையும் ஒப்புமைபற்றி ஊகித்துத் துணிவதாய் உயிரினோடு உணர்வு தெரிவதெல்லாம், உரையாலனுமானம் - உரையனுமானம் எனப்படும் என்க.

(பொ - ரை.) நாற்றமுதலிய ஏதுபற்றிப் போது முதலிய காட்சிப்புலனாதற் குரிய பொருளை உயிரினோடுணர்வு தெரிவதெல்லாம் பூருவக்காட்சி யனுமானம் எனப்படும். உரைமுதலிய ஏதுபற்றி அறிவின் அளவு முதலிய கருத்துப்புலனாதற்குரிய பொருள்களைத் தன்குறிப்போடு சார்த்தி உயிரினோடு உணர்வு தெரிவதெல்லாம் கருதல் அனுமானம் எனப்படும். இவ்விரண்டினும் வேறாய் 'இதம் அகிதங்கள் முன்னர் அச்செயலானால் இங்கும் அவை செயின் மேலைக்காகும்' என்றாற்போல, வேதாகமங்களுட் சொல்லியது கொண்டு சொல்லாத பொருளையும் ஒப்புமைபற்றி ஊகித்துத் துணிவதாய் உயிரினோடு உணர்வு தெரிவதெல்லாம் உரையனுமானமெனப்படும் எ - ம்.

ஆகமத்துட்கூறும் பதிமுதலிய பொருள்களை அவ்வாகமத்திற் கியைபுடைய அனுமானத்தின் வைத்தறிவதூஉம் உரையனுமான மெனப்படும் என்பாருமுளர்.

இதனானே அவையிற்றின்மேலும் அறைவர் எனப்பட்ட அளவைகள் காட்சியனுமானத்தோடொப்ப வைத்து அனுமானத்துளடக்கிக் காட்டப்பட்டன. (கஉ)

அநாதியே அமல ஞய அறிவன் நூல் ஆக மந்தான்
பிறைதிமா றின்றிப் பேணல் தந்திரம் மந்தி ரங்கள்
மறைதிக ளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை யாகுந்
தறைதியீ றிலாதான் தன்மை உணர்த்துதல் உபதே சந்தான்.

(ப - ரை.) அநாதியே அமலனுய அறிவன் நூல் ஆகமந்தான் - அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் அருளிச்செய்த நூல்களெனப் படும் வேதாகமங்கள் (கருமகாண்டம் உபாசனுகாண்டம் ஞானகாண்ட மென மூவகைப்படும்), பின் ஆதி மாறு இன்றிப் பேணல் - (அவற்றுட் கருமகாண்டம்பற்றிப்) பின்னெடுமுன் மாறுகோளின்றி அநுட்டித்தலை உயிரினேடு உணர்வு தெரிவது, தந்திரம் - தந்திரவுரையளவை எனப் படும், மனுதிகள் அடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை - (உபாசனு காண்டம்பற்றி) மனுதிகளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையை உயிரினேடு உணர்வுதெரிவது, மந்திரங்கள் ஆகும் - மந்திர உரையளவை யெனப்படும், தன் ஆதி ஈறு இலாதான் - (ஞானகாண்டம்பற்றித்) தனக்கு முதலும் முடிவு மில்லாத இறைவன், தன்மை உணர்த்துதல் - (தன்னின்வேறல்லாத எண்குண முடையனுதல் தன்னின் வேருகிய பசுபாசங்களை யுடையனுதல் முதலிய) தன்மைகளைத் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்துமாறும் உயிரினேடு உணர்வு தெரிவது, உபதேசந்தான் - உபதேச உரையளவை யெனப்படும் என்க.

(பொ - ரை.) அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் அருளிச் செய்த வேதாகமங்கள் கருமகாண்டம் உபாசனுகாண்டம் ஞானகாண்டமென மூவகைப்படும். அவற்றுள், கருமகாண்டம்பற்றிப் பின்னெடு முன் மாறுகோளின்றி அனுட்டித்தலை உயிரினேடு உணர்வு தெரிவது தந்திர உரையளவை யெனப் படும்; உபாசனுகாண்டம்பற்றி மனுதிகள் அடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையை உயிரினேடு உணர்வு தெரிவது மந்திர வுரையளவை யெனப்படும்; ஞானகாண்டம்பற்றித் தனக்கு முதலுமுடிவுமில்லாத இறைவன் தன்னின் வேறல்லாத எண் குணமுடையனுதல் தன்னின் வேருகிய பசுபாசங்களை யுடைய னுதல் முதலிய தன்மைகளைத் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்துமாறும் உயிரினேடு உணர்வு தெரிவது உபதேச உரையளவை யெனப்படும் எ - ம்.

வேதமும் ஆகமம் எனப்படு மென்பது சீகண்ட பாடியத்துள்ளுங் காண்க.

ஆத்தவாக்கியம் என்பது உணர்த்துதற்கு அநாதியே அமலனுய அறிவன் என்முர்.

அறிவன் நூலென்புழி ஆருவது செய்யுட்கிழமைக்கண் வந்தது.

இவ்வாறன்றி, பதிபசுபாசங்களுக்குப் பிரமாணமும் இலக்கணமும் பின்முன் மாறுகோளின்றிப் பாதுகாத்துக் கூறும் ஆகமவாக்கியங்களைத் தெரிவது தந்திர உரையெனவும், மனுதிகள் அடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மை யெனப்படுஞ் சாதனமாகிய வேண்டுஞ் செய்தி முறைமைகளைக்கூறும் ஆகமவாக்கியங்களைத் தெரிவது மந்திர உரையெனவும், தன் ஆதி ஈறிலாதான் தன்மை உணர்த்துதல் எனப்படும் நிட்டையின் இயல்பு கூறும் ஆகமவாக்கியங்களைத் தெரிவது உபதேச உரையெனவும், இவ்வாறு ஞானகாண்டம் ஒன்றனையே மூவகைப்படுத்து உரைப்பாரும் உளர்; அவர்க்கு மற்றை உபாசனகாண்டமுங் கன்மகாண்டமும் பிரமாணத்துள் அகப்படாமை யறிக.

இனித் தார்க்கிகர் முதலியோர் குடம் படம் முதலிய உலகச் சொற்கள் பற்றி அவ்வப்பொருள்களை யுணர்தலும் உரையளவை யென்பர். அவை, காட்சி அனுமானங்களின் அடங்கிடாப்பொருளைக் காட்டுவன அன்மையின், மா மரத்தைக் காட்டல்போலும் இயல்பேதுப் பற்றி அறிவதாகிய அனுமான விசேடமாவனவன்றி உரையளவை யாதற்கேலாமை யறிக.

சொல்லான் அறிந்தேன் என்று அனுபவம் நிகழ்தலின் அது வேறு அளவையாவதன்றி அனுமானத்துள் அடங்காதென்பார்க்கு, குளிரின்மை பனியின்மை முதலியன அநுபலத்தியால் அறிந்தேனென்று அநுபவம் நிகழ்தலின், இன்னோரன்னவற்றை வேறு பிரமாணம் என்னுது காட்சி முதலியவற்றுள் அடக்குதல் பொருந்தாதாய் முடியுமென்றொழிக.

இதனுனே உரையளவை மூன்று என்றவற்றதியல்பு கூறப்பட்டது.

ஈண்டு பக்கப் போலிநான் கேதுப் போலி யொருமூன்ருய்
வேண்டும் எழுமூன் ருகும்விளங் குவமைப் போலி ஈரோன்பான்
காண்டுந் தோல்வித் தானமிரண் டிருபத் திரண்டாங் கருதிலிவை
யாண்டும் ஒழிவர் அவையெல்லாம் அளசகில் அறுபத் தைந்தாகும்.

**(ப - ரை.)** ஈண்டு பக்கப்போலி நான்கு - மேற்கூறிப் போந்த அனுமான சாமக்கிரியைகளுள் துணிபொருட் கிடனுதலாகிய பக்கலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும் ஒருபுடை யொத்துப் பக்கம் போலத் தோன்றுவதாகிய பக்கப்போலி, துணியும் பொருட்கு இடனுகாததூஉம், துணியும் பொருட்கு ஒருமருங்கிடனுகாததூஉம், துணிந்தபொருட்கு இடனுவதூஉம், துணிந்தபொருட்கு ஒருமருங்கு இடனுவதூஉமென நான்கு வகைப்படும்.

ஏதுப்போலி ஒருமூன்ருய் வேண்டும் எழுமூன்ருகும் - சாத்தியப் பொருளோடு வியாத்தியுடைத்தாய்ப் பக்கத்தில் இருத்தலாகிய ஏது இலக்கணத்திற் குறைபாடு உடைத்தாயும் ஒருபுடையொத்து ஏதுப் போலத் தோன்றுவதாகிய ஏதுப்போலி, துணியப்படாததூஉம், மறுதலைக்கட்படுவதூஉம், ஒருதலைப் படாததூஉமென மூவகைப்பட்டு, விரியான் இருபத்தொன்ரும்.

அவையாவன :—சார்பில்லதூஉம் சார்புண்மை யறியப்படாததூஉமெனச் சார்புபற்றிய குற்றம் இரண்டும் சொரூபமில்லதூஉம் சொரூபமுண்மை யறியப்படாததூஉம் சொரூபத்தின் விசேடண மில்லதூஉம் விசேடணம் உண்மை யறியப்படாததூஉம் விசேடியமில்லாததூஉம் விசேடியம் உண்மையறியப் படாததூஉம் ஒருமருங்கு இல்லதூஉம் ஒருமருங்கு உண்மை யறியப்படாததூஉம் பரனுக்கு உடம்பாடில்லதூஉமெனச் சொரூபம்பற்றிய குற்றம் ஒன்பதும், சாத்தியத்தோடு வியாத்தியுண்மை யறியப்படாததூஉம் செயற்கைபற்றி வியாத்தியுடையதூஉமென வியாத்திபற்றிய குற்றம் இரண்டும் ஆகிய பக்கவிருத்தி துணியப்படாத ஏதுப்போலியின்விரி பதின்மூன்றும்,

மறுதலைப்பொருள் சாதிப்பதூஉம் மறுதலைப்பொருள் சாதிப்பதாய்ப் பிறிதோர் ஏதுவை உடன்கொண்டு வருவதூஉம் காட்சி யளவையான் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவதூஉம் கருதலளவையான் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவதூஉம் உரையளவையான் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவதூஉமென மறுதலைத்தலையுடைய ஏதுப்போலிவிரி ஐந்தும்,

பக்க சபக்க மாத்திரையினன்றி விபக்கத்துஞ் சேறலுடையதூஉம் சபக்கத்திற்சேறலின்றிப் பக்கமாத்திரையினுள்ளதூஉம் சபக்க விபக்கங்கள் கிடைக்கப்பெறாததூஉமென ஒருதலைப்படாத ஏதுப்போலிவிரி மூன்றுமாம்.

விளங்கு உவமைப்போலி ஈரொன்பான் காண்டும் - இனி வியாத்தி நிச்சயித்தற் கிடனாதலாகிய உவமையிலக்கண மின்றியும் உவமைபோலத் தோன்றுவதாகிய உவமைப்போலி, அந்நுவயம்பற்றியும் வெதிரேகம் பற்றியும் இருவகைப்பட்டு, விரியான் ஒரோவொன்று ஒன்பதாய்ப் பதினெட்டு வகைப்படும்.

அவையாவன:—சாத்தியமுடைத்தாகாததூஉம் சாத்தியமுடைமை நிச்சயிக்கப்படாததூஉம் ஏதுவுடைத்தாகாததூஉம் ஏதுவுடைமை நிச்சயிக்கப்படாததூஉம் இரண்டும் உடைத்தாகாததூஉம் இரண்டுமுடைமை நிச்சயிக்கப்படாததூஉம் சொரூபமில்லதூஉம் சொரூபம் உண்மை பரனுக்கு உடம்பாடாகாததூஉம் செயற்கையானாகிய வியாத்தியுடையதூஉமென அந்நுவய வுவமைப்போலிவிரி ஒன்பதும்,

சாத்தியமின்மை யுடைத்தாகாததூஉம் சாத்தியமின்மை யுடைத்தென்பது நிச்சயிக்கப்படாததூஉம் ஏதுவின்மையுடைத்தாகாததூஉம் ஏது இன்மையுடைத்தென்பது நிச்சயிக்கப்படாததூஉம் இரண்டின்மையும் உடைத்தாகாததூஉம் இரண்டின்மையும் உடைத்தென்பது நிச்சயிக்கப்படாததூஉம் சொரூபம் இல்லதூஉம் சொரூபம் உண்மை பரனுக்கு உடம்பாடாகாததூஉம் வெதிரேக வியாத்தி செயற்கையான் உடையதூஉமென வெதிரேக வுவமைப் போலிவிரி ஒன்பதுமாம்.

தோல்வித்தானம் இரண்டு இருபத்திரண்டாம் - இனித் தருக்க வாதத்தின்கண் பேசத்தெரியாமையாகிய தோல்வித்தானம், மயங்கப் பேசுதலும் வாளாவிருத்தலுமென் றிருவகைப்பட்டு, விரியான் இருபத்திரண்டாம்.

அவையாவன :—தானெடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்க மாட்டாமல் அதற்குக் கேடுவரப்பேசுதலும், பிறிதொரு மேற்கோளைக்

கூறுதலும், மேற்கோளுக்கு மறுதலைப்படப் பேசுதலும், மேற்கோளை விட்டுவிடுதலும், தான் கூறிய ஏதுவுக்குக் குற்றம் வந்துழி வேறோ ராற்றான் ஏதுக்கூறுதலும், தனக்கு வருந்தோல்வியைப் பிறிதொன்று பேசி மறைத்தலும், பயனொடு படாதனபேசுதலும், பொருள் இனிது விளங்காத சொற்களை யெடுத்துக்கொண்டு பேசுதலும், அவாய்நிலை தகுதி அண்மை இல்லனவாய்ப் பேசுதலும், மேற்கோள் முதலிய ஐந்தினையும் முறைபிறழப் பேசுதலும், அவற்றுட் சில குறையப் பேசுதலும், ஒன்றற்குப் பல கூறுதலும், சொல்லை இரட்டித்துச் சொல்லுதலும், பொருளை இரட்டித்துச் சொல்லுதலும், பிறன்கூறிய பொருளை அநுவதிக்கமாட்டாமையும், பிறன்கூறியபொருளை அறிந்தும் அறியான்போன்று வினுதலும், விடை சொல்லத்தெரியாது வேறொரு கருத்துடையான் போன்றிருத்தலும், வாதத்தை விட்டுப் பிறிதொன்றனைச்சொல்லிப் பொழுதுபோக்கலும், சுபக்கத்துக்குச் சொல்லிய குற்றத்தைப் பரிகரியாது உடம்பட்டுப் பரபக்கத்துக்குக் குற்றம் பேசுதலும், தோல்வித்தானம் எய்தினேனைத் தோல்வித்தானம் எய்தினு யென்றறிந்து கூறு திருத்தலும், தோல்வித்தானம் எய்தாதானை எய்தினு யென்று கூறுதலும், தன் சித்தாந்தத்திற்கு இணங்காதவற்றைச் சொல்லிச் சித்தாந்தஞ் சாதித்தலுமென இவை.

அவையெல்லாம் அளக்கில் அறுபத்தைந்தாகும் - அவைகளை அளவிடுமிடத்தே இங்ஙனம் நான்கும் இருபத்தொன்றும் பதினெட்டும் இருபத்திரண்டுமாகிய அறுபத்தைந்தாம், இவை கருதில் யாண்டும் ஒழிவர் - இவைகளை விசாரிக்கின் அநுமானவளவைக்கு எவ்விடத்துங் குற்றங்களாமென்று ஒழிவர் என்க.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த அநுமான சாமக்கிரியைகளுள் துணி பொருட்கு இடனுதலாகிய பக்கலக்கணத்திற் குறைபாடு உடைத்தாயும் ஒருபுடையொத்துப் பக்கம்போலத் தோன்றுவதாகிய பக்கப்போலி, துணியும் பொருட்டு இடனுகாததூஉம், துணியும்பொருட்கு ஒருமருங்கு இடனுகாததூஉம், துணிந்த பொருட்கு இடனுவதூஉம், துணிந்தபொருட்கு ஒரு மருங்கு இடனுவதூஉமென நான்குவகைப்படும்.

சாத்தியப் பொருளோடு வியாத்தியுடைத்தாய்ப் பக்கத்திலிருத்தலாகிய ஏதுவிலக்கணத்திற் குறைபாடுடைத்தாயும் ஒருபுடையொத்து ஏதுப்போலத் தோன்றுவதாகிய ஏதுப்போலி, துணியப்படாததூஉம் மறுதலைக்கட்படுவதூஉம் ஒருதலைப்படாததூஉமென மூவகைப்பட்டு, விரியான் இருபத்தொன்றும்.

அவையாவன :—சார்பில்லதூஉம் சார்புண்மை யறியப் படாததூஉமெனச் சார்புபற்றிய குற்றமிரண்டும், சொரூபமில்லதூஉம் சொரூபமுண்மையறியப்படாததூஉம் சொரூபத்தின் விசேடணம் இல்லதூஉம் விசேடணம் உண்மையறியப் படாததூஉம் விசேடியம் இல்லாததூஉம் விசேடியம் உண்மையறியப் படாததூஉம் ஒருமருங்கில்லதூஉம் ஒருமருங்குண்மை யறியப் படாததூஉம் பரனுக்கு உடம்பாடில்லதூஉமெனச் சொரூபம்

பற்றிய குற்றமொன்பதும், சாத்தியத்தோடு வியாத்தியுண்மை யறியப்படாததூஉம் செயற்கைபற்றி வியாத்தியுடையதூஉமென வியாத்தி பற்றிய குற்றமிரண்டும் ஆகிய பக்கவிருத்தி துணியப் படாத ஏதுப்போலியின்விரி பதின்மூன்றும்,

மறுதலைப்பொருள் சாதிப்பதூஉம் மறுதலைப்பொருள் சாதிப்பதாய்ப் பிறிதோர் ஏதுவை உடன்கொண்டுவருவதூஉம் காட்சியளவையான் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவதூஉம் கருதல் அளவையான் மறுக்கப்பட்டுக் கொண்டுவருவதூஉம் உரையளவையான் மறுக்கப்பட்டுக்கொண்டு வருவதூஉமென மறுதலைத்தலையுடைய ஏதுப்போலி விரிஐந்தும்,

பக்க சபக்கமாத்திரையினன்றி விபக்கத்துஞ் சேறலுடைய தூஉம் சபக்கத்திற் சேறலின்றிப் பக்கமாத்திரையினுள்ளதூஉம் சபக்கவிபக்கங்கள் கிடைக்கப்பெறாததூஉமென ஒருதலைப் படாத ஏதுப்போலிவிரி மூன்றுமாம்.

இனி வியாத்தி நிச்சயித்தற்கிடனுதலாகிய உவமை இலக் கணமின்றியும் உவமைபோலத் தோன்றுவதாகிய உவமைப் போலி, அந்நுவயம்பற்றியும் வெதிரேகம் பற்றியும் இருவகைப் பட்டு, விரியானேரோவொன்று ஒன்பதாய்ப் பதினெட்டு வகைப் படும்.

அவையாவன :—சாத்தியமுடைத்தாகாததூஉம் சாத்திய முடைமை நிச்சயிக்கப்படாததூஉம் ஏதுவுடைத்தாகாததூஉம் ஏதுவுடைமை நிச்சயிக்கப்படாததூஉம் இரண்டும் உடைத்தா காததூஉம் இரண்டும் உடைமை நிச்சயிக்கப்படாததூஉம் சொரூபம் இல்லதூஉம் சொரூபம் உண்மை பரனுக்கு உடம்பாடு ஆகாததூஉம் செயற்கையானுகிய வியாத்தியுடையதூஉம் என அந்நுவயவுவமைப்போலிவிரி ஒன்பதும்,

சாத்தியம் இன்மை உடைத்தாகாததூஉம் சாத்தியம் இன்மை உடைத்தென்பது நிச்சயிக்கப்படாததூஉம் ஏது இன்மையுடைத்தாகாததூஉம் ஏதுவின்மை உடைத்தென்பது நிச்சயிக்கப்படாததூஉம் இரண்டின்மையும் உடைத்தாகாத தூஉம் இரண்டின்மையும் உடைத்தென்பது நிச்சயிக்கப்படாத தூஉம் சொரூபம் இல்லதூஉம் சொரூபமுண்மை பரனுக்கு உடம்பாடாகாததூஉம் வெதிரேகவியாத்தி செயற்கையான் உடையதூஉமென வெதிரேகவுவமைப்போலிவிரி ஒன்பதுமாம்.

இனித் தருக்கவாதத்தின்கட் பேசத்தெரியாமையாகிய தோல்வித்தானம், மயங்கப்பேசுதலும் வாளா இருத்தலும் என்று இருவகைப்பட்டு, விரியான் இருபத்திரண்டாம்.

அவையாவன :—தானெடுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்கமாட்டாமல் அதற்குக் கேடுவரப் பேசுதலும், பிறிதொரு மேற்கோளைக் கூறுதலும், மேற்கோளுக்கு மறுதலைப்படப் பேசுதலும், மேற்கோளை விட்டுவிடுதலும், தான்கூறிய ஏதுவுக்குக் குற்றம் வந்துழி வேறோர் ஆற்றான் ஏதக்கூறுதலும், தனக்கு வருந் தோல்வியைப் பிறிதொன்று பேசி மறைத்தலும், பயனொடு படாதன பேசுதலும், பொருள் இனிது விளங்காத சொற்களை எடுத்துக்கொண்டு பேசுதலும், அவாய்நிலை தகுதி அண்மையில்லனவாய்ப் பேசுதலும், மேற்கோள் முதலிய ஐந்தினையும் முறை பிறழப் பேசுதலும், அவற்றுட் சில குறையப் பேசுதலும், ஒன்றற்குப் பல கூறுதலும், சொல்லை இரட்டித்துச் சொல்லுதலும், பொருளை இரட்டித்துச் சொல்லுதலும், பிறன் கூறிய பொருளை அநுவதிக்கமாட்டாமையும், பிறன்கூறிய பொருளை அறிந்தும் அறியான்போன்று வினுதலும், விடை சொல்லத் தெரியாது வேறொரு கருத்துடையன் போன்றிருத்தலும், வாதத்தை விட்டுப் பிறிது ஒன்றனைச் சொல்லிப் பொழுது போக்கலும், சுபக்கத்துக்குச் சொல்லிய குற்றத்தைப் பரிகரியாது உடம்பட்டுப் பரபக்கத்துக்குக் குற்றம் பேசுதலும், தோல்வித்தானம் எய்தியோனைத் தோல்வித்தானம் எய்தினுய் என்றறிந்து கூருது இருத்தலும், தோல்வித்தானம் எய்தாதானை எய்தினுயென்று கூறுதலும், தன் சித்தாந்தத்திற் கிணங்காதவற்றைச் சொல்லிச் சித்தாந்தஞ் சாதித்தலும் என இவை.

இங்ஙனம் நான்கும் இருபத்தொன்றும் பதினெட்டும் இருபத்திரண்டுமாகிய அறுபத்தைந்தும் அநுமான அளவைக்குக் குற்றங்களாம் எ - ம்.

இவை குற்றமாகலின் ஆகமவளவைக்கு முன்னுகவையாது இறுதிக்கண்வைத்தார். இவற்றிற்கு உதாரணம் உய்த்துணர்ந்துகொள்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இன்னும் இப்பக்கஏது உவமைகளை எடுத்துச்சொல்லும்வழிப் படுஞ் சொற்குற்றங்களெல்லாந் தோல்வித்தானத்துள் அடங்கும்.

ஈண்டுக் கூறும் பக்கப்போலி உவமைப்போலிகளெல்லாம் ஏதுப்போலியுள் அடங்குமெனத் தார்க்கிகர் கூறுவர்.

பக்கவுவமைகளின் இலக்கணத்தை நோக்கிக் காணும்வழி, அவை பக்கப்போலி உவமைப்போலி எனப்படுவன அன்றி ஏதுப்போலியெனப்படாமை யறிக.

இதனுனே அநுமானப் பிரயோகத்தின்கட்படுங் குற்றங்கள் இவையென்பது தெரித்துக் கூறப்பட்டது. (கஈ)

**அளவை இலக்கணம் முடிந்தது.**

**ஆகத் திருவிருத்தம், உ0.**

---

# பிரமாணவியல்

## முதற் சூத்திரம்

இங்ஙனம் அளவையிலக்கணங் கூறிய ஆசிரியர், அவ்வளவையான் உணரப்படும் முப்பொருள்களது உண்மை மூன்று சூத்திரத்தான் உணர்த்துவான் தொடங்கி, முதற் சூத்திரத்துப் பதியுண்மைக்கு அளவை கூறுகின்றார்.

ஒருவனே டொருத்தி ஒன்றென்று உரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே
தருபவன் ஒருவன் வேண்டும் தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே.

(ப - ரை.) ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகம் எல்லாம் - அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் (இவ்வாறு அவயவப் பகுப்புடைத்தாய்க்) கூறப்படும் பிரபஞ்சத் தொகுதி, வருமுறை-தோன்றுதற்குரிய சற்காரிய முறையால், வந்து நின்று போவதும் ஆதலால் - தோன்றி நிற்றலே யன்றி அழிதலு முடைமையால், தருபவன் ஒருவன் வேண்டும் -(அது தன்னைத்) தோற்றுவிப்பான் ஒரு வினை முதலை அவாய் நிற்கும், (ஆகலான்) ஈறுமாகியே - (அவ்வுலக மொடுங்குதற்கு ஏதுவாய் நின்ற) சங்கார காரணனே, அநாதி முத்த சித்து உரு மன்னி நின்று - (அஃதொடுங்கிய பின்னும்) அநாதி முத்த சித்துருவாய் நிலைபெற்று நின்று, மருவிடும் - (அநாதி பெத்த சித்துருவின்பொருட்டு மீளவும் அவ்வுலகத்தை) முன்போலவே தோற்றுவிக்கும், தான் முதல் - (அதனால்) அவனே உலகிற்கு முதற்கடவுள் என்க.

(பொ - ரை.) அவன் அவள் அது என்னும் அவயவப்பகுப்புடைய பிரபஞ்சந் தோன்றுதற்குரிய சற்காரிய முறையால் தோன்றி நின்று அழிதலுடைமையால், அது தன்னைத் தோற்றுவிப்பான் ஒரு வினைமுதலை அவாய்நிற்கும்; ஆகலான், அவ்வுலகம் ஒடுங்குதற்கு ஏதுவாய்நின்ற சங்கார காரணனே அஃது ஒடுங்கிய பின்னும் அநாதிமுத்த சித்துருவாய் நிலைபெற்று நின்று அநாதி பெத்த சித்துருவின்பொருட்டு மீளவும் அவ்வுலகத்தை முன்போல மருவுவிக்கும்; அதனால் அவனே உலகிற்கு முதற் கடவுள் எ - ம்.

[1]"கொள்ளப்படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே" என்பதனுட் கொள்ளப்படாது என்பதுபோல, போவது என்னும் ஒருமை அத்தொழின்மேல் நின்றது.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

---

1. 'உள்ளப்' திருச்சிற்றம்பலக்கோவையார், அஎ.

ஒருவனையென்னும் இரண்டாவதும் தானேயென்னும் பிரிநிலை யேகாரமும் விகாரத்தால் தொக்கன.

ஈறு ஆகுபெயர். உம்மை சிறப்பு. ஆகியென்பது பெயர்.

மருவுவித்தல் முன்போலவே தோன்றச்செய்தல். [1]"குடிபொன்றிக் குற்றமும் ஆங்கே தரும்" என்றாற்போல விவ்விகுதி விகாரத்தால் தொக்கது.

முழுவதும் ஒடுங்கியபின் முதல்வன் எவ்வாறு நிற்பன் என்னுங் கடாவை விடுத்தற்கு அநாதிமுத்த சித்துருவாய் மன்னிநின்று என்றார். ஆக்கச்சொல் வருவித்துரைக்க.

அநாதிமுத்த சித்துருஎன இனம்பற்றி யடையடுத்தலின், அநாதி பெத்த சித்துருவும் உண்டென்பதூஉம், மீளவும் மருவுவித்தல் அதன் பொருட்டென்பதூஉம் பெற்றாம்.

[2]" மலத்துளதாம் " என்றார் முதனூலாசிரியரும்.

ஒருவனே டொருத்தி யொன்றென் றுரைத்தலாகிய அடைமொழி வந்து நின்று போவதாகிய ஏதுவைச் சாதிக்குங் குறிப்பேதுவாய் நின்றது.

இது மூன்றெழுவாயும் மூன்று பயனிலையு முடைத்தாய் முதல்நூன் முதற்சூத்திரம்போல முக்கூற்றதாமாறு காண்க.

இனி அம்மூன்றனுள் முதற்கூற்றை இருபத்தேழு செய்யுளான் வலியுறுத்துவான் தொடங்கினார். (க)

---

1. 'நடுவின்றி' திருக்குறள், கஎக.
2. 'அவன்அவள்' சிவஞான போதம், க.

## முதலதிகரணம்

உதிப்பதும் ஈறும் உண்டேன்று உரைப்பதிங் கேன்னே முன்னோர்
மதித்துல கநாதி யாக மன்னிய தேன்பர் என்னின்
இதற்குயான் அனுமா ஞதி எடேன் இப்பூ தாதி எல்லாம்
விதிப்படி தோற்றி மாயக் காணலான் மேதி னிக்கே.

(ப - ரை.) முன்னோர் - உலகாயத நூலுணர்ந்தோர், மதித்து - (காட்சியளவைக் கெய்தாதன பிரமாணமாகாவென) மதித்து, உலகு அநாதியாக மன்னியது என்பர் - உலகம் நித்தமாக நிலைபெறும் என்பர், (ஆகலான்) உதிப்பதும் ஈறும் உண்டு என்று உரைப்பது - (நிலைத்தொழி லொன்றேயன்றி ஏனைத்) தோற்றமும் நாசமும் உண்டெனக் கூறுவது, என்னே என்னின் - பெறப்படாதெனின், இங்கு விதிப்படி - ஈண்டு (நீ) விதித்த விதியாகிய நிலைத்தொழில் போலவே, இம் மேதினிக்கே - இவ்வுலகின்கண்ணே, பூதாதி எல்லாம் - பூதமுதற்காரணமாகவுடைய பிரபஞ்சங்களெல்லாவற்றிற்கும், தோற்றி மாயக் காணலான் - தோற்ற நாசங்களாகிய ஏனை இரண்டு தொழிலும் உடன்நிகழக் காண்டலான், யான் இதற்கு - யானிதனைச் சாதித்தற்கு, அனுமாஞதி எடேன் - (நீ கொண்ட காட்சியளவை யொன்றே அமையுமாகலின்) ஈண்டு அனுமானம் முதலிய வேறு பிரமாணங்கள் எடுத்துக்காட்டுவேன் அல்லேன் என்க.

(பொ - ரை.) உலோகாயத நூலுணர்ந்தோர் காட்சியளவைக்கெய்தாதன பிரமாணமாகாவென மதித்து உலகம் நித்தம் என்பாராகலான், நிலைத்தொழில் ஒன்றேயன்றி ஏனையிரண்டு தொழில்களதுண்மை பெறப்படாதெனின், ஈண்டு நீ விதித்த விதியாகிய நிலைத்தொழில் போலவே ஏனையிரண்டு தொழிலும் உடன்நிகழக் காண்டலான், இதனைச் சாதித்தற்கு நீ கொண்ட காட்சியளவையொன்றே அமையுமாகலின், ஈண்டு வேறு பிரமாணங்கள் எடுத்துக்காட்டல் வேண்டா எ - ம்.

படி உவமவுருபு.

[1]"தோற்றமுமீறும் உள்ளதன்பாலே கிடத்தலின்"
என்றார் முதல்நூலாசிரியரும்.

மேதினிக்கு என்பது உருபு மயக்கம்.

இதனானே உலகாயதன் மதம்பற்றி நிகழும் ஆசங்கையைப் பரிகரித்து முத்தொழிலுண்மை சாதிக்கப்பட்டது.

---

1. சிவஞானபோதம், சூத். க. அதி. க. ஏது.

பரபக்கத்துட் சித்தாந்தப் பார்வையாற் பரபக்கத்தாரை மறுத்தார்; ஈண்டுப் பரபக்கப்பார்வையால் அவர் கூறு மறுப்பைப் பரிகரித்துச் சித்தாந்தத்தை நாட்டுகின்றார். இவை தம்முள் வேற்றுமையாகலிற் கூறியது கூறலன்மையுணர்க. வேதாந்த நூல் இரண்டாமத்தியாயத்துள் இரண்டாம் பாதத்தினும் முதற்பாதத்தினுங் கூறியனவும் இவ்வாறே கொள்ளப்படும். (உ)

இயல்புகாண் தோற்றி மாய்கை யென்றிடின் இயல்பி னுக்குச்
செயலதின் றியல்பு செய்தி செய்தியேல் இயல்ப தின்றாம்
இயல்பதாம் பூதந் தானே இயற்றிடுஞ் செய்தி யென்னிற்
செயல்செய்வான் ஒருவன் வேண்டுஞ் செயற்படும் அசேதனத்தால்.

(ப - ரை.) தோற்றி மாய்கை - அத்தோற்றக் கேடுகள், இயல்பு காண் என்றிடின் - (உலகிற்கு) இயல்பு (ஆகலின் அவற்றிற்கு வினைமுதல் வேண்டப்படுவதன்று) எனின், செயலது இயல்பினுக்கு இன்று - (தோன்றலுங் கெடுதலும் விகாரமாதலின்) விகாரமாதல் இயல்பிற்குக் கூடாது, செய்தி இயல்பே - (அங்ஙனம்) விகாரமாதலே (உலகிற்)கியல் பெனின், செய்தி இயல்பது இன்றாம் - (அவ்வாறியம்புவார்க்கு) விகாரத்தின் (வேறாய) இயல்பென்பது ஒன்றில்லை யெனப்படும் (படவே தோற்றி மாய்கை இயல்பென்பது விட்டுப்போய்த் தோல்வித்தானமாய் முடியும் இனி இயல்பும் விகாரமும் வேறெனவே கொண்டு), பூதந்தானே இயல்பதாம் - பூதநான்கும் இயல்பாயுள்ளனவாம், செய்தி இயற்றிடும் என்னின் - (அவை தோற்றி மாய்தலாகிய) விகாரத்தைச் செய்யுமெனின் (நன்றுசொன்னாய்), செயற்படும் அசேதனத்தால் - (அவை யங்ஙனந்) தொழிலுற்று நிற்குஞ் செயப்படுபொருளாகலின், செயல் செய்வான் ஒருவன் வேண்டும் - (செயப்படு பொருட்கு) வினைமுதல் வேறு வேண்டப்படும் என்க.

(பொ - ரை.) அத்தோற்றக் கேடுகள் உலகிற்கியல்பாகலின் அவற்றிற்கு வினைமுதல் வேண்டப் படுவதன்றெனில், தோன்றலுங் கெடுதலும் விகாரமாகலின் விகாரமாதல் இயல்பிற்குக் கூடாது. அங்ஙனம் விகாரமாதலே உலகிற் கியல்பெனின், அவ்வாறியம்புவார்க்கு விகாரத்தின் வேறாய் இயல்பென்பது ஒன்றில்லை யெனப்படும்; படவே தோற்றிமாய்கை இயல்பென்பது விட்டுப்போய்த் தோல்வித்தானமாய் முடியும். இனி இயல்பும் விகாரமும் வேறெனவே கொண்டு, பூதநான்கும் இயல்பாயுள்ளன அவை தோற்றிமாய்தலாகிய விகாரத்தைச் செய்யுமெனின், நன்று சொன்னாய்; அவை அங்ஙனந் தொழிலுற்று நிற்குஞ் செயப்படு பொருளாகலிற் செயப்படு பொருட்கு வினைமுதல் வேறு வேண்டப்படும் எ - ம்.

படுமென்பது செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.

அசேதன மென்பது செயப்படுபொருளென்னுந் துணையாய் நின்றது.

சாத்தன் தன்னைக் குத்தினு னென்புழியும், குத்தியது கையுங் குத்தப்பட்டது பிறிதோருறுப்புமாகலின் வினைமுதலுஞ் செயப்படு பொருளுமொன்றாதல் யாண்டு மின்மை யுணர்க. (௫)

நிலம்புனல் அனல்கால் காண நிறுத்திடும் அழிக்கும் ஆக்கும்
பலந்தரும் ஒருவன் இங்குப் பண்ணிட வேண்டா என்னின்
இலங்கிய தோற்றம் நிற்றல் ஈறிவை யிசைத லாலே
நலங்கிளர் தோற்றம் நாசம் தனக்கிலா நாதன் வேண்டும்.

(ப - ரை.) கால் காண நிறுத்திடும் - (நான்கு பூதங்களுள்) வாயு ஏனை மூன்று பூதங்களையுங் காணும்படி நிலைபெறுத்தித் தான் அவற்றது சமுகத்தின் நிலைபெறும், அனல் அழிக்கும் - அங்கி ஏனை மூன்று பூதங்களையுமழித்துத் தான் அவற்றது சமுகத்தின் அழிவெய்தும், புனல் ஆக்கும் - அப்பு ஏனை மூன்று பூதங்களையுந் தோற்றித் தான் அவற்றது சமுகத்திலே தோன்றும், நிலம் பலந்தரும் - பிருதுவி ஏனை மூன்று பூதங்களினின்று நுகரப்படும் பயனைப் பயப்பித்துத் தான் அவற்றது சமுகத்திற் பயன்படுதலையுடைத்தாம், (இங்ஙனஞ் செய்யப்படுபொருட்கு வினைமுதல் வேறாய் நின்று காரிய நிகழ்த்துதல் கண்கூடாக நிகழ்தலின் இவையே தம்முள் ஒன்றனையொன்று பண்ண அமையும்), ஒருவன் இங்குப் பண்ணிட வேண்டா என்னின் - வேறொருவன் ஈண்டைக்கு வினைமுதலாதன் மிகையாமெனின், இலங்கிய இவை தோற்றம் நிற்றல் ஈறு இசைதலாலே - (அற்றன்று), விளங்கிய இந்நான்கு பூதங்களும் ஒப்ப முத்தொழிற்படுதலான் (இவை யொன்றனைக் காரியப்படுத்தும் ஆற்றலுடையன வன்மையின், தோற்றம் (நிற்றல்) நாசம் தனக்கு இலா நலம் கிளர் நாதன் வேண்டும் - (இவைபோல) முத்தொழிற்படுதல் தனக்கின்றி விளங்குகின்ற மேம்பாடுடைய இறைவனொருவனே (இவற்றைத் தொழிற்படுத்தற்பொருட்டு) வேண்டப்படும் என்க.

(பொ - ரை.) நான்கு பூதங்களுள், வாயு ஏனை மூன்று பூதங்களையும் நிலைபெறுத்தித் தான் அவற்றது சமுகத்தின் நிலை பெறும்; அங்கி ஏனை மூன்று பூதங்களையும் அழித்துத் தான் அவற்றது சமுகத்தின் அழிவெய்தும்; அப்பு ஏனை மூன்று பூதங்களையுந் தோற்றித் தான் அவற்றது சமுகத்தில் தோன்றும்; பிருதிவி ஏனை மூன்று பூதங்களினின்றும் நுகரப்படும் பயனைப் பயப்பித்துத் தானும் அவற்றது சமுகத்திற் பயன்படுதலை யுடைத்தாம். இங்ஙனஞ் செயப்படுபொருட்கு வினைமுதல் வேறாய் நின்று காரிய நிகழ்த்துதல் கண்கூடாக நிகழ்தலின் இவையே தம்முள் ஒன்றனையொன்று பண்ண அமையும், வேறொருவன் ஈண்டைக்கு வினைமுதலாதன் மிகையாமெனின், அற்றன்று; இந்நான்கு பூதங்களுமொப்ப முத்தொழிற்படுதலான் இவை ஒன்றனைக் காரியப்படுத்துமாற்றல் உடையனவன்மையின், இவை போல முத்தொழிற்படுதலின்றி மேம்பாடுடையானொருவனே இவற்றைத் தொழிற்படுத்தற்பொருட்டு வேண்டப்படும் எ - ம்.

[1]எதிர்நிரனிறையாக வைத்துரைக்க. இவ்வாறன்றி மேலைச் செய்யுளின் பொருளே பொருளாகக்கொண்டு, கூறியது கூறலென்னும் வழுப்பட உரைப்பாருமுளர்.

நலங்கிளர்நாதனென இயையும். நலம் - மேம்பாடு.

இவையிரண்டு செய்யுளானும் உலகம் முத்தொழிலுடைத் தென்பதனை உடம்பட்டு, தருபவனொருவன் வேண்டாவென்னும் உலகாயதரில் ஒருசாரார் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரிக்கப்பட்டது. (ச)

சார்பினில் தோன்றும் எல்லாந் தருபவன் இல்லை யென்னில்
தேரின்இல் லதற்கோ தோற்றம் உள்ளதற் கோநீ செப்பாய்
ஓரின்இல் லதுவுந் தோன்றாது உள்ளதேல் உதிக்க வேண்டா
சோர்விலா திரண்டும் இன்றி நிற்பது தோன்றும் அன்றே.

(ப - ரை.) (கணபங்கமாகிய எல்லாப் பொருள்களுள்ளும் முற்கணத்தில் தோன்றிய பொருள் பிற்கணத்தில் தோன்றும் பொருட்குச் சார்பாய் மேம்படுதலின்) எல்லாம் சார்பினில் தோன்றும் - எல்லாப் பொருளும் (வித்தின் கேட்டின் அங்குரம்போல) அவ்வச்சார்பிலே தோன்றுமெனச் சவுத்திராந்திகர் முதலியோர் மதம் பற்றிக் கூற அமையும், தேரின் தருபவன் இல்லை என்னின் - (ஆதலால்) ஆராயுமிடத்து இதற்கொரு கருத்தாத் தோற்ற நாசமின்மை பற்றி மேம்பாடுடையனுயுளனாதல் வேண்டாவெனின், தோற்றம் இல்லதற்கோ உள்ளதற்கோ நீ செப்பாய் - (அற்றன்று) நீ சார்பில் தோற்றங் கூறியது இல்பொருட்கோ உள்பொருட்கோ கூறுவாயாக, ஓரின் இல்லதுவும் தோன்றாது - உணருமிடத்து இல்பொருட்காயின் (அது முயற்கோடுபோல) ஒருஞான்றுந் தோன்றுமாறில்லை, உள்ளது உதிக்கவேண்டாவேல் - (அற்றேல் குடம்போல) உள்பொருட்குந் தோற்றம் வேண்டாமையின், இரண்டும் இன்றிச் சோர்வு இலாது நிற்பது - மாத்திமிகர் மதம்பற்றி இல்லதுமன்றி உள்ளதுமன்றி (அநிர்வசனமாய்ச்) சோர்வின்றி நிற்ப தொருபொருள், தோன்றும் அன்றே - தோன்றுமெனக் கோடும் என்க.

(பொ - ரை.) கணபங்கமாகிய எல்லாப்பொருள்களுள்ளும் முற்கணத்தில் தோன்றிய பொருள் பிற்கணத்தில் தோன்றும் பொருட்குச் சார்பாய் மேம்படுதலின், எல்லாப்பொருளும் வித்தின்கேட்டின் அங்குரம்போல அவ்வச்சார்பிலே தோன்றுமெனச் சவுத்திராந்திகர் முதலியோர் மதம்பற்றிக் கூற அமையும், இதற்கொரு கருத்தாத் தோற்றநாசமின்மைபற்றி மேம்பாடுடையனு யுளனாதல் வேண்டாவெனின், அற்றன்று; நீ சார்பில் தோற்றங் கூறியது இல்பொருட்கோ உள்பொருட்கோ? இல்பொருட்காயின், அது முயற்கோடுபோல ஒருஞான்றுந்

1. நிலம்புனல் அனல்கால் நிறுத்திடும் அழிக்கும் ஆக்கும் பலந்தரும். நிலம் - பலந்தரும், புனல் - ஆக்கும் அனல் அழிக்கும், கால் - நிறுத்திடும்.

தோன்றுமாறில்லை. அற்றேல் குடம்போல உள்பொருட்குந் தோற்றம் வேண்டாமையின் மாத்திமிகர் மதம்பற்றி இல்லதுமன்றி யுள்ளதுமன்றி அநிர்வசனமாய் நிற்பதொருபொருள் தோன்றுமெனக் கோடும் எ - ம்.

இல்லதுவு மென்னும் உம்மை சிறப்பு. [1]உடம்படுமெய் பெறுதல் இலேசாற் கொள்க. (௬)

உள்ளதும் இலதும் இன்றி நின்றதோன் றுளதேல் உண்டாம்
இல்லதேல் இல்லை யாகுந் தோற்றமும் இசையா தாகும்
உள்ளகா ரணத்தில் உண்டாம் காரியம் உதிக்கும் மண்ணில்
இல்லதாம் படம்க டாதி எழில்தரும் இயற்று வானால்.

(ப - ரை.) உள்ளதும் இலதும் இன்றி நின்றது ஒன்று - (அங்ஙனம்) உள்ளதும் இல்லதும் அன்றி அநிர்வசனமாய்க் கூறப்படும் பொருள் தான் ஒன்று (உண்டோ இல்லையோவெனக் கடாயினர்க்கு), உளதேல் உண்டாம் - உண்டெனில் உள்பொருளேயாம், இல்லதேல் இல்லையாகும் - இன்றெனில் இல்பொருளேயாம் (எனப்பட்டு அநிர்வசனமென்றது போலியாயொழியும்), தோற்றமும் இசையாதாகும் - (அல்லதூஉம் அநிர்வசனப்பொருள் சூனியமாகலின் அதற்குத்) தோற்றமுங் கூடாது, (இவ்வாறு சவுத்திராந்திகர் முதலியோர் கூறும் இல்பொருட்கும் மாத்திமிகர் முதலியோர் கூறும் அநிர்வசனப் பொருட்குந் தோற்றங் கூடாமையிற் பாரிசேட அளவையால்) உள்ள காரணத்தில் உண்டாம் காரியம் உதிக்கும் - உள்பொருளாகிய காரணத்தினின்றும் உள்பொருளாகிய காரியம் (ஒருகருத்தாவால் வெளிப்பட்டுத்) தோன்றும் என்பது, இயற்றுவானால் மண்ணில் - திகிரிமுதலிய துணைக்காரணங்களை மண்ணாகிய முதற்காரணத்தின்கண் உய்க்குங் குயவனால் அம்மண்ணினின்றும், படம் இல்லதாம் - ஆடை முதலிய காரியந்தோன்றாது, கடாதி எழில் தரும் - குடஞ் சால் கரக முதலிய காரியமே வெளிப்பட்டுத் தோன்றுதலின் (அவ்வெதிர்மறை முகத்தானும் உடம்பாட்டு முகத்தானும் அறியப்படும்) என்க.

(பொ - ரை.) அங்ஙனம் அநிர்வசனமாய்க் கூறப்படும் பொருள்தான் ஒன்று உண்டோ இல்லையோ எனக் கடாயினர்க்கு, உண்டெனில் உள்பொருளேயாம் இன்றெனில் இல்பொருளேயாம் எனப்பட்டு அநிர்வசனமென்றது போலியாயொழியும்; அல்லதூஉம் அநிர்வசனப்பொருள் சூனியமாகலின் அதற்குத் தோற்றமுங் கூடாது; இவ்வாறு சவுத்திராந்திகர் முதலியோர் கூறும் இல்பொருட்கும் மாத்திமிகர் முதலியோர் கூறும் அநிர்வசனப் பொருட்குந் தோற்றங் கூடாமையின், பாரிசேட அளவையாற் காரணங் காரியமிரண்டும் உள்பொருளேயாய்க் காரணத்தினின்றுங் காரியம் ஒருகருத்தாவால் வெளிப்பட்டுத் தோன்றுமென்பது, குயவனுவான் திகிரிமுதலிய துணைக்

---

1. இல்லது + உம் : இல்லதுவும் ‘வ’ உடம்படுமெய்.

காரணங்களை மண்ணாகிய முதற்காரணத்தின்கண் உய்ப்ப, அதனி னின்றும் ஆடை முதலிய காரியந் தோன்றாது குடஞ் சால் கரக முதலிய காரியமே வெளிப்பட்டுத் தோன்றுதலின், அவ்வெதிர் மறைமுகத்தானும் உடம்பாட்டு முகத்தானும் அறியப்படும் எ-ம்.

உள்ளதும் இலதும் இன்றி நின்றதொன்றுளதேல் என்றது அனு வாதஞ் செய்துகொண்டது. (௬)

ஒருபொருள் ஒருவன் இன்றி உளதில தாகும் என்னில்
தருபொருள் உண்டேல் இன்றாம் தன்மை இன்று இன்றேல் உண்டாய்
வருதலின்று இலது காரியம் முதலுள தாகும் என்னில்
கருதுகா ரியமும் உண்டாய்த் தோற்றமும் கருத்தா வாலாம்.

(ப-ரை.) (அற்றேல் அவையிரண்டும் ஏலாமையின்) ஒரு பொருள் உளது இலது - காரியப்படுவதோர் பொருள் உண்டுமாய் இல்லையுமாய் நிற்கும் ஈரியல்புடைய தாகலின், ஒருவன் இன்றி ஆகும் என்னின் - இதற்கொரு கருத்தா வேண்டப்படுவதின்றியே யுண்டாமெனச் சமணர் மதம் பற்றிக் கோடுமென்னின், தரு பொருள் உண்டேல் - பொருந்திய பொருள் உள்பொருளாயின், இன்றாந் தன்மை இன்று - இல்லையாந் தன்மை யின்மையின் உள்ளதேயாம், இன்றேல் - இல்பொருளாயின், உண்டாய் வருதல் இன்று - உண்டாய் வருதலின்மையின் இல்லதேயாம் (ஆதலின் உண்டும் இல்லையுமாம் என மாறுபட்ட இரண்டுதன்மை ஒரு பொருளுக்கிசைதல் கூடாது), முதல் உளதாகும் காரியம் இலது என்னின் - இனிக் காரணரூபமாய் உண்டு காரியரூபமாய் இல்லை என்பதே உண்டும் இல்லையும் என்பதற்குப் பொருளெனின், (நன்று சொன்னாய் காரண காரியங்கட்குத் தம்முள் வேற்றுமையின்மையின் காரணமுள் பொருளாகவே), கருது காரியமும் உண்டாய் - கருதுகின்ற காரியமும் அதன்கட் சூக்குமரூபமாயுள்ளதாய், தோற்றமும் கருத்தாவால் ஆம் - அது பின்னர்த் தூலரூபமாய் விளங்கித் தோன்றுதல் ஒரு வினை முதலான் ஆம் என்பது தானே போதரும் என்க.

(பொ - ரை.) அற்றேல், அவையிரண்டும் ஏலாமையிற் காரியப்படுவதோர் பொருள் உண்டுமாயில்லையுமாய் நிற்கும் ஈரியல்புடையதாகலின் இதற்கொரு கருத்தா வேண்டப்படுவான் அல்லனெனச் சமணர்மதம்பற்றிக்கோடும் எனின், அற்றன்று; உண்டும் இல்லையுமாமென மாறுபட்ட இரண்டுதன்மை ஒரு பொருட்கு இசைதல் கூடாது. இனிக் காரணரூபமாய் உண்டு காரியரூபமாய் இல்லையென்பதே உண்டும் இல்லையும் என்றதற்குப் பொருளெனின், நன்று சொன்னாய்; காரணகாரியங்கட்குத் தம்முள் வேற்றுமை இன்மையிற் காரணம் உள்பொருளாகவே காரியமும் அதன்கண் சூக்குமரூபமாயுள்ளதாய் அது பின்னர்த் தூலரூபமாய் விளங்கித் தோன்றுதல் ஒரு வினைமுதலானும் என்பது தானே போதரும் எ - ம்.

---

1. அனுவாதம் - பின்மொழிதல்.

இன்னும் இச்சற்காரியவாதத்தின்கட் படுங் கடாவிடைக ளெல்லாம் [1]"தந்துமுதலகாரகம்" என்னும் **ஞானமிர்தம்** முதலியவற்றுள் காண்க.

இவை மூன்றுசெய்யுளானும் முறையே, இல்லது தோன்றுமென்னுஞ் **சவுத்திராந்திகர்** முதலியோர் மதமும், இல்லதும் உள்ளதும் அல்லது தோன்றுமென்னும் **மாத்திமிகர்** முதலியோர் மதமும், இல்லதும் உள்ளதும் ஆயது தோன்றுமென்னுஞ் **சமணர்மதமும்பற்றி** ஆசங்கித்துப் பரிகரித்து, "வருமுறை" யென்பதனாற்பெறப்பட்ட சற்காரியவாதத்தை வலியுறுத்தி, தருபவனொருவன் வேண்டுமென்பது சாதிக்கப்பட்டது.

இதுகாறும் வந்துநின்று போவதென்றதூஉம், வருமுறை யென்றதூஉம், தருபவனொருவன் வேண்டுமென்றதூஉம், வைதிகப்புறத்தார் மதத்தான் இகந்துபடாமைக்காத்தார்; இனி வைதிகத்துட்பட்ட **மீமாஞ்சகர் தார்க்கிகர் சாங்கியர்** மதத்தான் முறையே அவையிகந்து படாமற் காக்கின்றார். (எ)

காயத்தின் அழிவு தோற்றம் கண்டனம் உலகிற் காணும்
நீயித்தை யுரைத்த வாறிங் கென்னெனின் நிகழ்த்தும் உண்மை
மாயத்த உலகம் பூநீர் தீவளி வானம் ஆதி
ஆயித்தான் ஒன்றின் ஒன்று தோன்றிநின் றழித லாலே.

(ப - ரை.) (காயமும் உலகும் என்னும் இருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஆண் பெண் அலியென மேற்கூறிய அவயவப்பகுப்புக் காயத்திற்கேயன்றி ஏனை உலகத்திற்கு இன்மையால்) தோற்றம் அழிவு காயத்திற் கண்டனம் - (அவயவப்பகுப்புடைமை பற்றித் துணியப்படுந்) தோற்றக் கேடுகளுங் காயத்திற்கே கண்டாம் அன்றி, உலகிற் காணும் - உலகிற்காணும் என்பது (துணியப்படுவதாயிருக்க), இங்கு நீ இத்தை உரைத்தவாறு என்னெனின் - ஈண்டுத் தோற்றக்கேடுகள் இரண்டற்கும் ஒப்பக்கூறுதல் அமையாதென்று நீ சொல்லில், மாயத்த உலகம் - (அற்றன்று, இவ்வாறு உனக்கு) மயக்கத்தைச் செய்வதாகிய உலகமும் (நீர் அவயவமாதலின்றி), பூ நீர் தீ வளி வானம் ஆதி ஆய இத்தான் - நிலம் நீர் தீ வளி வானம் என்றல் தொடக்கத்துப் பகுப்புடைத்தாகிய இதனான், உண்மை - அவ்வுண்மையே, ஒன்று - (நீ கூறும் இருகூற்றுப் பிரபஞ்சத்துள்) ஒன்றாகிய உலகமும், ஒன்றின் - ஏனைக் காயம்போல, தோன்றி நின்று அழிதல் - தோன்றி நின்று அழிதலை, நிகழ்த்தும் - உணர்த்தும் என்க.

(**பொ - ரை.**) காயமும் உலகும் என்னும் இருகூற்றுப் பிரபஞ்சத்துள், ஆண் பெண் அலியென மேற்கூறிய அவயவப் பகுப்புக் காயத்திற்கேயன்றி ஏனையுலகத்திற்கு இன்மையால், அவயவப்பகுப்புடைமைபற்றித் துணியப்படுந் தோற்றக்கேடுகளுங் காயத்திற்கேயன்றி உலகிற்கு இல்லையென்பது துணியப்படுவதாயிருக்கத் தோற்றக்கேடுகள் இரண்டற்கும் ஒப்பக் கூறுதல் அமையாதென்று நீ சொல்லில், அற்றன்று; இவ்வாறு

1. ஞானமிர்தம், உஉ, கரு. 2. 'ஒருவனோடு' சி. சி. சு. க. க.

**உனக்கு மயக்கத்தைச் செய்வதாகிய உலகமும் நிரவயமாக வின்றி நிலம் நீர் தீ வளி வானம் என்றல் தொடக்கத்துப் பகுப்புடைத்தாகிய இதனுன், அவ்வுண்மையே நீ கூறும் இருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்ருகியவுலகமும் ஏனைக்காயம்போலத்தோன்றி நின்று அழிதலை உணர்த்தும் எ - ம்.**

ஆயவென்னும் பெயரெச்சத்துள் அகரமும், இதனுன் என்பதனுள் அன்சாரியையும், விகாரத்தால் தொக்கன; [1]"பெற்றத்தாற் பெற்ற பயன்" என்ருற்போல.

ஆயிற்ருனென்று பாடமோதுவாருமுளர். ஒன்றினென்னும் இன் உவமவுருபு.

[2]"ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள்வயின், மெய்யுருபு தொகாஅ இறுதியான" என்பது ஒத்தாகலின், இரண்டாவது இறுதிக்கண் தொக்கது.

ஆல் அசை.

ஒன்றின் ஒன்று தோன்றிநின்று அழிதலால் என்பதற்கு வானம் முதலிய ஐந்தும் முறையே ஒன்றின் ஒன்று தோன்றிநின்று அழியும் என்னுஞ் சுருதி உனக்குப் பிரமாணமாதலால் என்றுரைப்பாரும் உளர்; வேதத்துள் விதிவாக்கியம் ஒழித்து ஒழிந்தன எல்லாம் புனைந்துரை வகையான் அன்றிப் பிரமாணமாகா எனக்கொண்ட மீமாஞ்சகமதத்தார்க்கு அவ்வுபநிடதச் சுருதி பிரமாணம் அன்றென்பது அவர் அறிந்திலர்; அல்லதூஉம் ஈண்டுக் கூறுவன எல்லாம் பொருந்தும் ஆறுபற்றியன்றி ஆகம அளவைபற்றியன்மையானும் அவ்வுரை போலியாதல் அறிக. (அ)

ஓரிடம் அழியப் பின்னும் ஓரிடம் நிற்கும் ஒக்கப்
பாரிடம் அழிவ தின்ரும் என்றிடிற் பயில்வித் தெல்லாங்
காரிடம் அதனில் காட்டும் அங்குரங் கழியும் வேனில்
சீருடைத் துலகு காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும்.

(ப - ரை.) (நிலம் மலை கடல் முதலிய வடிவிற்ருகிய உலகமுங் காயம்போல அவயவப் பகுப்பு உடைமையான் அதுபோலத் தோன்றி நின்று அழிதல் பெறப்படுமென்றது ஒக்கும் அங்ஙனமாயினும்) பார் இடம் ஒக்க அழிவது இன்ரும் - பார்த்தறியப்படும் உலகமெல்லாம் ஒருங்கே யழியுமெனின் உலகம் அநாதியென்னுஞ் சுருதியோடு முரணுதலானும் மீளத் தோன்றுதற்கு ஓரியைபின்ருய் முடியு மாகலானும், ஓர் இடம் அழியப்பின்னும் ஓர் இடம் நிற்கும் என்றிடின் - (அவ்வாறன்றி) உலகத்தின் ஒருபக்கம் அழியினும் பிறிதொரு பக்கம் நிற்கும் என்றலே பொருத்தம் உடைத்தெனின், பயில் வித்து எல்லாம் - (அற்றன்று தம்முள் ஒருசாதிப் பல பொருளாகிப்) பயில்கின்ற வித்து முதலிய சடங்கள், கார் இடம் அதனில் அங்குரம் காட்டும் - கார்காலமாகிய ஓர்

1. 'சுற்றத்தாற்' திருக்குறள், ருஉச.
2. தொல். சொல். வேற்றுமைமயங்கியல், சூ. உஉ.

காலவிசேடத்தின் ஒருங்கே முளை தோன்றும், வேனில் கழியும் - வேனில்காலமாகிய ஓர் காலவிசேடத்தின் ஒருங்கே யழியும் ஆகலின், சீர் உடைத்து உலகு-(அவ்) இயல்பிற்றாகிய உலகமும், காலம் சேர்ந்திட-அவ்வக்காலம் வந்துழி, பெயர்ந்து செல்லும் - அவ்வாறு முழுவதும் ஒருங்கே தோன்றி யொருங்கே யழியும் என்க.

(பொ - ரை.) நிலம் மலை கடல் முதலிய வடிவிற்றாகியஉலக மும் காயம்போல அவயவப்பகுப்பு உடைமையான் அதுபோலத் தோன்றிநின்று அழிதல் பெறப்படும் என்றது ஒக்கும்; அங்ஙன மாயினும், பார்த்தறியப்படும் உலகமெல்லாம் ஒருங்கேயழியு மெனின், உலகம் அநாதியென்னுஞ் சுருதியொடு முரணுதலா னும், மீளத் தோன்றுதற்கு ஓர் இயைபு இன்றாய் முடியுமாகலா னும் அவ்வாறன்றி உலகத்தின் ஒருபக்கம் அழியினும் ஒரு பக்கம் நிற்குமென்றலே பொருத்தமுடைத்தெனின்; அற்றன்று; தம்முளொருசாதிப் பல பொருளாகிய வித்துமுதலிய சடங்கள் ஒவ்வொரு காலவிசேடத்தின் ஒருங்கே தோன்றுதலும் ஒருங்கே யழிதலுங் கண்டாம் ஆகலின் அவ்வியல்பிற்றாகிய வுலகமும் அவ்வக்காலம் வந்துழி, அவ்வாறு முழுவதும் ஒருங்கே தோன்றி ஒருங்கேயழியும் எ - ம்.

பாரிடம் வினைத்தொகை. சீர் உவமவுருபு; 'அச்சீர்' என்றாற் போல. (௬)

காலமே கடவு ளாகக் கண்டனந் தொழிலுக் கென்னின்
காலமோ அறிவின் றாகும் ஆயினுங் காரி யங்கள்
காலமே தரவே காண்டுங் காரணன் விதியி னுக்குக்
காலமுங் கடவுள் ஏவ லால்துணைக் கார ணங்காண்.

(ப - ரை.) (காலஞ் சேர்ந்திடப்பெயர்ந்து சேறலான்) தொழி லுக்கு - அத்தோற்றக் கேடுகட்கு, காலமே கடவுளாகக் கண்டனம் என்னின் - காலமே கருத்தாவாய் முடியுமெனின், ஆயினும் -(அஃதொக் கும்) அங்ஙனமாயினும், காலமோ அறிவு இன்றாகும் - அக்காலம் அறிவில்லாதசடமாதலாற் (கருத்தாவாகாது), காரியங்கள் காலமே தரவே காண்டும் - (ஆனால்) காரியங்களைக் காலமே தரவேகாண்டலின், கடவுள் ஏவலால் - சேதனனாகிய கருத்தாவினது ஏவலான், காரணன் விதியினுக்கு - அவன் செய்யும் அத்தொழிற்கு, காலமும் துணைக்காரணம் காண் - காலமுந் துணைக்காரணமாம் என்று அறிவாயாக என்க.

(பொ - ரை.) காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து சேறலான் அத்தோற்றக் கேடுகட்குக் காலமே கருத்தாவாய் முடியுமெனின், அஃதொக்கும் ; அங்ஙனமாயினும் அது சடமாகலாற் கருத்தா வாகாது சேதனனாகிய கருத்தாவினது ஏவலான் அவன் செய்யும் அத் தொழிற்குத் துணைக்காரணமாம் என்று அறிவாயாக எ-ம்.

இது சொற்பொருட்பின்வருநிலை. ஓகாரஞ் சிறப்பின்கண் வந்தது.

காலமே தரவே என்னும் ஏகாரம் இரண்டினுள், முன்னையது பிரி நிலைக்கண்ணும், பின்னையது தேற்றத்தின்கண்ணும் வந்தன.

இவை மூன்று செய்யுளானும் மீமாஞ்சகர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து, "வந்து நின்றுபோவது" சாதிக்கப்பட்டது. (௧0)

அழிந்தபின் அணுக்கள் தாமே அகிலமாய் வந்து நின்று
கழிந்திடுங் கன்மத் தென்னிற் கன்மமும் அணுவுங் கூட
மொழிந்திடுஞ் சடமே யாகி முடிதலான் முடியா செய்தி
ஒழிந்திடும் அணுரூ பங்கள் உலகெலாம் ஒடுங்கும் அன்றே.

**(ப - ரை.)** *அழிந்த பின்* - (உலகம்) அழிந்தபின்னர், *அணுக்கள் தாமே* - மீளப் பரமாணுக்கள் தாமே, *கன்மத்து* - கன்மம் ஏதுவாக, *அகிலமாய்* - பிரபஞ்சமாய், *வந்து நின்று கழிந்திடும் என்னின்* - தோன்றி நின்று அழியும் (கன்ம காலங்கள்போல் இறைவன் இச்சையும் ஒரு காரணமாம் அத்தனையே பிறிதில்லை) எனின், *மொழிந்திடும் கன்மமும் அணுவும்* - (அற்றன்று) சொல்லப்பட்ட கன்மமும் அணுவும், *சடம் ஆகியே முடிதலான்* - சடமாயே முடிதலின், *செய்தி முடியா* - (அவை தம்முட்கூடித் தொழிற்படுதல் சித்தாகிய முதல்வன்) தொழிலையின்றி அமையாது, *உலகு எல்லாம் ஒடுங்கும் அன்றே* - (அஃதன்றியும்) உலக முழுதும் ஒடுங்கும்போது, *அணுரூபங்கள் கூட ஒழிந்திடும்* - அணுவுங் கூடவே ஒடுங்கும் (ஆகலான் அது பின் அகிலமாய் வந்து நின்று கழியு மாறு யாண்டையது) என்க.

**(பொ - ரை.)** உலகம் அழிந்தபின்னர் மீளப் பரமாணுக்கள் தாமே கன்மம் ஏதுவாகப் பிரபஞ்சமாய்த் தோன்றிநின்றழியும்; கன்மகாலங்கள்போல் இறைவன் இச்சையும் ஒருகாரணமாம் அத்தனையே பிறிதில்லையெனின், அற்றன்று; கன்மமும் அணுவுஞ் சடமேயாகலான், அவை தம்முட்கூடித் தொழிற்படுதல் சித்தாகிய முதல்வன் தொழிலையின்றி அமையாது. அதுவன்றியும், உலகம் ஒடுங்கும்போது அணுவுங் கூடவே ஒடுங்கும் ஆதலால், அது பின் அகிலமாய்வந்து கழியுமாறு யாண்டையது? எ - ம்.

இவ் வணுகாரணவாதஞ் சவுத்திராந்திகர் வைபாடிகர் ஆசீவகர்க்கும் ஒக்குமேனுந் தலைமைபற்றித் தார்க்கிகர்மேல் வைத்து மறுத்தவாறு.

காரண அணுக்கள் கெட்டால் காரிய உலகின் றென்னில்
காரண மாயை யாகக் காரியங் காண லாகும்
காரண மாயை யென்னை காண்பதிங்கு அணுவே என்னில்
காரண மாயை யேகாண் காரியம் அணுவில் கண்டால்.

**(ப - ரை.)** *காரண அணுக்கள் கெட்டால்* - காரணமாகிய அணுக்கள் அழிந்தால், *காரிய உலகு இன்று என்னின்* - காரியமாகிய பிரபஞ்சம்

1. 'ஒருவனோடு' சி. சி. சூ. க. க.

ஒருவனே யிராவ ணாதி பாவகம் உற்றுற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாந் தன்மையுந் திரியா னாகும்
வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்.

(ப - ரை.) ஒருவனே இராவணன் ஆதி பாவகம் உற்றுற்போல - ஒருவன் (கூத்திற்குரிய) இராவணனாதி பலவேடங்கட்டி நடித்தானாயினுந் தன்றன்மையிற் சிறிதுந் திரியாமை போல, தருவன் இவ்வுருவ மெல்லாம் - முதல்வன் (ஐந்தொழிற்குரியனவாய்) இங்ஙனங் கூறிப் போந்த பேத வடிவெல்லாம் எய்தியும், வரும் வடிவு எல்லாம் - வரப் பட்ட அவ்வடிவு வேறுபாடெல்லாம், சத்தி தான் மரமும் காழ்ப்பும் இருமையும்போல மன்னி - சத்தியுந்தானும் மரமும் வயிரமுமாகிய அவ்விரண்டும்போல நிலைபெற்று, சிவத்தினோடு இயைந்து நிற்கும் சத்தி - குணகுணிபாவமாயுடனிற்குந் தனது சத்தியிற் காணப்படுவன வாகலின், தன்மையும் திரியானாகும் - (அதுபற்றித்) தன்றன்மை வேறுபட்டு விகாரியாவான் அல்லன் என்க.

(பொ - ரை.) ஒருவன் கூத்திற்குரிய பல வேடங்கட்டி நடித்தானாயினுந் தன்தன்மையிற் சிறிதுந் திரியாமைபோல, முதல்வன் ஐந்தொழிற் குரியனவாய் இங்ஙனங் கூறிப்போந்த பேதமெல்லாம் எய்தியும் அவ்வேறுபா டெல்லாங் குணகுணி பாவமாய் உடனிற்குந் தனது சத்தியிற் காணப்படுவனவாகலின், அதுபற்றித் தன்தன்மை வேறுபட்டு விகாரியாவானல்லன் எ-ம்.

ஏகாரந் தேற்றம். தன்மையுமென்னுமும்மை சிறப்பின்கண் வந்தது.
இருமையென்றது ஈண்டெண்ணின் மேனின்றது.
சத்தியிற் காணப்படுவனவற்றைச் சத்தியென்றுபசரித்தார்.

அற்றேல், தனது சத்தியிற் காணப்படுவது தனக்காமாறு யாங்ஙன மெனின், அது வருஞ் செய்யுளிற் கூறப்படும். (௬௭)

பொன்மைநீ லாதி வன்னம் பொருந்திடப் பளிங்க வற்றின்
தன்மையாய் நிற்கு மாபோற் சத்திதன் பேத மெல்லாம்
நின்மலன் தானாத் தோன்றி நிலைமையோன் றாயே நிற்பன்
முன்னருட் சத்தி தன்பான் முகிழ்க்குந்தான் முளையான் அன்றே.

(ப - ரை.) பொன்மை நீலம் ஆதி வன்னம் பொருந்திட - பொன்மை நீலாதிகளைத் தன் னிறமே பற்ற, பளிங்கு அவற்றின் தன்மையாய் நிற்குமாபோல் - (தானும்) அத்தன்மைகள் அனைத்து மாய்(த் தோன்றி வேற்றுமையின்றி) நிற்கும் படிகம்போல, நின் மலன் சத்தி தன் பேதமெல்லாம் - முதல்வனுந் தனது சத்தியிற் காணப்படும் அப்பேதமெல்லாம், தான் ஆத் தோன்றி நிலைமை ஒன்றாயே நிற்பன் - தானாகத் தோன்றி வேற்றுமையின்றியே நிற்பன், முன் அருட் சத்தி தன்பால் முகிழ்க்கும் - (அவன் யாண்டுங்) கருதப் பட்ட அருட்சத்தியினிடமாகவே தோன்றுவான் (அன்றி), தான் (ஆக) முளையான் அன்றே - தானாக வேறு தோன்றானாகலான் என்க.

(பொ - ரை.) பொன்மை நீலாதிகளைத் தன்னிறமே பற்றத் தானும் அத்தன்மைக ளனைத்துமாய்த் தோன்றி வேற்றுமை யின்றி நிற்கும் படிகம்போல, முதல்வனுந் தனது சத்தியிற் காணப்படும் அப்பேதமெல்லாந் தானாகத் தோன்றி வேற்றுமை யின்றியே நிற்பன்; அவன் யாண்டுஞ் சத்தியினிடமாகவே தோன்றுவானன்றித் தானாக வேறு தோன்றானாகலான் எ - ம்.

வன்னம் படிகநிறம்.

ஏகாரந் தேற்றம்.

தன்னென்றது இடைச்சொல், கிரியைதன்னாலாக்குவன் என் றாற்போல.

ஆகவென வருவித்துரைக்க.

இவை நான்கு செய்யுளானுஞ் சிவபேதவாதிகள் கூறுங் கடாவை யாசங்கித்துப் பரிகரித்து மேலது சாதிக்கப்பட்டது.

இம் முத்திறத் தொன்பது செய்யுளுந் தான்முதலென்றதனை வலி யுறுத்தியவாறு. (கூஅ)

சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியு மாகி
வைத்தனன் அவளால் வந்த ஆக்கம்இவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையும் அறியார் பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார்.

(ப - ரை.) சத்தியும் சிவமும் ஆய தன்மை - (இறைவன் இவ் வாறு) சத்தியுஞ் சிவமுமெனத் தன்னுள்ளே இருவேறு வகைப்பட்ட தன்மைகள் (வைத்தலானன்றே), இவ்வுலக மெல்லாம் - (பலவேறு வகைப்பட்ட) இவ்வுயிர் வடிவங்கள் அனைத்தும், ஒத்து ஒவ்வா ஆணும் பெண்ணும் - (அவ்வப் பிறப்புக்கியைய வடிவங்களெல்லாம்) ஒத்து(க் குறி குணங்கள்) ஒவ்வாது (இருவேறு வகைப்பட்ட) ஆணும் பெண்ணு மாக, உணர்குண குணியும் ஆகி வைத்தனன் - (அவ்வவ்வியோனிக் குள் அவ்வக் குறிகட்கேற்ப) உணரப்படும் (இருவேறுவகைக்) குணங் களையுடையன வாயடங்கித் தம்முட்கூடிக் களித்து வாழாநிற்பச் செய்தனனாகலான், இவ்வாழ்க்கையெல்லாம் - (இப்படியே) ஈண்டுக் கூறிப்போந்த வாழ்வுகளெல்லாம், அவளால் வந்த ஆக்கம் - சிவசத்தி மணந்ததனாலாகிய வாழ்வு (என்பது அறியப்படும்), இத்தையும் அறியார் - (அச்செலாம இலிங்காங்க பகாங்கமாம்படி சிவமுஞ் சத்தியுங் கொண்டருளிய) இம்முறைமையும் உணரார், பீடலிங்கத்தின் இயல் பும் ஓரார் - பீடலிங்க வடிவமே (அங்ஙனம் இருவேறுவகைப்பட வைத்ததனைக் கண்கூடாக அறியச்செய்தல் சான்றாகவும் அதனையும்) உணரார் என்க.

(பொ - ரை.) இறைவன் இவ்வாறு சத்தியுஞ் சிவமுமெனத் தன்னுள்ளே இருவேறு வகைப்பட்ட தன்மைகள் வைத்தலா

னன்றே, பலவேறுவகைப்பட்ட உயிர்வடிவங்களனைத்துங் குறி யானுங் குணத்தானும் ஆண்பெண்ணென அவ்வவியோனிக்குள் இருவேறுவகையா யடங்கித் தம்முட் கூடிக் களித்து வாழா நின்றனவாகலான், இப்படியே ஈண்டுக் கூறிப்போந்த வாழ்வுக ளெல்லாஞ் சிவசத்தி மணந்ததனுலாகிய வாழ்வென்பதறியப் படும். அச்செலாம் இலிங்காங்க பகாங்கமாம்படி சிவமுஞ் சத்தியுங் கொண்டருளிய பீடலிங்கவடிவமே அங்ஙனம் இரு வேறு வகைப்பட வைத்ததனைக் கண்கூடாக அறியச்செய்தல் சான்று எ - ம்.

ஒத்தொவ்வாமையாவது, அவ்வப் பிறப்புக்கியைய வடிவங்க ளெல்லாம் ஒத்துங் குறிகுணங்கள் ஒவ்வாது இருவேறு வகைப்படுதல். ஆண் பெண்ணென்பன குறியுணர நின்றன. உணர்குண குணியுமாகி யென்பது, அவ்வக்குறிகட்கேற்ப உணரப்படும் இருவேறுவகைக் குணங்களையுடைய குணியுமாகி யென்பதாம். இருவேறுவகைக் குண முடையன ஆதலாவது, ஆணெனப்பட்டனவெல்லாம் ஆண்மைக் குணமும், பெண்ணெனப்பட்டனவெல்லாம் அமைதிக்குணமுமுடை யனவாதல். ஈண்டுக் குணியென்றது வாளாபெயராய் நின்றது, கரிகரம் பணிபணமென்றாற்போல.

ஈண்டுக் கூறிப்போந்த வாழ்க்கையாவன, உலகமெல்லாம் அவய வப்பகுப்புடையனவாதலும், முத்தொழிலுடையனவாதலும், கருத் தாவை யுடையனவாதலும், சங்காரக்கடவுளினின்றுந் தோன்றுவனவா தலும், அவனையே முதற்கடவுளாகவுடையனவாதலும் என்னுமிவை.

இதனுனே தான் முதலாதலைக் கண்கூடாக விளக்குமுகத்தான் முதல்வனுக்குரிய பொதுவியல்பனைத்துந் தொகுத்துக் கூறப் பட்டன. (௬௬)

சிவன்அரு உருவும் அல்லன் சித்தினோ டசித்தும் அல்லன்
பவமுதல் தொழில்கள் ஒன்றும் பண்ணிடு வானும் அல்லன்
தவமுத லியோக போகந் தரிப்பவன் அல்லன் தானே
இவைபெற இயைந்தும் ஒன்றும் இயைந்திடா இயல்பி னனே.

(ப - ரை.) சிவன் அரு உருவும் அல்லன்-சிவபிரான் அருவும் உரு வும் அல்லாதவன், சித்தினோடு அசித்தும் அல்லன் - சித்தும் அசித்தும் அல்லாதவன், பவம் முதல் தொழில்கள் ஒன்றும் பண்ணிடுவானும் அல்லன் - சிருட்டிமுதலிய ஐந்தொழில்களில் ஒன்றுஞ் செய்வானும் அல்லாதவன், தவம் முதல் யோக போகம் தரிப்பவன் அல்லன் - தவமுதலியவற்றிற்குரிய யோகபோக வடிவங்கொள்வானும் அல்லாத வன், தானே இவை பெற இயைந்தும் - (ஆதலால்) அம்முதல்வன் தடத்தலக்கணமாகிய இவற்றைப் பொருந்தி நின்றானாயினும், ஒன்றும் இயைந்திடா இயல்பினனே - அவற்றைச் சிறிதும் பொருந்தாத சொரூபலக்கணத்தையுடையான் (அஃது உண்மையதிகாரத்திற் பெறப் படும்) என்க.

(பொ - ரை.) ஈண்டுக் கூறிப்போந்தவை யனைத்தும் முதல்வனுக்குத் தடத்தலக்கணமாதலின், சொரூபலக்கணமெனப்படுந் தன்னுண்மை இவற்றின் வேறாம்; அஃது உண்மையதிகாரத்திற் பெறப்படும் எ - ம்.

இதனானே முதல்வனுக்குரிய சிறப்பியல்பு தொகுத்துக் கூறப்பட்டது. (எO)

முதற் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் கூO.

---

# இரண்டாஞ் சூத்திரம்

முதற் சூத்திரத்தின் ஈறுமாகி மருவிடு மென்றதன்கட்படும் அவாய் நிலையை நிரப்புவதற்குப் புநர் உற்பவமாமாறு உணர்த்துமுகத்தானே ஆண்டு உலகிற்கு நிமித்தகாரணனாகிய பதியுண்மைக்கு அளவை கூறிய ஆசிரியர், காரணமாதற் பொதுமையான் இயைபுடைய ஏனைத் துணைக் காரண முதற்காரணங்களதுண்மைக்கு அளவையும் அவற்றாற் காரியப் படுமாறும் இரண்டாஞ் சூத்திரத்திற் கூறுகின்றார்.

உலகெலா மாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத் தாணையின் அமர்ந்து செல்லத்
தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீர் அமல னாகி நின்றனன் நீங்கா தெங்கும்.

(ப - ரை.) (மேற்கூறிப்போந்த சிவபிரான் புநருற்பவஞ் செய்யுங்கால்) உலகு - உயிர்களிடத்தே, எல்லாம் ஆகி - (கலப்பினால் உடலுயிர் போல) அவ்வுயிர்களேயாய், வேறு ஆய் - (பொருள் தன்மையாற் கண் அருக்கன்போல) அவற்றின் வேறுமாய், உடனும் ஆய் - (உயிர்க்குயிரா தல் தன்மையாற் கண்ணொளி ஆன்மபோதம்போல) உடனுமாய், ஓங்கி ஒளி ஆய் - (அவ்வவ்வுயிர்களின் வழி) ஓங்கி நிற்பதாகிய சத்திரூபமாகி யும், ஆணையின் - தனது ஆணையான் வரும், கன்மத்து - இருவினைக் கேற்ப, அலகு இலா உயிர்கள் - எண்ணிறந்த அவ்வுயிர்கள், அமர்ந்து செல்ல - (ஐந்தொழிலிற்) பட்டுச்செல்லுங்கால், தலைவனாய் - (அவ்வைந் தொழினடாத்துவதாகிய) பதிரூபமாகியும், இவற்றின் தன்மை தனக்கு எய்தல் இன்றி - அத்தன்மைகளின் வேறாய், நீங்காது - அவற்றோடுந் தாதான்மியமாய், எங்கும் தானே நிலவு சீர் அமலனாகி நின்றனன் - எவ்விடத்துந் தானே சுயம்பிரகாசரூபமாம் இயல்புடையனாய் நிற்பன் என்க.

(பொ - ரை.) மேற் கூறிப்போந்த சிவன், புனருற்பவஞ் செய்யுங்கால், உயிர்களிடத்து உடலுயிர் கண்ணருக்கன் அறிவு ஒளிபோற் பிறிவரும் அத்துவிதமாய் அவ்வவ்வுயிர்களின்வழி நிற்பதாகிய சத்திரூபமாயும், தனதாணையான் வரும் இருவினைக் கேற்ப அவ்வுயிர்கள் ஐந்தொழிலிற்பட்டுச் செல்லுங்கால் அவ் ஐந்தொழில் நடாத்துவதாகிய பதிரூபமாகியும், அத்தன்மை களின் வேறாய் அவற்றோடுந் தாதான்மியமாய், எவ்விடத்துந் தானே சுயம்பிரகாசரூபமாம் இயல்புடையனாய் நிற்பன் எ - ம்.

அநாதி முத்த சித்துருவாகிய முதல்வன், ஒன்றினுந் தோய்வின்றித் தானே சொயம்பிரகாசமாய் நிற்குந் தன்னுண்மையிற் சிவமெனவும், உலகெலாமாகிவேறாய் உடனுமாய் இவ்வாறுயிர்களின்வழி நிற்குந்

தன்மையிற் சத்தியெனவும், தாதான்மியத்தான் இருதிறப்பட்டு, பின் ஐந்தொழில் செய்யுந் தன்மையிற் பதியெனப் பெயர்பெற்று நிற்ப னென்னுஞ் சிவாகமநூல் துணிபு உணர்த்துவார், இவ்வாறு பகுத் தோதினர்.

ஈண்டு உலகம் என்றது உயிர்களை. ஒளியென்றது சத்தியை.

தலைவனெனினும் பதியெனினும் ஒக்கும். நீங்காமை தாதான்மியம்.

இச்செய்யுள் முதனூல் இரண்டாஞ் சூத்திரம்போல நாற்கூற்றதா மாறு கண்டு கொள்க. (க)

## முதலதிகரணம்

ஒன்றென மறைக ளெல்லாம் உரைத்திட உயிர்கள் ஒன்றி
நின்றனன் என்று பன்மை நிகழ்த்துவ தென்னை யென்னின்
அன்றவை பதிதான் ஒன்றென் றறையும்அக் கரங்கள் தோறுஞ்
சென்றிடும் அகரம் போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே.

(ப - ரை.) மறைகள் எல்லாம் - வேதங்களின் எல்லாம், ஒன்று என உரைத்திட - ஆன்மா ஒருவன் என்று உரைத்திடவும், உயிர்கள் ஒன்றி நின்றனன் என்று - உயிர்களோடு கலந்து உடனாய் நிற்பனென்று, பன்மை நிகழ்த்துவது என்னை என்னின் - பன்மை கூறுவது யாதெனின், அவை பதிதான் ஒன்று என்று அறையும் - அவ்வேதங்களின் ஆன்மா ஏகனேயென்பதற்குப் பரமான்மா ஒருவனே யென்பது தாற்பரியமாகக் கூறுதலின், அன்று - அதுபற்றி முரணுதலின்மையான் (மேலைச்செய்யுளின் வேறாயென்றதூஉம்), அக்கரங்கள் தோறும் சென்றிடும் அகரம்போல - ஒன்றாகிய அகரம் பல எழுத்துக்களின் விரவி நிற்றல் (காணப்படுதலின் அங்ஙனம்) போல, சிவனும் சேர்ந்தே நின்றனன் - ஒருவனாகிய பரமான்மாப் பலவுயிர்களின் விரவி நின்றனன் (எனல் யாங்ஙனமென்னும் ஆசங்கைக்கு இடமின்மையான் உடனுமா யென்றதூஉம் அமைவுடையன) என்க.

(பொ - ரை.) வேதத்துள் ஆன்மா ஏகனேயென்பதற்குப் பரமான்மா ஒருவனேயென்பது தாற்பரியமாகலான் அதுபற்றி முரணுதலின்மையான், மேலைச் செய்யுளின் வேறாயென்றதூஉம், ஒன்றாகிய அகரம், பல எழுத்துக்களின் விரவிநிற்றல் காணப் படுதலின் ஒருவனாகிய பரமான்மாப் பலவுயிர்களின் விரவிநிற்றல் யாங்ஙனம் என்னும் ஆசங்கைக்கு இடம் இன்மையான், உடனுமா யென்றதூஉம், அமைவுடையன எ - ம்.

உம்மை சிறப்பின்கண் வந்தது. (உ)

உருவோடு கருவி யெல்லாம் உயிர்கோடு நின்று வேறாய்
வருவது போல ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன்
தரும்உயிர் அவனை யாகா உயிரவை தானும் ஆகான்
வருபவன் இவைதா னுயும் வேறுமாய் மன்னி நின்றே.

(இ - ள்.) உயிர் உருவொடு கருவி எல்லாம் கொடு நின்று - உயிர் (நரம்பு முதலியவற்றாற் பிணிக்கப்படுந்) தநுவையும் (ஐம்பொறி முதலிய) கருவிகளையுங் கைக்கொண்டு உடனாய் நின்ற வழியும், வேறாய் வருவதுபோல - உயிருயிரே உடம்பு உடம்பே (உயிர் உடம்பா யொழி யாது, உடம்பு உயிராகமாட்டாது) அதுபோல, ஈசன் உயிர்களின் மருவி வாழ்வன் - முதல்வன் உயிர்களோடு அபேதமாய்க் கலந்து நிற்பன் (அங்ஙனம் நின்றவழியும்), தானும் உயிரவை ஆகான் தரும்

உயிர் அவனே ஆகா - (முதல்வன் முதல்வனே உயிர்உயிரே) முதல்வன் உயிரா யொழியான் பொருந்திய உயிர் முதல்வனுகமாட்டாது (அவ்வாருயினும் உயிரவ்வுடம்பின் வேருகியும் அதுவாகி நிற்றல் காணப்படுதல்போல), இவைதான் ஆயும் வேறும் ஆய்மன்னி நின்றே வருபவன் - முதல்வன் அங்ஙனம் வேருகியும் உலகெலாமாகி நிற்றல் அமைவுடையன் என்க.

(பொ - ரை.) முதல்வன் அங்ஙனம் வேருகியும் உலகெலா மாகி நிற்றல் அமைவுடைத்தென்பது உடம்பின் கண்ணதாகிய உயிரியல்பின் வைத்துக் கண்டுகொள்க எ - ம்.

ஐ சாரியை. அவை பகுதிப்பொருள் விகுதி. நின்று வருபவனென வியையும்.

இவை யிரண்டு செய்யுளானும், பேதவாதம் பேதாபேதவாதம் அபேதவாதமாகிய முக்கூற்று மதங்களையும் பரிகரித்து, உலகெலா மாகி வேருயுடனுமாயென்ற முதற்கூற்றுப் பொருள் வலியுறுத்தப் பட்டது.

இன்னும் இதன்கட்படுங் கடாவிடைகளெல்லாம் முன்னர் விரித் துக் கூறப்படுமென்பதுபற்றி ஈண்டு விரித்திலர்.

இனி ஒளியாயோங்குதற்கட்படுங் கடாவிடைகளே மேலைச்சூத் திரத்துள் இயைபுபற்றிக் கூறிப்போந்தமையின் ஈண்டுத் தெரித்திலர்.

அஃதங்ஙனமாக, முதல்நூற்பொருளை முதல்நூலிற் கிடந்தவாறன் றித் தொகுத்தல் முதலிய நால்வகை யாப்பினுள் ஒன்றுபற்றிச் செய் வதன்றே வழி நூலாவது; அவ்வாறன்றி, அன்றவை பதிதான் ஒன் றென்றறையும் எனவும், உருவொடு கருவியெல்லாம் எனவும், பிறுண் டுஞ் சிலவற்றை முதல்நூலிற் கிடந்தவாறே கூறுதல் வழிநூற்கு மர பன்று போலுமெனின், [1]"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர் மொழியும - பொன்னேபோற் போற்றுவம் என்பதற்கும் - முன்னோ ரின் - வேறுநூல் செய்துமெனும் மேற்கோளி லென்பதற்குங் - கூறு பழஞ் சூத்திரத்தின் கோள்" என்பவாகலின், அப்பயன்பற்றி ஒரோ வழி யங்ஙனங் கூறுதலும் வழிநூற்கு மரபென விடுக்க; இதனனே கூறியது கூறலென்னும் வழுவின்மையுங் கண்டுகொள்க.

இனி நாற்பத்தேழு செய்யுளான் அலகிலாவுயிர்கள் கன்மத் தாணையினமர்ந்து செல்லவென்ற இரண்டாங் கூற்றை அவ்வவர் மதம் பற்றி யாசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்துகின்றுர். (ந)

---

1. நன்னூல், பொதுப்பாயிரம், வெண்பா - க.

## இரண்டாமதிகரணம்

இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்தி றந்து
வருவது போவ தாகு மன்னிய வினைப்ப லன்கள்
தருமரன் தரணி யோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்ம பயன்களும் மறுமைக் கண்ணே.

(ப - ரை.) இவ்வுயிர் - மேற்கூறிப்போந்த வுயிர், இருவினை (முற்பிறவியிற் செய்யப்பட்டுக் கிடந்த) இருவினைக்கீடாக, இன்பத் துன்பத்து - (இப்பிறவியின் வரும்) இன்பத்துன்ப நுகர்ச்சியான் (மேலும் வினையேறுதலின்), பிறந்து இறந்து - (அதனான் மீளமீளப்) பிறந்திறத்தலும், போவது வருவது ஆகும் - (துறக்கநிரயங்களிற்) சென்று மீடலுமுடைத்தாகலான், மன்னிய வினைப்பலன்கள் - (உடம் பொடு) நிலைபெறும் அவ்வினைப்பயன்களை, தரணியோடு தராபதி போல - மருத்துவனும் வேந்தனும்போல, அரன்தரும் - முதல்வனே (அவ்வுயிர்க்குத் தனதாணையாற்) கூட்டுவன் (அவ்வாறன்றி), வடிவும் கன்ம பயன்களும் - உருவுங் கன்மப்பயனுஞ் (சடமாகலின்), தாமே மறுமைக் கண்ணே மருவிடா - அவைதாமே மறுமைக் கண்ணேவந்து கூடமாட்டா என்க.

(பொ - ரை.) மேற் கூறிப்போந்த உயிர், முற்பிறவியிற் செய்யப்பட்டுக் கிடந்த இருவினைக்கீடாக இப்பிறவியின் வரும் இன்பத்துன்ப நுகர்ச்சியான் மேலும் வினையேறுதலின், அதனான் மீளமீளப் பிறந்திறத்தலும் துறக்கநிரயங்களிற் சென்று மீடலும் உடைத்தாகலான், உடம்போடு நிலைபெறும் அவ்வினைப் பயன்களை மருத்துவனும் வேந்தனும்போல, முதல்வனே யவ் வுயிர்க்குத் தனதாணையாற் கூட்டுவன், அவ்வாறன்றிச் சடமாகிய அவைதாமே மறுமைக்கண் வந்து கூடமாட்டா எ - ம்.

தரணமென்னும் வடமொழி கடத்தலென்னும் பொருட்டாக லான், நோயைக் கடப்பித்தலின் மருத்துவனுக்குத் தரணியெனக் காரணக் குறியாயிற்றென்பது; அற்றாகலினன்றே, மருத்துவனுரைத்த நூலினென [1] முன்னர் வகுத்துக் கூறுவாராயினு ரென்பது.

இதனானே முதல்வன் அவ்வாறு மூவகையுமாய் நிற்றலான் ஆய பயன் இதுவென்ப துணர்த்துமுகத்தான் இரண்டாங் கூற்றின்கட் படும் இயல்பெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டது. (௪)

இருவினை யென்னை யின்பத் துன்பங்கள் இயல்ப தென்னின்
ஒருதன்மை யியல்புக் குள்ள தொருவனுக் கிரண்டு செய்தி
வருவதென் மலருந் தீயு மருவலின் வாசம் வெம்மை
தருவதென் நீரென் செய்து தானியல் பாகு மன்றே.

---

1. சூ. உ. ௩௪-வது செய்யுள்.

தன்னியல் பொழியப் பூவுந் தழலும்வந் தணைய நீரின்
மன்னிய திரண்டு செய்தி வருமிரு வினையி னானும்
உன்னிய இன்பத் துன்பம் உறுமுயிர் உணர்வில் லாத
துன்னிய அசித்தை யின்பத் துன்பங்கள் சூழ்ந்திடாவே.

(ப - ரை.) இருவினை என்னை - இருவினையே யில்லை, இன்பத் துன்பங்கள் இயல்பது என்னின் - இன்பத்துன்பங்களின் தன்மை இயல்பேயாகுமெனின், இயல்புக்கு ஒருதன்மை உள்ளது - இயல் பினுக்கு ஒரு தன்மையுள்ளதன்றி, ஒருவனுக்கு இரண்டு செய்தி வரு வது என் - ஒரு பொருட்குத் (தம்முண் மாறுபட்ட) இரண்டு தன்மை வருவது யாது (அதுகாரணத்தானன்றி உளவாகாமையானும்), மலருந் தீயும் மருவலின் - போதும் அனலும் பொருந்துதலான் (அன்றி), வாசம் வெம்மை - மணமும் வெப்பமும், நீர் என் செய்து தருவது - தண்ணீர் யாது காரணத்தாற்றரப்படுவது, தான் இயல்பு ஆகும் என் அன்றே - (அதனால்) தானே இயல்பாகுமெனின், நீரின் தன் இயல்பு ஒழிய - தண்ணீருக்கு இயற்கையாய தட்பமொழிய, பூவுந்தழலும் வந்து அணைய - மலருந் தீயும் வந்து பொருந்துதலான், இரண்டு செய்தி மன் னியது - வாசமும் வெப்பமுஞ் செயற்கையானுளவாயினவாகலின் (அதுவே ஈண்டைக்கு உவமையாய் முடிதலானும்), உன்னிய இன்பத் துன்பம் உயிர்உறும் - கருதப்படும் இன்பத் துன்ப நுகர்ச்சி உயிராகிய சித்துக்கு (அன்றி), உணர்வு இல்லாத அசித்தைச் சூழ்ந்திடாவே - அறி வில்லாத சடத்துக்குக் கூடாமையானும், துன்னிய இன்பத் துன்பங் கள் இருவினையினானும் வரும் - நெருங்கிய அவ்வின்பத் துன்பங்கள் இரண்டற்கும் (காரணம் வேண்டப்படு மாகலான்) இருவினை யெனப் படுஞ் சஞ்சிதமே ஆண்டைக்குக் காரணமாம் என்க.

(பொ - ரை.) ஒருபொருட்குத் தம்முள் மாறுபட்ட இரண்டு தன்மை காரணத்தான் அன்றி உளவாகாமையானும், தண்ணீ ருக்கு வாசமும் வெப்பமுஞ் செயற்கையான் உளவாயின, ஆகலின் அதுவே யீண்டைக்கு உவமையாய் முடிதலானும், இன்பத் துன்பநுகர்ச்சி சித்துக்கன்றிச் சடத்துக்குக் கூடாமை யானும், அவ்வின்பத்துன்பம் இரண்டற்குங் காரணம் வேண்டப் படுமாகலான், இருவினை யெனப்படுஞ் சஞ்சிதமே ஆண்டைக்குக் காரணம் எ - ம்.

என்னை யென்னும் வினா இன்மை குறித்து நின்றது.

[1]அதுவென்னும் பகுதிப்பொருள் விகுதி அப்பண்பின்மே னின்றது. தன்னியல்பு தட்பம். [2]உணர்வில்லாத அசித்தென்றது [3]"அடியளந் தான் றாஅயது" என்றாற்போலக் கொள்க. (ரு - சு)

---

1. அது : இயல்பது என்பதில் காணப்படுவது.

2. உணர்வில்லாததுதான் அசித்து.

3. அடியளத்தல்தான் தாவுதல் - திருக்குறள், மடியின்மை, கo.

இம்மையின் முயற்சி யாலே இருநிதி ஈட்டி இன்பம்
இம்மையே நுகர்வர் செய்தி யிலாதவர் பொருளும் இன்றி
இம்மையே இடர்உ ழப்பர் வேறிரு வினைய துண்டேல்
இம்மையின் முயற்சி யின்றி எய்திட வேண்டும் இங்கே.

இருவினைச் செயல்காண் இம்மை இரும்பொருள் இன்பம் வேண்டி
வருவினை செய்யுங் காலை மடிவரும் மடியும் இன்றித்
தருவினை யதனில் அத்தந் தான்அறுந் துயரும் தங்கும்
ஒருவினை செய்யா தோரும் உடையரிவ் வுலகத் துள்ளே.

(ப - ரை.) (அற்றேல் அக்காரணமாவது முயற்சியேயாம் என்பது) முயற்சியாலே இம்மையின் இருநிதி ஈட்டி - முயற்சியால் இம்மைக்கண் மிகுந்த பொருள்களை ஆர்ச்சித்து, இன்பம் இம்மையே நுகர்வர் - இன்பத்தையும் இப்பிறப்பின்கண்ணே அநுபவிப்பர் என உடம்பாட்டினும், செய்தி இலாதவர் பொருளும் இன்றி - முயற்சியில்லாதவர் பொருளீட்டுதலும் இன்றி, இம்மையே இடர் உழப்பர் - இப்பிறப்பின்கண்ணே துன்பத்தை எய்துவர் என எதிர்மறையினும் (வைத்துக் கண்கூடாக அறியக்கிடத்தலின் அதுவே அமையும் அதுவன்றி), இருவினையது வேறு உண்டேல் - இருவினையென்பது ஒன்று உண்டென வேறும் (ஓர் காரணங்கொள்ளின்), இம்மையின் முயற்சி இன்றி - இப்பிறப்பின்கண் யாதொரு முயற்சியின்றியும், இங்கே எய்திட வேண்டும் - ஈண்டுப் (பொருள்) கைகூடவேண்டும், (அஃதின்மையான் அவ்வேறு காரணங்கோடல் மிகையாம் என்றது பொருந்தாது), இம்மை இரும் பொருள் இன்பம் வேண்டி - இம்மைக்கண்ணே மிக்க பொருளின்பங்கள் கருதி, வருவினை செய்யுங்காலை மடிவரும் - வருகின்ற முயற்சிசெய்யுமிடத்துத் தளர்வு உண்டாகலானும், மடியும் இன்றி - தளர்வும் இன்றி, தருவினையதனில் அத்தம் தான் அறும் - பொருந்திய முயற்சிக்கட் பொருளின்றிப் போதலானும், துயரும் தங்கும் - (அதனாலே) துன்பம் எய்துதலானும், இவ்வுலகத்துள்ளே ஒருவினை செய்யாதோரும் உடையர் - இவ்வுலகின்கண் யாதொரு முயற்சி செய்யாதாருஞ் செல்வராய்த் தங்குதலானும் (அம்முயற்சி பிறழ்தலும் அவ்விருதிறத்தினும் வைத்தறியக் கிடத்தலின் நியத காரணம் வேறு உண்டென்பது பெறப்படுதலால்), இருவினைச் செயல் காண் - (அதுவே ஆண்டைக்குப் புலனாகாத) சஞ்சிதவினையென்று அறியப்படும் என்க.

(பொ - ரை.) அற்றேல் அக்காரணமாவது முயற்சியேயாம் என்பது உடம்பாட்டினும் எதிர்மறையினும் வைத்துக் கண்கூடாக அறியக்கிடத்தலின், அதுவேயமையும், வேறுமோர் காரணங்கோடல் மிகையாம் என்றது பொருந்தாது. அஃது ஒரோவழிப் பிறழ்தலும் அவ்விருதிறத்தினும் வைத்தறியக் கிடத்தலின் நியதகாரணம் வேறுண்டென்பது பெறப்படுதலால், அதுவே ஆண்டைக்குப் புலனாகாத சஞ்சிதவினை யென்று அறியப்படும் எ - ம்.

ஒருவினை செய்யாதோரு முடையராதல் கிழியீடு நேர்படப்பெற்றார் முதலாயினார் மாட்டுக் காணப்படும்; ஈண்டு உடையரென்றது செல்வரை; அஃது [1]"உடையார்முன் இல்லார்போல்" என்பதனானுமறிக.

இவை நான்கு செய்யுளானும் உலகாயதர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்துச் சஞ்சிதம் எனப்படும் இருவினையுண்மை காரிய ஏதுவின் வைத்துச் சாதிக்கப்பட்டது.

அற்றேல், இருவினையே அமையும் ஆகலின், [2]"முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை - இன்மை புகுத்தி விடும்" என்பதுபற்றிச் செல்லும் மன எழுச்சிக்குப் பயனில்லைபோலும் எனின், அது முன்னர்க் கூறப்படும். (எ - அ)

பேறிழ வின்ப மோடு பிணிமூப்புச் சாக்கா டென்னும்
ஆறுமுன் கருவுட் பட்ட தவ்விதி யனுப வத்தால்
ஏறிடும் முன்பு செய்த கன்மம்இங் கிவற்றிற் கேது
தேறுநீ யினிச்செய் கன்மம் மேலுடற் சேரு மென்றே.

(ப - ரை.) பேறு இழவு - (எடுத்ததோர் உடம்பின் வரக்கடவன ஆகிய இன்பத்துன்பங்கட்கு ஏதுவாகிய) செல்வவறுமைகளும், மூப்புச் சாக்காடு - (அவற்றான்வரும்) உயர்வு இழிவுகளும், இன்பமோடு பிணி என்னும் ஆறும் - (அவற்றானாய) இன்பத்துன்பங்களும் ஆகிய ஆறும், முன்கருவுட் பட்டது - முன்னேதானே (சூக்குமமாய்க்) கருவினுள் அமைந்து கிடந்தன (அன்றி அப்போதப்போது உளவாவன அல்ல), அவ்விதி ஏறிடும் அனுபவத்தால் - அவை (பின்னர்த்) தூலமாய்வந்து கூடுதல் (அவற்றை) அனுபவித்தற்குத் துணையாகிய முயற்சியான் ஆம், இனிச் செய்கன்மம்மேல் உடற் சேரும் - (அங்ஙனம் அனுபவித்தற்குத் துணையாக) எழுந்த முயற்சியும் (அவ்வளவின் ஒழியாது) மற்றோருடம்பிற்படும் அவ்வறுவகைக்கும் வித்தாய் நிலைபெறும், முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றிற்கு ஏது என்றே - முற்பிறவியின் நிகழ்ந்த முயற்சி இப்பிறவியின் வரும் அவ்வாறற்கும் (ஏதுவாயினாற்போலும் அத்தனையே முயற்சியான் ஆகக்கடவது பிறிதில்லை) என, நீ தேறு - நீ தெளிவாயாக என்க.

(பொ - ரை.) எடுத்ததோருடம்பின் வரக்கடவனவாகிய இன்பத்துன்பங்கட்கு ஏதுவாகிய செல்வ வறுமைகளும் அவற்றான் வரும் உயர்வு இழிவுகளும் அவற்றானாய இன்பத்துன்பங்களும் ஆகியவாறும், முன்னேதானே சூக்குமமாய்க் கருவினுள் அமைந்துகிடந்தன அன்றி, அப்போதப்போது உளவாவன அல்ல; அவை பின்னர்த் தூலமாய் வந்துகூடுதல் அவற்றை யனுபவித்தற்குத் துணையாகிய முயற்சியான் ஆம்; அங்ஙனம் அனுபவித்தற்குத் துணையாக எழுந்த முயற்சியும் அவ்வளவின் ஒழியாது மற்றோருடம்பிற்படும் அவ்வறுவகைக்கும் வித்தாய் நிலைபெறும்; முற்பிறவியின் நிகழ்ந்த முயற்சி இப்பிறவியின்

1. திருக்குறள், கல்வி, ௯. 2. ஷை, ஆள்வினையுடைமை, ௬.

வரும் அவ்வாறற்கும் ஏதுவாயினுற்போலும் அத்தனையேமுயற்சி யான் ஆகக்கடவது பிறிதில்லை எ - ம்.

பிணியென்றது ஈண்டுத் துன்பமாத்திரையேயுணர்த்தி நின்றது. "நோயும் இன்பமும்"[1] என்ருர் தொல்காப்பியனுரும்.

ஈண்டு மூப்பென்றது உயர்ச்சியின்மேற்று; அது "விண்ணோர்க் கெல்லா மூப்பாய்" என்பதனுனும் மூத்ததிருப்பதிகம் என்பதனுனு முணர்க.

சாக்காடுபோறலின் இழிவைச் சாக்காடென்றுபசரித்தார்.

ஏனைமூப்புச்சாக்காடுகள், பேறு இழவு இன்பம் பிணிபோலத் தம்முள் மறுதலையாகாமையானும், அவற்றின் மறுதலைப் பொருள்களை உடன் கூருமையானும், இவற்றுள் அடங்குதலின் வேறு கூற வேண்டாமையானும், காலம்பற்றி ஒருதலையான் வரும் மூப்பின்கண் ஐயமறுத்தல் வேண்டாமையானும், அவற்றை யுடன்வைத்தெண்ணி யுரைசெய்தல் பொருந்தாமை யறிக.

ஒடு எண்ணின்கண் வந்தது.

சூக்கும அவத்தையிற் பாகுபாடின்மைபற்றிப் பட்டதென்று ஒருமைப்பாலாற் கூறினுர்; கூறவே ஏறிடும் என்பது தூலமாய் விளங்கும் என்பதாயிற்று; இது சற்காரியவாதம்.

அனுபவமெனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார்.

முன்புசெய்த கன்மம் இங்கிவற்றிற்கேது என்றது எடுத்துக்காட்டுவமை; ஈண்டுக் கன்மமென்றது முயற்சியை; [2]மேலே வினையென்றதும் அது. (கூ)

உடற்செயல் கன்மம் இந்த உடல்வந்த வாறே தென்னின்
விடப்படும் முன்னு டம்பின் வினையிந்த உடல்வி ளைக்குந்
தொடர்ச்சியால் ஒன்றுக் கொன்று தோன்றுதோட் டநாதிவித்தின்
இடத்தினின் மரம்ம ரத்தின் வித்தும்வந் தியையு மாபோல்.

(ப - ரை.) உடற்செயல் கன்மம் - தனுவின் செய்தியாற் கன்மம் உண்டாம், இந்த உடல் வந்தவாறு ஏது என்னின் - (அற்றேல்) இத்தனு வுண்டாதற்குக் காரணம் யாதெனின், விடப்படும் முன் உடம்பின் வினை - நீங்கப்பட்ட முன்தனுவின் கன்மம், இந்த உடல் விளைக்கும் - இத்தனுவை விளைக்கும், வித்தின் இடத்தினின் மரம் - வித்தின்கண் மரமும், மரத்தின் வித்தும் வந்து இயையும் ஆபோல் - மரத்தின்கண் வித்தும் வந்து பொருந்துமாறுபோல, ஒன்றுக்கு ஒன்று தொடர்ச்சியால் - தம்முட்காரணகாரியமாய், தொன்று தொட்டு அநாதி - தொன்று தொட்டுப் பிரவாகாநாதி (யாய்வருதலின் அவற்றிற்குத் தம்முள் முற்பிற்பாடு முடியாது) என்க.

1. பொருளதிகாரம், பொருளியல், சூத். உ.
2. முந்தின செய்யுளில்.

(பொ - ரை.) அங்ஙனம் உடலும் வினையும், வித்தும் மரமும் போலத் தம்முட் காரணகாரியமாய்த் தொன்றுதொட்டுப் பிரவாகாநாதியாய் வருதலின், அவற்றிற்குத் தம்முள் முற்பிற்பாடு முடியாது எ - ம்.

அற்றேல், வரம்பின்றியோடி அநவத்தையாம் போலுமென மலையற்க, அவ்விரண்டற்கும் மூலமாகிய சூக்கும உடம்பு வேறு உண்மையின். (௪0)

முற்செயல் விதியை யிந்த முயற்சியோ டனுப வித்தால்
இச்செயல் பலிக்கு மாறென் இதமகி தங்கள் முன்னர்
அச்செய லானல் இங்கும் அவைசெயின் மேலைக் காகும்
பிற்செயா தனுப விப்ப தின்றுபின் தொடருஞ் செய்தி.

(ப - ரை.) முன் செயல் விதியை இந்த முயற்சியோடு அனுபவித்தால் - (அற்றேல் இத்துணையுங் கூறியவாற்ருன்) முற்பிறவியின் நிகழ்ந்த முயற்சி (இப்பிறவியின்வரும் செல்வமுதலிய அவ்வாறற்கும் ஏதுவாய்) அவற்றை இம்முயற்சியாகிய துணையால் அனுபவித்தாலும், இச்செயல் பலிக்கும் ஆறு என் - (அவ்வாறு வினைப்பயனுக்கு ஈடாக வருகின்ற) இம் முயற்சி மேலுடற்சேருதற்குரிய வினையாமாறு யாங்ஙனமெனின் (நன்று சொன்னய்), இதம் அகிதங்கள் முன்னர் அச்செயல் ஆனல் - முன்வினை யெனப்படும் இதமகிதங்களாவன முற்பிறவியின் அவ்வாறு நிகழுமுயற்சியே யன்றி வேறின்மையானல், இங்கும் அவை செயின் மேலைக்கு ஆகும் - இங்கும் அம்முயற்சி நிகழ்ந்தால் அது மேலைக்கு வினையாமென்பது தானே போதரும் (அற்றேல் ஒரோவழி முயற்சியின்றி யிருப்பார்க்கு மேல்வரக் கடவதொன்றில்லை போலுமெனின் அற்றன்று), பின் செயாது அனுபவிப்பது இன்று செய்தி பின்தொடரும் - அனுபவமாவது பின்னர் முயற்சியை ஒட்டியே நிகழ்வதொன்ருகலின் (பிராரத்தவினை அனுபவம் உள்ளவளவும் முயற்சியும் ஒருதலையான் உண்டென்பது பெறப்படுதலின்) அனுபவம் உள்வழி மேலைக்கு வரக்கடவதொன்றில்லை யென்றல் யாண்டையது என்ருெழிக என்க.

(பொ - ரை.) அற்றேல், இத்துணையுங் கூறியவாற்ருன் முன்புசெய்த கன்மம் இங்கிவற்றிற்கேதுவென்பதூஉம் ஒக்குமாயினும், அவ்வாறு வினைப்பயனுக்கிடாக வருகின்ற முயற்சி மேலுடற் சேருதற்குரிய வினையாமாறு யாங்ஙனமெனின், நன்று சொன்னய்; முன்வினையெனப்படும் இதமகிதமாவன முற்பிறவியின் அவ்வாறு நிகழு முயற்சியேயன்றி வேறின்மையான் அதனையுடம்பட்டாய்க்கு அங்ஙயம்பற்றி இங்கு அம்முயற்சி நிகழ்ந்தால் அது மேலைக்கு வினையாமென்பது தானே போதரும். அற்றேல் ஒரோவழி முயற்சியின்றிருப்பார்க்கு மேல் வரக்கடவதொன்று இல்லைபோலுமெனின்,—அற்றன்று; அனுபவமாவது முயற்சியை யொட்டியே நிகழ்வதொன்ருகலிற் பிராரத்தவினை யனுபவமுள்ளவளவும் முயற்சியும் ஒருதலையான் உண்டு என்பது

பெறப்படுதலின், அனுபவம் உள்வழி மேலைக்கு வரக்கடவ தொன்றில்லை யென்றல் யாண்டையது என்றொழிக எ - ம்.

ஒருவினை செய்யாதோரும் உடையரென்றதும் வருந்திச் செய்ய வேண்டாது எளிதிற் பெறுவது நோக்கியே பிறிதன்றென்பது கருத்து. மரங்கள் முதலியவற்றிற்குந் தண்ணீர் முதலியவற்றை ஏற்றுக் கோடற்குரிய சூக்குமமுயற்சி யுண்டென்பது உணர்ந்துகொள்க. யாண்டும் பிறழாமை யுணர்த்துதற்கன்றே பிற்செயாது அனுபவிப்பதின்று என எதிர்மறைமுகத்தான் வரைசெய்து கூறினாரென்பது.

ஆனாலென்பது தெளிவின்கண் வந்தது; காண்பவன் சிவனே யானால்[1] என்றாற்போல.

அற்றேல், ஒன்றன்பொருட்டு வந்தது மற்றொன்றன் பொருட்டாதல் கண்டிலமாதலின், இதமகிதங்கள் முன்னர் அச்செயலாயவாறுதான் யாங்ஙனமெனின், அஃதுணர்த்துதற்கன்றே வருஞ்செய்யுள் எழுந்தது என்பது. (௧௧)

மேலைக்கு வித்து மாகி விளைந்தவை உணவு மாகி
ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக ளெல்லாம்
ஏலத்தான் பலமாச் செய்யும் இதம்அகி தங்கட் கேல்லாம்
மூலத்த தாகி யென்றும் வந்திடும் முறைமை யோடே.

(ப - ரை.) ஞாலத்து விளைந்தவை - உலகத்தின்கண் (உணவின் பொருட்டு) விளைந்த கனி முதலாயின, உணவும் ஆகி மேலைக்கு வித்தும் ஆகி வரும் ஆ போல - உணவுமாய் மேலைக்கு வித்துமாய் வருமாறு போல, நாம் செயும் வினைகளெல்லாம் - நாம் என்னும் முனைப்பாற் செய்யப்படுவதாகிய முயற்சியும், என்றும் முறைமையோடே ஏலத்தான் பலம் ஆ (வந்திடும்) - எஞ்ஞான்றும் முறையாற் பொருந்த(ச் செயல் வகையால் வினைக்கீடாய் வரும்) அனுபவத்தைப் பயக்கும், செயும் இதம் அகிதங்கட்கெல்லாம் மூலத்தது ஆகி வந்திடும் - (கருத்துவகையாற்) செய்யா நின்ற இதம் அகிதம் எனப்படும் ஆகாமிய வினையைப் பயக்கும் என்க.

(பொ - ரை.) உலகத்தின் உணவின்பொருட்டு விளைந்த கனிமுதலாயின உணவுமாய் வித்துமாதல் கண்டாமன்றே; அது போல், நாம் என்னும் முனைப்பாற் செய்யப்படுவதாகிய முயற்சியுஞ் செயல்வகையான் வினைக்கீடாக வரும் அனுபவத்தைப் பயக்கும், கருத்துவகையான் இதம்அகிதம் எனப்படும் ஆகாமிய வினையைப் பயக்கும் எ - ம்.

இவ்வியல்பு தொன்றுதொட்டு வீடுபேறெய்துமளவும் இடையறவுபடாது தொடர்ச்சியாய் வருமென்பார், என்றும் என்றார்.

மூலத்தது என்னும் ஒருமை அத்தருமத்தின்மேல் நின்றது; இதமகிதங்களென்பது என வருகின்றதுமது.

---

1. 'காண்பவன்' சித்தியார், சூ. உ. உ-உஎ.

[1]"ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்றாற்போல ஈண்டு ஒடு ஆன் ஆயிற்று.

இவை நான்கு செய்யுளானும், முயற்சிக்குப் பயன் இதுவென்பது உணர்த்து முகத்தான், வருவாயின்மையின் வினையுண்மை பெறப்படாதென்னுமவர் மதம்பற்றி, ஆசங்கித்துப் பரிகரித்து வருவாயினியல்பு கூறி மேலது வலியுறுத்தப்பட்டது.

அற்றேல், அம்முயற்சியின் உளவாகிய இதாகிதங்களதியல்பாமாறும் அவை பின்னர்ப் பயப்படுமாறும் யாங்ஙனமெனின், அது முன்னர்க் கூறப்படும். (௧௨)

இதம்அகி தங்கள் என்ப திகன்மன வாக்குக் காயத்து
இதமுயிர்க் குறுதி செய்தல் அகிதமற் றதுசெய் யாமை
இதமகி தங்க ளெல்லாம் இறைவனே யேற்றுக் கொண்டிங்கு
இதமகி தத்தால் இன்பத் துன்பங்கள் ஈவன் அன்றே.

(ப - ரை.) இதம் அகிதங்கள் என்பது - இதாகிதங்களாகிய கன்மங்களதியல்பு யாதெனின், இகல் மனம் வாக்குக் காயத்து - மாறுபட்ட மனவாக்குக் காயங்களால், உயிர்க்கு உறுதி செய்தல் இதம் - உயிர்க்கு உறுதி(யென வேதாகமங்களின் விதித்தவற்றைச்) செய்தலே இதம், மற்றது செய்யாமை அகிதம் - அவற்றது மறுதலையைச் செய்தலே அகிதம், இறைவனே இதம் அகிதங்களெல்லாம் ஏற்றுக்கொண்டு - (ஆதலால் அவ்விரண்டனையும் அறியவல்ல) முதல்வனே அவற்றைக் கைக்கொண்டு, இங்கு இதம் அகிதத்தால் - இவண் அவ்விதாகிதமாய கன்மத்துக்கேற்ப, இன்பத் துன்பங்கள் ஈவன் அன்றே - இன்பத் துன்பமாகிய பயன் அளிப்பன் என்க.

(பொ - ரை.) உயிர்க்கு உறுதியென வேதாகமங்களின் விதித்தவற்றைச் செய்தலே இதம், அவற்றது மறுதலையைச் செய்தலே அகிதம் ஆகலான், அவ்விரண்டனையும் அறியவல்ல முதல்வனே அவற்றைக்கொண்டு பயனளிப்பன் எ - ம். (௧௩)

இறைவனிங் கேற்ப தென்னை இதம்அகி தங்கள் என்னின்
நிறைபரன் உயிர்க்கு வைத்த நேசத்தின் நிலைமை யாகும்
அறமலி யிதஞ்செய் வோருக் கநுக்கிர கத்தைச் செய்வன்
மறமலி யகிதஞ் செய்யின் நிக்கிர கத்தை வைப்பன்.

(ப - ரை.) இறைவன் - முதல்வன், இதம் அகிதங்கள் - (ஆன்மாக்கள் செய்த) இதாகிதமாகிய கன்மத்தை, இங்கு ஏற்பது என்னை என்னின் - இவ்விடத்தே ஏற்றுக்கோடற்குக் காரணம் யாதெனின், நிறை பரன் உயிர்க்கு வைத்த நேசத்தின் நிலைமை ஆகும் - யாண்டும் நிறைந்த அம்முதல்வன் உயிர்கள் வீடுபேறடைதற் பொருட்டு வைத்த கருணையேயாம் (கருணையாயினுங் காரணம் இருவேறு வகைப்பட நிகழ்ந்தமையின் பயனும் இருவேறு வகைப்படச் செய்யவேண்டுத

1. தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல், சூத். ௧௨.

லான்), அறம் மலி இதம் செய்வோருக்கு - அறமிகுந்த இதமாகிய வினை செய்வோருக்கு, அநுக்கிரகத்தைச்செய்வன் - அநுக்கிரகத்தைப் புரிவன், மறம் மலி அகிதம் செய்யின் - மறமிகுந்த அகிதமாகிய வினை செய்யின் (அவருக்கு), நிக்கிரகத்தை வைப்பன் - நிக்கிரகத்தைச் செய்வன் என்க.

(பொ - ரை.) முதல்வன் அவற்றை யேற்றுக்கோடற்குக் காரணம் உயிர்கள் வீடுபேறெய்தற்பொருட்டு வைத்த கருணையே யாம். கருணையாயினும காரணம் இருவேறுவகைப்பட நிகழ்ந்தமையிற் பயனும் இருவேறுவகைப்படச் செய்வன் எ-ம். (௧௪)

நிக்கிர கங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது
அக்கிர மத்தாற் குற்றம் அடித்துத்தீர்த் தச்சம் பண்ணி
இக்கிர மத்தி னாலே ஈண்டறம் இயற்றி டென்பன்
எக்கிர மத்தி னாலும் இறைசெயல் அருளே யென்றும்.

(ப - ரை.) ஈசன் - முதல்வன், நிக்கிரகங்கள் செய்வது தானும் - (அநுக்கிரகஞ்செய்தலே யன்றி அங்ஙனம் அகிதஞ்செய்தாரைக்) கண்டித்தலும், நேசத்தால் - கருணையினால் (நல்வழிப்படுத்தற் பொருட்டே யாம்), அக்கிரமத்தால் குற்றம் - அக்கிரமத்தாற் செய்யப்பட்ட குற்றங்களை, அடித்துத் தீர்த்து அச்சம் பண்ணி - கண்டித்து நீக்குதலான் அச்சமுண்டாகச்செய்து, இக்கிரமத்தினாலே ஈண்டு அறம் இயற்றிடு என்பன் - இம்முறைமையால் இங்ஙனம் அறத்தினைச்செய்திடல் வேண்டுமென உணர்த்துவன், எக்கிரமத்தினாலும் - (திரோபவித்தல் சங்கரித்தல்களுட்பட்ட) எம்முறையாலும், இறை செயல் என்றும் அருளே - அம்முதல்வன் செய்தி எஞ்ஞான்றுங் கருணையாதற்கு இழுக்கில்லை என்க.

(பொ - ரை.) அங்ஙனம் அகிதஞ்செய்தாரைக் கண்டித்தல் நல்வழிப்படுத்தற்பொருட்டேயாகலின், அதுவுங் கருணையாதற்கு இழுக்கில்லை எ - ம்.

தான் அசை. உம்மை இறந்தது தழீஇயிற்று ; சிறப்புமாம்.

திரோபவித்தல் சங்கரித்தலுட்பட்ட செயல்களும் அருளே என்பார், எக்கிரமத்தினாலும் இறைசெயல் அருளே யென்றார்; ஏகாரந் தேற்றம். (௧௫)

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தஞ்சொல் ஆற்றின்
வந்திடா விடின்உ றுக்கி வளாரினால் [1]அடித்துத் தீய
பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடில் பரிவே யாகும்
இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவும் என்றும்.

(ப - ரை.) தந்தைதாய் - உலகத்துத் தந்தை தாயர்கள், பெற்ற தத்தம் புதல்வர்கள் - பெறப்பட்ட தம்முடைய புதல்வர்கள், தம் சொல்

1. 'ஓதுவித் தாய்முன்'—௪. அப்பர். ௧00-௧.

ஆற்றின் வந்திடா விடின் - தம்முடைய சொல்வழி ஒழுகாராயின், உறுக்கி வளாரினால் அடித்து - உரப்பிவளாரினாலே அடித்து, தீய பந்தமும் இடுவர் - தீய விலங்கும் இடுவர் ஆகலான், எல்லாம் பார்த்திடின் - இன்னோர் அன்னவை பார்க்குமிடத்துச் (செயல்வகையான் வெகுளி போலத் தோன்றினும்), பரிவே ஆகும் - (கருத்து வகையான்) அருளேயாதல் (கடைக்கால்) அறியப்படும், என்றும் ஈசனார் முனிவும் - எக்காலமும் முதல்வன் நிக்கிரகமும், இந்த நீர் முறைமை அன்றோ - இந்த இயல்புபோலும் முறையாம் என்க.

(பொ - ரை.) இன்னோரன்னவை செயல்வகையான் வெகுளி போலத் தோன்றினும் கருத்துவகையான் அருளேயாதல் கடைக்கால் அறியப்படும் எ - ம்.

நீர் முறைமை உவமைத்தொகை ; நீர்மை இயல்பு.

இவை நான்கு செய்யுளானும் **மீமாஞ்சகர்** மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து, மன்னியவினைப்பலன்கள் தரும் அரனென்றது பொருந்துமாறும் அதுபற்றி அவனுக்கு இழுக்கின்மையுங் கூறப்பட்டன. (கசு)

செயல்களே பலத்தைச் செய்யுந் தெய்வம்வேண் டாஇங் கென்
முயலும்இச் செயல்கள் இங்கே முழுவதும் அழியும் எங்கே[னின்
பயனளிப் பனஅ ழிந்தே பலன்களைப் பண்ணுங் கெட்டே
வயலிடுந் தழையுந் தின்னும் மருந்தும்பின் பலிக்கும் ஆபோல்.

செய்க்கிடுந் தழையுந் தின்னுந் திரவியம் அதுவும் போல
உய்த்திடுஞ் செய்தி கெட்டே உறுவிக்கும் பலத்தை யென்னின்
வைத்திடுஞ் சோறும் பாக்கும் அருந்தினர் வயிற்றின் மாய்ந்தால்
மெய்த்திடும் பலம் உனக்கு மலம்அலான் வேறும் உண்டோ.

(ப - ரை.) செயல்களே பலத்தைச் செய்யும் - (அற்றாயினும்) வினைகளே தம்பயனைத் தோற்றுவிக்க வல்லுமாகலின், இங்குத் தெய்வம் வேண்டா என்னின் - ஆண்டைக்கு முதல்வன் மிகையாம் போலும் என்றல் (பொருந்தாது), முயலும் இச்செயல்கள் இங்கே முழுவதும் அழியும் - செய்த அவ்வினைகள் (செய்தபொழுதே) ஈண்டு முழுதுங் கெட்டொழிவன ஆகலின், எங்கே பயன் அளிப்பன - பின்னின்று பயன் தருதல் செல்லாமையானும், வயல் இடும் தழையும் தின்னும் மருந்தும் - செய்யின்கண் இட்ட தழைகளும் அருந்தப்பட்ட மருந்துகளும், கெட்டே பின் பலிக்கும் ஆ போல் - கெட்டுப் பின்னே பலிக்கும் ஆறுபோல, அழிந்தே பலன்களைப் பண்ணும் - கெட்டுப் பயன்தருதலே பொருத்தம், செய்க்கு இடும் தழையும் தின்னும் திரவியம் அதுவும் போல - வயலின்கண் இட்ட தழையுந் தின்னப்பட்ட பதார்த்தங்களும் போல, உய்த்திடும் செய்தி கெட்டே - முயற்சியானாகிய வினைகெட்டே, பலத்தை உறுவிக்கும் என்னின் - பலத்தைப் பொருந்தச் செய்யுமென்னின், வைத்திடும் சோறும் பாக்கும் - வைத்திடப்பட்ட சோறுமுதலிய உணவுகளும் பாகடை முதலியனவும், அருந்தினர் வயிற்றில் மாய்ந்தால் - உண்டார் வயிற்றின்கண் மாயப்பெற்றால், உனக்கு மெய்த்திடும் பலம் - உனக்கு மெய்யின் கண்ணதாய் வரும் பலம், மலம் அலால்

வேறும் உண்டோ - மலமன்றி வேறில்லை ஆதலின் (கெட்டவை பயன் தருமென்பது அங்ஙனஞ் சிலவற்றினன்றி யாண்டுஞ் செல்லாமை யானும்) என்க.

**(பொ - ரை.)** அற்றாயினும், வினைகளே தம்பயனைத் தோற்றுவிக்க வல்லுமாகலின் ஆண்டைக்கு முதல்வன் மிகையாம் போலுமென்றல் பொருந்தாது, செய்தவினை செய்தபொழுதே கெட்டொழிவதாகலிற் பின்னின்று பயன்தருதல் செல்லாமை யானும், கெட்டுப் பயன்தருதலே உலகத்துப் பொருள்களிற் கண்டாமெனில் கெட்டவை பயன்தருமென்பது சிலவற்றினன்றி யாண்டுஞ் செல்லாமையானும் எ - ம்.

செய்க்கிடுந் தழையுந் தின்னுந் திரவியம் அதுவும்போல உய்த்திடுஞ் செய்தி கெட்டேயுறுவிக்கும் பலத்தை யென்றது, அனுவாதஞ் செய்துகொண்டது.

மெய்த்திடும் பலம் மெய்யின் கண்ணதாய் வரும் பலம்.

அற்றேல், கெட்டுப்பயன்தருதல் சிலவற்றிணுயினுங் காணப்படுதலின் வினையுமவ்வாறு கெட்டுப் பயன்தருமென்பது அமைவுடைத்து என்பாரை நோக்கி அதனை மறுத்தற்கெழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (கஎ - கஅ)

திரவியம் உவமை யன்று செய்திக்கண் திரவி யங்கள்
விரவிய இடத்தே வீந்து பலந்தரும் இம்மை அம்மை
பரவிநீ பார்நீர் அங்கி பாத்திரத் திட்ட எல்லாம்
கரவிடும் இங்கே எங்கே பலன்கோளக் கருதி னுயே.

**(ப - ரை.)** திரவியங்கள் - ஈண்டெடுத்துக் காட்டிய தழை முதலிய பொருள்களும், விரவிய இடத்தே வீந்து - தாங்கிடந்த இடத்தே கெட்டு, பலம் தரும் - ஆண்டே பயன்தருவனவாம், இம்மை அம்மை - (வினை அவ்வாறன்றி) இவ்வுடம்பிற் செய்வது ஈண்டே கெட்டு மற்றோர் உடம்பிற் பயன்தருமாகலின், செய்திக்கண் திரவியம் உவமை அன்று - வினைக்குத்திரவியம் உவமை ஆகாமையானும் (அற்றேல் சேர்ந்த இடத்திற் பயன்தராது கேடுமாத்திரம் உடைய பொருள்களும் பலஉள ஆகலின் அவை மற்றோரிடத்திற் பலிக்குமெனக் கொண்டு அவற்றோடு உவமிக்க அமையுமெனின்), அங்கி பாத்திரத்து இட்ட நீர் எல்லாம் இங்கே கரவிடும் - (ஓரிடத்திற் கெட்ட பொருள் மற்றோரிடத்திற் பலித்தலில்லை யென்பது) தீயொழுகக்காய்ந்த கலத்தில் வாக்கிய நீர் முதலியன ஈண்டுச் சுவறலின்கண் காணப்படுதலானும், எங்கே பலன் கொளக் கருதினுயே - வேறிடத்திற் பயனுதற்குரிய வினை தானே பயனுகி வருமென்றல் கூடாது, நீ பரவிப் பார்-(இவ்வுண்மையை) நீ புடைபட ஒற்றி ஆராய்வாயாக என்க.

**(பொ - ரை.)** ஈண்டெடுத்துக் காட்டிய தழை முதலிய பொருள்களுந் தாங் கிடந்த இடத்தே கெட்டு ஆண்டே பயன் தருவனவாம்; வினையவ்வாறன்றி இவ்வுடம்பிற் செய்வது ஈண்டே

கெட்டு மற்றோருடம்பிற் பயன்தருமாகலின், அவையிரண்டுந் தம்முள் ஒவ்வாமையானும், அற்றேற் சேர்ந்த இடத்திற் பயன் தராது கேடுமாத்திரமுடைய பொருள்களும் பலவுள ஆகலின் அவை மற்றோரிடத்துப் பலிக்குமெனக்கொண்டு அவற்றோடு உவமிக்க அமையுமெனின், ஓரிடத்திற் கெட்டபொருள் மற்றோரிடத்திற் பலித்தலில்லையென்பது தீயொழுகக் காய்ந்த கலத்தில் வாக்கிய நீர் முதலியவற்றிற் காணப்படுதலானும், வேறிடத்துப் பயனுதற்குரிய வினை தானே பயனாய் வருமென்றல் கூடாது எ - ம்.

செய்திக்கு என்பது செய்திக்கண் ணென உருபுமயக்கம்.

பரவிப் பார்த்தல் புடைபட ஒற்றி யாராய்தல்.

அற்றேல், இம்மையம்மையாதல்பற்றி வேறிடமென வேண்டாம், இருமையினும் வினைசெய்தாரின் வேற்றுமையின்மையிற் செய்தார்வினை செய்தவரறிவின்கண்ணே அடங்கிச் செய்க்கிடுந் தழை முதலியன போல ஆண்டே பயனைத் தோற்றுவிக்குமென அமையுமாகலின் திரவியம் உவமையன்றென மறுத்தல் பொருந்தாதென்பாரை நோக்கி, அதனைப் பரிகரித்தற்கு எழுந்தது வருஞ் செய்யுள் என்பது. (கக)

செய்தவர் மனத்தே யெல்லாச் செய்தியுங் கிடந்து பின்னர்
எய்தவே பலன்கள் ஈனும் என்றிடின் இருஞ்சு வர்க்கம்
பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற் கிடந்து போந்தது
ஐயனே யழகி துன்சொல் இந்திர சாலம் ஆய்த்தே.

(ப - ரை.) செய்தவர் மனத்தே - வினைசெய்தவர் மனத்தின் கண்ணே, எல்லாச் செய்தியும் கிடந்து - எல்லா வினைகளுந் தங்கி, பின்னர் எய்தவே பலன்கள் ஈனும் என்றிடின் - பின்னர்ப் பொருந் தவே பயன்தருமெனின், இருஞ் சுவர்க்கம் பொய்யர் வாழ் நரகம் பூமி - (வினைக்குப் பயனுவன) பெரிய துறக்கம், பொய்யர் வாழ்கின்ற நிரயம், நிலமென்னும் இவற்றுட்பட்ட பல்வேறுவகைப் புவனபோகங் களாம் அன்றே, புந்தியிற்கிடந்து போந்தது - (அவையனைத்தும் வயலின் விளைவுபோல) ஆன்மபோதத்தின்கட் கிடந்து உளவாமென் றல், ஐயனே உன் சொல் அழகிது - ஐயனே உனதழகிதாய சொன் மாத்திரையேயன்றி, இந்திரசாலம் ஆய்த்தே - பொருள்படாது என்க.

(பொ-ரை.) வினைக்குப் பயனுவன துறக்கம் நிரயம் நிலம் என்னும் அவற்றுட்பட்ட பலவேறுவகைப் புவன போகங்களா மன்றே, அவையனைத்தும் வயலின் விளைவுபோல ஆன்மபோதத் தின்கட் கிடந்துளவாம் என்றல் சொன்மாத்திரையே யன்றிப் பொருள்படாது எ - ம்.

ஐயனே யென்பது இழித்தற்கண் வந்த குறிப்பு மொழி.

செய்தவர் மனத்தைக் கூறவே, இனம்பற்றி ஏற்போர் மனமுங் கொள்ளப்படும்; அற்றாகலினன்றே, மறுத்தற்கட் புந்தியிற்கிடந்து

போக்கதெனப் பொதுவகையான் எடுத்தோதி விடுத்ததூஉம் என்க. (உ0)

தானஞ்செய் பொருள்த ரித்தோர் செய்தவர் தக்க செய்தி
ஊனம்பின் னுறவே காண்டும் பலம்உறு விப்பான் வேண்டும்
ஈனமில் செய்தி ஈசன் இடும்பணி இவைநாஞ் செய்தால்
நூனங்க ளதிகம் நோக்கி நுகர்விப்பன் வினைநோய் தீர.

(ப - ரை.) (அற்றேல் அவ்வச்செய்தி அவ்வச்செயப்படுபொருளிற் கிடந்து பின்னர்ப் பயன்தருமெனக்கோடுமெனின்) தானம் செய் பொருள் - தானஞ்செய்யப்பட்ட பொருள் முதலியவும், தரித்தோர் - அவற்றை ஏற்றோரும், செய்தவர் - ஈந்தவரும், தக்க செய்தி - தக்க செய்தியுமாகிய அனைத்தும், பின் ஊனம் உறவே காண்டும் - நிலைபேறின்றிக் கெட்டொழிவனவேயாகலான், பலம் உறுவிப்பான் வேண்டும் - (நிலைபேறுடையனுய்ப்) பயன்தரு முதற்கடவுள் வேறு வேண்டப்படும் (அற்றேல் முதற்கடவுள் பயன்தருதற்கு இயைபு என்னையெனின்), ஈனம் இல் செய்தி - குறைவில்லாத முயற்சியாவது, ஈசன் இடும் பணி - (முன்னைவினை அனுபவித்தற்பொருட்டுத் தரப்படும்) முதல்வனது ஏவல் வினையாகலான், இவை நாம் செய்தால் - அதனை நாமாக முனைத்து நின்று செய்தால், நூனங்கள் அதிகம் நோக்கி - (அது தீர்தற் பொருட்டு அச்செய்தியான் ஆய) பாவ புண்ணியங்களை அறிந்து, வினை நோய் தீர நுகர்விப்பன் - அவை தீர்தற்குரிய பயன்தருதல் அவ் ஏவு வானுக்குக் கடப்பாடு என்க.

(பொ - ரை.) அற்றேல், அவ்வச்செய்தி அவ்வச் செயப்படுபொருளிற் கிடந்து பின்னர்ப் பயன்தருமெனக் கோடுமெனின், செயப்படுபொருள் முதலியவனைத்தும் நிலைபேறின்றிக் கெட்டொழிவனவேயாகலான், நிலைபேறுடையனுய்ப் பயன்றரு முதற்கடவுள் வேறு வேண்டப்படும். அற்றேல், முதற்கடவுள் பயன்தருதற் கியைபு என்னையெனின், முயற்சியாவது முன்னை வினை அனுபவித்தற்பொருட்டுத் தரப்படும் முதல்வனது ஏவல் வினையாகலான், அதனை நாமாக முனைத்துநின்று செய்தால் அது தீர்தற்பொருட்டு அச்செய்தியானுய பாவபுண்ணியங்களையறிந்து அவை தீர்தற்குரிய பயன்தருதல் அவ் ஏவுவானுக்குக் கடப்பாடு எ - ம்.

தானஞ்செய் பொருளென்றது உபலக்கணம்.

அற்றேல், இச்செய்தி ஈசனிடும் பணியென்றற்குப் பிரமாணமென்னையெனின், அது காட்டுதற்கன்றே வருஞ் செய்யுள் எழுந்த தென்பது. (உக)

[1]உலகுடல் கரணம் காலம் உறுபலம் நியதி செய்தி
பலஇவை கொண்டு கன்மம் பண்ணுவ தண்ப தானல்
நிலவிடா திவைதாஞ் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளாது
அலகிலா அறிவன் ஆணை அணைத்திடும் அருளி னலே.

---

1. 'வினையே.' தொல். சொல் - ககஉ.

(ப - ரை.) உலகு - வினைமுதற்காரகமாகிய உயிர், உடல் - இடமாகிய உடலும், கரணம் - கருவிகளாகிய கரணமும், காலம் - முக்காலங்களுள் ஒன்றாகிய காலமும், உறு பலம் - பொருந்திய செயப்படுபொருளாகிய பலமும், நியதி - இன்னதற்காக இது பயனாக என்பவைகளாகிய நியதியும், செய்தி பல இவைகொண்டு - செயலாய செய்தியும் ஆகிய ஏழுகாரகங்களுந் தனக்குத் துணையாகக்கொண்டு, கன்மம் பண்ணுவது உண்பது ஆனால் - வினைகளை ஈட்டலும் நுகர்தலுமுடைத்தென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், இவைதாம் சென்று நிலவிடாது - (உயிரையின்றி அமைந்து தொழிற்படமாட்டாத சடமாகிய) அக்காரகங்கள் தாமே கூடமாட்டா, உயிர் நினைந்து நிறுத்திக்கொள்ளாது - (அவற்றையின்றி யறியமாட்டாத சிற்றறிவுடைய) அவ்வுயிர் தானே கருதி நிறுத்திக்கொள்ளாது (இங்ஙனமாகலிற் பாரிசேட அளவையானே), அலகு இலா அறிவன் - அளவிட்டறிதற்கரிய சுதந்திர அறிவனாகிய முதல்வனே, ஆணை அருளினாலே - தனதாணையாகிய திருவருளால், அணைத்திடும் - அவற்றை அவ்வவ்வுயிர்க்குப் பொருத்திச் செய்விப்பன் என்பது பெறப்படுதலின் அச்செயலெல்லாம் அவன் பணியேயாம் என்க.

(பொ - ரை.) வினைமுதற்காரகமாகிய உயிர் ஏனை யேழு காரகங்களுந் தனக்குத் துணையாகக்கொண்டு வினைகளையீட்டலும் நுகர்தலுமுடைத்தென்பது எல்லார்க்குமொப்ப முடிந்தமையின், உயிரையின்றியமைந்து தொழிற்படமாட்டாத சடமாகிய அக்காரகங்களாதல், அவற்றையின்றி யறியமாட்டாத சிற்றறிவுடைய அவ்வுயிராதல் தாமே கூடமாட்டாமையிற் பாரிசேட அளவையானே சுதந்திர அறிவனாகிய முதல்வனே தனது ஆணையாகிய திருவருளால் அவற்றை அவ்வவ்வுயிர்க்குப் பொருத்திச் செய்விப்பன் என்பது பெறப்படுதலின், அச்செயலெல்லாம் அவன் பணியேயாம் எ - ம்.

ஆதலால் அச்செயலெலாம் அவன் பணியேயென்பது குறிப்பெச்சம்.

ஈண்டுலகென்றது உயிர்களை. இன்னதற்காக, இதுபயனாக வென்னும் இரண்டு காரகங்களையும் நியதியென்பதனால் தழீஇயினார். பண்ணுவது உண்பது என்னும் ஒருமைகள் அத்தொழின்மேல் நின்றன.

அற்றேல், அப்பணி நூனங்கள் அதிகம் ஆம்ஆறு யாங்ஙனம் எனின், அது வருஞ் செய்யுளிற் பெறப்படும். (உஉ)

ஒழுக்கம்அன் பருள்ஆ சாரம் உபசாரம் உறவு சீலம்
வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை
அழுக்கிலாத் துறவ டக்கம் அறிவோடர்ச் சித்த லாதி
இழுக்கிலா அறங்க ளானல் இரங்குவான் பணிஅ றங்கள்.

(ப - ரை.) ஒழுக்கம் - உலகத்தோடொட்டவொழுகுதலுடைமையும், அன்பு - யாவர்மாட்டுங் காதலுடைமையும், அருள் - கருணையுடை

மையும், ஆசாரம் - வேதாகமங்களின் விதித்தவாறு அனுட்டித்தலுடைமையும், உபசாரம் - தக்கோர் மாட்டுச்செய்யும் உபசரிப்புடைமையும், உறவு - யாவர்மாட்டுங் கலப்புடைமையும், சீலம் - நற்குணமுடைமையும், வழுக்கு இலாத்தவம் - (ஐம்பொறியடக்கல் விரதங்காத்தல் முதலிய) வழுவுதல் இல்லாத தவமுடைமையும், தானங்கள் - தக்கோர் மாட்டு உவகையோடு செய்யுந் தானங்களுடைமையும், வந்தித்தல் - தன்னின் மூத்தார்மாட்டு வழிபாடுடைமையும், வணங்கல் - வணங்குதலுடைமையும், வாய்மை-மெய்ம்மையுடைமையும், அழுக்கு இலாத் துறவு - (பிறர்மனை விழையாமை வரைவின் மகளிர் விழையாமை முதலிய) குற்றமில்லாத ஆண்டகைமை யுடைமையும், அடக்கம் - தீநெறிக்கட் செல்லாது அடங்குதலுடைமையும், அறிவொடு - தக்கன இவை தகாதன இவையெனப் பகுத்தறிதலுடைமையும், அருச்சித்தல் ஆதி - தன்னின் மூத்தார்மாட்டு அருச்சித்தலுடைமையுமாகிய பதினாறும் மற்றும் அவைபோல்வனவு மாகிய, இழுக்கு இலா அறங்கள் ஆனால் - குற்றமில்லாத நன்மைகள் ஒருவனுக்கு உளவாயின், இரங்குவான் பணி - இரங்குவானது பணியாகிய அம்முயற்சி, அறங்கள் - அறமாய் முடியும் என்க.

(பொ - ரை.) ஒழுக்கம்முதலிய பதினாறும் மற்றும் அவை போல்வனவு மாகிய நன்மைகள் ஒருவனுக்கு உளவாயின் இரங்குவானது பணியாகிய அம்முயற்சி அறமாய் முடியும் எ - ம்.

எனவே, இவ்வொழுக்கம் முதலியவற்றை மறுதலைத்த தீமைகள் ஒருவனுக்கு உளவாயின், அம்முயற்சி பாவமாய் முடியுமென்பதூஉம் பெற்றாம்.

ஒழுக்கம் என்றது ஈண்டு உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலை.

ஈண்டுத் துறவு என்றது எல்லா நிலையினுஞ்சேறற்குரிய பிறர்மனை விழையாமை, வரைவின் மகளிர் விழையாமை முதலிய ஆண்டகைமையே யென்றுணர்த்துவார், அழுக்கிலா என விசேடித்தார்.

அறிவாவது தக்கனவும் தகாதனவும் பகுத்தறிதல்.

"இனமலர் கையிற்கொண்டங்கிச்சித்த தெய்வம்போற்றி"[1] (செ. உச) யென முன்வருதலின், ஈண்டு வந்தித்தல் வணங்கல் அருச்சித்தல் என்பன தன்னின் மூத்தார்மாட்டுச் செய்வனவற்றையெனக் கொள்க.

ஒடு எண்ணின்கண் வந்தது.

இவ்வொழுக்கம் முதலிய எல்லாம் இயமம் நியமம் என்னும் இரு வகையுள் அடங்கி அறஞ்செய்வார்க்கெல்லாம் பொதுவகையான் வேண்டப்படும் அங்கமாகலின் இவற்றை வேறெடுத்தோதினர். (உ௩)

மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல
இனமலர் கையிற் கொண்டங்கு இச்சித்த தெய்வம் போற்றிச்
சினமுதல் அகற்றி வாழுஞ் செயலறம் ஆனால் யார்க்கும்
முனம்ஒரு தெய்வம் எங்குஞ் செயற்குமுன் நிலையாம் அன்றே.

(ப - ரை.) சினம் முதல் அகற்றி - (அவ்வொழுக்க முதலிய நன்மைகளையுடையனாய்) அவற்றை மறுதலைத்த தீமைகளை நீக்கி ஒழுகுவானொருவனுக்கு, அங்கு இச்சித்த தெய்வம் - தன் கருத்துக்கு இயைந்ததொரு கடவுளை, மனமது நினைய - மனத்தானினைந்து, வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல-வாக்கால் துதித்து மந்திரங்களை உச்சரித்து, கையில் இனமலர்கொண்டு - கைகளால் இனமாகிய மலர்களைக்கொண்டு அருச்சித்து, போற்றி வாழும் செயல் அறம் ஆனால்- வழிபட்டு வாழுஞ் செயலாகிய அறமும் உளதாயின், யார்க்கும் முனம் ஒரு தெய்வம் - முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய சிவபிரானே, எங்கும் செயற்கு முன்நிலையாம் அன்றே - அத்தெய்வத்தினிடமாக நின்று அச்செயலை ஏற்றுக்கொண்டு பயனுதவும் என்க.

(பொ - ரை.) அவ்வொழுக்க முதலிய நன்மைகளையுடையனாய் அவற்றை மறுதலைத்த தீமைகளை நீக்கிபொழுகுவானொருவனுக்குத் தன் கருத்திற் கியைந்ததொரு கடவுளை மனமொழி மெய்களான் வழிபட்டு வாழுஞ் செயலாகிய அறமும் உளதாயின், முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய சிவபிரானே அத்தெய்வத்தினிடமாக நின்று அச்செயலை ஏற்றுக்கொண்டு பயனுதவும் எ - ம்.

போற்றி வாழுஞ் செயலென இயையும். அகற்றியென்பது பெயர்; அகற்றிக்கென்னு நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது.

சினமுதலகற்றுதல் கூறவே, ஒழுக்க முதலியவுடைமை பெற்றாம்.

மேற்கூறிய ஒழுக்கம் முதலிய அங்கங்கட்கு ஈண்டுக் கூறிய அறம் அங்கியாகலின் உடனெடுத்தோதினார்.

அற்றேல், வழிபட்டார்க்கு வழிபடப்பட்ட அவ்வத்தெய்வமே பயன் கொடுக்குமென்றாற் படும் இழுக்கென்னை யென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ் செய்யுளென்பது. (உ௪)

யாதொரு தெய்வங் கோண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படும்இ றக்கும் பிறக்கும்மேல் வினையுஞ் செய்யும்
ஆதலான் இவையி லாதான் அறிந்தருள் செய்வன் அன்றே.

(ப - ரை.) (நால்வகையோனியுள் ஒரு யோனிவாய்ப்பட்டுப் பிறப்பன யாவை அவையெல்லாஞ் சீவவர்க்கம். அவ்வாறு பிறத்தலில்லது யாது அது பதிப்பொருள் என்னும் இதுவொன்றே ஏனைச்செயல்களான் வேற்றுமை அறியவாராத அவ்விரண்டற்குந் தம்முள்வேற்றுமை யறிய நிற்பதாகலின்) மற்று அத்தெய்வங்கள் - ஏனைத்தேவரெல்லாம், வேதனைப்படும் - அங்ஙனம் வேதனையுற்று, இறக்கும் பிறக்கும் - இறத்தல் பிறத்தலேயன்றி, மேல் வினையும் செய்யும் ஆதலான் - மேலேயும் வினைசெய்தல் கேட்கப்படுதலானும், இவை இலாதான் - அவ்வினைகள் இல்லாதவன் சிவபிரானேயாகலானும்,— மாது ஒரு பாகனார் தாம் - அச்சிவபிரானொருவனே (வினைவயத்தனாத

வின்றி), யாதொரு தெய்வம்கொண்டீர்-(நீர் எவ்விடத்தே) யாதொரு தெய்வத்தைப் பொருளாகக் கொண்டீராயினும், ஆங்கே அத்தெய்வம் ஆகி வருவர் - அவ்விடத்தே அத்தேவரிடமாகநின்று, அறிந்து அருள் செய்வன் அன்றே - (உயிர்கட்கு அவற்றை) அறிந்து கூட்ட வல்லுவன் (ஏனைத்தேவர் அது செய்யமாட்டாரென்பது தானே போதரும்) என்க.

(பொ - ரை.) நால்வகையோனியுள் ஒரு யோனிவாய்ப்பட்டுப் பிறப்பன யாவை அவையெல்லாஞ் சீவவர்க்கம்; அவ்வாறு பிறத்தலில்லது யாது அது பதிப்பொருள் என்னும் இதுவொன்றே ஏனைச்செயல்களான் வேற்றுமை அறிய வாராத அவ் இரண்டற்கும் தம்முள் வேற்றுமையறிய நிற்பதாகலின், ஏனைத் தேவரெல்லாம் அங்ஙனம் பிறந்திறத்தல் கேட்கப்படுதலானும், சிவனுக்கஃதுண் டென்பது யாண்டானுங் கேட்கப்படாமையானும், சிவனொருவனே வினைவயத்தனாதலின்றி அவ்வத்தேவரிடமாக நின்று உயிர்கட்கு அவற்றையறிந்து கூட்டவல்லுவன்; ஏனைத்தேவர் அது செய்யமாட்டாரென்பது தானே போதரும் எ - ம்.

மற்று வினைமாற்று. பொதுவகையான் எடுத்துக் காட்டிச் சிறப்புவகையால் கூறினாராகலின் பால்வழுவின்மை யுணர்க.

அற்றேல், ஒருவரை வழிபட மற்றொருவர் பயன்கொடுத்தல் உலகத்திற் கண்டிலம் என்பாரை நோக்கி அது காட்டுதற்கெழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (௨௫)

இங்குநாஞ் சிலர்க்குப் பூசை இயற்றினால் இவர்க ளோவந்து
அங்குவான் தருவார் அன்றேல் அத்தெய்வம் அத்த னைக்காண்
எங்கும்வாழ் தெய்வம் எல்லாம் இறைவனா ணையினால் நிற்பது
அங்குநாஞ் செய்யுஞ் செய்திக் காணைவைப் பால்அ ளிப்பன்.

(ப - ரை.) சிலர்க்கு இங்கு நாம் பூசை இயற்றினால் - பசுப்பார்ப்பார் தந்தைதாய் முதலாயினாரை இம்மைக்கண்ணே நாம் வழிபட்டால், இவர்களோ வந்து அங்கு வான் தருவார் அன்றேல்-அஃதறிந்து மறுமைக்கட் பயன்றருங் கடவுள் வேறென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அத்தெய்வம் அத்தனைக்காண் - ஈண்டும் அவ்வாறுதல் அமையும் (அற்றேல் தம்மை வழிபட்டார்க்கு அவ்வத்தேவரே எதிர்தோன்றி நின்று பயன் கொடுத்தாரெனவும் ஆண்டாண்டுக் கேட்கப்படுதலின் அவரும் அதற்கு வல்லவர்போலுமென மலையற்க அரசனாணையே அமைச்சர் முதலாயினார் மாட்டு நின்று பிறர்க்கு அளிக்குமாறுபோல), இறைவன் ஆணையினால் எங்கும் வாழ் தெய்வம் எல்லாம் நிற்பது - முதல்வனே தன்னாணையைத் தன்னேவல்வழி நிற்கும் அவ்வக் கடவுளர் மாட்டுவைத்து, அங்கு நாம் செய்யும் செய்திக்கு-அவ்விடத்து நாஞ்செய்யுஞ் செய்திக்கு, ஆணைவைப்பால் அளிப்பன்-அவ்வழித்தாகப் பயன்கொடுப்பன் (அவ்வாறன்றித் தாமே வினைத்துடக்கிற்பட்டுப் பரதந்திரராய் நிற்கும் அக்கடவுளர் பிறர்க்குப் பயன் கொடுக்குமாறு யாண்டையது) என்க.

(பொ - ரை.) பசு பார்ப்பார் தந்தை தாய் முதலாயினாரை இம்மைக்கண் வழிபட்டார்க்கு அஃதறிந்து மறுமைக்கண் பயன் தரும் கடவுள் வேறு என்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், ஈண்டும் அவ்வாறாதல் அமையும். அற்றேல், தம்மை வழிபட்டார்க்கு அவ்வத்தேவரே எதிர்தோன்றி நின்று பயன் கொடுத்தார் எனவும் ஆண்டாண்டுக் கேட்கப்படுதலின் அவரும் அதற்கு வல்லுவர்போலுமென மலையற்க; அரசன் ஆணையே அமைச்சர் முதலாயினார்மாட்டு நின்று பிறர்க்கு அளிக்குமாறு போல, முதல்வனே தன்னாணையைத் தன்னேவல்வழி நிற்கும் அவ்வக்கடவுளர்மாட்டு வைத்துப் பயன் கொடுப்பன்; அவ்வா றன்றித் தாமே வினைத்துடக்கிற்பட்டுப் பரதந்திரராய் நிற்கும் அக்கடவுளர் பிறர்க்குப் பயன்கொடுக்குமாறு யாண்டையது எ - ம்.

அற்றேல், அக்கடவுளர்மாட்டுச் செய்யும் வழிபாடுஞ் சிவபிரானே ஏற்றுக்கொண்டு பயனளிப்பனாயிற் பசுபுண்ணியமுஞ் சிவபுண்ணியமாவான் செல்லும்போலுமெனின், பசுபுண்ணியஞ் சிவபுண்ணியமெனப் பாகுபட்டது செய்வோர் கருத்துவகையா னன்றிக் கொள்வோர் கருத்துவகையான் அன்று ஆகலாற் செல்லாதெனவிடுக்க.

நிற்பது என்னும் ஒருமை அத்தொழின்மேல் நின்றது.

இவை நான்கு செய்யுளானும், ஈசனிடும்பணி நாஞ்செய்தலான் நூனங்கள் அதிகமாமாறும் அவை நோக்கி நுகர்விக்குமாறும் பொது வகையானுஞ் சிறப்புவகையானுந் தெரித்துணர்த்தப்பட்டன.

இனி அவை நூனங்கள் அதிகமாதற்கட்படும் விசேடங் கூறுகின்றார். (உசு)

காண்பவன் சிவனே யானல் அவனடிக்கு அன்பு செய்கை
மாண்பறம் அரன்தன் பாதம் மறந்துசெய் அறங்கள் எல்லாம்
வீண்செயல் இறைவன் சோன்ன விதியறம் விருப்போன் றில்லான்
பூண்டனன் வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கோள்ளே.

(ப - ரை.) காண்பவன் சிவனே ஆனல் - (இத்துணையுங் கூறிய வாற்றால் எனைக்கடவுளர்மாட்டுச் செய்யும் வழிபாடுகளையும் ஏற்றுக் கொண்டு) அளிப்பவன் சிவபிரானென்பது பெறப்படவே, அவன் அடிக்கு அன்பு செய்கை - அவன்றிருவடியை வழிபடுதலே, மாண்பு அறம் - நல்லதோர் அறமாம், அரன்றன் பாதம் மறந்து செய் அறங்கள் எல்லாம் - அவன் திருவடியை மறந்து செய்கின்ற அறங்களெல்லாம், வீண் செயல் - வீண் என்பது போதருதலானும், அறம் - புண்ணியமாவது, இறைவன் சொன்ன விதி - (வேதாகமங்களின்) அவ்விறைவனால் விதிக்கப்படும் விதியாகலானும், விருப்பு ஒன்று இல்லான் - ஒன்றினும் விருப்பிலனாகியும், பூண்டனன் வேண்டல் செய்யும் - (உயிர்கண்மாட்டுக் கருணை) பூண்டு விருப்பஞ் செய்கின்ற, பூசனை புரிந்து கொள்ளே - (அவ்விறைவன் திருவடிப்) பூசனையே ஒருதலையாகச் செய்யற்பாற்று என்க.

(பொ - ரை.) இத்துணையுங் கூறியவாற்றால் ஏனைக் கடவுளர் மாட்டுச் செய்யும் வழிபாடுகளையும் ஏற்றுக்கொண்டு அளிப்பவன் சிவபிரான் என்பது பெறப்படவே, அவனை வழிபடுதலே நல்லதோர் அறம், அவனையன்றிச் செய்வன எல்லாம் வீண் என்பது போதருதலானும், புண்ணியமாவது வேதாகமங்களின் அவ்விறைவனான் விதிக்கப்படும் விதியாகலானும், ஒன்றினும் விருப்பிலனாகியும் உயிர்கள் மாட்டுக் கருணைபூண்டு விருப்பஞ் செய்யும் அவ்விறைவன் திருவடிப் பூசனையே ஒருதலையாகச் செய்யற்பாற்று எ - ம்.

இல்லான் பூண்டனனென்பன முற்றெச்சங்கள்.

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

அற்றேல், வாக்குமனாதீத கோசரமாகிய இறைவன் திருமேனி கொண்டருளிய வழியுஞ் சுத்ததத்துவ புவனத்தினன்றி ஈண்டு வைகுதலின்மையின், அவனையீண்டுள்ளார் எங்ஙனங் கண்டு பூசிக்குமாறெனின், அஃதுணர்த்துதற்கெழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (உஎ)

தாபர சங்க மங்கள் என்றிரண் டுருவில் நின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்
நீபரன் தன்னை நெஞ்சில் நினைவையேல் நிறைந்த பூசை
ஆய்பரம் பொருளை நாளும் அர்ச்சிநீ அன்பு செய்தே.

(ப - ரை.) மாபரன் - (சதாசிவதத்துவத்தின் வைகும்) மாட்சிமை பெற்ற இறைவன், தாபர சங்கமங்கள் என்ற இரண்டு உருவில் நின்று - (புறத்தே திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியுந் திருவேடமுமாகிய இரண்டையும் (அகத்தே உயிரையும்) ஆதாரமாகக்கொண்டு நின்றும், பூசை கொண்டு மன் உயிர்க்கு அருளை வைப்பன் - ஈண்டுள்ளார் செய்யும் பூசையைக்கொண்டு அவர்க்கு அருள் செய்வன், நீ பரன் தன்னை நெஞ்சில் நினைவையேல் - நீ அவ்விறைவனை அகத்தே சிந்திப்பையாயின், நிறைந்த பூசை - (அவ்விறைவன் அவ்வகத்தே உயிரிடமாகக் கொண்டு நின்றும்) அந்நிறைந்த பூசையைக் கொண்டருளுவன், நீ ஆய் - (ஆகலான்) நீ அஃதறிந்து, பரம்பொருளை நாளும் அன்பு செய்தே அர்ச்சி - பரம்பொருளை நாடோறும் அவ்விடங்களிற் பத்தி செய்து வழிபடுக என்க.

(பொ - ரை.) சதாசிவதத்துவத்தின் வைகும் இறைவன் புறத்தே திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியுந் திருவேடமும் ஆதாரமாகக் கொண்டு நின்றும், அகத்தே உயிரிடமாகக் கொண்டு நின்றும் ஈண்டுள்ளார் செய்யும் பூசைகொண்டருளுவனாகலான், அஃதறிந்து அவ்விடங்களின் வழிபடுக எ - ம். (உஅ)

அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே.

யினிடத்துண்டாகிய இம்முத்திறக் கருவிகளாலும், ஆன்மாத் துடக்குண்டு வாழும் - உயிர் பந்திக்கப்பட்டு நிற்கும் என்க.

(பொ - ரை.) அவ்விருவகை யிந்திரியங்களும் ஒன்றனை விடயிக்கலுறுவார்க்கு உடம்பின் புறத்தே தோன்றி விடயிக்கும் புறக்கருவிகள் ; மனமுதலாயின அவ்விந்திரியங்களாற் றரப்பட்ட விடயத்தை உடம்பினகத்தே நின்று விடயிக்குமுட்கருவிகள் ; ஏனைக்கலாதிகளாவன அவ்வந்தக்கரணங்களான் விடயிக்கப் பட்டு வந்த பயனை ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகட்குப் பொருத்துவனவாய உள்ளந்தக்கரணங்களாம். இவை தம்முள் வேற்றுமையாகலின் இம்முத்திறக் கருவிகளும் ஒருதலையான் வேண்டப்பட்டு உயிரைப் பந்தித்து நிற்கும் எ - ம்.

மாயாளெனப் பெண்பாலாகக் கூறியது வடமொழிமதம்பற்றி ; உருவகஞ் செய்தற்பொருட்டெனினுமாம்.

ஓயாமை : மனத்துக்கடை. (௬௩)

ஓசைநற் பரிச ரூப இரதகந் தங்கள் என்று
பேசுமாத் திரைகள் ஐந்தும் பிறக்கும்பூ தாதி கத்தின்
நேசஇந் திரியங் கட்கு நிகழறிவு இதனுற் காண்டும்
ஆசைசேர் மனுதி தன்மாத் திரைபுரி அட்ட கந்தான்.

(ப - ரை.) பூதாதிகத்தின் - (அவ்விருவகை இந்திரியங்களும் தோன்றியபின் எனைப்) பூதாதியகங்காரத்தினின்றும், ஓசை நன் பரிச ரூப இரத கந்தங்கள் என்று பேசு மாத்திரைகள் ஐந்தும் பிறக்கும் - சத்தமும் நன்மையாகிய பரிசமும் உருவமும் இரதமும் கந்தமுமெனக் கூறப்படும் தன்மாத்திரைகள் ஐந்தும் தோன்றி, நேச இந்திரியங்கட்கு நிகழ் அறிவு இதனுற் காண்டும் - விரும்பப்பெற்ற அவ்விந்திரியங்கள் விளங்குகின்ற (தத்தம் விடயங்களை) விடயிக்குமாறு ஊக்கஞ் செய் வித்து (முதல்வன் ஆணையால்) உடனிற்கும், தன்மாத்திரை ஆசைசேர் மனுதி - இத்தன்மாத்திரைகள் ஐந்தும் இச்சாரூபமாகிய அந்தக்கர ணங்கள் மூன்றுமாகிய எட்டுங்கூடி, புரி அட்டகம் தான் - புரியட்டக வுடம்பாம் என்று அறிக என்க.

(பொ - ரை.) அவ்விருவகை இந்திரியங்களுந் தோன்றிய பின் ஏனைப்பூதாதி யகங்காரத்தினின்றுஞ் சத்தமுதலிய தன் மாத்திரை ஐந்துந் தோன்றி அவ்விந்திரியங்கள் தத்தம் விடயங் களை விடயிக்குமாறு ஊக்கஞ்செய்வித்து உடனிற்கும். இத் தன்மாத்திரைகள் ஐந்தும் அந்தக்கரணங்கள் மூன்றுமாகிய எட்டுங்கூடிப் புரியட்டக உடம்பாம் என்று அறிக எ - ம்.

மாத்திரையென்றது தலைக்குறை.

விடயவடிவாகிய சத்தாதிகட்குந் தன்மாத்திரைவடிவாகிய சத்தாதி கட்குந் தம்முள் வேற்றுமை காணமாட்டாதாருக்கு வேற்றுமை காட்டு வார், மனுதிதன்மாத்திரைபுரியட்டகமென்பதூஉம் உடன் கூறினர். ()

சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற் சத்த முன்னாத்
தோற்றும்வான் வளிதீ நீர்மண் தொடக்கியே யொன்றுக்கொன்றங்கு
ஏற்றமாம் ஓசை ஆதி இருங்குணம் இசைந்து நிற்கும்
ஆற்றவே விடய பூதம் அங்காங்கி பாவத் தாமே.

(ப - ரை.) *சத்தம் முன்னச் சாற்றிய பஞ்ச தன்மாத்திரைகளின் - மேற்சத்த முதலியவாகக் கூறிய தன்மாத்திரைகள் ஐந்தினும் நின்று, வான் வளி தீ நீர் மண் தோற்றும் - (முறையே) ஆகாயமும் வாயுவும் தேயுவும் அப்புவும் பிருதிவியுமாகிய தூலபூதம் ஐந்துந் தோன்றி, தொடக்கியே ஒன்றுக்கு ஒன்று அங்கு ஏற்றமாம் ஓசை ஆதி இருங்குணம் இயைந்து நிற்கும் - அவற்றுடன் பிரிப்பின்றி (முறையே) ஒன்றற்கொன்று ஏற்றமாகிய சத்தமுதலிய பெருங்குணங்கள் (முதல்வன் ஆணையால்) வியத்திருபமாக உடையனவாய் நிற்கும், பூதம் ஆற்றவே விடயம் அங்காங்கி பாவத்து ஆமே - இவ்வைம்பெரும் பூதங்கள் (தன் மாத்திரையோடு கூடி நின்று இந்திரியங்களின் தொழிற்பாட்டை) ஊக்குதற்கு இவற்றின் காரியபூதங்களாகிய தாத்துவிகங்கள் அறுபதும் அங்காங்கி முறைமையவாய் உடனிற்கும் என்க.*

(பொ - ரை.) *அச்சத்த முதலிய தன்மாத்திரைகள் ஐந்தினும் நின்று முறையே ஆகாய முதலிய தூலபூதம் ஐந்துந் தோன்றி அவற்றுடன் பிரிப்பின்றி முறையே ஒன்றற்கொன்றேற்றமாகிய சத்த முதலிய குணங்கள் வியத்திருபமாக உடையனவாய் நிற்கும். இவ்வைம்பெரும் பூதங்கள் தன்மாத்திரையோடு கூடிநின்று இந்திரியங்களின் தொழிற்பாட்டை ஊக்குதற்கு இவற்றின் காரிய பூதங்களாகிய தாத்துவிகங்கள் அறுபதும் [1]அங்காங்கி முறைமையவாய் உடனிற்கும் எ - று.*

*ஆற்றுதல் - வல்லுதல்.*

*விடயம் என்றது, ஈண்டுக் காரியமென்னும் துணையாய் நின்றது.*

*இவை பதினன்கு செய்யுளானுந் தத்துவங்கள் ஒன்றின் ஒன்று தோன்று முறைமையும் அவற்றின் தொழிற்பாடும் பயனுந் தாத்துவிகங்களது இயல்புங் கூறப்பட்டன.*

*இந்தத் தத்துவங்களெல்லாம் அகமும் அகப்புறமும் புறமுமென மூவகைப்படும்; அவற்றுள், பூதங்களின் வைத்துப் [1]புறப்பூதங்களிற் படும் விசேடங் கூறுகின்றார்.* (சுரு)

இரந்தர மாகி வான்தான் இடங்கொடுத் திடுஞ்ச லித்துப்
பரந்தவை திரட்டுங் கால்தீச் சுட்டொன்று வித்தல் பண்ணும்
நிரந்தரங் குளிர்ந்து நின்று பதஞ்செயும் நீர்மண் தானும்
உரந்தரு கடின மாகித் தரித்திடும் உணர்ந்து கொள்ளே.

1. பாடியம் ப. கக௲. பா. ரு, சு. தூலபூதம்.

(ப - ரை.) வான்தான் - (ஐம்பெரும்பூதங்களுள்) ஆகாயமானது, இரந்தரமாகி இடம் கொடுத்திடும் - வெளியாதல் இடங்கொடுத்தலாகிய குணமும் தொழிலும் உடையதாம், கால் - வாயுவானது, சலித்துப் பரந்தவை திரட்டும் - சலித்தல் பரந்தவற்றைத் திரட்டுதலாகிய குணமும் தொழிலும் உடையதாம், தீ - தேயுவானது, சுட்டு ஒன்றுவித்தல் பண்ணும்-சுடுதல் ஒன்றுவித்தலாகிய குணமும் தொழிலும் உடையதாம், நீர் - அப்புவானது, நிரந்தரம் குளிர்ந்து நின்று பதம் செய்யும் - இடைவிடாது குளிர்தல் பதஞ்செய்தலாகிய குணமும் தொழிலும் உடையதாம், மண்தானும் - பிருதிவியானது, உரந்தரு கடினமாகித் தரித்திடும் - வலிதருதற்கு ஏதுவாகிய கடினமாதல் தரித்திடுதலாகிய குணமும் தொழிலும் உடையதாம், உணர்ந்து கொள்ளே - இவற்றினை அறிவாயாக என்க.

(பொ - ரை.) ஆகாய முதலிய ஐம்பெரும் பூதங்கள் முறையே வெளியாதல் இடங்கொடுத்தல் முதலிய குணமுந் தொழிலும் உடையன எ - ம். (சுசு)

மண்புனல் அனல்கால் வான்பால் வடிவுநாற் கோண மாகுந்
தண்பிறை மூன்று கோணந் தகும்அறு கோணம் வட்டம்
வண்டோன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூம வன்னம்
எண்தரும் எழுத்துத் தானும் லவரய அவ்வு மாமே.

(ப - ரை.) மண் புனல் அனல் கால் வான் - நிலம் நீர் தீ வளி வெளியாகிய அப்பூதங்கள், நாற்கோணம் தண்பிறை மூன்றுகோணம் தகும் அறுகோணம் வட்டம் ஆகும் பால் வடிவு - (முறையே) நாற்கோணமும் தண்ணிய பிறைபோலும் இருகோணமும் முக்கோணமும் தக்க அறுகோணமும் வட்டமுமாகிய (ஐ) வகை வடிவுகளும், வண் பொன்மை வெண்மை செம்மை கறுப்பொடு தூமம் (பால்) வன்னம் - வளவிய பொன்மையும் வெண்மையும் செம்மையும் கருமையும் புகைமையுமாகிய (ஐ) வகை நிறங்களும், லவரய அவ்வுமாம் எண்தரும் எழுத்துத் தானுமே - லகாரமும் வகாரமும் ரகாரமும் யகாரமும் ஹகாரமுமாகிய ஐவகைப்பீசங்களுமாகிய இவையும் உடையன என்க.

(பொ - ரை.) அவை நிலமுதலாகக்கொண்டு முறையே நாற்கோண முதலிய ஐவகை வடிவும் பொன்மை முதலிய ஐவகை நிறங்களும் லகர முதலிய ஐவகைப் பீசங்களுமாகிய இவையும் உடையன எ - ம். (சுஎ)

குறிகள்வச் சிரத்தி னோடு கோகந தஞ்சு வத்தி
அறுபுள்ளி அமுத விந்து அதிதெய்வம் அயன்மால் ஆதி
செறிபுகழ் ஈசனோடு சதாசிவம் பூத தெய்வம்
நெறிதரு கலைஐந் திற்கும் நிகழ்த்துவர் இந்த நீர்மை.

(ப - ரை.) வச்சிரத்தினோடு கோகநதம் சுவத்தி அறுபுள்ளி அமுத விந்து குறிகள் - வச்சிரமும் தாமரையும் சுவத்திகமும் அறுபுள்ளியும் அமுதவிந்துவுமாகிய (ஐந்து) அடையாளங்களும், தெய்வம் அயன் மால்

ஆதி செறிபுகழ் ஈசனோடு சதாசிவம் அதிதெய்வம் - தெய்வமெனப்படும் அயனும் மாலும் உருத்திரனும் மிக்க புகழினையுடைய மகேசனும் சதா சிவமுமாகிய (ஐந்து) அதிதெய்வங்களுமாகிய இவையும், பூதம் - (முற் கூறிய) பிருதிவி முதலிய பூதங்கள் (முறையே உடையனவாம்), நெறி தரு கலை ஐந்திற்கும் இந்த நீர்மை நிகழ்த்துவர் - (இவை மந்திர முதலிய அத்துவாக்களை அடக்கி நிற்கும்) முறைமையுடைய நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகட்கும் இவ்வாறே பெரியராற் கூறப்படும் என்க.

(பொ - ரை.) வச்சிரம் முதலிய அடையாளம் ஐந்தும் அயன் முதலாகிய அதிதெய்வம் ஐந்துமாகிய இவையும அப் பூதங்கள் முறையே யுடையனவாம்; இவை நிவிர்த்தி முதலிய கலைகட்கும் இவ்வாறே கூறப்படும் எ - ம்.

இவை மூன்று செய்யுளானும் புறப்பூதங்களது இயல்பு வேறெடுத்துக்கொண்டு வகுத்துக் கூறப்பட்டன.

ஏனை அகப்பூதங்களது (தன் மாத்திரை) இயல்பு [1]நேசவிந்திரியங் கட்கு நிகழறிவிதனுற் காண்டுமெனவும், அகப்புறப் பூதங்கள தியல்பு ஆசைசேர் மனுதிதன் மாத்திரை புரியட்டகந்தானெனவுஞ் சூக்கும பூதமாகிய தன் மாத்திரைக்கு ஓதியவாறு பற்றி அறியக்கிடந்தன. (கூஅ)

சுத்ததத் துவங்கள் என்று முன்னமே சொன்ன ஐந்தும்
இத்தகை மையின்இ யம்பும் இவைமுப்பத் தொன்று மாகத்
தத்துவ முப்பத் தாறுஞ் சைதன்னி யங்கள் ஐந்து
சித்தசித் தான்மா ஒன்று முப்பதும் அசித்தே செப்பில்.

(ப - ரை.) சுத்த தத்துவங்கள் என்று முன்னமே சொன்ன ஐந் தும் - இயைபுபற்றி மேலைச்சூத்திரத்துட் கூறிப்போந்த சுத்த தத்து வங்கள் ஐந்துடன், இத்தகைமையின் இயம்பும் இவை முப்பத்தொன் றும் ஆக - ஈண்டுக்குணம் பொருந்தக்கூறிய தத்துவம் முப்பத்தொன் றும் உளப்பட, முப்பத்தாறு தத்துவமாம் - (தொகையான்) முப்பத் தாறு தத்துவங்களாம், செப்பில் ஐந்து சைதன்னியங்கள் - சொல்லு மிடத்தே இவற்றுள் முன்னைய ஐந்தும் (சடமாயினும் சிற்சத்திக்குச் சுதந்திர வடிவாகலின்) சைதன்னியமெனப்படும், ஆன்மா ஒன்று சித்தசித்து - (ஏனை முப்பத் தொன்றனுள்) புருடதத்துவம் ஒன்றும் சார்ந்ததின் வண்ணமாய்ச் சித்தசித்தெனப்படும், முப்பதும் அசித்தே - (அஃதொழிந்த) முப்பதும் அசித்தெனவேபடும் என்க.

(பொ - ரை.) இயைபுபற்றி மேலைச்சூத்திரத்துள் கூறிப் போந்த சுத்த தத்துவங்கள் ஐந்துடன் ஈண்டுக் கூறிய தத்துவம் முப்பத்தொன்றும் உளப்படத் தொகையான் முப்பத்தாறு தத்துவமாம். இவற்றுள், முன்னைய ஐந்துஞ் சடமாயினுஞ் சிற்சத்திக்குச் சுதந்திரவடிவாகலிற் சைதன்னியம் எனப்படும்; ஏனை முப்பத்தொன்றனுட் புருடதத்துவஞ் சார்ந்ததன் வண்ண மாய்ச் சித்தசித்தெனப்படும்; அஃதொழிந்த முப்பதும் அசித் தெனவேபடும் எ - ம்.

---

1. சூத் 2. அதி 3. செய்யுள் 64.

சித்தசித்தென்றது தமிழ் நூலின் முடிபு.

இதனானே மேற்கூறிப் போந்த தத்துவங்களுக்குத் தொகையும் அவற்றதியல்புங் கூறப்பட்டன. (௬௯)

ஐந்துசுத் தத்தின் கீழ்ஏழ் சுத்தாசுத் தம்அ சுத்தந்
தந்திடும் புமான்கீழ் எண்மூன் றுயதத் துவஞ்சீ வர்க்கு
வந்திடும் பிரேர காண்டம் மருவுபோக சயித்தி ரத்தோடு
அந்தமில் அணுக்க ளுக்குப் போக்கிய காண்டம் ஆமே.

(ப - ரை.) (இத்தத்துவம் முப்பத்தாறனுள் முற்கூறிய ஐந்து தத்துவமும்) ஐந்து சுத்தத்தின் கீழ் எழ் (தத்துவம்) - சுத்தமாகிய (அவ்) ஐந்து தத்துவத்தின் கீழாக (நடுவண்) ஏழுதத்துவமும், தந்திடும் புமான் கீழ் எண்மூன்று ஆய தத்துவம் - பொருந்திய புருடதத்துவத்தின் கீழாகப் (பின்) இருபத்துநான்காகிய தத்துவமும், (சுத்தம்) சுத்தாசுத்தம் அசுத்தம் - (முறையே) சுத்தம் மிச்சிரம அசுத்தம் எனவும், சீவர்க்கு வந்திடும் பிரேரகாண்டம் - உயிர்கள் அனுபவத்திற்கு ஏதுவாகும் பிரேரகாண்டம், மருவு போகசயித்திரத்தோடு-பொருந்திய போகசயித்திரு காண்டத்துடன், அந்தம் இல் அணுக்களுக்குப் போக்கிய காண்டம் ஆமே - எண்ணிலாத உயிர்கட்குப் போக்கிய காண்டம் எனவும் (காரணக் குறிபெற்று முத்திறப்)படும் என்க.

(பொ - ரை) இத்தத்துவ முப்பத்தாறனுள், முன் ஐந்தும் நடுவண் ஏழும் பின்னிருபத்து நான்கும், முறையே சுத்தம், மிச்சிரம், அசுத்தமெனவும் பிரேரகாண்டம், போகசயித்திரு காண்டம், போக்கிய காண்டமெனவுங் காரணக்குறி பெற்று முத்திறப்படும் எ - ம்.

முன்னைய ஐந்துஞ் சுத்தமாதன் மேற்கூறிப் போந்தமையின் ஈண்டு அனுவதித்தொழிந்தார்.

போகசயித்திருவென்னும் வடசொல்லினுள் உகரமும் அதனொடென்பதனுள் அன் சாரியையும் விகாரத்தாற் றொக்கன.

அது : பகுதிப்பொருள் விகுதி.

இவை காரணக்குறியாமாறு உய்த்துணர்ந்து கொள்க.

இதனானே அம்முப்பத்தாறு தத்துவமும் மூவினமாதல் கூறப்பட்டது. (௭0)

தத்துவ ரூப மாகுந் தரும்அரு உருவம் எல்லாந்
தத்துவந் தூல சூக்க பரங்களும் ஆகி நிற்குந்
தத்துவந் தன்னிற் சாரும் அணுக்கள்சா தாக்கி யத்தில்
தத்துவ சத்தஞ் சாருஞ் சகலமுந் தத்து வங்காண்.

(ப - ரை.) தரும் அரு உருவம் எல்லாம் - (மாயையினாலே) தரப்பட்ட அருவும் உருவும் அருவுருவுமாயுள்ள காரியப் பிரபஞ்சம் அனைத்

தும், தத்துவரூபமாகும் - இத்தத்துவ வடிவேயாம், தத்துவம் தூல சூக்க பரங்களுமாகி நிற்கும்-இம்முப்பத்தாறு தத்துவமும் தூலதத்துவம் சூக்குமதத்துவம் அதிசூக்குமதத்துவமென (ஒரோவொன்றும் மூவகைப்பட்டுப் பொதுவும் பொதுச்சிறப்பும் சிறப்புமாய்) நிற்கும், தத்துவம் தன்னிற் சாரும் அணுக்கள் சாதாக்கியத்தில் - இத்தன்மையவாய தத்துவங்களை அதிட்டிக்கும் அணுபக்க சம்புபக்கத்து அதிதெய்வங்களிடத்தும், தத்துவ சத்தம் சாரும் - அவ்வத் தத்துவப்பெயர் பொருந்தும், சகலமும் தத்துவம் காண் - (ஆதலின்) எல்லாப் பொருளையும் தத்துவங்களின் வைத்துக் காண்க என்க.

(பொ - ரை.) அருவும் உருவும் அருஉருவுமாயுள்ள காரியப் பிரபஞ்சமனைத்தும் இத்தத்துவ வடிவேயாம். இம்முப்பத்தாறுந் தூலதத்துவஞ் சூக்குமதத்துவம் அதிசூக்குமதத்துவமென ஒரோவொன்று மூவகைப்பட்டுப் பொதுவும் பொதுச்சிறப்புஞ் சிறப்புமாய் நிற்கும். இத்தன்மையவாய தத்துவங்களை அதிட்டிக்கும் அணுபக்க சம்புபக்கத்து அதிதெய்வங்களும் அவ்வத் தத்துவப் பெயர் பெறுமாகலான் எல்லாப் பொருளையுந் தத்துவங்களின் வைத்துக் காண்க எ - ம்.

எனவே, இத்தத்துவ முப்பத்தாறும் உணர்ந்தானுக்கு எல்லாப் பொருளும் இனிது விளங்கும் என்பதாயிற்று.

இச்செய்யுளிற் கூறிய பொருளனைத்துஞ் சிவாகமங்களின் விரித்துணர்ந்து கொள்க.

இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறெல்லாம் உரைப்ப.

இதனானே தத்துவங்கள் ஒருதலையான் உணரற்பாலன என்பது கூறப்பட்டது. (எக)

தத்துவம் எண்மூன் றுஞ்சென்று ஆன்மதத் துவத்தோ டுங்கும்
வித்தையின் ஒடுங்கும் ஆறுஞ் சிவத்தினின் ஒடுங்கும் மூன்றும்
நித்ததத் துவம்இம் மூன்றும் என்பர்கள் இரண்டும் நின்ற
சுத்தமாஞ் சிவத்தோ டுங்குந் தோற்றமும் இதுபோ லாகும்.

(ப - ரை.) (இம்முப்பத்தாறு தத்துவங்களும் சங்காரகாலத்துத் தத்தங் காரணங்களின் ஒடுங்கும் வழி) தத்துவம் எண்மூன்றும் சென்று - நிலமுதன் மூலப்பகுதி ஈறாகிய இருபத்துநான்கு தத்துவங்களும் சென்று, ஆன்மதத்துவத்தின் ஒடுங்கும் - சகல வர்க்கத்து ஆன்மாக்கட்கு அதிதெய்வமாகிய சீகண்டருத்திரனால் ஒடுங்கும், ஆறும் - மூலப்பகுதிக்கு மேலுள்ள ஆறு தத்துவமும், வித்தையின் ஒடுங்கும் - வித்தை ஈசராகிய அனந்தரால் ஒடுங்கும், மூன்றும் - அவற்றின் மேலுள்ள சுத்தவித்தை முதலிய மூன்று தத்துவமும், சிவத்தினின் ஒடுங்கும் - இலயத்தினின்ற சிவனால் ஒடுங்கும், நின்ற இரண்டும் - ஏனைச் சத்தி தத்துவம் சிவதத்துவம் இரண்டும், சுத்தமாம் சிவத்தின் ஒடுங்கும் - சுத்தசிவனால் ஒடுங்கும், தோற்றமும் இதுபோல் ஆகும் - இவை புநருற்பவம் ஆங்காலும் அவ்வவை அவ்வவரால் ஆம், இம்மூன்றும் நித்த

தத்துவம் என்பர்கள் - (இவருட் சுத்த சிவன் ஒருவனே நித்தியன்) ஏனை மூவரையும் அவ்வாறு நித்தியரென்பாரும் உளர் (அஃது உபசாரமே) என்க.

(பொ - ரை.) இம்முப்பத்தாறு தத்துவங்களுஞ் சங்கார காலத்துத் தத்தங் காரணங்களின் ஒடுங்கும் வழி, நிலம் முதன் மூலப்பகுதி யீறாகிய இருபத்துநான்கு தத்துவங்களுஞ் சீகண்ட ருத்திரனால் ஒடுங்கும்; மூலப்பகுதிக்கு மேலுள்ள ஆறு தத்துவமும் வித்தையீசராகிய அனந்தரால் ஒடுங்கும்; அவற்றின் மேலுள்ள சுத்தவித்தை முதலிய மூன்று தத்துவமும் இலயத்தின் நின்ற சிவனால் ஒடுங்கும்; ஏனைச் சத்திதத்துவஞ் சிவ தத்துவம இரண்டுஞ் சுத்த சிவனால் ஒடுங்கும். இவை புநருற்பவமாங்காலும் அவ்வவை அவ்வவரால் ஆம். இவருட் சுத்த சிவன் ஒருவனே நித்தியன்; ஏனை மூவரையும் அவ்வாறு நித்தியர் என்பாரும் உளர்; அஃது உபசாரமே எ - ம்.

மூலப்பகுதிக்குங் குணதத்துவத்திற்குந் தம்முள் வேற்றுமை அவ்வியத்தமாதலும் வியத்தமாதலும் மாத்திரையேயன்றி ஏனைய போலப் பரிணமவிசேடம் இன்மையின் அதுபற்றி அவையிரண்டனையும் ஒன்றாக வைத்தெண்ணினார்.

ஏதுப்பொருட்கண் வரும் இன்னுருபு ஏனையிடங்களினும் விரித்துரைக்க.

ஆன்மாவுக்கதிதெய்வமாகிய தத்துவம், ஆன்மதத்துவமென உருத்திரனுக்குப் பெயராயிற்று; ஈண்டு ஆன்மா என்றது ஏற்புழிக்கோடலாற் சகலவர்க்கத்தின் மேல்நின்றது.

தத்துவமென்பது பொதுச்சொல்.

ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவமென அவ்வக்காரணக்கடவுளர் பெயர் இயைபுபற்றி அவ்வத் தத்துவங்களுக்கும் ஆயின என்பது உணர்த்துவார், அவரை அவ்வப்பெயராற் கூறினார்.

இனி, நவந்தருபேதங் கூறுவான் புகுந்த ஆசிரியர் அதற்குத் தோற்றுவாயாக இச்செய்யுளை ஈண்டு வைத்தாராயினும், இயைபுபற்றி ஐந்துசுத்தத்தினென மூவகைப்படுத்தோதிய செய்யுளின் பின்னாக வைத்துக் கண்டுகொள்க.

இதனானே அத்தத்துவங்களைத் தோற்றியொடுக்குங் காரணக்கடவுளர் இவரென்பது வகுத்துக் கூறப்பட்டது.

இத்துணையும் மூன்றாங்கூற்றிற்படுமுறைமை யெல்லாந் தொகுத்துக் கூறியவாறு.

இனி, ஏழுசெய்யுளான் நாலாங் கூற்றைத் தெரித்துணர்த்துகின்றார். (எஉ)

---

## நான்காமதிகரணம்

மோய்தரு பூதம் ஆதி மோகினி யந்த மாகப்
பொய்தரு சமயம் எல்லாம் புக்குநின் றிடும்பு கன்று
மெய்தரு சைவ மாதி இருமூன்றும் வித்தை யாதி
எய்துதத் துவங்க ளேயும் ஒன்றுமின்று எம்மி றைக்கே.

**(ப - ரை.)** பொய்தரு சமயம் எல்லாம் - பொய்ம்மைபெற்ற சாருவாக மு ல் அயிக்கியவாதசைவம் ஈறாகிய புறப்புறச் சமயமும் புறச்சமயமும் அகப்புறச்சமயமுமென்னும் முக்கூற்றுச் சமயத்தெய்வங்க ளெல்லாம், மொய்தரு பூதம் ஆதி மோகினி அந்தம் ஆகப் புக்கு நின்றிடும்- நெருங்கிய பூதமுதல் அசுத்தமாயாதத்துவம் ஈறாக ஒவ்வொரு தத்துவங்களின் நிலைபெறும், புகன்று மெய்தரு சைவம் ஆதி இரு மூன்றும்- சிவாகமங்களுட் கூறப்படும் (ஏக னநேக னிருள்கரும மாயையிரண்டென்னும ஆறு பொருட்கும்) உண்மைத்தன்மை விளக்குகின்ற சைவமெனப்படும் தலையாகிய அறுவகைச்சமயத் தெய்வமாய்நின்ற அதிகார போக இலய சிவபேதஙகள, வித்தை ஆதி எய்து தத்துவங்கள் ஏயும் - சுத்த வித்தை முதலியவாகப் பொருந்திய ஐந்து தத்துவங்களுள் ஒவ்வொன்றின் நிலைபெறும், எம் இறைக்கு ஒன்றும் இன்றே-சித்தாந்த சைவத்தெய்வமாகிய எம்முடைய சுத்தசிவம் இம்முப்பத்தாறையும் கடந்து நிற்கும் என்க.

**(பொ - ரை.)** சாருவாக முதல் ஐக்கியவாதசைவம் ஈறாகிய புறப்புறச்சமயமும் புறச்சமயமும் அகப்புறச்சமயமுமென்னும் முக்கூற்றுச் சமயத்தெய்வங்களெல்லாம் பூதமுதல் அசுத்தமாயா தத்துவம் ஈறாக ஒவ்வொரு தத்துவங்களின் நிலைபெறும். சிவாகமங்களுட் கூறப்படும் [1]'ஏகன் அநேகன் இருள்கருமம் மாயையிரண்டு' என்னும் ஆறு பொருட்கும் உண்மைத்தன்மை விளக்குகின்ற சைவம் எனப்படுந் தலையாகிய அறுவகைச்சமயத் தெய்வமாய் நின்ற அதிகார போக லய சிவபேதங்கள் சுத்தவித்தை முதலிய ஐந்து தத்துவங்களுள் ஒவ்வொன்றின் நிலைபெறும். சித்தாந்த சைவத் தெய்வமாகிய சுத்தசிவம் இம்முப்பத்தாறையுங் கடந்துநிற்கும் எ-ம்.

**அமலனுதலைத் தெரித்துணர்த்தியவாறு.**

அவ்வத்தெய்வங்கள் நிலைபெறுந் தத்துவமே அவ்வச்சமயத்தார்க்கு முத்தித்தானம் என்பதூஉம் இதனாற் பெறுதும்.

அவ்வவற்றின் மேலுள்ள தத்துவங்கள் அவ்வச்சமயத்தார்க்குணர்ச்சி செல்லாமையின் அவ்வத்தத்துவத்தினளவினன்றி அவருக்கு மேற் சேறல் கூடாமையறிக.

சமயத் தெய்வங்களைச் சமயமென்றுபசரித்தார்; இருமூன்றுமென்றதுமது.

---

1. திருவருட்பயன், சூ. அறியும்நெறி - உ.

ஆணவமலத்துண்மை கொள்ளமாட்டாத ஐக்கியவாதசைவரை நீக்குதற்கு, மெய்தரு சைவமென்றும், ஆதியிருமூன்றென்றும், விசேடித்தார்.

பாடாணவாதசைவமுதற் சுத்தசைவம் ஈருகக் கிடந்த ஏழனுள் பாடாணவாதத்திற்கும் பேதவாதத்திற்குந் தம்முள் வேற்றுமை சிறிதாதல்பற்றி அவையிரண்டனையும் ஒன்ருகவைத்து இருமூன்றெனத் தொகை கூறியவாறு.

இவ்வாறன்றி உரைப்பனவெல்லாஞ் சிவாகமங்களோடு முரணுமென்றொழிக. (எங)

சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்தான் மாலயன் ஒன்றின் ஒன்ருய்ப்
பவந்தரும் அருவம் நாலிங் குருவநால் உபயம் ஒன்ரு
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்.

(ப - ரை.) ஏகநாதனே-அங்ஙனம் ஒன்றுமின்றி நிற்கும் எம்மிறைவனே, ஒன்றின் ஒன்ருய்ப் பவந்தரும் சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன் உவந்தருள் உருத்திரன்தான் மால் அயன்-ஒன்றின் ஒன்ருகத் தோன்றி (ஒவ்வொருதத்துவங்களின் நின்று கொண்டு தத்தந் தொழில்களைச் செய்யும்) சிவமுதல் அயன் ஈருகியவைகளிலே, அருவம் நாலு இங்கு - சிவம் சத்தி நாதம் விந்துவாகிய அருவத்திருமேனி நான்கும், உருவம் நாலு - மகேசன் உருத்திரன் மால் அயனுகிய உருவத்திருமேனி நான்கும், உபயம் ஒன்று ஆம் - சதாசிவமாகிய அருவுருவத்திருமேனி ஒன்றும் ஆகிய (முத்திறத்து), நவம் தரு பேதம் நடிப்பன் என்பர் - ஒன்பது வர்க்கத்தினும் (வேற்றுமையின்றி நின்று) அவ்வத் தொழில்களைச் செய்வன் என்பர் என்க.

(பொ - ரை.) அங்ஙனம் ஒன்றும் இன்றி நிற்கும் எம் இறைவன் ஒன்றின் ஒன்ருகத் தோன்றி ஒவ்வொரு தத்துவங்களின் நின்றுகொண்டு தத்தந்தொழில்களைச் செய்யுஞ் சிவமுதல் அயன் ஈருகிய முத்திறத்து ஒன்பது வர்க்கத்தினும் வேற்றுமையின்றி நின்று அவ்வத்தொழில்களைச் செய்வன் எ-ம்.

ஏகாரம் : தேற்றம்.

மேல், 'ஒருவனே இராவணுதி பாவகம் உற்ருற்போல' (சூத். க., செ. கூஎ.) என்றதனை ஈண்டும் அறிவுறுத்துவார், நடிப்பனென்ருர்.

செவ்வெண்தொகை விகாரத்தால் தொக்கது.

இவ்ஒன்பது பேதத்துட் சத்தி விந்துவென்னும் இரண்டும் சத்திபேதமாயினும், ஏனை மனேன்மனி முதலிய பேதம்போலன்றி ஒன்றினென்ருகப் பவந்தருமுறையிற் காரணமாய் இடைநிற்றல்பற்றிச் சிவபேதத்துடன் வைத்தெண்ணி நவந்தருபேதமெனப்பட்டன; நவந்தருபேதம் ஏகநாதனே நடிப்பன் என்றதும் ஒற்றுமை நயம்பற்றிப் பொதுவகையாற் கூறிற்றென்பது; அவை முறையே சிவத்துக்கும் நாதத்துக்கு முரிய சத்திபேதமேயாதலென்பது வருஞ்செய்யுளிற் காண்க. (எச)

சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மணிதா னாகி
ஒத்துறு மகேசை யாகி உமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி ஒருத்தி யாகும்
எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்.

(ப - ரை.) *சிவாதிக்கு வரும் சத்தி* - (மேற்கூறிய) சிவபேதம் ஏழற்கும் உரிய சத்திபேதமும், *சத்தியாய் விந்துசத்தியாய் மனோன் மணி தானாகி ஒத்துறும் மகேசையாகி உமை திரு வாணியாகி வைத்துறும்* - (முறையே சிவத்திற்குச்) சத்தியாகியும் (நாதத்திற்கு) விந்துவாகியும் (சதாசிவத்திற்கு) மனோன்மணியாகியும் (மகேசனுக்குப்) பொருந்திய மகேசையாகியும் (உருத்திரனுக்கு உமையாகியும் (மாலுக்குத்) திருவாகியும் (அயனுக்கு) வாணியாகியும் (எழுவகைப்) படும், *ஈசன் எத்திறம் நின்றான்* - (எம் இறைவனாகிய) பரமசிவன் சிவபேதம் ஏழினும் நின்று நடாத்துமாறெல்லாம், *ஒருத்தியாகும் அவளும் இங்ஙன் அத்திறம் நிற்பள்* - (அவனோடு தாதான்மியமாய் நிற்கும்) ஒருத்தியாகிய பராசத்தியும் இச்சத்திபேதம் ஏழினும் அவனுக்குத் துணையாய் நின்று நடாத்தும் என்க.

(பொ - ரை.) மேற்கூறிய சிவபேதமேழற்கும் உரிய சத்திபேதமும், முறையே சத்திமுதல் வாணியீறாக எழுவகைப்படும். எம்மிறைவனாகிய பரமசிவன் சிவபேதம் ஏழினும் நின்று நடாத்துமாறெல்லாம், அவனோடு தாதான்மியமாய் நிற்கும் பராசத்தியும் இச்சத்திபேதம் ஏழினும் அவனுக்குத் துணையாய் நின்று நடாத்தும் எ - ம்.

அற்றேல், மேலைச் சூத்திரத்தின், '**வரும் வடிவெல்லாஞ் சத்தி** (க : சுஎ.) எனக் கூறி, ஈண்டுச் சிவபேதஞ் சத்திபேதமென வேறு வைத்து.' 'எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்' என்றல் மலைவாம் போலுமென மயங்காமைப் பொருட்டு அஃதுணர்த்துதற்கெழுந்தது வருஞ் செய்யுளென்பது. (எரு)

சத்திதான் நாதம் ஆதி தானாகுஞ் சிவமும் அந்தச்
சத்திதான் ஆதி யாகுந் தரும்வடிவு ஆன எல்லாஞ்
சத்தியுஞ் சிவமும் ஆகுஞ் சத்திதான் சத்த னுக்கோர்
சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாம்ஆம் சத்தி தானே.

(ப - ரை.) *சத்திதான் நாதம் ஆதி தான் ஆகும்* - சத்தியானது நாத முதலியவற்றிற் கூடியிருக்கும், *சிவமும் அந்தச் சத்திதான் ஆதி ஆகும்* - சிவமும் அந்தச் சத்தி முதலியவற்றை **அதிட்டித்து நிற்கும்** (இங்ஙனம் மரமும் காழ்ப்பும்போல ஒப்ப இயைந்து நிற்றலின்), *சத்திதான் தரும் வடிவான எல்லாம் சத்தியும் சிவமும் ஆகும்* - சத்தியால் தரப்படும் எல்லாத்திருமேனியும் சத்தி சிவம் இரண்டற்கும் பொதுவடிவேயாம் (ஆயினும்), *சத்தனுக்குச் சத்தன் வேண்டிற்றெல்லாம் ஆம் சத்திதானே* - சத்தனுக்குத் தான் வேண்டியவாறெல்லாம் ஆகும் சத்தியே, *ஓர் சத்தியாம்* - ஒப்பற்ற தேவியுமாம் (ஆகலான் அதற்குரிய

வடிவு விசேடம் குணவிசேடம்பற்றிச் சிவபேதம் சத்திபேதமென்று ஆயின) என்க.

(பொ - ரை.) மரமுங் காழ்ப்பும்போல ஒப்ப இயைந்து நிற்றலின் எல்லாத்திருமேனியுஞ் சத்தி சிவம் இரண்டிற்கும் பொதுவடிவேயாமாயினும், சத்தனுக்குச் சத்தி தேவியும் ஆகலான் அதற்குரிய வடிவுவிசேடங் குணவிசேடம் பற்றிச் சிவபேதஞ் சத்திபேதம் என்றாயின எ-ம்.

ஆகலான் அதற்குரிய வடிவு விசேடங் குணவிசேடம்பற்றிச் சிவபேதஞ் சத்திபேதம் என்றாயினவென்பது குறிப்பெச்சம்.

சத்தனுக்கோர் சத்தியாம் என்றது வல்லவனுக்கு வல்லமையாய் நிற்குமெனச் சிவ சத்திகட்கு நாயகநாயகி பாவங் கூறியவாறு; நாயக நாயகி பாவமாதலை வலியுறுத்துவார், சத்தன்வேண்டிற் றெல்லாமாஞ் சத்தியெனச் சத்தியின் பெருமை கூறினார்; வேண்டிற்றெல்லாமென்றது ஒருமைப்பன்மை மயக்கம்.

இவை மூன்று செய்யுளும் (2) தாதான்மியமாய் நீங்காது நிற்றலைத் தெரித்துக் கூறியவாறு. அற்றேல், மேல் ஒன்றினொன்றாய்ப் பவந்தருமெனப்பட்ட சத்திசிவங்களை ஈண்டுத் தலைவனுந் தலைவியுமாய்த் தம்முட் புணருமென்பது முறையன்று போலுமென்பாரை நோக்கி அதனை புணர்த்துதற்கெழுந்தது வருஞ்செய்யுளென்பது. (எகூ)

[1]சிவஞ்சத்தி தன்னை ஈன்றுஞ் சத்திதான் சிவத்தை ஈன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லாம் ஈன்றும்
பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியும் அன்றே.

(ப - ரை.) சிவம் சத்திதன்னை ஈன்றும் - சிவதத்துவத்தினின்று சத்தி தத்துவம் தோன்றியும், சத்திதான் சிவத்தை ஈன்றும் - சத்தி தத்துவத்தினின்று சாதாக்கிய தத்துவம் தோன்றியும் (நவபேதமேயன்றித் தத்துவமல்ல) உவந்து இருவரும் புணர்ந்து இங்கு உலகு உயிர் எல்லாம் ஈன்றும் - உவப்புற்று இருவரும் கூட இவ்விடத்துச் சடமும் சேதநமுமாய பிரபஞ்சமெல்லாந் தோன்றியும், பவன் பிரமசாரி ஆகும் பான்மொழி கன்னி ஆகும் - சிவபிரான் பிரமசாரி ஆவன் சிவசத்தி கன்னிகை ஆவள், தவம் தரு ஞானத்தோர்க்கு - முன்தவ விசேடத்தால் (முதல்வன் அருள்பெற்ற) ஞானிகட்கு, இத்தன்மைதான் தெரியும் அன்றே - சத்தியும் சிவமும் செய்யும் இச்செயல்களெல்லாம் (நம்மனோர்பொருட்டாக நடித்துக்காட்டும் நாடகமாத்திரையே யன்றிப் பிறிதில்லையென்பது) விளங்கும் என்க.

(பொ - ரை.) சத்தியுஞ் சிவமுஞ் செய்யும் இச் செயல்களெல்லாம் நம்மனோர் பொருட்டாக நடித்துக்காட்டும் நாடகமாத்திரையேயன்றிப் பிறிதில்லை எ - ம்.

உம்மை சிறப்பு.

---

1. 'மின்னிடைச்' திருவாசகம், திருப்பொற் : கரு.
'தவளத்த' திருக்கோவையார், ககஉ. 'வாயு' திருமூலர், ககஎஅ.

'பந்தமும் வீடும்ஆய பதபதார்த்தங்களல்லான்' (சூத். ௧., செ. ௬௬.)

என்பது முதலாக மேலைச் சூத்திரத்தின் விரித்துக்கூறியவற்றை ஈண்டு உருவகஞ் செய்யும் முகத்தால் தொகுத்துணர்த்தி, (௩) இவற்றின் தன்மை தனக்கேய்தல் இன்றதலைத் தெரித்துக் கூறியவாறு. (௭௭)

தனுகரண புவன போகந் தற்பரம் பந்தம் வீடென்று
அணுவினோ டெல்லாம் ஆகி அடைந்திடுந் தத்து வங்கள்
இனிதறிந் திவைநி விர்த்தி முதல்கலை இடத்தே நீக்கி
நனிபரம் உணர்ந்தோன் அந்தத் தத்துவ ஞானி யாவன்.

(ப - ரை.) *தனுகரணபுவனபோகம் தற்பரம் பந்தம் வீடு எல்லாம் தத்துவங்கள் ஆகி அடைந்திடும் என்று* - தனுகரணபுவனபோகங்களும் அவைமூலமாயுள்ள பெத்த முத்திகளும் (அப்பெத்த முத்திகளிற்படும் பேதங்கள்) அனைத்தும் (மேற்கூறிப்போந்த) தத்துவங்களான் ஆயின என்றும், *இவை அணுவினோடு (என்று)* - அத்தத்துவங்கள் உயிர்களோடு இயைவன (அன்றி முதல்வனோடு இயைவன அல்ல) என்றும், *இனிது அறிந்து* - (நூல்களானும் பொருந்தும் ஆற்றானும்) தெளிய உணர்ந்து, *நிவிர்த்திகலைமுதல் இடத்தே நீக்கி* - (அத்தத்துவங்களை) நிவிர்த்திகலை முதலாகக் கழியுமுறைமையின் வைத்துக்கழித்து, *பரம் நனி உணர்ந்தோன்* - (அவற்றிற்கு) மேலாய் நிற்பது ஒன்றனை ஐயந்திரிபின்றி உணரப்பெற்றோன் யாவன் அவன், *அந்தத் தத்துவஞானி ஆவன்* - (பவன் பிரமசாரியும் பான்மொழி கன்னியுமாமெனனும்) அவ்வுண்மையறிவுடையன் ஆவன் என்க.

(பொ - ரை.) தனுகரண புவனபோகங்களும், அவைமூலமாயுள்ள பெத்தமுத்திகளும், அப்பெத்தமுத்திகளிற்படும் பேதங்கள் அனைத்தும், மேற்கூறிப்போந்த தத்துவங்களான் ஆயின என்றும், அத்தத்துவங்கள் உயிர்களோடியைவன அன்றி முதல்வனோடியைவன அல்ல என்றும், நூல்களானும் பொருந்தும் ஆற்றானுந் தெளிய உணர்ந்து அத்தத்துவங்களைக் கழியு முறைமையின் வைத்துக் கழித்து, அவற்றிற்கு மேலாய் நிற்பது ஒன்றனை ஐயந்திரிபின்றி உணரப்பெற்றோன் யாவன் அவன் பவன் பிரமசாரியும் பான்மொழி கன்னியுமாமென்னும் அவ்வுண்மை யறிவுடையனுவன் எ - ம்.

தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் தெரியும் என்றதனைத் தெரித்துணர்த்தி மேலதனை வலியுறுத்தியவாறு. தற்பரமென்னும் வடசொல் அப்பொருட்டாதல் தாற்பரியமென்பதனானும் அறிக. (௭௮)

எல்லாமாய்த் தத்து வங்கள் இயைந்ததேன் அணுவுக் கென்னில்
தொல்லாய கன்மம் எல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற் கும்பின்
நில்லாமை முற்று வித்து நீக்கவுங் கூடி நின்ற
பொல்லாத ஆண வத்தைப் போக்கவும் புகுந்த தன்றே.

(ப - ரை.) தத்துவங்கள் அணுவுக்கு எல்லாமாய் இயைந்தது என் என்னின் - (அங்ஙனம்) தத்துவங்கள் அணுவினோடு எல்லாமாகியடைந் தது யாதன் பொருட்டெனில், தொல்லாய கன்மமெல்லாம் துய்ப்பித் துத் துடைத்தற்கும் - பழமையாய இருவினைகளை நுகர்வித்து நீக்குதற் பொருட்டும், முற்றுவித்துப் பின் நில்லாமை நீக்கவும் - (அதனாற் பரு வம் எய்தியவழி மேலைக்கு வித்தாகாதவாறு தீக்கையால் அவற்றை) முதிர்வித்துப் பின் பற்றறக் கழித்தற்பொருட்டும், கூடி நின்ற பொல் லாத ஆணவத்தைப் போக்கவும் புகுந்தது அன்றே - (அவை கழியும் முகத்தால்) விரவி நின்று எல்லா அனர்த்தங்கட்கும் மூலமாகிய ஆணவ மலத்தைப் போக்குதற்பொருட்டும் அடைந்ததாம் என்க.

(பொ - ரை.) அங்ஙனந் தத்துவங்கள் அணுவினோ டெல் லாமாகி யடைந்ததூஉம், இருவினைகளை நுகர்வித்து நீக்குதற் பொருட்டும், அதனால் (உயிர்) பருவம் எய்தியவழி மேலைக்கு வித்தாகாதவாறு தீக்கையான் அவற்றை முதிர்வித்துப் பற்றறக் கழித்தற்பொருட்டும், அவை கழியுமுகத்தால் எல்லா அனர்த் தங்கட்கும் மூலமாகிய ஆணவமலத்தைப் போக்குதற்பொருட்டு மாம் எ - ம்.

எனவே, தத்துவங்களான் நீக்கப்படுவனவாகிய மலகன்மங்கள் அணுவுக்கே யன்றிச் சிவத்துக்கின்மையான், அத்தத்துவங்களும் அணு வினோடன்றிச் சிவத்தோடியைபிலவாயினவென அதன்கண் ஆசங்கை நீக்கியவாறாயிற்று.

அணுவுக்கேயென்னும் பிரிநிலையேகாரமுந் தொன்மையென்னும் மகர ஐகாரவிகுதியும் விகாரத்தால் தொக்கன.

இவை எழுசெய்யுளானும் நாலாங் கூற்றிற்படும் (1) க, உ, ௩, **மூத் திறப்பொருளும்** வகுத்துக்கூறப்பட்டன.

அற்றேல், ஈண்டெடுத்துக்கொண்ட ஆணவமலம் யாது? அதனால் வரும் பொல்லாமை யாது? அதனைப் போக்குமாறு யாங்ஙனம்? என் பாரை நோக்கிப் பதினேழு செய்யுளான் ஒழிபு கூறுகின்றார். (எக)

ஒன்றதாய் அநேக சத்தி யுடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன் அறிவோடு தொழிலை ஆர்த்து
நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்திச் செம்பினிற் களிம்பேய்ந்து
என்றும்அஞ் ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே.

(ப - ரை.) அநேக சத்தி உடையதாய் - எண்ணிறந்த சத்தி களுடைத்தாய், ஆன்மாவின் உடனாய் - (எண்ணிறந்த) உயிர்களினும் சேர்ந்து, செம்பினில் களிம்பு எய்ந்து - செம்பிற் களிம்புபோல, ஆதி அன்றதாய் இயைந்து நின்றே ஒன்றதாய் - அநாதியே விரவி நிற்ப தொன்றாய், தன் அறிவொடு தொழிலை ஆர்த்து நின்று - (கேவலத்தில் ஆவாரக சத்தியான்) அவ்வுயிர்களின் அறிவொடு தொழில்களை மறைத்து நின்று, போத்திருத்துவத்தை நிகழ்த்தி - (சகலத்தில் அதோ நியாமிகா சத்தியாலே) போக நுகர்ச்சிக்கு வினைமுதலாதற் றன்மையை நிகழ்த்தி, என்றும் அஞ்ஞானம் காட்டும் - எஞ்ஞான்றும்

(காரணமாய் நின்று) அஞ்ஞானத்தை நிகழ்த்தும், ஆணவம் - (மேற் கூறிப்போந்த) ஆணவமலம் என்க.

(பொ-ரை.) எண்ணிறந்த சத்திகளான் எண்ணிறந்த உயிர்களினுஞ் செம்பிற் களிம்புபோல் அநாதியே விரவி நிற்ப தொன்றாய்க் கேவலத்தில் ஆவாரக சத்தியானுஞ் சகலத்தில் அதோ நியாமிகா சத்தியானும் அஞ்ஞான நிகழ்ச்சிக்குக் காரணமாய் நிற்பது மேற்கூறிப்போந்த ஆணவமலம் எ - ம்.

போத்திருத்துவம் - போகநுகர்ச்சிக்கு வினைமுதலாதல் தன்மை.

இதனானே மலத்தின் சொரூபங் கூறப்பட்டது. (அ0)

மலமென வேறொன் றில்லை மாயாகா ரியம தென்னின்
இலகுயிர்க் கிச்சா ஞானக் கிரியைகள் எழுப்பும் மாயை
விலகிடும் மலமி வற்றை வேறுமன் றதுவே றாகி
உலகுடல் கரண மாகி யுதித்திடும் உணர்ந்து கொள்ளே.

(ப - ரை.) மலம் என ஒன்று வேறு இல்லை - மலம் என்று ஒரு பொருள் வேறில்லை, மாயாகாரியமது என்னின் - மாயா காரியமே (மறைத்தற் றொழிலைச் செய்யும்) எனின் (அற்றன்று), இலகு உயிர்க்கு - விளங்கா நின்ற உயிர்கட்கு, இச்சா ஞானக் கிரியைகள் எழுப்பும் மாயை - அறிவு இச்சை செயல்களை (வேறு நின்று) விளக்குவதாகிய மாயைக்கும், வேறும் அன்று இவற்றை விலகிடும் மலம் - (உயிரோடு) ஒற்றித்து நின்று அவைகளை மறைப்பதாகிய மலத்திற்கும் (தம்முள் வேற்றுமை பெரிதாகலான் அஃது அறியாது), உலகு உடல் கரணம் ஆகி - உலகும் உடலும் கரணமுமாகி, அது வேறாகி உதித்திடும் - உயிர்க்கு வேறாகி உதிக்கும் (மாயையே மலமென்பார் மதம் போலி என்பதனை), உணர்ந்துகொள்ளே - அறிவாயாக என்க.

(பொ-ரை.) உயிரோடு ஒற்றித்து நின்று அறிவு இச்சை செயல்களை மறைப்பதாகிய மலத்துக்கும் வேறு நின்று அவற்றை விளக்குவதாகிய மாயைக்குந் தம்முள் வேற்றுமை பெரிதாகலான், அஃதறியாது மாயையே மலமென்பார் மதம் போலி எ - ம். (அக)

மாயையே ஆன்ம ஞானக் கிரியையை மறைத்து நிற்குந்
தூயஅப் பரிதி தன்னைச் சுடர்முகில் மறைத்தாற் போலப்
போய்முகில் அகலச் சோதி புரிந்திடும் அதுவே போலக்
காயமும் அகல ஞானத் தொழில்பிர காச மாமே.

பரிதியை முகில்ம றைப்பப் பாயொளி பதுங்கி னாற்போல்
உருவுயிர் மறைக்கின் ஞானக் கிரியைகள் ஒழிக்கு மாகுங்
கருதிடும் இச்சா ஞானக் காரியங் காயம் பெற்றால்
மருவிடும் உயிர்க்குக் காயம் வந்திடா விடின்ம றைப்பே.

(ப - ரை.) தூய பரிதிச் சுடர்தன்னை முகில் மறைத்தாற்போல - தூயதாகிய பரிதியின் ஒளியை மேகம் (வேறு நின்று) மறைத்தாற் போல, மாயையே ஆன்ம (இச்சா) ஞானக் கிரியையை மறைத்து நிற்கும் - மாயையே (உலகு உடல் கரணமாய் நின்றே) ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளை மறைத்தல் அமையும் என (உடம்பாட்டானும்), அம்முகில் போய் அகலச் சோதி புரிந்திடும் அதுவே போல - அம்மேகம் நீங்கப் பரிதி வெளிப்பட்டுத் தோன்றுமாறுபோல, காயமும் அகல (இச்சா) ஞானத் தொழில் பிரகாசமாமே - காயமாகிய மாயை நீங்க அவ்விச்சா ஞானக் கிரியை பிரகாசித்தல் அமையும் என (எதிர் மறையானும் இவ்வுவமையின் வைத்து அறியப்படும் என்றது பொருந் தாது), பரிதியை முகில் மறைப்பப் பாய் ஒளி பதுங்கினாற்போல் - பரிதியை மேகம் மறைப்பப் பரவிய ஒளி மறைந்தாற்போல், உரு மறைக்கின் உயிர் (இச்சா) ஞானக் கிரியைகள் ஒழிக்குமாகும் - உரு வாகிய மாயை மறப்ப ஆன்மாவின் இச்சா ஞானக்கிரியைகள் ஒழிதலாகிய (உடம்பாட்டானும்), கருதிடும் இச்சா ஞான காரியம் - கருதுகின்ற இச்சா ஞானக்கிரியைகள், காயம் பெற்றால் - மாயா தனுவைப் பெற்றால், மருவிடும் உயிர்க்கு - விளங்கும் ஆன்மாவிற்கு, காயம் வந்திடாவிடில் மறைப்பே - அம்மாயா தனு இன்றேல் (அவை) மறைதலாகிய (எதிர்மறையானும் வைத்து அறியப்படுதலான் அவ்வுவமை ஈண்டைக்கு ஏலாது) என்க.

(பொ - ரை.) மாயை உலகு உடல் கரணமாய் வேறு நின்றே உயிரை மறைத்தல் அமையும் என்பது உடம்பாட்டினும் எதிர் மறையினும் பரிதி முகிலுவமையின் வைத்தறியப்படுமென்றது பொருந்தாது மேகம்போல மாயை மறைக்குமாயின், மறைத்தலானாகிய காரியம் பரிதியிற்போல உயிரின்கணிகழ்தல் வேண்டும்; அஃதீண்டு இல்லையென்பது உடம்பாட்டினும் எதிர்மறையினும் வைத்து அறியப்படுதலான் அவ்வுவமை ஈண்டைக்கு ஏலாது எ - ம். (அஉ, அங)

போதகா ரியம றைத்து நின்றது புகன்ம லங்காண்
ஓதலாங் குணமு மாக உயிரினுள் விரவ லாலே
காதலால் அவித்தை சிந்தத் தருங்கலை யாதி மாயை
ஆதலால் இரண்டுஞ் சோதி இருளென வேறாம் அன்றே.

(ப - ரை.) உயிரினுள் விரவலாலே குணமுமாக ஓதலாம் - (அல்லதூஉம் மலத்தானாகிய அஞ்ஞானம் முகிலானாகிய மறைவுபோலன்றி) உயிரோடு (வியாபகமாய்) விரவிக் குணம்போலத்தோன்றி நிற்பதெனக் கூறுவதொன்றாகலானும், மாயை காதலால் அவித்தை சிந்தக் கலை ஆதி தரும் ஆதலால் - மாயையானது விருப்பத்தோடு ஆணவமாகிய இருள் கெட(த்தீபம்போல)க் கலை முதலிய தத்துவங்களைத் தருவதொன்றாகலானும், இரண்டும் சோதி இருளென வேறாம் அன்றே - (தொழிற்பாட்டின்கண்) இரண்டும் ஒளி இருள் போல இகலிநிற்பன ஆகலானும், புகல் மலம் போதகாரியம் மறைத்து நின்றது காண் - (இருள்போலக்) கூறும் பெற்றித்தாகிய ஆணவமலமே உயிருணர்வின் காரியப்பாட்டைத் தடுக்கவல்லது என (த்தெற்றென) உணர்க என்க.

(பொ - ரை.) அல்லதூஉம், மலத்தானாகிய அஞ்ஞானம், முகிலானாகிய மறைவுபோலன்றி, உயிரோடு வியாபகமாய் விரவிக் குணம்போலத் தோன்றி நிற்பதொன்றாகலானும், தொழிற்பாட்டின்கண் ஒளி இருள்போல மாயையோடு இகலி நிற்பதாகலானும், அப்பெற்றித்தாகிய ஆணவமலமே உயிருணர்வின் காரியப்பாட்டைத் தடுக்கவல்லதெனத் தெற்றெனவுணர்க எ - ம்.

குணமும் என்னும் உம்மை எதிர்மறைக்கண் வந்தது.

இவை நான்கு செய்யுளானும், ஐக்கியவாதி பாசுபதி முதலியோர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து, ஆணவமலத்தினது உண்மை சாதிக்கப்பட்டது. (அச)

புருடன்தன் குணம் அவித்தை யெனிற்சடம் புருட னாதங்
குருடன்தன் கண்ணின் குற்றங் கண்ணின்தன் குணமோ கூறாய்
மருள்தன்தன் குணம தாகி மலம்அசித் தாகி நிற்குந்
தெருள்தன்தன் குணம தாகிச் சித்தென நிற்கும் சீவன்.

(ப - ரை.) அவித்தை புருடன் தன் குணம் எனின் - (உயிரினுள் விரவி நிற்பதாகிய) அவித்தையினை உயிரின் குணவிசேடம் என்றல் பொருத்தமுடைத்தெனின், புருடன் சடமாகும் - (சித்தாகிய) புருடன் சடமெனப்பட்டு வழுவாம் (ஆதலின்), குருடன் தன் கண்ணின் குற்றம் கண்ணின் தன் குணமோ - குருடனது கண்ணில் (ஒளிக்குணத்தை மறைத்துநிற்கும் படலமாகிய) குற்றம் கண்ணின் ஒளிக்குணமாதல் செல்லாமையானும், மலம் மருள் தன்தன் குணமதாகி அசித்தாகி நிற்கும் - மலம் அஞ்ஞானத்தைத் தனது குணமாகக்கொண்டு (குணிப் பொருளாகிய தான்) சடமாய் நிற்குமன்றிச் சித்தாகாமையானும், சீவன் தெருள் தன்தன் குணமதாகிச் சித்தென நிற்கும் - உயிர் அறிதல் தொழிலையுடைய சித்தேயாய்நிற்கும் ஆதலானும், கூறாய் - (உயிரின் கண்ணே குற்றமாகக் காணப்படும் அறியாமைக்குக் குணிப்பொருள் மலம் என வேறுண்டென்பது) அறிவாயாக என்க.

(பொ - ரை.) உயிரினுள் விரவி நிற்பதனை உயிரின் குண விசேடமென்றல் பொருத்தமுடைத்தெனின், அறியாது கூறினாய்; ஒருபொருளின்கண் குணத்தோடொப்பக் குற்றமும் உடன் விரவி நிற்கப்பெறுமென்பது குருட்டுக்கண்ணிற் காணப்படுதலின், விரவி நிற்றலே பற்றிக் குற்றமுங் குணமாதல் செல்லாமையானும், அஞ்ஞானத்திற்குக் குணிப்பொருள் சடமாவதன்றிச் சித்தாகாமையானும், உயிர் அறிதல் தொழிலுடைய சித்தேயாகலானும், உயிரின்கட் குற்றமாய்க் காணப்படும் அறியாமைக்குக் குணிப்பொருள் மலமென வேறுண்டு எ - ம்.

இதனானே அறியாமை உயிர்க்குக் குணமென்னும் பாடாணவாதிகள் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து மலத்தின் உண்மை சாதிக்கப்பட்டது. (அரு)

மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடு உமிப்போல்
மம்மர்செய்து அணுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மலம் மூன்றி னோடும் இருமலம் இசைப்பன் இன்னும்.

(ப - ரை.) மும்மலம் - (மேலே தன்மமோடதன்மமாகியெனக் கூறப்பட்ட கன்மமலமும் அதன் பின்னாக நித்தமாய் அருவாயெனக் கூறப்பட்ட மாயாமலமும் ஈண்டுக் கூறப்பட்ட ஆணவ மலமுமாகிய இம்) மூன்று மலங்களும், நெல்லினுக்கு முளையொடு தவிடு உமிப்போல் - நெல்லுக்கு முளைத்தற் சத்தியும் தவிடும் உமியும்போல, அணுவின் உண்மை வடிவினை - உயிரினது தன்சொரூபத்தை, மம்மர்செய்து மறைத்து நின்று - மயக்கத்திற் கேதுவாகப் பந்தித்து நின்று, பொய்ம் மைசெய் போக பந்த போத்திருத்துவங்கள் பண்ணும் - (முறையே) பொய்ம்மை புரியா நின்ற போகமும் பந்தமும் போத்திருத்துவமும் பண்ணுவனவாம், இம்மலம் மூன்றினோடும் இன்னும் இருமலம் இசைப்பன் - இம்மலங்கள் மூன்றனோடும் (கூடி நின்று பந்திப்பன) வேறும் இருமலங்கள் உள என்க.

(பொ - ரை.) மேலே தன்மமோடு அதன்மமாகியெனக் கூறப்பட்ட கன்ம மலமும் அதன் பின்னாக நித்தமாய் அருவா யெனக் கூறப்பட்ட மாயா மலமும் ஈண்டுக் கூறப்பட்ட ஆணவ மலமுமாகிய இம்மூன்று மலங்களும், நெல்லுக்கு மு ளை தவிடு உமிப்போல் உயிரைப் பந்தித்து நின்று முறையே போகமும் பந்தமும் போத்திருத்துவமும் பண்ணுவனவாம். இம்மலங்கள் மூன்றனோடுங் கூடிநின்று பந்திப்பன வேறும் இருமலங்களுள எ-ம்.

இது நிரனிறை.

கன்மமலம் போகம்பண்ணுதலாவது, நெல்லின்கணுளதாகிய முளைத்தற்சத்தி முளையைத் தோற்றுவிக்குமாறுபோல, உயிரின்கட் சுக துக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவித்தல். மாயாமலம் பந்தம் பண்ணுதலாவது, முளைத்தற்கு அனுகூலஞ்செய்து உடனிற்குந் தவிடு போல, அச்சுகதுக்கங்கள் ஆண்டுத் தோன்றுதற்குத் துணைக் காரணமாய்த் தன் காரியமாகிய தனுகரண முதலியவற்றையும் உயிரை யும் இயைவித்து நிற்றல்; ஆணவமலம் போத்திருத்துவம் பண்ணுத லாவது, அம்முளை ஆண்டுத் தோன்றுதற்கு நிமித்தகாரணமாகிய உமி போல அத்தோற்றத்திற்கு நிமித்தகாரணமாயவற்றை முறுகுவித்து நின்று அச்சுகதுக்கங்களை உயிர் நுகருமாறு நிலைபெறுத்துதலெனக் கொள்க. [1]"பந்தம்போகம் போகம் நிறுத்தலும் வந்தது மாயைவினை மலத்து" என்றார் ஞானமிர்தநூலுடையாரும்.

முளை : ஆகுபெயர்.

முளை தவிடு உமிகள் பந்தத்திற்குங் காரணமாதல் மாத்திரைக்கும் உவமையாயின. (அசு)

1. 'ஈறறி' ஞான. அகவல், ௰க. வரி - எ-அ.

மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்
ஏயுமும் மலங்கள் தத்தந் தொழிலினை இயற்ற ஏவுந்
தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வர்இம் மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும்.

(ப - ரை.) *மாயையின் காரியத்தை மாயேயமலமது என்றும் - (அச்சுகதுக்க வினைவுகட்கெல்லாம் இடமாய் நின்று வியாபகமாகிய ஆன்மாவின் அறிவிச்சை செயல்களை ஏகதேசப்படுத்துவதென மேற் கூறிப்போந்த) மாயாகாரியத்தை மாயேயமென்றும், ஏயும் மும்மலங் கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும் தூயவன் தனது ஓர் சத்தி திரோதான கரியது என்றும் ஆய்வர் - பொருந்திய அவ்வம்மலங்களை அவ்வத்தொழிலிற்படு(த்திப் பாகம் வருவி)க்கும் சிவசத்தியை மறைத் தலைச் செய்வதாகிய திரோதாயி யென்றும் வேறே யிருமலமாக ஆராய்ந்து கூறுவர் (அவற்றுள் மாயாகாரியம் மாயையில் அடங்கு மாயினும் பந்தித்தற்கட்படும் வேற்றுமைபற்றி மாயேயமலமென வேறு வைத்தெண்ணப்படும்; அம்மலங்கட் கனுகூலமாய் நின்று செய்யுஞ் சிவசத்தி பராசத்தியின் அடங்குமாயினும் தொழில் வேற்றுமை பற்றி உபசாரத்தால் திரோதாயியென வேறுவைத்தெண்ணப்படும்.) இம் மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும் - (இவ்வாறு) இவ் வைந்து மலமும் உயிர்தோறு நின்று செய்யும் பந்தவேறுபாடு கண்டு கொள்க என்க.*

(பொ - ரை.) *வேறும் இருமலமெனப்படுவன அச்சுக துக்க வினைவுகட்கெல்லாம் இடமாய் நின்று வியாபகமாகிய ஆன் மாவின் அறிவிச்சை செயல்களை ஏகதேசப்படுத்துவதென [1]மேற்கூறிப் போந்த மாயாகாரியமும், அவ்வம்மலங்களை அவ்வத்தொழிலிற் படுத்திப் பாகம் வருவிக்குஞ் சிவ சத்தியுமாம். அவற்றுள், மாயா காரியம் மாயையில் அடங்கு மாயினும், பந்தித்தற்கட்படும் வேற்றுமைபற்றி மாயேயமல மென வேறுவைத்தெண்ணப்படும்; அம்மலங்கட்கு அனுகூலமாய் நின்று செய்யுஞ் சிவசத்தி பராசத்தியின் அடங்குமாயினும், தொழில் வேற்றுமைபற்றி உபசாரத்தால் திரோதாயியென வேறுவைத் தெண்ணப்படும். இவ்வாறு இவ்வைந்துமலமும் உயிர்தோறும் நின்று செய்யும் பந்தவேறுபாடு கண்டுகொள்க எ-ம்.*

*திரோதானகரியென்பது, திரோதானத்தைச் செய்வதென்னும் பொருட்டாய வடசொல்.* (அஎ)

மலமாயை கன்மம் மாயே யந்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பில் தங்கியித் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத் தின்கண்
அலமாரும் இறைவன் ஆணை யால்உயிர் நடக்கும் அன்றே.

---

1. *தத்துவாதிகாரம்.*

(ப - ரை.) உயிர் - ஆன்மாவின்கண், மலம் மாயை கன்மம் மாயேயம் திரோதாயி மன்னி - ஆணவம் மாயை காமியம் மாயேயம் திரோதாயியாகிய இவ்ஐவகைமலங்களும் நிலைபெறுதலால் (அவை கட்கு அனுகுணமாக), இறைவன் ஆணையால் - முதல்வன் ஆணையினால், நிலையாத கொள்ளிவட்டம் கறங்கு என - நிலையுதலிலவாகிய கொள்ளி வட்டமும் காற்றாடியும்போல, நிமிடத்தின்கண் அலமாரும் - கணப் போழ்திற் (பலமுறை) சுழற்சியுற்று, பிறப்பு இறப்பில் தங்கி - மேற் கூறிப்போந்த பிறப்பு இறப்பிற்பட்டு, இத்தரை கீழ் மேலும் சலமாரும் நடக்கும் அன்றே - இவ்வுலக நிரயசுவர்க்கங்களிலே போக்குவரவுடைத் தாய்ச் (அவ்வுயிர்) செல்லும் என்க.

(பொ - ரை.) மேற்கூறிப் போந்த பிறப்பிறப்புக்கள் எல்லா வற்றிற்குங் காரணம் இவ்ஐவகை மலங்களுமாம் எ - ம்.

மன்னி அலமாருமென்பது, மழைபெய்து குளநிறைந்தது என்றாற் போலக் காரணகாரியப்பொருட்டாய் நின்றது.

அலமரும் அலமாருமென நீட்டும்வழிநீட்டல்; இறைவன் ஆணை யான் உயிர்நடக்குமென ஈண்டுங்கூறியது, அவ்வலமரலை நீக்கும் வாயி லுணர்த்துதற்பொருட்டு; அது முன்னர் வகுத்துக் கூறப்படும்.

இவை மூன்று செய்யுளானும், மலங்கள் இத்துணைய என்பதூஉம் அவை பந்திக்குமாறுங் கூறுமுகத்தான் ஆணவமலத்தானாகிய பொல் லாமை கூறப்பட்டது. (௮௮)

அண்டசஞ் சுவேத சங்கள் உற்பிச்சஞ் சராயு சத்தோடு
எண்தரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தாய்[1]
உண்டுபல் யோனி யெல்லாம் ஒழித்துமா னுடத்து தித்தல்
கண்டிடிற் கடலைக் கையால் நீந்தினன் காரி யங்காண்.

(ப - ரை.) அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சராயுசத்தோடு எண்தரு நால் - முட்டையும் வியர்வையும் வித்தும் பையுமாக எண்ணப் படும் நால்வகைத் தோற்றத்து (எழுவகைப்பிறப்பின்), எண்பத்து நான்கு நூறாயிரத்தா யுண்டு - எண்பத்துநான்கு நூறாயிர (யோனி பேத)த்தினின்று விரிந்த பேதங்கள் அளவின்றி உள்ளன, பல்யோனி யெல்லாம் ஒழித்து - (அவற்றுட்) பலவகைப்பட்ட யோனிபேதங்கள் ஒழிந்து, மானுடத்து உதித்தல் கண்டிடில் - (அவ்வலமரலை நீக்குதற்கு வாயிலாகிய) மானுடப்பிறவி எய்தலைக் காணப்பெற்றிடின், கடலைக் கையால் நீந்தினன் காரியம் காண் - சமுத்திரத்தைக் கையால் நீந்திக் கரையேறினவன் காரியத்தோடு ஒக்குமென்க.

(பொ - ரை.) நால்வகைத்தோற்றத்து எழுவகைப்பிறப்பின் எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதத்தினின்றும் விரிந்த பேதங்கள் அளவின்றியுள்ளன; அவற்றுள் மானுடப்பிறவியே அவ்அலமரலை நீக்குதற்கு வாயில் எ - ம். (௮௯)

1. 'உரைசேரும், க. சம்பந்தர், ௧௩௨-௪.

நரர்பயில் தேயந் தன்னின் நான்மறை பயிலா நாட்டில்
விரவுதல் ஒழிந்து தோன்றல் மிக்கபுண் ணியத்தான் ஆகும்
தரையினில் கீழை விட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து
பரசம யங்கட் செல்லாப் பாக்கியம் பண்ணு ஒணுதே.

(ப - ரை.) *நரர் பயில் தேயந்தன்னின்* - (அம்மானுடப்பிறவியினும்) மானுடர் வாழ்கின்ற இவ்வுலகத்துள், *நான்மறை பயிலாநாட்டில் விரவுதல் ஒழிந்து தோன்றல்* - வேதாகம வழக்கம் இல்லா நாட்டிலே பிறத்தல் நீங்கி (அவ்வேதாகம வழக்கு மிக்குடைய உத்தமநாட்டிலே) தோன்றுதல், *மிக்க புண்ணியத்தான் ஆகும்* - மிகுந்த புண்ணியத்தால் உண்டாம், *தரையினில் கீழை விட்டுத் தவம் செய் சாதியினில் வந்து*- அவ்வுத்தம நாட்டிலே கீழ்சாதியிலே தோன்றாது தவஞ்செய்தற்குரிய உத்தம சாதியிலே தோன்றுதல் செய்தும், *பரசமயங்கட்செல்லாப் பாக்கியம் பண்ண ஒணுதே* - புறச்சமயங்களிற் செல்லாது (அவ்அலமரல் ஒழிதற்கு வாயிலாகிய) உத்தம சமயத்திற்குரிய நன்மை ஒருவனுக்குண்டாதல் அரிது என்க.

(பொ - ரை.) மானுடப்பிறவியினும் உத்தம சமயத்துக் குரித்தாய் உத்தம நாட்டில் பிறக்கும் உத்தம சாதியே அதற்கு வாயில் எ-ம். (கூ0)

வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனுந் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரும்
ஊழ்பெறல் அரிது சால உயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப் போற்றுவார் அருள்பெற் றாரே.

((ப - ரை.) *வாழ்வெனும் மையல் விட்டு* - குலம் இளமை கல்வி செல்வம் அதிகாரமென்னும் இவைகளான் உளதாகிய செருக்கு ஒழிந்து, *வறுமையாஞ் சிறுமை தப்பி* - வறுமையால் அச்செருக்கு உடையார் பின்சென்று நின்று எக்கறலாய சிறுமையின் [1]நீங்கி (உயர்ந்தசாதியினும் உயர்ந்தகுடிப்பிறப்பே அதற்கு வாயிலாம் ஆகலான் அவ்வுயர்ந்த குடியிற்பிறந்து), *தாழ்வெனும் தன்மையோடும்* - மெய்யன்போடும், *சைவமாஞ் சமயஞ்சாரும் ஊழ்பெறல்* - சைவசமயத்தின் எய்தும் புண்ணியப்பேறு, *சால அரிது* - பெரிதும் அரிதாம், *உயர் சிவஞானத்தாலே*- அதனினும் உயர்ந்த சித்தாந்த நெறி யுணர்ச்சியாலே, *போழ் இள மதியினானை* - பிளவுபட்ட இளம்பிறையணிந்த சிவபிரானை, *போற்றுவார்* - வழிபடப்பெறுவார் உளராயின், *அருள் பெற்றாரே* - அவர் (மலத்தானாகிய அவ்அலமரலை நீங்கி) வீடுபேறெய்துவர் என்க.

(பொ - ரை.) உயர்ந்த சாதியினும் உயர்ந்த குடிப்பிறப்பே அதற்கு வாயிலாம், அவ்வுயர்ந்த குடியிற் பிறந்து சைவத்தினெய்திச் சித்தாந்தநெறி யுணர்ந்து சிவபிரானை வழிபடப்பெறுவாருளராயின், அவர் மலத்தானாகிய அவ்அலமரலை நீங்கி வீடுபேறு எய்துவர் எ-ம்.

---

1. 'பெருக்கத்து' திருக்குறள், கூகூரு.

வாழ்வாவன :—குலம் இளமை கல்வி செல்வம் அதிகாரமென்னு மிவை.

மையல் - செருக்கு

வாழ்வெனும் மையலெனவும், வறுமையாஞ் சிறுமையெனவும் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

இவை மூன்று செய்யுளானும் அம்மலபந்தத்தைப் போக்குதற் குரியவாயில் இவையென்பது கூறப்பட்டது. (௧௧)

மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காக அன்றே
வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் தனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ.

(ப - ரை.) (அவ்அலமரலை நீக்குதற்பொருட்டு) மனவாக்காயம்-மனத்தால் நினைந்தும் வாக்கால்வழுத்தி மந்திரங்கள் சொல்லியும் காயத்தாற் பணிந்துஞ் செய்யப்படும், ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்றே - பஞ்சகவ்வியத்தினை ஆடியருளுகின்ற அரன் பணிப்(ஏனைப்பிறவிகளிற் கூடாமையால் அதன்) பொருட்டாகவன்றே, மானுடப்பிறவிதானும் வகுத்தது - (பிறவி விசேடமாகிய) மானுடப் பிறவி (வேண்டப்பட்டு) வகுத்ததாம், வானிடத்தவரும் - மேலுலகத்துள்ள மாயோன் முதலிய தேவர்களும், மண்மேல் வந்து அரன்றனை அர்ச்சிப்பர் - (அவ்வரன்பணி பயன்படுதல் ஏனையுலகங்களிற் கூடாமையாலே) தேசவிசேடமாகிய இம்மண்ணுலகத்தில் வந்து அச்சிவபிரானை அருச்சிப்பர், அந்தோ ஊன் எடுத்து உழலும் ஊமர் ஒன்றையும் உணரார் - ஐயோ இவ்வுலகத்து இச்சரீரம் பெற்றும் (இவ்வுண்மையை) அலமரும் மூகராகிய ஏனையோர் சிறிதும் அறியமாட்டார் (ஆகலிற் சாதி விசேடங் குடிப்பிறப்பு விசேடம் வேண்டப்படும்) என்க.

(பொ - ரை) அவ்அலமரலை நீக்குதற்பொருட்டுச் செய்யப்படும் அரன்பணி ஏனைப்பிறவிகளிற் கூடாமையாற பிறவி விசேடம் வேண்டப்படும்; அவ்வரன்பணி பயன்படுதல் ஏனை உலகங்களிற் கூடாமையால் தேயவிசேடம் வேண்டப்படும். இவ்வுண்மை ஏனையோர் அறியமாட்டாமையிற் சாதிவிசேடம் குடிப்பிறப்பு விசேடம் வேண்டப்படும் எ-ம்.

இதனனே அவை வாயிலாதற்கு உரிமை கூறப்பட்டது.

வாக்காயமென்னுந் தொகைச்சொல், வடநூன்முடிபு. (௧௨)

கருவினுள் அழிவ தாயுங் கழிந்திடாது அழிவ தாயும்
பரிணமித்து அழிவ தாயும் பாலனாய் அழிவ தாயுந்
தருணனாய் அழிவ தாயுந் தான்நரைத்து அழிவ தாயும்
உருவமே[1] அழிவே யானல் உள்ளபோ தேபார் உய்ய.

---

1. (பாடம்) உருவவே.

(ப - ரை.) (மானுடயாக்கை அத்துணைப் பெருமைத்தாயினும்) கருவினுள் அழிவதாயும் - மாதாவினுடைய கருப்பத்திற்றானே அழிவதாயும், கழிந்திடாது அழிவதாயும் - பிறந்து உடனே அழிவதாயும், பரிணமித்து அழிவதாயும் - பிறந்து சிறிதுகாலமிருந்து அழிவதாயும், பாலனாய் அழிவதாயும் - பாலியனாய் அழிவதாயும், தருணனாய் அழிவதாயும் - தருணனாய் அழிவதாயும், நரைத்துத்தான் அழிவதாயும்-நரையுண்டாகி விருத்ததசையில் அழிவதாயும், உருவமே அழிவே ஆனால்- (இத்துணைப் பொழுது நிற்குமென்று அறியவாராத நீர்க்குமிழிபோல்) எப்பொழுதும் அழிதன் மாலைத்தாகலின், உள்ளபோதே உய்யப்பார்- (இவ்வாக்கை நிலையாமை இளமை நிலையாமைகளை) நிலையுதல் உள் வழியே உய்யும்படி உற்று நோக்குவாய் (அங்ஙனம்நோக்குவார்க்கு அவற்றான் ஆகிய மையலை விடுதல் கூடும்) என்க.

(பொ - ரை.) மானுடயாக்கை அத்துணைப் பெருமைத் தாயினும், இத்துணைப்பொழுது நிற்குமென்று அறிய வாராது நீர்க்குமிழிபோல் எப்பொழுதும் அழிதன் மாலைத்தாகலின், இவ்வாக்கை நிலையாமை இளமை நிலையாமைகளை உணரவல்லார்க்கே அவற்றான் ஆகிய மையலை விடுதல் கூடும் எ-ம். (கூரு)

ஒருபுல னுகரும் போதங்கு ஒன்றிலை ஒன்றின் பாலும்
வருபயன் மாறி மாறி வந்திடும் எல்லாம் மாறும்
ஒருபொழு துணரின் உண்டாம் அல்லதிவ் அல்லல் வாழ்க்கை
மருள்கன வதுவும் போல மாயும்பின் மாயும் அன்றே.

(ப - ரை.) அங்கு ஒரு புலன் நுகரும்போது ஒன்று இலை-ஆண்டு ஒரு விடயத்தை அனுபவிக்குங்கால் மற்றொன்றின்மையால் (அவ்யாக்கையின் கண்ணதாகிய அறிவும் விடயங்களை ஒருங்கே யறியமாட்டாது), ஒன்றின்பாலும் வருபயன் மாறி மாறி வந்திடும் - ஒரு விடயத்தின்கண்ணும் வரப்பட்ட பயனை விட்டுவிட்டு அறிவதன்றி இடையீடின்றி அறிய மாட்டாது, ஒரு பொழுது எல்லாம் மாறும் - அதுவும் உறக்கம் மூர்ச்சை முதலியவற்றிற் சிறிதும் இல்லையாய்விடும், அல்லது இவ்வல்லல் வாழ்க்கை - அதுவன்றி இவ் யாக்கையின் பொருட்டுளதாகிய செல்வத்துழனியும், மருள் கனவதுவும் போல அன்றே மாயும் பின் மாயும் - (முறையே) மயக்கப்பொருளும் கனப்பொருளும் போலத் தோன்றியபொழுதே மாய்வதுமாம் இடையே மாய்வதுமாம் ஆகலான், உணரின் உண்டாம் - (இவ்வறிவு நிலையாமை செல்வநிலையாமைகளை) உணர்ந்தால் (அவ்வுணரவல்லார்க்கு அவற்றானாகிய மையலை விடுதல்) கூடும் என்க.

(பொ - ரை.) அவ் ஆக்கையின்கண்ணதாகிய அறிவும் விடயங்களை ஒவ்வொன்றா அறிவதன்றி ஒருங்கே அறியமாட்டாது. ஒருவிடயத்தின்கண்ணும் விட்டுவிட்டு அறிவதன்றி இடையீடின்றி அறியமாட்டாது. அதுவும் உறக்கம் மூர்ச்சை முதலியவற்றில் சிறிதும் இல்லையாய்விடும் அஃதன்றி இவ்வாக்கையின் பொருட்டுளதாகிய செல்வத்துழனியும் முறையே மயக்கப்பொருளுங் கனப்பொருளும்போலத் தோன்றியபொழுதே

மாய்வதுமாம் இடையே மாய்வதுமாம் ஆகலான், இவ்வறிவு நிலையாமை செல்வநிலையாமைகளை உணரவல்லார்க்கு அவ்வவற்றானாகிய மையலை விடுதல் கூடும் எ-ம்.

உணரின் உண்டாம் என்பதனை இறுதிக்கண் வைத்துரைக்க.

பயன் அறிதற்பயன். அல்லதென்பது அன்றியென்னும் வாய்பாட்டு வினையெச்சக் குறிப்பு.

மருள்போல அன்றேமாயும் கனவுபோலப் பின்னுமாயும் என்று உரைத்துக் கொள்க. மருளும் கனவும் ஆகுபெயர்.

வாழ்க்கையென்புழியும் பின்னென்புழியும் இறந்ததுதழீஇயவெச்ச உம்மை விகாரத்தால் தொக்கன. (௬௫)

அரிசனம் பூசி மாலை யணிந்துபொன் னாடை சாத்திப்
பரிசனம் பின்பு செல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட
வரிசின்னம் ஊதத் தொங்கல் வந்திட உணர்வு மாண்டு
பெரியவர் பேச்சும் இன்றிக் கிடத்தலாற் பிணத்தோ டொப்பர்.

(ப - ரை.) அரிசனம் பூசி-சந்தன முதலிய வாசனாதிரவியங்கள் பூசியும், மாலை அணிந்து-வாசத்தோடு கூடிய பூமாலைகள் அணிந்தும், பொன் ஆடைசாத்தி - பீதாம்பரம் போர்த்தும், பரிசனம் பின்புசெல்ல - தம் பரிவாரங்கள் பின்னே வரவும், பாரகர் பரிக்க - காவுவோர் (சிவிகை) சுமக்கவும், கொட்ட - வாத்தியங்கள் முழக்கவும், வரி சின்னம் ஊத - வரிபொருந்திய சின்னங்கள் ஊதவும், தொங்கல் வந்திட- சத்திரசாமரங்கள் சூழவரவும், உணர்வுமாண்டு பெரியவர் பேச்சும் இன்றிக் கிடத்தலால் - அறிவற்று (அதிகாரஞ்செய்து) பெரியாரய்ப் பேச்சின்றிச் செருக்குற்றுக்கிடத்தலால், பிணத்தோடு ஒப்பர் - அவர் செத்தாரின் வேறல்லர் என்பது, (உணரின் உண்டாம்) - (ஆண்டு நிகழும் நிகழ்ச்சி பற்றி) அறியவல்லராயின் அவர்களுக்கு அதனானாகிய மையலை விடுதல் கூடும் என்க.

(பொ - ரை.) அதிகாரஞ்செய்து செருக்குறுவார் செத்தாரின் வேறல்ல ரென்பது ஆண்டு நிகழும் நிகழ்ச்சி பற்றி; அறிய வல்லார்க்கு அதனானாகிய மையலை விடுதல் கூடும் எ - ம்.

உணரினுண்டாமென்றதனை ஈண்டுந் தந்துரைக்க. பெரியவரென்றது இழித்தற்கண் வந்த குறிப்புமொழி; பெருமை அதிகாரத்தானாயது.

இவை மூன்று செய்யுளானும் வாழ்வெனு மையல் விடுதற்கு உபாயங் கூறியவாறு. (௬௬)

பிணத்தினை யொத்து வாழ்வோர் பின்னடைப் பிணங்கள் போல
உணக்கியே உழல்வீர் உங்கள் உடல்உயிர் உணர்வும் எல்லாங்
கணத்திடைத் தோன்றி மாயுங் காயம்என் றறிந்தோ ருக்கால்
வணக்குறீர் அரனை யென்றும் வானவர் வணங்க வைப்பன்.

(ப-ரை.) அரனை ஒருக்கால் வணக்குறீர் - சிவபிரானை ஒரு காலேனும் வழிபாடு செய்கின்றிலீர் (செய்யப்பெறின்), [1]என்றும் வானவர் வணங்க வைப்பன் - எஞ்ஞான்றும் தேவர்களும் வணங்கும் வண்ணம் (இறவாச்செல்வத்தை) அளிப்பனாதலின், கணத்திடைத் தோன்றி மாயும் காயம் என்று அறிந்து - (அதனை நோக்கக்) கணத்தின்கண் தோன்றி அழிதன்மாலைத்து உடம்பு என்று உணர்ந்தும் (அதன்பொருட்டு), உங்கள் உடல் உயிர் உணர்வும் எல்லாம் - உம்முடைய உடல் உயிர் உணர்வு முதலிய எல்லாம், உணக்கியே உழல்வீர் - வருத்தமுறும்படி வருந்தினவராய் (ஈட்டப்படுஞ் சிறு செல்வஞ் செல்வமன்று என்பது உணர்வீராயின்), பிணத்தினை ஒத்து வாழ்வோர் பின் நடைப்பிணங்கள் போல (ஆம) - (இச்சிறு செல்வத்தை வேண்டிப்) பிணத்தினையொத்து வாழும் அவ்வதிகாரச்செருக்குடையார் பின் சென்று நடைப்பிணங்கள்போல் (நின்று ஏக்கறுஞ் சிறுமையின் நீங்குதல் உமக்குக்) கூடும் என்க.

(பொ - ரை.) சிவபிரானை வழிபட்டுப்பெறும் இறவாச் செல்வத்தை நோக்கக் கணத்தின் அழிதன் மாலைத்தாகிய உடம்பின் பொருட்டு வருந்தி ஈட்டப்படுஞ் சிறுசெல்வஞ் செல்வமன்று என்பது உணரவல்லார்க்கு, இச்சிறு செல்வத்தை வேண்டி அவ்வதிகாரச் செருக்குடையார் பின் சென்று நின்று ஏக்கறுஞ் சிறுமையின் நீங்குதல் கூடும் எ - ம்.

உடல் உயிர் உணர்வும் எல்லாம் உணக்கியென இயையும்.

இதனானே வறுமையாஞ் சிறுமை தப்புதற்கு உபாயங்[2]கூறியவாறு.

ஒன்றதா யென்பது முதல் இத்துணையும் ஒழிபு கூறியதெனக் கொள்க. (கசு)

இரண்டாஞ் சூத்திர முடிந்தது

ஆகத் திருவிருத்தம் கஅசு

---

1. 'முழுத்தழல்'. அப்பர், ச. கக௩-டு.
2. 'பெருக்கத்து'. திருக்குறள், கூகக.

# மூன்றாஞ் சூத்திரம்

முதற்சூத்திரத்தும் இரண்டாஞ் சூத்திரத்தும் முறையே பதியுண்மைக்கும் பாசவுண்மைக்கும் பிரமாணங் கூறிய ஆசிரியர், இரண்டாஞ் சூத்திரத்தின் அலகிலா உயிர் என்று எடுத்துக்கொள்ளப்பட்டு எஞ்சி நின்ற பசுவுண்மைக்குப் பிரமாணம் மூன்றாஞ் சூத்திரத்திற் கூறுகின்றார்.

உயிரெனப் படுவ திந்த வுடலின்வே றுளதா யுற்றுச்
செயிருறும் இச்சா ஞானச் செய்திகள் உடைய தாகிப்
பயில்வுறும் இன்பத் துன்பப் பலங்களும் நுகரும் பார்க்கில்
துயிலோடும் அஞ்ச வத்தைப் படும்உண்மை துரியா தீதம்.

(ப - ரை.) உளதாய் - உயிர் சூனியம் எனின் அவ்வாறு சொல்வதொன்று உளதாய் நிற்றலானும், உற்றுச் செயிர் உறும் - உடம்பே உயிரெனின் உடம்பகத்தே பொருந்தி நின்று யான் எனது என்னுஞ் செருக்கு உறுதலானும், இச்சா ஞானச் செய்திகள் உடையதாகி - ஐம்பொறியே உயிர் எனின் ஞானமாத்திரையேயன்றி ஞானங் கிரியை இச்சையென்னும் மூன்று முடைத்தாகலானும், துயிலொடும் பயில்வுறும் - சூக்கும உடம்பே உயிரெனின் கனவொடு பயின்றதனை நனவின்கண் உற்றறிந்து நிற்றலானும், இன்பத் துன்பப் பலங்களும் பார்க்கில் நுகரும் - பிராணவாயுவே உயிரெனின் இன்பத்துன்பப் பயன் கருவிகள் ஒடுங்கிய இடத்தின்றி ஒடுங்காது விழித்த இடத்தே நுகர்ந்து நிற்றலானும், அஞ்சு அவத்தைப் படும் - பிரமமே உயிரெனின் அறிந்தாங்கறிதலின்றி ஐந்தவத்தைப்பட்டு அறிதலானும், துரியாதீதம் உண்மை - அனைத்துங்கூடிய சமுதாயம் உயிரெனின் அனைத்து நீங்கிய துரியாதீதத்தும் உண்மையானும், இந்த உடலின் உயிரெனப்படுவது வேறு - இந்தவுடலின்கண் உயிரெனப்படுவது இவையனைத்திற்கும் வேறு என்க.

(பொ - ரை.) உயிர் சூனியம் எனின், அவ்வாறு சொல்வதொன்று உளதாய் நிற்றலானும், உடம்பே உயிரெனின், உடம்பகத்தே பொருந்திநின்று யான் எனது என்னுஞ் செருக்குறுதலானும், ஐம்பொறியே உயிர் எனின், ஞானமாத்திரையேயன்றி ஞானங் கிரியை இச்சையென்னும் மூன்றும் உடைத்தாகலானும், சூக்கும உடம்பே உயிரெனின், கனவொடு பயின்றதனை நனவின்கண் உற்றறிந்து நிற்றலானும், பிராணவாயுவே உயிரெனின், இன்பத் துன்பப்பயன் ஒடுங்கிய இடத்தின்றியொடுங்காத இடத்து நுகர்ந்து நிற்றலானும், பிரமமே உயிரெனின், அறிந்தாங்கறிதலின்றி ஐந்தவத்தைப்பட்டு அறிதலானும், அனைத்துங்கூடிய சமுதாயம் உயிரெனின், அனைத்தும்

நீங்கிய துரியாதீதத்தும் உண்மையானும், இந்த உடலின்கண் உயிரெனப்படுவது இவையனைத்திற்கும் வேறு எ - ம்.

உயிரெனப்படுவது என்றது சாதியொருமை.

துயிலொடும் பயில்வுறும் என இயையும்; துயிலென்றது ஈண்டுக் கனவின்மேற்று; பயில்வுறும் என்புழி இரண்டாவது விரித்துரைக்க; பயில்வு ஆகுபெயர். பார்க்கில் நுகருமென மாறுக; பார்க்கில் விழித்த இடத்தென்றவாறு,

[1]"ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள்வயின் - மெய்யுருபு தொகாஅ இறுதியான" என்பது ஒத்தாகலின், ஏழாவது இறுதிக்கண் தொக்கது.

துரியாதீதத்தில் உயிர் உண்டு என்பது விழித்தபின்னர்ச் சுகமாகத் துயின்றேன் என்று உணர்வு நிகழ்தல்பற்றித் தெளியப்படும்.

உளதாயென்பது முதலிய ஏழுங் குறிப்பேதுவாகலான், அவற்றை இங்ஙனம் விரித்துரைத்து முதனூலின் மூன்றாஞ் சூத்திரம் போல இச்செய்யுள் ஏழு கூற்றதாயவாறு கண்டுகொள்க.

அற்றேல், சூனிய முதலியவற்றுள் ஏனைய எல்லாம் அறியும் என்பது காட்சியளவைக்கு எய்தாமையின் உயிர் அவற்றின் வேறெனக் கொள்ளினும், உடம்பாதல் உடம்பின்கண் உளவாகிய ஐம்பொறிகளாதல் அவ்வைம்பொறிகளை யூக்கி இயங்குவதாய பிராணவாயுவாதல் அறியும் என்பது காட்சியளவையான் அறியக்கிடத்தலின், உயிர் அம்மூன்றனுள் ஒன்றாகற்பாற்று என்றலே பொருத்தமுடைத்துப் போலுமென்பாரை நோக்கி அம்மூன்றனையுஞ் சிறந்தெடுத்தோதி மறுத்தற்கெழுந்தன வருஞ் செய்யுட்களென்பது. (க)

உடலின்வே றுயிரேன் இந்த உடலன்றோ உணர்வ தென்னின்
உடல்சவ மான போதும் உடலினுக் குணர்வுண் டோதான்
உடலினின் வாயுப் போனால் உணர்ச்சியின் றுடலுக் கென்னின்
உடலினின் வாயுப் போகா துறக்கத்தும் உணர்வ தின்றே.

(ப - ரை.) உடலின் வேறு உயிர் என் - இவ்வுடம்பின்வேறாய் உயிர் ஒன்று உண்டென்பது எற்றுக்கு, இந்த உடல் அன்றோ உணர்வது என்னின் - இவ்வுடம்பே அறியுமெனின், உடல் சவமானபோதும் உடலினுக்கு உணர்வு உண்டோதான் - அவயவங்களின் ஒன்றானுங் குறைபாடின்றிக் கிடக்கும் பிணக்கிடையினும் அவ்வுடலின் அறிவுளதோ இன்று, உடலினின் வாயுப்போனால் உடலுக்கு உணர்ச்சி இன்று என்னின்-இவ்வுடம்பினுள்ள பிராணவாயு நீங்கிடின் அதனில் உணர்வு நிகழாதெனின், உடலினின் வாயுப் போகாத உறக்கத்தும் உணர்வது இன்றே - நீ கூறும் பூதக்கூட்டத்தின் ஒன்றானுங் குறைவின்றிக்கிடக்கும் உறக்கத்தினும் அறிவு நிகழ்வதின்று (ஆகலின் உடம்பு அறியுமாறு யாண்டையது) என்க.

(பொ - ரை.) அவயவங்களின் ஒன்றானுங் குறைபாடின்றிக் கிடக்கும் பிணக்கிடையினும் நீ கூறும் பூதக்கூட்டத்தின்

1. தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், உஉ.

ஒன்றானுங் குறைவின்றிக் கிடக்கும் உறக்கத்தினும் அறிவு நிகழக் காணாமையான், உடம்பு அறியுமாறு யாண்டையது எ-ம்.

போகாத என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது. (உ)

அறிவதைம் போறியே என்னின் உறக்கத்தின் அறியா வாகும்
அறிவதும் ஒன்றேன் றாக ஒன்றேன்றாய் அறியும் என்னின்
அறிவுகள் ஒன்றை யோன்றங்கு அறிந்திடா ஐந்தை யுங்கோண்டு
அறிவதோன் றுண்ட தான்மா ஐம்போறி அறிந்தி டாவே.

(ப-ரை.) ஐம்பொறியே அறிவது - (பிணமாம்போது கெட்டு ஒழிவதாகிய) ஐம்பொறிகளே (அவ் உடம்பினின்று நனவின்கண்) அறியும், உறக்கத்தின் அறியா வாகும் என்னின் - உறக்கத்தின்கண் அறிதலின்றி ஒடுங்கி நிற்குமெனின், அறிவதும் ஒன்றொன்றாக-(நனவின்கண் அவை) அறிவதும் ஒவ்வொரு பொறியாக அறிவதன்றி (ஒருங்கே அறிவனவல்ல), ஒன்றொன்றாய் அறியும் என்னின் - ஒன்றொன்றாக அறியும் (அதுவே அவற்றியல்பு) எனின், அறிவுகள் ஒன்றை அங்கு ஒன்று அறிந்திடா - (அங்ஙனமாயினும்) இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியா, ஐந்தையுங்கொண்டு அறிவது ஒன்று உண்டு - (ஆகலான்) இவ்வைந்தினையும் (ஐம்புலன்களையும்) அறிவதொன்று உளது, அது ஆன்மா - அஃதே ஆன்மா எனப்படும், ஐம்பொறி அறிந்திடாவே-ஐம்பொறிகள் தாமே அறியமாட்டா என்க.

(பொ-ரை) பிணமாம்போது கெட்டு ஒழிவதாகிய ஐம்பொறிகளே அவ்வுடம்பினின்று நனவின்கண் அறியும் உறக்கத்தின்கண் அறிதலின்றி ஒடுங்கி நிற்கும் எனின் அது பொருந்தாது; நனவின்கண் அவை அறிவதும் ஒவ்வொரு பொறியாய் அறிவதன்றி ஒருங்கேயறிவன அல்ல ஆதலானும், ஒன்றொன்றாய் அறியும் அதுவே அவற்றியல்பு எனின், அங்ஙனமாயினும் இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியாமையானும், இவ்வைந்தினும் ஐம்புலங்களையும் அறிவதொன்று உளதாகலானும் எ-ம்.

அறிவது ஐம்பொறியே உறக்கத்தின் அறியாவாகும் என்னின் என இயையும்.

அறிவது என்பது அத்தொழின்மேல் நின்றது. உம்மை சிறப்பு.

அறிவுகள் ஆகுபெயர்.

[1]அஃதென்னும் ஆய்தம் விகாரத்தாற்றொக்கது.

இவ்வாறன்றி, அறிவது ஐம்பொறியேயென்னின் உறக்கத்தின் அறியாவாகும் அறிவதும் ஒன்றொன்றாக ஒன்றொன்றாய் அறியும் என்னின் என்பதற்கு என்னுடம்பகத்து நின்றறிவது ஐம்பொறிகளேயாம் அவை யுறக்கத்தினறியாத அழகும் நனவின்கண் ஒவ்வொரு விடய

1. உண்டதான்மா - என்பதில்.

மாக அறிவதும் இருவர் மதத்தினும் ஒக்கும், அதுபற்றி என்னை யாசங்கித்தல் கூடாமையான் அவ்வைம்பொறிகளே ஒருதலையாக அறியும் வேறும் ஓருயிர் கோடன் மிகையாம் என்பையாயின் என்று உரைத்தலும் ஒன்று.

உறக்கத்தின் அறியாமை இழுக்கன்று என்பான் வாகு[1] என்றான் என்பது. (௩)

அறிந்திடும் பிராண வாயு அடங்குதல் விடுதல் செய்தால்
அறிந்திடாது உடல்உ றக்கத்து அறிவின்மை கரணம் இன்மை
அறிந்திடும் முதலி ஆகின் அதுநிற்கக் கரணம் போகா
அறிந்திடும் பிராணன் தன்னை அடக்கியும் விட்டும் ஆன்மா.

(ப - ரை.) பிராணவாயு அடங்குதல் விடுதல் செய்தால் அறிந்திடும்-பிராணவாயு அடங்குதல் விடுதல் செய்தாலே அறிவுநிகழக்காண்டலின் (அதுவே அவ்வைந்தையுங்கொண்டறிவதாகிய உயிரென அமையும்), உடல் உறக்கத்துக் கரணம் இன்மை அறிவின்மை அறிந்திடாது-உடம்பின்கண் உறக்கத்தில் (அஃதியங்கினும் ஆண்டுக்) கருவி யின்மையான் அறிவில்லையாய் அறியாதாயிற்றெனின் (அதுபொருந்தாது), அறிந்திடும் முதலியாகின் அது நிற்கக் கரணம் போகா - அறியப்படுங் கரண முதலி அதுவானல் அது நிற்புழிக் கரணம் போதல் கூடாமையின், அடக்கியும் விட்டும் பிராணன்றன்னை அறிந்திடும் ஆன்மா-(கரணங்களையும்) அடக்குதல் விடுதல்கள்செய்து அப்பிராணவாயுவை யுங் கொண்டறிவதாகிய உயிர் (வேறுண்டென்பது பெறப்படுதலான்) என்க.

(பொ - ரை.) பிராணவாயு அடங்குதல் விடுதல் செய்தாலே அறிவு நிகழக் காண்டலின் அதுவே அவ் ஐந்தையுங் கொண்டறிவதாகிய உயிர் என அமையும், உறக்கத்தில் அஃது இயங்கினும் ஆண்டுக் கருவி இன்மையான் அறியாதாயிற்றெனின், அது பொருந்தாது, கரணமுதலி நிற்புழிக் கரணம் போதல் கூடாமையிற் கரணங்களையுந் தன்னையுங் கொண்டு அறிவதாகிய உயிர் வேறு உண்டு என்பது பெறப்படுதலான் எ-ம்.

இவை மூன்றுசெய்யுளானும், முறையே உடல் பொறி பிராணவாயு என்னும் மூன்றனையுங் காட்சியளவையான் அறியக்கிடந்த விசேடம் பற்றி வேறு எடுத்து ஆசங்கித்துப் பரிகரித்து, இந்த உடலின் உயிர் எனப்படுவது வேறு என்பது சாதிக்கப்பட்டது.

ஏனைய எல்லாம் வருஞ்சூத்திரத்தின் ஆண்டாண்டு இயைபுபற்றிக் கூறக்கிடத்தலானும், உளதாய் என்னும் முதற்கூற்றில் ஆசங்கை விசேடம் இன்மையானும், அவற்றை ஈண்டு விரித்திலர். (௪)

**மூன்றாஞ் சூத்திர முடிந்தது.**

**ஆகத் திருவிருத்தம் - கஅ௦.**

---

1. வாகு - அழகு.

# இலக்கண வியல்

## நான்காஞ் சூத்திரம்

*மேன் மூன்று சூத்திரத்தானும் பொருளுண்மைக்கு அளவு கூறிய ஆசிரியர், நிறுத்தமுறையானே பொருளியல்பு கூறுவான் தொடங்கி, மேற்கூறிப்போந்த பதிபாச பசுக்களை எதிர் நிரல் நிறையாகவைத்து முதற்கண் பசு இலக்கணங் கூறுகின்றார்.*

**உணர்வன கரணம் என்னில் ஒன்றையொன்றுஉணரா வெவ்வேறு**
**அணைதருஞ் செயல்கள் நான்கும் அறிந்தவை அடக்கி ஆக்கிப்**
**புணரும்உட் கருவி ஆக்கிப் புறக்கரு வியினும் போக்கி**
**இணைதரும் இவற்றின் வேறாய் யான்என தென்ப தான்மா.**

(ப - ரை.) *கரணம் உணர்வன என்னில்*-(இனி) அந்தக்கரணமே உணரும் என்பர் எனின், *ஒன்றை ஒன்று உணரா* - (இவையும் ஐம் பொறிபோல்) ஒன்றனையொன்றுணரா ஆகலான், *ஆன்மா இவற்றின் வேறாய்* - உயிர் இவற்றின் வேறாகியும், *யான் எனது என்பது இணை தரும்* - யான் எனது என்னுஞ் செருக்குறுதற்கேதுவாகிய ஆணவமல மும் உடனாய் இணைந்து நிற்கும் ஆகலான், *நான்கு செயல்களும் அறிந்து*-(தனக்கென அறிவின்றி இவ் அந்தக்கரணங்களானுய) நான்கு தொழிலையும் (இவற்றோடுகூடி) அறிந்து, *அவை அடக்கிப் புணரும் உட்கருவி ஆக்கி*-இவற்றை (யடக்கவேண்டுழி)ச் சொப்பனவத்தையிற் செலுத்திப் பொருந்திய உட்கருவிகளாக்கியும், *ஆக்கிப் புறக் கருவி யினும் போக்கி* - ஆக்கவேண்டுழிச் சாக்கிராவத்தையிற் செலுத்திப் புறக்கருவிகளிற் போக்கியும், *வெவ்வேறு அணைதரும்* - வெவ்வேறு அவத்தைகளை அணையும் என்க.

(பொ - ரை.) இனி அந்தக்கரணமே உணரும் என்பார்க்கு, இவையும் ஐம்பொறிபோல் ஒன்றனை யொன்று உணரா ஆக லான், உயிர் இவற்றின் வேறாகியும், யான் எனது என்னுஞ் செருக்குக்கு ஏதுவாகிய ஆணவமலம் உடனாய் இணைந்து நிற்கு மாகலான் தனக்கென அறிவின்றி இவ் அந்தக்கரணங்களானுய நான்கு தொழிலையும் இவற்றோடு கூடியறிந்து இவற்றை அடக்க வேண்டுழி அடக்கி உட்கருவிகளாக்கியும், ஆக்கவேண்டுழி ஆக் கிப் புறக்கருவிகளிற் போக்கியும், வெவ்வேறு அவத்தைகளை அணையும் எ - ம்.

எனவே, ஆணவமலத்தில் பிணிப்புண்டு அவத்தையுறுதல் ஆன்மா வுக்கு இலக்கணம் என்றவாறாயிற்று ; இது தடத்தலக்கணம் எனப் படும் பொது இயல்பு.

உணரா ஆகலான் இவற்றின்வேறாகியும், யான் எனது என்பது இணை தருமாகலான் அறிந்தடக்கி யாக்கி ஆக்கிப் போக்கி வெவ்வேறு அணைதரும் என வினைமுடிபு செய்க.

அடக்குதல் சொப்பனாவத்தையிற் செலுத்துதல்.

ஆக்குதல் சாக்கிராவத்தையிற் செலுத்துதல்.

இனம்பற்றி ஏனையவத்தைகளுங் கொள்ளப்படும்.

அவை யடக்கி யாக்கிப் புணரும் உட்கருவியாக்கிப் புறக்கருவியினும் போக்கி என்பது நிரனிறைப்பொருள்கோள்.

வேறாயுமெனச் சிறப்பும்மை விரித்துரைக்க.

என்பது எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார்.

யான் எனது என்பது என்னும் பெயரடை அதன் உண்மை சாதித்தற்குக் குறிப்பேதுவாய் நின்றது.

இச்செய்யுள் முதல்நூல் நாலாஞ் சூத்திரம்போல முக்கூற்றதாமாறு கண்டுகொள்க.

இனி அம்முக்கூற்றுள், உணர்வன கரணம் என்னின் ஒன்றை ஒன்று உணராஆகலான் ஆன்மா இவற்றின் வேறாம் என்னும் முதற்கூற்றை வலியுறுத்துகின்றார். (க)

## முதலதிகரணம்

கருவிஆம் மனமும் புத்தி அகங்காரஞ் சித்தம் நான்கும்
மருவிஆன் மாவே என்ன வருந்தீபம் எனத்தெ ரிந்தங்கு
ஒருவிஆன் மாவின் உண்மை உணர்ந்தவர் தமையு ணர்ந்தோர்
தரும்இது பசுஞா னம்பின் சிவஞானந் தனக்கு மேலாம்

(ப - ரை.) *மனமும் புத்தி அகங்காரம் சித்தம் நான்கும் கருவியா மருவி - மனம் புத்தி அகங்காரஞ் சித்தம் என்கின்ற நான்கும் (ஒரு விடயத்தை அறிதற்குக்) கருவியாக மருவி, ஆன்மாவே என்ன வரும் - (இவையே) கருத்தா என்னும்படி (உயிரோடு ஒற்றித்து நின்று) நிகழ்வனவாம், தீபம் என தெரிந்து அங்கு ஒருவி - (கண்ணுக்கு) விளக்குப் போல (இவை உயிர்க்குக் கருவியாய் வேறு நிற்பன என்று) அறிந்து நீங்கி நின்று, ஆன்மாவின் உண்மை உணர்ந்தவர் தமை உணர்ந்தோர் - (இவற்றைக் கொண்டறியுங்) கருத்தாவினுண்மை யாதென்றாராய்ந்தவரே தாமாகிய ஆன்மசொரூபத்தை இனிதுணர்ந் தோர், பின் பசுஞானம் - அதன் பின்பு (அங்ஙனம் ஆராயு மறிவு) பசு ஞான மாகலான், இது தரும் சிவஞானம் தனக்கு மேலாம் - அதனைத் தரும் (பொருள் யாது எனத் தேர்வார்க்குச்) சிவஞானம் அதற்கு மேலாய் விளங்கும் என்க.*

(பொ - ரை.) *மனம் முதலிய நான்கும், ஒரு விடயத்தை அறிதற்குக் கருவியாக மருவி, இவையே கருத்தா என்னும்படி உயிரோடு ஒற்றித்து நின்று நிகழ்வனவாம். கண்ணுக்கு விளக்குப் போல இவை உயிர்க்குக் கருவியாய் வேறு நிற்பன என்று அறிந்து நீங்கி நின்று இவற்றைக் கொண்டறியுங் கருத்தாவின் உண்மை யாது என்று ஆராய்ந்தார்க்கு ஆன்மசொரூபம் இனிது விளங்கும்; அதன்பின்பு அங்ஙனம் ஆராயும் அறிவு பசுஞானம் ஆகலான் அதனைத் தரும் பொருள் யாது எனத் தேர்வார்க்குச் சிவஞானம் அதற்கு மேலாய் விளங்கும் எ - ம்.*

*ஈண்டு ஆன்மா என்றது கருத்தா என்னுந்துணையாய் நின்றது, தமையுணர்ந்தோரென முன் வருதலின்.*

*இதனானே அந்தக்கரணங்கள் கருத்தா அல்ல என்பது தம்மையுந் தலைவனையும் அறியுமாற்றின் வைத்துக்காட்டப்பட்டது.* (உ)

அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம்புத்தி அகங்கா ரங்கள்
செவ்விய விந்து நாதஞ் சித்தமோடு உள்ளம் ஆகும்
ஒவ்வெனும் எழுத்தாம் ஐந்தும் உணர்வுதித் தோடுங்கும் ஆறும்
பவ்வமுந் திரையும் போலும் பார்க்கில்இப் பண்புந் தோன்றும்.

(ப - ரை.) *அகங்காரம் புத்தி மனம் சித்தமோடு உள்ளங்கள் - அகங்காரம் புத்தி மனம் சித்தம் உள்ளம் என்கின்ற அவை கருவியாவ*

தூஉம், அவ்வுடன் உவ்வும் மவ்வும் செவ்விய விந்து நாதம் ஆகும் - (முறையே) அகாரமும் உகாரமும் செவ்விதாய விந்துவும் நாதமும் என்கின்ற எழுத்துக்கள் உடன் நின்று செலுத்தியவழியேயாம் ஆகலால், ஒவ்வெனும் எழுத்தாம் ஐந்தும் - (சமட்டியிற் பிரணவரூபமாம் இவ்வைந்து எழுத்தானும், உணர்வு உதித்து ஒடுங்குமாறும் - (உயிரின்கண்) உணர்வு மாறிமாறித் தோன்றுமுறையும், பவ்வமும் திரையும்போலும் - கடலின் கண்ணே திரை புதிது புதிதாகத் தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போலாம், பார்க்கில் - (சவிகற்பவுணர்வுக்குக் காரணம். நிவிர்த்தாதி கலையைப் பற்றி ஐந்தாய்த் திகழு நால்வகை வாக்குக்கள் என்பதனை) உற்றுநோக்கின், இப்பண்பும் தோன்றும் - இவ்வியல்பு இனிது விளங்கும் என்க.

(பொ - ரை.) அவை கருவியாவதூஉம் அகரமுதலிய எழுத்துக்கள் உடன்நின்று செலுத்தியவழியேயாமாகலான், சமட்டியிற் பிரணவரூபமாம் இவ்வைந்தெழுத்தானும் உயிரின் கண் உணர்வு மாறி மாறித் தோன்றுதல், கடலின்கண்ணே திரை புதிது புதிதாகத் தோன்றியும் ஒடுங்கியும் வருமாறு போலாம். சவிகற்பவுணர்விற்குக் காரணம் நிவிர்த்தாதிகலையைப் பற்றி ஐந்தாய்த்திகழும் நால்வகை வாக்குக்கள் என்பதனை உற்று நோக்கின் இவ்வியல்பு இனிது விளங்கும் எ - ம்.

ஒற்றுமைபற்றி எழுத்துக்களே அவையாக உபசரித்தார்.

புருடதத்துவமும் அதனைச் செலுத்தும் அக்கரமும் ஈண்டு ஒப்புமை பற்றி உடன் கூறியவாறு; புருடதத்துவத்தைச் செலுத்துதலாவது புருடதத்துவமாந் தன்மையை நிகழ்வித்தல்.[1]

[2]"அகார வுகாரம் அகங்காரம் புத்தி-மகாரம்" என முதல்நூலுள் கூறுதலானும், துகளறுபோதத்தும்[3] அவ்வாறே கூறுதலானும், ஈண்டு அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யகங்காரங்கள் என்றது எதிர்நிரனிறை யெனக் கொள்க.

பிரணவமாகலின் உள்ளவாறே வெளிப்படக் கூறாது ஒவ்வெனக் கடைக்குறைத்துக் குறுக்கல் விகாரமாக்கிக் கூறினார்.

ஐந்தானும் என்னும் ஆனுருபு விகாரத்தாற் றொக்கது. (ந)

அயன்அரி அரனும் ஈசர் சதாசிவம் அதிதெய் வங்கள்
உயவரும் அவ்வோடு உவ்வும் மவ்விந்து நாதங் கட்குப்
பயனுறும் அஞ்சில் ஆன்மாப் பரவிடில் அசித்தாம் பார்க்கிற்
சயமுறு வளியி ரண்டுந் தவிர்த்துறிற் றானுந் தோன்றும்.

(ப - ரை.) அவ்வோடு உவ்வும் மவ் விந்து நாதங்கட்கு - அகார உகார மகார விந்து நாதங்களாகிய அவ் எழுத்துக்களை, அயன் அரி அரனும் ஈசர் சதாசிவம் அதிதெய்வங்கள் உயவரும் - (முறையே) அய

1. 'வினைக்குரிமை' திருக்குறள், ௬கஅ.
2. சிவஞானபோதம், நான்காஞ் சூத்திரம், ந.
3. 'மன்னும்' துக. கச.

னும் அரியும் அரனும் மகேசரும் சதாசிவருமாகிய ஐவரும் அதிதெய்வங்களாய் அதிட்டித்து நிற்பராகலான், அஞ்சில் ஆன்மாப் பரவிடில் - இவ்வாறு கரணமும் அக்கரமும் அதிதெய்வமும் என்னும் இம்முத்திறத்தைந்தோடும் ஆன்மாப் பரவியவழி, பார்க்கின் பயன் உறும் - பார்க்குமிடத்தே அறிதற் பயனுறும், (பரவாவிடில்) அசித்தாம் - பரவாத வழிச் சடம்போல் அறிவிலதாம், சயம் உறு வளி இரண்டும் தவிர்த்துறின் தானும் தோன்றும் - (இவ்வியல்பும்) வலிபொருந்திய இருவகை வளியும் அடக்கிச் செய்யும் (யோகிகள்) யோகப்பயிற்சியில் இனிது விளங்கும் என்க.

(பொ - ரை.) அவ்வெழுத்துக்களை முறையே அயன் முதலிய ஐவரும் அதிதெய்வங்களாய் அதிட்டித்து நிற்பராகலான், இவ்வாறு கரணமும் அக்கரமும் அதிதெய்வமும் என்னும் இம்முத்திறத்து ஐந்தோடும் ஆன்மாப் பரவியவழி அறிதற்பயனும், பரவாவிடிற் சடம்போல் அறிவிலதாம்; இவ்வியல்பு இருவகை வளியும் அடக்கிச் செய்யும் யோகப்பயிற்சி யுடையார்க்கு இனிது விளங்கும் எ - ம்.

அசித்தோடு ஒக்கும் என்பார் அசித்தாம் என்று உபசரித்தார்.

பரவாவிடில் என்பது சொல்லெச்சம்.

இவையிரண்டு செய்யுளானும் அவை கருவியாதற்கட்படு முறைமையும் அதனை அறிதற்கு உபாயமுங் கூறப்பட்டன.

அற்றேல், இம்முத்திறத்து ஐந்துங் கூடிய கூட்டத்தின் நிகழ்வதே அறிவாகலின், இப்பலபொருட்கூட்டமே அவ்வறிவுக்கு முதலாதல் அமையும் இடையே உயிரென ஒன்று கோடல் எற்றுக்கென்பாரை நோக்கி எழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (ச)

ஆன்மாவின் வடிவு தானே அநேகார்த்தக் கூட்டம் என்னில்
பார்ப்பார்கட்கு ஆன்மா இன்றாய்ப்பலபொருள் உண்மைஆதுஞ்
சேர்ப்பாய பலவே உண்மை என்றிடிற் சென்றி வற்றை
ஓர்ப்பான்வே றுணர்வோர்க்கு எல்லாம் உணர்பொருள் வேறதாமே.

(ப - ரை.) ஆன்மாவின் வடிவுதானே அநேகார்த்தக் கூட்டம் என்னின் - ஆன்ம சொரூபமானது (கரணம் அக்கரம் அதிதெய்வங்கள் ஆகிய) பலபொருட்கூட்டமென்றிடின், பார்ப்பார்கட்கு இன்றாய்ப் பலபொருள் உண்மையாகும் - ஆராய்பவர்கட்கு (க் கூட்டமென ஒரு பொருள்) இன்றாகி அப்பலபொருள் உண்மையாகும், சேர்ப்பாய பலவே உண்மை ஆன்மா என்றிடில் - கூடுதலாய அப்பதினைந்துமே உண்மையாகிய ஆன்மாவென்றால், உணர்வோர்க்கெல்லாம் சென்றிவற்றை ஓர்ப்பான்வேறு உணர்பொருள் வேறதாமே - அறிபவர் அனைவர்க்கும் பொருந்திய இப்பதினைந்தினையும் அறிபவனாகிய ஆன்மாவும் வேறாம் அறியப்படும் பொருளாகிய அப்பதினைந்தும் வேறாம் என்க.

(பொ - ரை.) கூட்டம்என ஒருபொருள் இன்மையானும், கூடுவனவாய பலபொருள்களும் வேறாய் அறியப்பட்டு நிற்ற

லானும், அறியப்படுவதும் அறிவதுந் தம்முள் ஒன்றுதல் செல்லாமையானும், இப்பதினைந்தினையும் இவை கூடியவாற்றையும் அறிவதாகிய உயிர் வேறுண்டென்பது பெறப்படுதலான், இப்பல பொருளின் கூட்டம் உயிராதல் யாண்டையது எ - ம்.

இதனானே அவை உயிரின் வேறாதல் வலியுறுத்தப்பட்டது.

மேலைச்சூத்திரன் உண்மை துரியாதீதம் என்ற இறுதிக்கூற்றைச் சவுத்திராந்திகர் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுக்குமாறும் இதனானே பெறுதும்.

இவை நான்கு செய்யுளானும் அந்தக் கரணங்கள் கருத்தா அல்லவாமாறும், கருவியாதற்கட்படும் முறைமைகளும், அவை உயிரின் வேறாமாறும் உணர்த்தி முதற்கூற்றை வலியுறுத்தியவாறு.

இனி இருபத்தாறு செய்யுளாற், பரமதங்களை எடுத்தோதிப் பரிகரித்து ஆன்மாவிற்கு இலக்கணங் கூறுமுகத்தால், யான் எனது என்பது இணைதரும் என்ற இரண்டாம் கூற்றை வலியுறுத்துவான் தொடங்கினார். (ரு)

---

# இரண்டாமதிகரணம்

அறிவுஇச்சை செயல்க ளேல்லாம் அடைந்துஅனல் வெம்மை யும்
குறியுற்றங்கு ஏகா நேக குணகுணி பாவம் ஆகி [போல்
நெறியுற்று நிற்கும் என்னின் நிகழ்புலன் கரணம் எல்லாஞ்
செறிவுற்றங்கு அறிவு கொள்ள வேண்டுமோ சீவ ஞர்க்கே.

(ப - ரை.) எல்லாம் - சீவான்மாக்கள் எல்லாம், அங்குக் குறி உற்று - அங்ஙனம் (பிரமப்பொருளின்) பரிணமமாய்த் தோன்றி, அறிவு இச்சை செயல்கள் அடைந்து - அறிவு இச்சை செயல்களை அடைந்து, அனல் வெம்மையும் போல் - தீயுஞ் சூடும்போல, ஏகாநேக குணகுணி பாவமாகி நெறியுற்று நிற்குமெனின் - பேதாபேதமாகிய குணகுணித் தன்மையுற்றுப் பலவேறுவகைப்பட்டு நிற்குமெனப் பரிணமவாதிகள் கூறுவர் எனின், சீவனுர்க்கே நிகழ் புலன் கரண மெல்லாம் செறிவுற்று அங்கு அறிவுகொள்ள வேண்டுமோ - அவ்வாருகிய சீவனுர்க்கு நிகழ்கின்ற பொறி கரணமுதலிய கருவிகளைச் செறிவுற்றன்றி ஆண்டறிய மாட்டாமைக்குக் காரணம் யாது என்க.

(பொ - ரை.) சீவான்மாக்கள் எல்லாம் பிரமப்பொருளின் பரிணமமாய்த் தோன்றி அறிவு இச்சை செயல்களை அடைந்து தீயுஞ் சூடும்போலப் பேதாபேதமாகிய குணகுணித்தன்மை யுற்றுப் பல வேறு வகைப்பட்டு நிற்குமெனப் பரிணமவாதிகள் கூறுவர். கருவிகளை யன்றி அறியமாட்டாத சீவான்மா அவ்வாருதல் யாண்டையது எ - ம்.

எல்லாம் அங்ஙனங் குறியுற்று அறிவு இச்சை செயல்கள் அடைந்து அனல் வெம்மையும் போல் ஏகாநேக குணகுணி பாவமாகி நெறியுற்று நிற்கும் எனக் கொண்டு கூட்டியுரைக்க.

ஏகாநேகம் பேதாபேதம். ஆர் விகுதி இழித்தற்குறிப்பின்வந்தது.

இதனுனே மேலைச்சூத்திரத்தின் ஆருங்கூற்றை வலியுறுத்தவாறும் ஆயிற்று. (சு)

குணங்களை இன்றி ஒன்ருங் குறியுடைத்து ஆன்மா என்னின்
இணங்கிடா இச்சா ஞானக் கிரியைகள் இவையு டற்கண்
பிணங்கிடுஞ் சந்நி திக்கண் எனிற்பிணத்து உறக்கத் தின்ரும்
உணங்கிடுங் கரணம் என்னில் சந்நிதி ஒழிந்த தன்றே.

(ப - ரை.) குணங்களை இன்றி ஒன்ருங் குறி உடைத்து ஆன்மா என்னின் - இனிச் சாங்கியர் குணகுணித் தன்மையின்றிக் கேவலம் அறிவுமாத்திரையாய் நிற்றல் உயிரியல்பு என்பர்எனின், உடற்கண் இச்சா ஞானக் கிரியைகள் இவை இணங்கிடா - உடலின்கண்ணே அறிவு இச்சை செயல்கள் நிகழா, சந்நிதிக்கண் (கரணம்) பிணங்கிடும் எனில் - உயிரின் சந்நிதியில் (உடலின்கண்) கரணங்கள் செயற்படுதல்

பற்றி (அறிவு இச்சை செயல்கள்) நிகழும் என்பர் எனின், பிணத்து உறக்கத்து இன்ரும் - பிணத்தும் உறக்கத்தும் (அவை நிகழ்தல்) இன்ரும், கரணம் உணங்கிடும் என்னில் - பிணத்தும் உறக்கத்தும் கரணம் ஒடுங்கினமையால் (அறிவு இச்சைசெயல்கள் நிகழ்தலில்லை) எனில், சந்நிதி ஒழிந்தது அன்றே - (பிணத்தும் உறக்கத்தும் சந்நிதிக்குக் கேடின்ருகவும் அவை நிகழாமையால்) சந்நிதிமாத்திரையான் நிகழ்தல் ஒழிந்தது என்க.

(பொ - ரை.) இனிச் சாங்கியர் குணகுணித் தன்மையின் றிக் கேவலம் அறிவுமாத்திரையாய் நிற்றல் உயிரியல்பு என்றும், அவ்வுயிரின் சந்நிதியின் உடம்பின்கண்ணே நின்று கரணங்கள் செயற்படும் என்றும், அதனுல் தொழில் அறிவு இச்சைகள் அவ்வுடம்பின்கண் நிகழும் என்றும் கூறுவர். பிணத்தும் உறக் கத்துஞ் சந்நிதிக்குக் கேடின்ருகவும் உடம்பின்கண் அவை நிகழக் காணுமையின் சந்நிதிமாத்திரையான் அவை நிகழ்தல் யாண்டையது எ - ம்.

இன்று என்னுமொருமை அப்பண்பின்மேனின்றது. (எ)

சந்நிதி குணம தாகும் தான் என்போல் என்னின் காந்தம்
முன்னிரும் பென்ருய் ஈர்க்கும் முறைமையுண் டகற்றல் இன்ரும்
உன்னுதல் ஒடுங்கல் ஓடல் இருத்தலே கிடத்தல் நிற்றல்
என்னுமித் தொழில்கள் மற்றும் இயற்றுவது ஆன்மா என்னே.

(ப - ரை.) சந்நிதிதான் என்போல் என்னின் - (வியாபகமாய் நிற்கப் பெறுதன் மாத்திரையே சந்நிதியன்று மற்றுச்) சந்நிதி என் போல்எனின், காந்தமுன் இரும்புக் குணமதாகும் என்ருய்-காந்த முன் இரும்புபோல (உயிர்முன் உடம்பு தொழிற்படுதற்கேதுவாயதொரு) குணவிசேடஞ் சந்நிதியெனக் கொண்டாமாகலின் (அக்குற்றம் ஈண் டைக்கெய்தாது) என்ருயெனின், ஈர்க்கு முறைமை உண்டு அகற்றல் இன்ரும் - (அங்ஙனமாயினும் ஒரு குணமுள்ள காந்தம் இரும்பை) ஈர்த் தலாகிய ஒரு தொழிலன்றி அகற்றலாகிய மாறுபட்ட தொழில் செய் தலின்று ஆகலின், உன்னுதல் ஒடுங்கல் ஓடல் இருத்தலே கிடத்தல் நிற்றல் என்னும் இத்தொழில்கள் மற்றும் ஆன்மா இயற்றுவது என்னே - நினைத்தல் மறைத்தல் ஓடல் இருத்தல் கிடத்தல் நிற்றல் முதலிய மாறுபட்ட தொழில்கள் ஆன்மாச் செய்யுமாறு யாண்டையது என்க.

(பொ - ரை.) வியாபகமாய் நிற்கப்பெறுதன் மாத்திரையே சந்நிதியன்று, மற்றுக் காந்தமுன் இரும்புபோல உயிர்முன் உடம்பு தொழிற்படுதற்கு ஏதுவாயதொரு குணவிசேடஞ் சந் நிதியெனக்கொண்டாம் ஆகலின் அக்குற்றம் ஈண்டைக்கு எய் தாது எனின், அங்ஙனமாயினும் ஒருகுணம் ஒருதொழிலன்றித் தம்முள் மாறுபட்ட பலதொழில் செய்யுமாறு யாண்டையது எ - ம். (அ)

உருஉயிர் என்னின் இந்த உடலினுட் காண வேண்டும்
வருவது பரிணு மத்தாய் அநித்தமாம் பூதம் ஆகுங்
கருவினில் நுழையு மாறுங் காட்டிட வேண்டுங் கண்ணின்
மருவிடாது என்னின் உன் தன் வாயினுல் உருவன்று என்னே.

(ப - ரை.) உயிர் உரு என்னின் - இனிப் பௌராணிகர் மதம் பற்றி உயிர் உருவப்பொருளென்பையாயின், இந்த உடலினுள் காண வேண்டும் - இவ்வுடம்பினுள் (வேறொரு வடிவங்) காணவேண்டும், வருவது பரிணுமத்தாய் அநித்தமாம் பூதமாகும் - (அங்ஙனமன்றி உருவப்பொருளாய்) வருவது (காட்சிப்புலனுய்ப்) பரிணமித்து அழிவெய்தும் பூதத்தோடு ஒன்ருதல் வேண்டும், கருவினில் நுழையுமாறும் காட்டிடவேண்டும் - (அதுவன்றிக்) கருப்பத்திற் புகுமாறுந் தெரித்தல் வேண்டும், கண்ணில் மருவிடாது என்னின் - (உருவடிவாயினுங்) கட்புலனுகாதெனின், உன்றன் வாயினுல் உரு அன்று என்னே-உனது வாயால் உருவம் அன்று என மொழிதலே அமையும் என்க.

(பொ - ரை.) இனிப் பௌராணிகர் உயிர் உருவப்பொருளென்பர். பரிணமித் தழிதலும் காட்சிப்புலனுதலும் இல்லாத பொருள் அவ்வியல்புடைய பூதங்களோடொப்ப உருவாமாறு யாண்டையது எ - ம். (சு)

சூக்கும உருவ தென்னில் தூலகா ரணம தாகும்
ஆக்கிய மனுதி தன்மாத் திரைவடிவு அசேத னம்பின்
நீக்கிய சூக்கு மத்தே நிற்பதோர் உருவுண்டு என்னின்
ஆக்கிடும் உருவம் எல்லாம் அசித்துமாய் அநித்தம் ஆமே.

(ப - ரை.) சூக்கும உருவது என்னின் - (பூதம்போலக் காட்சிப் புலனுதற்குரிய தூல உருவாதலின்றிச்) சூக்கும உருவாய் நிற்பது உயிரெனின், தூல காரணமதாகும் அசேதனம் மனுதி தன்மாத்திரை ஆக்கிய வடிவு - (அஃது) தூல உருவைத் தோற்றுவிக்கின்ற சடமாகிய மனுதி கரணங்கள் தன்மாத்திரைகளான் ஆக்கப்பட்ட புரியட்டக உடம்பேயாகலானும், பின் நீக்கிய சூக்குமத்தே ஓர் உரு நிற்பது உண்டென்னின் - பின்பு நீக்கப்பட்ட (அப்) புரியட்டக தேகத்துள் அதிசூக்கும உருவாய் நிற்பது உயிரெனின், ஆக்கிடும் உருவம் - (அஃது) ஆக்கப்பட்ட கலையாதி மண்ணந்தமாயுள்ள பர உடம்பாகலானும், எல்லாம் அசித்துமாய் அநித்தமாமே - அவ்வுருவங்கள் அனைத்தும் அசித்தாதலும் அசத்தாதலும் ஒருதலை யாகலானும் (அவ்வியல்பு இல்லாத உயிர் உருவப்பொருளாமாறு யாண்டையது) என்க.

(பொ - ரை.) பூதம்போலக் காட்சிப்புலனுதற்குரிய தூல உருவாதலின்றிச் சூக்கும உருவாய் நிற்பது உயிரெனின்; அது தூல உருவைத் தோற்றுவிக்குஞ் சடமாகிய புரியட்டக உடம்பேயாகலானும், அப்புரியட்டக தேகத்துள் அதிசூக்கும உருவாய் நிற்பது உயிரெனின், அது கலையாதி மண் அந்தமாயுள்ள பர உடம்பாகலானும் அவ்வுருவங்களனைத்தும் அசித்தாதலும்

அசத்தாதலும் ஒரு தலையாகலானும், அவ்வியல்பில்லாத உயிர் உருவப்பொருளாமாறு யாண்டையது எ - ம். (௧0)

அருவுரு என்னில் ஆன்மா அருஉரு ஆவது இன்றும்
உருஅரு ஆகா தாகும் ஒருபொருட்கு இரண்டு தன்மை
வருவதும் இல்லை காட்ட வன்னிபோன் மருவும் என்னின்
உருவமுங் காண வேண்டும் உண்மையும் ஒழிந்து போமே

(ப - ரை.) அருவுரு ஆன்மா வென்னில்-இனிக் கவுளர் அருவுரு வப்பொருள் உயிர் என்பர் எனின், அரு உருவாவது இன்றும் உரு அருவாகாதாகும் - அரு உருவாவதின்றும் உரு அருவாகாதாம ஆகலானும், இரண்டு தன்மை ஒருபொருட்கு வருவதும் இல்லை - (மறுதலைப்பட்ட) இரண்டு தன்மை ஒருபொருட்கு உண்டாதலின்மையானும், காட்ட வன்னி போல் மருவும் என்னின் - காட்டமும் வன்னியும்போல் அரு வுருவப்பொருளெனின், உருவமும் காணவேண்டும் உண்மையும் ஒழிந்து போமே - (அவ்விரண்டுந் தம்முள் வேறாகி) உருவமாய்க் காணப்பட்டுண்மையொழியும் (ஆதலின் ஈண்டைக் கெடுத்துக்காட் டாதல் செல்லாமையானும் அது பொருந்தாது) என்க.

(பொ - ரை.) இனிக் கவுளர் அருவுருவப்பொருள் உயி ரென்பர், ஒன்று பிறிதொன்றாகாமையானும், மறுதலைப்பட்ட இரண்டு தன்மை ஒரு பொருட்கின்மையானும், காட்டமும் வன் னியுந் தம்முள் வேறாதலின் ஈண்டைக்கு எடுத்துக்காட்டாதல் செல்லாமையானும், அது பொருந்தாது எ - ம். (௧௧)

சந்திரன் வடிவு போலத் தான்அரு உருவம் என்னின்
வந்துநங் கண்ணில் தோன்றும் வடிவுள தாம்உ யிர்க்கும்
இந்தஊன் உருவந் தானாய் எழுவதும் உயிரே என்னிற்
பந்தமாய் அசித்தாய் ஆன்மாப் பவுதிகம் ஆகும் அன்றே.

(ப - ரை.) உயிர்க்கும் தான் அரு உருவம் என்னின் - ஆன்மா வுக்கு (வடிவு) அரு உருவம் என்னில், வந்து நங்கண்ணில் தோன்றும் வடிவு உளதாம் - வெளிப்பட்டு நங்கண்ணிற்குப் புலப்படும் வடிவுள தாதல் வேண்டும், சந்திரன் வடிவுபோல - (தலையுவாவின் அருவாய் நின்றே பின் முறை முறையான் வளர்ந்து பூரணையிலே) தூல உருவாய் விளங்குதல் மதியின்கண் கண்டாம் அன்றே அதுபோல, உயிரும் இந்த ஊன் உருவந்தானாய் எழுவதேயென்னின் - உயிரும் (அருவாய்நின்றே கருவுட் பதிந்து முறைமுறையான் வளர்ந்து) இவ்வுடம்பு உருவாய்த் தோன்றுமாற்றான் அருவுருவென அமையுமெனில், ஆன்மா அசித் தாய்ப் பவுதிகமாய்ப் பந்தமாகும் அன்றே - (சித்தாய் நித்தியமாய்ப் பந் தத்திற்பட்டு நீங்குவதாகிய) உயிர் அசித்தாய்ப் பூதகாரியமாய்ப் பந்த மாவதாகிய உடம்புருவம் ஆமாறு யாண்டையது என்க.

(பொ - ரை.) தலையுவாவின் அருவாய்நின்றே பின் முறை முறையான் வளர்ந்து பூரணையில் தூலவுருவாய் விளங்குதன்

மதியின்கண் கண்டாம் அன்றே, அதுபோல உயிரும் அருவாய் நின்றே கருவுட் பதிந்து முறை முறையான் வளர்ந்து இவ்வுடம் புருவாய்த் தோன்றுமாற்றான் அரு உருவென அமையுமெனின், சித்தாய் நித்தியமாய்ப் பந்தத்திற்பட்டு நீங்குவதாகிய உயிர், அசித்தாய்ப் பூதகாரியமாய்ப் பந்தமாவதாகிய உடம்புருவம் ஆமாறு யாண்டையது எ - ம் (கஉ)

அருஅவி காரி ஆன்மா ஆகாயம் போல என்னின்
உருவினைக் கட்டி யாட்டி ஓட்டிமீட் டுலாவப் பண்ணி
மருவிநிற் பித்தி ருத்திக் கிடத்திமண் புரட்டி மற்றும்
பெருவிகா ரங்க ளெல்லாந் தருவதேன் பேசி டாயே.

(ப - ரை.) ஆகாயம்போல அரு அவிகாரி ஆன்மா என்னின்- இனிப் பாதஞ்சலர் ஆகாயம்போல அருவாய் அவிகாரியாய் நிற்பது உயி ரென்பரெனின், உருவினைக் கட்டி ஆட்டி - தனுவை யாத்து நடிப் பித்து, ஓட்டி மீட்டு உலாவப் பண்ணி - போக்குவரவு செய்வித்து, மருவி நிற்பித்து இருத்திக் கிடத்தி மண்புரட்டி மற்றும் - பொருந்தி நிற்பித்தல் இருத்துதல் கிடப்பித்தல் மண்ணிற் புரட்டுதல் முதலியவா கிய, பெருவிகாரங்களெல்லாம் தருவது என் பேசிடாயே - இப்பெரிய விகாரங்களெல்லாஞ் செய்வதென்னை சொல்லுக என்க.

(பொ - ரை.) இனிப் பாதஞ்சலர் ஆகாயம்போல் அருவாய் அவிகாரியாய் நிற்பது உயிரென்பர். அது பொருந்தாமை காட்சி யளவையான் உடம்பின்கண் நிகழும் நிகழ்ச்சி [1]பற்றி யறியப் படும் எ - ம். (கங)

அசித்தேனின் உணராது ஆன்மா அசித்துச்சித் தாகும் என்னின்
அசித்துச்சித் தாகா தாகுஞ் சித்தசித் தாவ தில்லை
அசித்தொரு புறமா யொன்றிற் சித்தொரு புறமாய் நில்லாது
அசித்துறுச் சித்தே யென்னின் அசித்தடைந் தறிவ தின்றாம்.

(ப - ரை.) அசித்துச் சித்தாகாதாகும் சித்து அசித்தாவது இல்லை- சடப்பொருள் சித்தாகாதாம் சித்துப்பொருள் சடமாகாதாம் (ஆகலால்), ஆன்மா உணராத அசித்தெனின் அசித்துச் சித்தாகு மென்னின்- (வைசேடிகர்) உயிர் அறிவில்லாத சடமென்றாலும் (அது பின்) மனத் தோடுங்கூடிச் சித்தாயறியும் என்றாலும் (அவர் மதமும்), ஒன்றில் அசித்து ஒருபுறமாய்ச் சித்து ஒருபுறமாய் நில்லாது - (சைவரில் ஒரு சாரார் உயிர் சித்தசித்தென்பரெனின்) ஒன்றிலே மாறுபட்ட இரண்டு தன்மை ஒருங்கு நில்லாமையால் (அவர் மதமும்), அசித்து உறாச் சித்தே என்னின் - (பட்டாசாரியர் உயிர்) கருவியையுறாத சித்தே யென்ப ரெனின், அசித்து அடைந்து அறிவது இன்றாம் - அசித்தாகிய கரு வியை அடைந்து (அன்றி) அறிதல் (செல்லாமையால் அவர் மதமும்) அடா என்க.

1. கட்டுதல் ஆட்டுதல் முதலியன.

(பொ - ரை) சடப்பொருள் சித்தாதலுஞ் சித்துப்பொருள் சடமாதலும் உலகத்து இன்மையால், உயிர் சடமென்றும் அது பின் மனத்தோடுங் கூடிச் சித்தா யறியுமென்றுங் கூறும் வைசேடிகர் முதலியோர் மதமும், மாறுபட்ட இரண்டு தன்மை ஒருங்கு நில்லாமையால், உயிர் சித்து அசித்து என்னுஞ் சைவரில் ஒருசாரார் மதமும், அசித்தாகிய கருவியையின்றி அறிதல் செல்லாமையால், உயிர் சித்தேயாம் என்னும் பட்டாசாரியர் மதமும் அடா எ - ம்.

உறுத என்னும் பெயரெச்சத்து ஈறு விகாரத்தால் தொக்கது. (௧௪)

உயிரினை அணுவ தென்னின் உடல்பல துவாரம் ஓடும்
பயில்வுறக் கட்டு ணாது பாரமுந் தரித்துச் செல்லாது
அயர்வுறும் அசித்தாய்ப் பூத அணுக்களின் ஒன்ற தாகும்
இயல்புறும் அவய வத்தால் அணுஉரு இறக்கும் அன்றே.

(ப - ரை.) உடல் உயிரினை அணுவது என்னின் - இனிப் பாஞ்சராத்திரிகள் உடம்பகத்துப் பரமாணுவளவிற்றாய் நிற்பது உயிரென்பர் எனின், அணுவுருப் பலதுவாரம் ஓடும் - அணுவடிவாகிற் பலதுவாரத்தில் ஒரு துவாரத்தால் ஓடிப்போவதாம் (அன்றி), பயில்வு உறக் கட்டுணாது - (அவ்வுடம்பிற்) பயிற்சி பொருந்தக் கட்டுண்டற்கும் உடம்படாது, பாரமும் தரித்துச் செல்லாது - பாரந்தாங்கிச் செல்லுதற்கும் உடம்படாது, அயர்வு உறும் அசித்தாய் - அழிவெய்துஞ் சடமாய், பூத அணுக்களின் ஒன்றதாகும் - பூத பரமாணுக்களோடு ஒன்றாம், இயல்பு உறும் அவயவத்தால் இறக்கும் அன்றே - இயல்பு பொருந்திய அவயவப் பகுப்பு உண்மையான் அழிவெய்தும் என்க.

(பொ - ரை.) இனி உடம்பகத்துப் பரமாணு அளவிற்றாய் நிற்பது உயிர் என்னும் பாஞ்சராத்திரிகள் மதமும் அடாது. என்னை? அணுவாயின் ஒரு துவாரத்தால் ஓடிப்போவதன்றி, உடம்பிற் கட்டுண்டற்கும் பாரந் தாங்கற்கும் உடம்படாதென்பது முதலிய குற்றந் தங்குமாகலான் எ - ம். (௧௫)

உடலினின் ஏக தேசி உயிரேனின் உருவாய் மாயும்
படர்வுறும் அறிவின் றெங்குஞ் சுடரொளிப் பண்பது என்னிற்
சுடர்தொடிற் சுடுவ தெங்குந் தொட்டிடம் அறிவுண் டாகும்
அடர்புலன் இடத்தும் ஒக்க அறிவெழ வேண்டும் அன்றே.

(ப - ரை.) உயிர் உடலினின் ஏகதேசி (சுடர் ஒளிப்பண்பது) எனின் - இனி மிருதிநூலார் உயிராவது உடம்பகத்து(ப் புன்னுனித் துளிபோல்) ஏகதேசமாய் இதயத்தானத்தின் நிற்ப (அவ்வுயிரின் அறிவு) விளக்கொளிபோல (யாங்கணும் வியாபிக்கும்) என்பர் எனின், உருவாய் மாயும் - (உயிர் ஏகதேசமாயின் மேல்) உரு உயிர் என்றார்க்கு ஓதிய குற்றம் அனைத்தும் எய்தும், எங்கும் படர்வுறும் அறிவு இன்று - (குணங் குணி யளவின் அன்றி) எவ்விடத்தும் வியாபித்தறிதல் செல்

லாது, சுடர் ஒளிப் பண்பது என்னின் - விளக்கின் ஒளியாவது (விளக்கினது சூக்கும வடிவேயன்றிக் குணம் அன்றாகலான் அஃதீண்டைக்கு உவமையாகாது) ஆம் எனவே கொள்ளினும், சுடர் தொடின் சுடுவது - விளக்கின் சுடர் தொடினன்றிச் சுடாதாகையால் (இருந்தவிடத்தில் அறிந்து மற்றுள்ள இடத்துப் பரிசத்தானும் அறியமாட்டாது), தொட்ட இடம் எங்கும் அறிவுஉண்டாகும் (உயிர்) பரிசித்த இடமெங்கும் அறிதல் உளதாம், அறிவு அடர் புலன் இடத்தும் ஒக்க எழவேண்டும் அன்றே - (விளக்கு ஓரிடத்திருந்து மற்றுள்ள இடங்களையும் விளக்குதல்போல்) உயிரின் அறிவு நெருங்கிய ஐம்புலனிடத்தும் ஒருங்கே நிகழவேண்டும் என்க.

(பொ - ரை.) இனி மிருதிநூலார் உயிராவது உடம்பகத்துப் புன்னுனித் துளிபோல் ஏகதேசமாய் இதயத்தானத்தின் நிற்ப, அவ்வுயிரின் அறிவு விளக்கொளிபோலயாங்கணும் வியாபிக்கும் என்பதும் அடாது. என்னை? உயிர் ஏகதேசமாயின் மேல் உரு உயிர் என்றார்க்கு ஓதிய குற்றம் அனைத்தும் எய்தும் ஆகலானும், குணங் குணியளவினன்றி மேற்செல்லமையானும், விளக்கின் ஒளியாவது விளக்கினது சூக்கும வடிவேயன்றிக் குணம் அன்றாகலான் அஃது ஈண்டைக்கு உவமையாகாமையானும், ஆமெனவே கொள்ளினும் அதனோடு இதனிடை வேற்றுமை பெரிதாகலானும் எ - ம்.

உயிரினை அணுவென்பார்க்கும் இஃதொக்கும். (கசு)

உருவினில் நிறைந்து நின்றங்கு உணர்ந்திடும் உயிரது என்னின்
மருவிடாது உறக்கம் வாயில் அறிவொக்க வழங்க வேண்டும்
பெருகிடுஞ் சுருங்கும் போதம் பேருடற் சிற்று டற்கண்
வருமுடற் குறைக்க ஒக்கக் குறைந்துபின் மாயும் அன்றே.

(ப - ரை.) உருவினில் நிறைந்து நின்று அங்கு உணர்ந்திடும் உயிரது என்னின் - இனிச் சமணர் உடம்பளவின் நிறைந்துநின்று அங்கேயுணர்வது உயிர் என்பர் எனின், உறக்கம் மருவிடாது வாயில் ஒக்க அறிவு வழங்க வேண்டும் - உறக்கமுறாது ஐம்பொறியினும் ஒருங்கே அறிவு நிகழ்தல் வேண்டும், பேருடற் சிற்றுடற்கண் பெருகிடும் சுருங்கும் போதம் - பேருடல் சிற்றுடல்களாகிய அவ்வவ் உடம்பளவிற்குத் தக்க அறிவாதல் வேண்டும், வரும் உடற்குறைக்க ஒக்கக்குறைந்து பின் மாயும் அன்றே - வருகின்ற உடம்பின் உறுப்பினைக் குறைப்பக் கூடக் குறைந்து பின்மாய்தல் வேண்டும் என்க.

(பொ - ரை.) இனிச் சமணர் உடம்பளவின் நிறைந்து நின்று உணர்வது உயிர் என்பர். அவர் உறக்கமுறுதலும், ஐம்பொறியினும் ஒருங்கே அறிவு நிகழாமையும், அவ்வவ் வுடம்பளவிற்குத் தக்க அறிவாதல் இன்மையும், குறைப்பக் குறையாமையுமாகிய இன்னோரன்னவற்றை நோக்கிலராகலால், அவர் மதமும் அடாது எ - ம். (கஎ)

எங்குந்தான் வியாபி யாய்நின்று உணரும்இவ் ஆன்மா என்னில்
தங்கிடும் அவத்தை போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும்
பங்கமார் புலன்ஒன் றேன்றுப் பார்த்திடல் பகரல் வேண்டும்
இங்கெலாம் ஒழிந்தான் நிற்பது எங்ஙனம் இயம்பல் வேண்டும்.

(ப - ரை.) எங்குந்தான் வியாபியாய் நின்று உணரும் இவ் ஆன்மா என்னின் - இனி ஐக்கிய வாதிகள் (முதல்வன் போல்) எங்கணும் வியாபியாய் நின்றறிவன் இவ்வான்மா என்பர் எனின், அவத்தை தங்கிடும் போக்கு வரவுகள் சாற்றல் வேண்டும் - (அங்ஙனங் கூறுவார்க்கு) அவத்தைகளில் தங்குதலும் போக்குவரவுகள் உறுதலும் (எங்ஙனங்கூடுமென) இயம்பவேண்டும், பங்கம் ஆர் புலன் ஒன்று ஒன்றுப் பார்த்திடல் பகரல்வேண்டும் - குற்றம் பொருந்திய ஐம்புலனும் ஒருங்கே அறியாமையும் (எங்ஙனங் கூடுமெனக்) கூறவேண்டும், இங்கு எலாம் ஒழிந்தான் நிற்பது எங்ஙனம் இயம்பல் வேண்டும் - இங்ஙனம் எல்லா(மாய்) வியாபித்தல் ஒழிந்தானாகி உடம்பினுள் ஏகதேசமாய்) நிற்றலும் எவ்வாறு (கூடுமெனச்) சொல்லவேண்டும் என்க.

(பொ - ரை.) இனி ஐக்கியவாதிகள் முதல்வன்போல் எங் கணும் வியாபியாய் நின்று அறிவன் ஆன்மா என்பர். அங்ஙனங் கூறுவார்க்கு, அவத்தை போக்குவரவுக ளுறுதலும் ஐம்புலனும் ஒருங்கே யறியாமையும், எல்லாமாய் வியாபித்தல் ஒழிந்தானாகி உடம்பினுள் ஏகதேசமாய் நிற்றலும், எவ்வாறு கூடும்? எ - ம்.

ஒழிந்தான் என்றது முற்றெச்சம்.

எல்லாம் என்றது வியாபகம் உணர நின்றது ; ஆக்கச்சொல் வருவித்துரைக்க.

ஒழிந்தால் எனப் பாடம் ஓதி, சங்காரகாலத்தின் எல்லாப்பொருளும் அழிந்தவழி நிற்பது எங்ஙனம் என்றுரைத்து, மூர்த்தப்பொருள் அனைத்தினுஞ் சையோகமாதலே வியாபகமெனவும், அவையனைத்தினையும் அறிதலே முற்றுணர்வு எனவுங் கொண்டு, அங்ஙனங் கூறுவார் மதத்தை அவர் மதமே பற்றி மறுத்தார் எனினும் அமையும். (கஅ)

சுத்தமாம் ஆன்ம சித்தைத் துகளுடல் மறைத்தது என்னின்
வைத்துறுது உடற்கண் வாயில் கரணங்கள் வழியான் ஞானம்
ஒத்துறு மலம்அற் றாலும் உறுமலம் வீடும் இன்றாம்
பெத்தமும் அடையான் முத்த ளைய்ப்பிர காச னாமே.

(ப - ரை.) சுத்தமாம் ஆன்மசித்தைத் துகள் உடல் மறைத்தது என்னின் - (எங்கணும் வியாபகமாய் நின்று அறிவதாய்ச்) சுத்தமாகிய ஆன்மாவின் அறிவைக் குற்றம்பொருந்திய மாயாகாரியந் தடைசெய்து நிற்றலின் (உறக்கம் முதலியன உற்று ஏகதேசப்படுவதாயிற்று என) விடுப்பின் (அது பரிகாரம் அன்று), உடற்கண் வாயில் கரணங்கள் வழியால் ஞானம் வைத்துறுது - உடலினகத்துப் புறக்கரண அகக்கரணங்களின் வழியால் அறிவு (விளங்குவதாகவும் அஃது) இன்றாய்ப் போதலானும், ஒத்துறும் மலம் அற்றாலும் மலம் உறும் வீடும் இன்றாம் -

பொருந்திய வீடு பெற்றவழியும் மலம் உறுமெனப்பட்டு முத்தியென்பது இன்றாய் முடியும் ஆகலானும், பெத்தமும் அடையான் முத்தனாய்ப் பிரகாசனுமே - (வீடுபெற்றபின் உறாதெனின் அநாதி நிலையோடு இதனிடை வேற்றுமை யின்மையான் அநாதியே) பந்தம் உறுதலின்றி முத்தனாய் விளங்குதல் வேண்டும் ஆகலானும் என்க.

(பொ - ரை.) உயிர் எங்கும் வியாபகமாய் நின்று அறிவதாயினும் மாயாகாரியம் அவ்வறிவைத் தடைசெய்து நிற்றலின் உறக்கம் முதலியன உற்று ஏகதேசப்படுவதாயிற்றென விடுப்பின், அது பரிகாரம் அன்று; அறிவு விளங்குதற்கு ஏதுவாய மாயாகாரியம் அதற்கு மறுதலையாய்த் தடைசெய்தல் கூடாமையானும், முன் சுத்தமாயிருந்த உயிரை அது பந்தித்தது எனின், வீடு பெற்ற வழியும் உறும் எனப்பட்டு முத்தி என்பது இன்றாய் முடியும் ஆகலானும், வீடுபெற்றபின் உறாது எனின், அநாதி நிலையோடு இதனிடை வேற்றுமை இன்மையான் அநாதியே பந்தமுறுதலின்றி முத்தனாய் விளங்குதல் வேண்டுமாகலானும் எ-ம்.

அறிவு இச்சை செயல்கள் என்னுஞ் செய்யுள் முதல் இத்துணையும் உயிருண்மை கொண்டு ஆணவமலத்துண்மை கொள்ளாத சமயிகள் தத்தம் மதத்துக்கேற்பக் கூறும் உயிரிலக்கணங்களும் அவை பொருந்தாமையுங் காட்டப்பட்டன. இன்னும் அவ்வம்மதத்தார் வேறுபடக் கூறும் உயிரிலக்கணங்களெல்லாம் இங்ஙனங் கூறியவற்றுள் வைத்துக் கண்டுகொள்க.

அற்றேல், மற்றென்னையோ உயிருக்கு இலக்கணமாவது என்னும் அவ் ஐக்கியவாத சைவரை நோக்கிச் சித்தாந்தங் கூறுமுகத்தால், 'யான் எனது என்பது இணைதரும் ஆற்றைச்' (சூத். ௪. செ. க.) சாதித்தற்கெழுந்தது வருஞ் செய்யுள் என்பது. (கக)

அசித்தரு வியாப கம்போல் வியாபகம் அருவம் இன்றாய்
வசித்திட வரும்வி யாபி எனும்வழக் குடையன் ஆகி
நசித்திடா ஞானச் செய்தி அநாதியே மறைத்து நிற்கும்
பசுத்துவம் உடையன் ஆகிப் பசுவென நிற்கும் ஆன்மா.

(ப - ரை.) அசித்து அரு வியாபகம்போல் - (ஒருவாற்றானும்) அசித்தாதல் அரிய வியாபகப் பொருள்போல, வியாபகம் - (ஔபச்சிலேடிக) வியாபகமாதலும், அருவம் இன்றாய் - (அதுபற்றி) அதிசூக்குமசித்தாதலும் இன்றி, வசித்திடவரும் வியாபியெனும் வழக்கு உடையனாகி - அதுவதுவாய் வசிப்புண்ணும் வியாபகமாம் வழக்குடைத்தாய், அநாதியே பசுத்துவம் மறைத்து நிற்கும் நசித்திடா ஞானச்செய்தி உடையனாகிப் பசுவென நிற்கும் - அநாதியே பசுத்துவமெனப்படும் ஆணவமலத்தின் மறைப்புண்டு கிடக்கின்ற அழியாத இச்சாஞானக்கிரியைகளையுடைத்தாய்ப் பசுவெனப்படுந் தூலசித்தாகியும் நிற்கும், ஆன்மா - உயிர் என்க.

(பொ - ரை.) ஒருவாற்றானும் அசித்தாதல் அரிய வியாபகப் பொருள்போல ஔபச்சிலேடிக வியாபக மாதலும் அது

பற்றி அதிசூக்கும சித்தாதலும் இன்றி, அதுவதுவாய் வசிப்புண்ணும் வியாபகமாதலும், அநாதியே பசுத்துவம் எனப்படும் ஆணவமலத்தின் மறைப்புண்டு கிடக்கும் இச்சாஞானக்கிரியைகளை உடைத்தாய்ப் பசுவெனப்படுந் தூலசித்தாதலும் உடையது உயிர் எ - ம்.

[1]'உறற்பால—தீண்டா விடுதல் அரிது' என்றாற்போல அருமை ஈண்டு இன்மை குறித்து நின்றது.

அருவமென்றது, [2]'இல்லா—அருவாகி நின்றானை' என்றாற்போல, அதிசூக்குமமாதலை யுணர்த்தி ஆகுபெயராய் நின்றது; இதற்குப் பிறரெல்லாம் இயைபற உரைத்தார்.

இதனானே உயிருக்கு அநாதி நிலையாகிய தன்உண்மை கூறப்பட்டது. (உ0)

மாயையின் வயிற்றுள் மன்னி வருஞ்செயல் ஞானம் இச்சை
ஏயும்அக் கலாதி மூன்றால் ஏகதே சத்தின் ஏய்ந்திங்கு
ஆயுமுக் குணங்கள் அந்தக் கரணங்கள் ஆதி எல்லாங்
காயபேத் தங்க ளாகிக் கலந்துடன் நிற்கும் ஆன்மா.

(ப - ரை.) ஆன்மா - (அங்ஙனம் பசுத்துவ மாத்திரையாற் கேவலப்பட்டு நின்ற) ஆன்மா, மாயையின் வயிற்றுள் மன்னி - (அதன்பின்) அசுத்தமாயையில் (அனந்த தேவராற் கலக்குண்ட பாகமாகிய) காரண சரீரத்தைப் பொருந்தி, ஞானம் இச்சை செயல்வரும் - அவ் அறிவு இச்சை செயல்கள் (பொதுவகையாற் சமட்டிரூபமாய்) விளங்கப் பெறும், ஏயும் அக்கலாதி மூன்றால் ஏய்ந்து - (அதன்பின்) அம்மாயா தத்துவத்தி னின்றுந்தோன்றுங் கலாதிகளாகிய கஞ்சுக சரீரத்தைப் பொருந்தி, ஏகதேசத்தின் இங்கு ஆயும் - (அவை) வியட்டி ரூபமாய்ப் பிரிந்து தோன்றி (ச் சிறப்புவகையான்) விளங்கப்பெறும், அந்தக் கரணங்கள் ஆதி பெத்தங்கள் முக்குணங்களாகி - (அதன் பின்) அந்தக் கரண முதலியவற்றைத் தம்முள் அடக்கிநிற்கும் முக்குணங்களாகிய குணசரீரத்தைப் பொருந்தி, எல்லாம் காயம் கலந்து உடன்நிற்கும் - (அவ்வறிவு இச்சை செயல்கள் முன்னர்க் கூறப்படும்) இருசரீரங்களிடமாக வரும் விடயங்களின் வியாபரிக்கப்பெறும் என்க.

(பொ - ரை.) அங்ஙனம் பசுத்துவ மாத்திரையாற் கேவலப்பட்டு நின்ற ஆன்மா, அதன்பின் அசுத்த மாயையில் அனந்த தேவராற் கலக்குண்ட பாகமாகிய காரண சரீரத்தைப் பொருந்தி, அவ்வறிவு இச்சைசெயல்கள் பொதுவகையாற் சமட்டி ரூபமாய் விளங்கப்பெறும். அதன்பின் அம்மாயாதத்துவத்தினின்றுந் தோன்றுங் கலாதிகளாகிய கஞ்சுகசரீரத்தைப் பொருந்தி அவை வியட்டி ரூபமாய்ப் பிரிந்துதோன்றிச் சிறப்புவகையான் விளங்கப்பெறும். அதன்பின் அந்தக்கரணம்

1. (ஈண்டுநீர்), நாலடியார், பழவினை, ௬.
2. (இல்லா முலைப்), சிவஞானபோதம், எட்டாஞ்சூத்திரம், ரு.

முதலியவற்றைத் தம்முள் அடக்கி நிற்கும் முக்குணங்களாகிய குணசரீரத்தைப் பொருந்தி அவ்வறிவு இச்சை செயல்கள் முன்னர்க் கூறப்படும் இருசரீரங்களிடமாக வரும் விடயங்களின் வியாபரிக்கப்பெறும் எ - ம்.

இங்ஙனம் பரசரீரம் மூவகைப்படும் எனக் கொள்க.

மாயையிற் கலக்குண்ட பாகத்தை வயிருக உருவகஞ்செய்தார்; மேலே 'மாயாள்தன் வயிற்' (சூத். உ. செ. சுங.) றென்றதும் அது; அதுவே அசுத்தமாயா தத்துவம் எனத் தத்துவங்களிடை வைத் தெண்ணப்படுவதூஉம் என்க.

மன்னிவருமென்னும் வினையெச்சமுடிபு காரணகாரியப் பொருட் டாய் நின்றது; ஏகதேசத்தின் எய்ந்து என முன்வருதலின் ஈண்டு வரும் என்பதற்கு அது பொருளாதல் அறிக.

[1]"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர்" என்றாற்போல, எல்லா வற்றானுமென்னுஞ் சாரியையும் உருபும் விகாரத்தால் தொக்கன.

காயம் ஆகும்பெயர்.

ஆகிக் கலந்து நிற்குமென ஒற்றுமைபற்றிக் குணவினை குணிமே லேற்றப்பட்டது. (உக)

சூக்கும தேகி யாகித் தூலரூ பத்தின் மன்னிச்
சாக்கிர முதலா யுள்ள அவத்தையுள் தங்கி யெங்கும்
போக்கோடு வரவும் எல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவம்
ஆக்கியும் பலன்கள் எல்லாம் அருந்தியும் நிற்கும் ஆன்மா.

(இ - ள்.) ஆன்மா - (அங்ஙனம் பரசரீர மூன்றையு முறையா னெய்திய) ஆன்மா, சூக்கும தேகியாகி - பின் சூக்கும தேகத்தைப் பொருந்தி, எங்கும் போக்கொடு வரவுமெல்லாம் புரிந்து - யாண்டும் போக்குவரவுகள் செய்து, புண்ணியம் பாவங்கள் பலன்களெல்லாம் ஆக்கியும் அருந்தியும் - (சூக்குமமாகிய) இருவினைப் பயன்களை ஈட்டியும் நுகர்ந்தும், தூலரூபத்தின் மன்னி-பின் தூலசரீரத்தைப் பொருந்தி, (எங்கும் போக்கொடு வரவுமெலாம் புரிந்து) - எங்கணும் போக்கு வரவுகள் செய்து, (புண்ணியம் பாவங்கள் பலன்களெல்லாம் ஆக்கியும் அருந்தியும்) (தூலரூபமாகிய) இருவினைப் பயன்களை ஈட்டியும் நுகர்ந் தும், சாக்கிரமுதலாயுள்ள அவத்தையுள் தங்கி நிற்கும் - (இவ்வாறு அதீத) முதற்சாக்கிரம்(ஈறாய்) உள்ள ஐந்தவத்தைப்பட்டு நிற்கும் என்க.

(பொ - ரை.) அம்மூன்றையும் முறையான் எய்தியபின் சூக்குமதேகத்தைப் பொருந்திப் போக்குவரவு செய்து சூக்கும வினைப்பயன்களை ஈட்டியும் நுகர்ந்தும், தூலசரீரத்தைப் பொருந் திப் போக்குவரவு செய்து தூலவினைப்பயன்களை ஈட்டியும்

1. திருக்குறள், அன்புடைமை, உ.

நுகர்ந்தும், இவ்வாறு அதீதமுதல் அஞ்சவத்தைப்பட்டு நிற்கும் எ - ம்.

சாக்கிரமுதலென்றது ஒடுங்குமுறைபற்றிக் கூறியதென அறிக. ()

மருவா னந்தம் விஞ்ஞானம் மனோபி ராணன் அன்னமயம்
உருவாந் தன்மை யுண்டாய்முன் ஒன்றுக்கு ஒன்று சூக்குமமாய்
வருமாம் அன்ன மயம்பற்றி மாயை முதற்கா ரணமாகும்
அருவாய் ஆன்மா ஐங்கோசத் தார்ப்புண் டவற்றின் அகம்புறமாம்.

(ப - ரை.) முதற்காரணமாகும் மாயை உருவாந்தன்மை உண்டாய் - (காரணசரீரம் முதலிய அவ் ஐந்தும் அவ்வாறு) முதற் காரணமாகிய மாயையின் நின்றுந் தோன்றி (ஆன்மாவுக்கு) வடிவாய், மருவு ஆனந்தம் விஞ்ஞானம் மனோ பிராணன் அன்னமயம்-(முறையே) பொருந்திய ஆனந்தமயகோசமும் விஞ்ஞானமயகோசமும் மனோமய கோசமும் பிராணமயகோசமும் அன்னமயகோசமுமாகிய ஐவகைப் பெயர் பெற்று, அன்னமயம் முன்பற்றி ஒன்றுக்கு ஒன்று சூக்குமமாய் வருமாம் - அன்னமய முதலாக்கொண்டு ஒன்றற்கு ஒன்று சூக்குமமாய் நிற்க, அருவாய் ஆன்மா - (கேவலத்தில்) ஒன்றும் இன்றி மலம் மாத்தி ரையாய் நின்ற ஆன்மா, ஐங்கோசத்து ஆர்ப்புண்டு அவற்றின் அகம் புறமாம் - இவ் ஐங்கோசங்களில் (அதுவதுவாய்) வசிப்புண்டு (ஏகதேசி யாய்) அவைகளிற் போக்குவரவு செய்துநிற்கும் என்க.

(பொ-ரை.) காரணசரீரம் முதலிய அவ் ஐந்தும், அவ்வாறு மாயையினின்றுந் தோன்றி ஆன்மாவுக்கு வடிவாய் முறையே ஆனந்தமயகோசம் முதலிய ஐவகைப் பெயர் பெற்று ஒன்றற்கு ஒன்று தூலமாய் நிற்க, கேவலத்தில் ஒன்றும் இன்றி மலமாத் திரையாய் நின்ற ஆன்மா இவ்ஐங்கோசங்களில் அதுவதுவாய் வசிப்புண்டு ஏகதேசியாய்ப் போக்குவரவு செய்துநிற்கும் எ - று.

கேவலத்தில் ஒன்றும் இன்றி நின்ற ஆன்மா, மாயையில் அங்ஙனங் கலக்குண்ட பாகத்தை முதற்கண் பொருந்தி அறிவு இச்சை செயல்கள் பொதுமையான் அவ்வளவு விளங்கப்பெற்ற மாத்திரையே அம்மயக் கறிவால் ஓர் ஆனந்தம் உண்டாகப் பெறுதலின், அஃது ஆனந்தமய கோசம் எனப்பட்டது.

ஏனையவுங் காரணக்குறியாமாறு உய்த்துணர்ந்துகொள்க.

இவ்ஐங்கோசங்கட்கு வேறு வேறு பொருள் கூறுவார் மதங்களை யெல்லாம் மறுத்தற்பொருட்டு, இவ்வாறு எடுத்தோதி மாயை முதற் காரணமாகும் என்றுங் கூறினர்.

ஆன்மா இத்தரை கீழ்மேலுங் கொள்ளிவட்டங் கறங்கென நிமிடத் தின்கண் அலமரும்படி கொண்டுதிரிதரல்பற்றி, இவ்வைங்கோசங்களை ஐந்து பறவையாகவும் அவற்றுள் ஒரோ ஒன்றை ஐவகைப்படுத்து முக முதலிய உறுப்புக்களாகவும் வேதத்துள் உருவகஞ்செய்து உணர்த்திய வாறு என்க.[1]

---

1. தைத்திரீயம் - பிரமானந்தவல்லி.

ஆன்மாவின் உண்மை உணர்தற்கு இவற்றை இங்ஙனம் பகுத்தறிதலும் ஒரு சாதனம் எனக்கொள்க.

இவை மூன்று செய்யுளானும், பசுத்துவ உபாதியான் மறைப்புண்டு நின்ற அவ்வறிவு இச்சை செயல்கள் பின் ஒருபுடை விளங்கி அவத்தை போக்கு வரவு முதலிய உறுதற்குரிய உபாதி கூறுமுகத்தால், வசித்திட வருமாறு தெரித்துணர்த்தப்பட்டது.

இன்னும் ஆன்மாச் சார்ந்ததின் வண்ணமாய் வசித்திட வருமாற்றிற்குச் சருவஞானோத்தரத்தில் அவ்வச் சார்பு விசேடம் பற்றிப் பூதான்மா முதல் அறுவகை[1]ப்படுத்துத் தொகுத்தும் விரித்தும் ஓதியதூஉம் ஈண்டுய்த் துரைத்து உணர்ந்து கொள்க. (உங)

தோற்பாவைக் கூத்துந் தோல்லை மரப்பாவை இயக்க முஞ்சீர்த்
தேர்ப்பாரின் செலவும் வேறுய்ச் செலுத்துவோர் செய்தி தானும்
பார்ப்பாய வேடங் கட்டி ஆடுவோர் பரிசு போலும்
ஆர்ப்பாய காயந் தன்னை ஆன்மாநின்று ஆட்டும் ஆறே.

(இ - ள்.) ஆர்ப்பாய காயந்தன்னை ஆன்மா நின்று ஆட்டும்ஆறே - பந்திக்கப்பட்ட அன்னமயகோசம் பிராணமயகோசம் மனோமய கோசம் விஞ்ஞானமயகோசம் ஆனந்தமயகோசமாகிய ஐந்தினும் ஆன்மா (வேற்றுமையின்றி) நின்று செலுத்துமாறு, சீர்த் தேர்ப்பாரின் செலவும் - (முறையே) சிறப்புடைய தேரைப் பாரின் செலுத்துவோர் (தன்மை) போலும், தொல்லை மரப்பாவை இயக்கமும் - பழைய மரப் பாவையினை இயக்குவோர் (தன்மை) போலும், தோற்பாவைக் கூத்தும் - தோற்பாவையினை ஆட்டுவோர் (தன்மை) போலும், வேறுய்ச் செலுத்துவோர் செய்திதானும் - பரகாயப் பிரவேசஞ் செய்வோர் தன்மைபோலும், பார்ப்பாய வேடம் கட்டி ஆடுவோர் பரிசு போலும் - வேதியர்வேடம் (முதலிய பல) வேடங்கட்டி ஆடுவோர் தன்மை போலுமாம் என்க.

(பொ - ரை.) அன்னமயகோசம் முதலிய ஐந்தினும் ஆன்மா வேற்றுமை இன்றி நின்று செலுத்துமாறு, முறையே, தேர்ப்பாரின் செலவும் மரப்பாவை இயக்கமுந் தோற்பாவைக் கூத்தும் வேறுய்ச் செலுத்துவோர் செய்தியும் வேடங்கட்டி ஆடுவோர் பரிசும் போலும் எ - ம்.

வேறுய்ச் செலுத்துவோர் செய்தி என்றது பரகாயப் பிரவேசத்தை.

இவை ஐந்தும் முறையே ஒன்றற்கொன்று அந்தரங்கமாய் அவ் ஐங்கோசங்களினும் ஆன்மா நின்று செய்யும் ஆற்றிற்கு உவமையாமாறு தெரிந்துணர்ந்து கொள்க.

செய்யுளாகலின் முறை பிறழவைத்தார். காயம் சாதி ஒருமை.

1. சிவஞானபோதம், சூ. சூ. அதி. உ - 'அதுவென்னு', பேருரை.

இதனானே ஆன்மா அங்ஙனம் வசித்திடவரினும் அவ் ஏகதேசப் பொருள்கட்கு வேறாய் வியாபியெனும் வழக்குடையனாதல் அவற்றைச் செலுத்துமாற்றின் வைத்து உணர்த்தப்பட்டது. (௨௪)

என்உடல் பொறிபி ராணன் கரணம்என் உணர்வென் றக்கால்
தன்னின்வே றாகும் நீயென் தன்மனை என்ற எல்லாம்
நின்னின்வே றாகும் என்னின் நீங்கிடா இவையிங் கென்னின்
உன்னின ஆகும் நீயாம் உகிர்மயிர் உகவுங் காண்டி.

(ப - ரை.) என் தன்மனை என்ற எல்லாம் நின்னின் வேறாகும் - என்மனை (என்பதி) என்று (அபேதமாய் வழங்கி வந்தன) எல்லாம் உனக்கு வேறாதல் (கண்டாற்) போல, என் உடல் பொறி பிராணன் கரணம் என் உணர்வு என்றக்கால் நீ தன்னின் வேறாகும் - (உனது அன்று ஆகிய) உடல் பொறி பிராணன் கரணங்களைத் தனித்தனி எனது என்றும் (அங்ஙனம் உணர்ந்த பாசஉணர்வை) என் உணர்வு என்றும் அபேதமாகக் கூறிக்கொண்டு நீ அவைகளின் வேறாய் நிற்றி காண், இவை இங்கு என்னின் நீங்கிடா என்னின் (மனை முதலிய புறப் பொருள்கள் என்னின் வேறாதல்கூடும்) உடல் பொறி முதலியவை என்னைவிட்டு நீங்கமாட்டா எனின், உன்னினவாகும் நீயாம் உகிர் மயிர் உகவும் காண்டி - உன்னுடையனவாகி அபேதமாய் எனதென்று வழங்கப்பட்டு நகம் மயிர் முதலிய சில நீங்குதலுங் காணப்படுதலால் (இதனானும் ஆன்மா அவற்றிற்கு வேறென்பது அறியப்படும்) என்க.

(பொ - ரை.) தன்மனை முதலியவற்றோடு ஒப்ப எனது என்று வழங்கப்பட்டுச் சில நீங்குதலுங் காணப்படுதலால், இதனானும் ஆன்மா அவற்றிற்கு வேறு என்பது அறியப்படும் எ-ம்.

உன்னின என்பது இன் சாரியை பெற்ற அகரவீற்றுப் பலவறி சொல்.

அற்றேல், உடல் பொறி முதலியவற்றை எனது என்பது, தன் மனை முதலியவற்றை எனது என்றதுபோலன்றி இராகுவினது தலை யென்றாற்போல அபேதம்பற்றிக் கூறுங் கருத்தேயாகலின், உரைப் போர் குறிப்பொடு படுத்துக் காணுங்கால் அவ்விருவகை வழக்கிற்குந் தம்முள் வேறுபாடு உண்மையின், அவை தம்முள் ஒக்குமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி வேறு உவமை எடுத்துக் காட்டி உணர்த்துதற்கு எழுந்தது வருஞ் செய்யுளென்பது. (௨௫)

பொன்அணி ஆடை மாலை போதுமே லான போதிங்கு
என்அணி யானென் றுன்னி இருந்தனை பிரிந்த போது
நின்அணி நீயும் அல்ல ஆயினை காயம் நின்னின்
அன்னியம் ஆகும் உன்னை அறிந்துநீ பிரிந்து பாரே.

(ப - ரை.) பொன் அணி ஆடை போது மாலை மேலானபோது - பொன்னால் இயன்ற ஆபரணம் ஆடை அலராலாய அலங்கல் முதலிய (புறப்பொருள்கள்) அணிந்தபோது, இங்கு என் அணி யான் என்று உன்னி இருந்தனை - இவ்விடத்து என்அணி யானென்று (அபேதம்

பற்றிய கருத்தான்) நினைந்திருந்த நீ, நின்அணி பிரிந்த போது நீயும் அல்ல ஆயினை - நின்ஞல் அணியப்பட்ட (அப்புறப் பொருள்களாகிய அணிகலம் முதலாயின) நீங்கியபோது (உனக்கு அன்னியமாய்) நீ அல்ல ஆயினாற்போல, காயம் நின்னின் அன்னியமாகும் - உடல்பொறி முதலிய அனைத்தும் நின்னிலிருந்து அயலாகும் ஆகலால், உன்னை அறிந்து நீ பிரிந்து பாரே - உன் உண்மையை அறிந்து நீ (இவற்றை) நீங்கி நின்று அறிவாயாக என்க.

(பொ - ரை.) உடல்பொறி முதலியவற்றை எனது என்றல், இராகுவினது தலையென்றாற்போலச் சிறுபான்மை வழக்க மாதலின்றிப் பெரும்பாலும் யாண்டும் யாரும் வழங்கக் காண்டலின், அவற்றைஅபேதம் பற்றிய கருத்தால் எனது என்றல் மெய்ப்படுத்த அணிகலம் முதலியவற்றை யவ்வாறு எனது என்றல்போல அறிந்து பிரிந்து பாராத மடமையே பிறிதன்று எ -ம். (உசு)

உடலியான் அல்லேன் இந்த உணர்வுயான் அல்ல ஆன
கடனியா தென்னின் வேறு கண்டுணர்வு என்ன தென்கை
இடரிலா என்தன் ஆன்மா என்றபோது ஆன்மா வேறோ
திடனதா உயிரை வேறு கண்டிடார் செப்ப லேகாண்.

(ப - ரை.) இடர் இலா என்றன் ஆன்மா என்றபோது ஆன்மா வேறோ - (ஆன்மாவைக்) குற்றமில்லாத என்னுடைய ஆன்மா என்ற பொழுது (யான் வேறு) ஆன்மா வேறன்றாகவும் (எனதென்றல்), திடனதா உயிரை வேறு கண்டிடார் செப்பலே காண் - உறுதியாக உயிரை வேறாகக் காணுங் கருத்தின்றி (இராகுவினது தலையென்றாற்போல) ஒருசாரார் கூறுஞ் (சிறுபான்மை) வழக்காகலின் (அஃது அபேதம் பற்றிய வழக்கென அமையும்), இந்த உணர்வு யான் அல்லவான கடன் யாதென்னின் - இந்த விஞ்ஞானமயகோச (ஆனந்தமயகோச)ங்கள் யானல்லேனாகிய முறைமை யாதெனின், உணர்வு என்னது என்கை வேறு கண்டு - இவ்விருவகைக் கோசங்களை எனதென்றல் (ஏனைக் கோசங்கள் போல) வேறாகக் காணுங் கருத்தால் (எல்லாராஹும் வழங் கப்படும் பெரும்பான்மை வழக்காகலின் அஃது அதுபோல அபேதம் பற்றிய வழக்கென அமையாமையின் அவையும்), உடல் யான் அல் லேன் - ஏனைய உடல் முதலியனபோல உயிரின் வேறே யாம்என்க.

(பொ - ரை.) ஆன்மாவை எனது என்றல் வேறாகக்காணுங் கருத்தின்றி இராகுவினது தலையென்றாற்போல ஒரு சாரார் கூறுஞ் சிறுபான்மை வழக்காகலின் அஃது அபேதம் பற்றிய வழக்கென அமையும், விஞ்ஞானமயகோசம் ஆனந்தமயகோ சங்களை எனது என்றல் ஏனைக்கோசங்கள்போல வேறாகக் காணுங் கருத்தால் எல்லாராஹும் வழங்கப்படும் பெரும்பான்மை வழக்காதலின் அஃது அதுபோல் அபேதம் பற்றிய வழக்கென அமையாமையின் அவையும் ஏனையபோல உயிரின் வேறேயாம் எ - ம்.

விஞ்ஞானமயகோசம் உயிரின் வேறாதல் கூறவே இனம்பற்றி ஆனந்தமயகோசம் உயிரின் வேறாதலும் அதனாற் காணப்படும்.

உணர்வு என்னது என்கை வேறுகண்டு ஆகலான் இந்த உணர்வு யானல்ல வான கடன் எனக்கூட்டுக.

கண்டிடாரென்பது முற்றெச்சம். (உஎ)

புந்தியை மனமது என்றும் மனமது புந்தி என்றும்
சிந்தையைச் சீவன் என்றுஞ் சீவனைச் சிந்தை என்றும்
முந்தனை ஆன்மா என்றும் ஆன்மாவை முந்தன் என்றும்
வந்திடும் எந்தன் ஆன்மா என்றது மற்றொன் றைக்காண்.

(ப - ரை.) புந்தியை மனமது என்றும் மனமது புந்தி என்றும்- புத்தியை மனம் என்றும் மனத்தைப் புத்தி என்றும், சிந்தையைச் சீவன் என்றும் சீவனைச் சிந்தை என்றும் - சித்தத்தை ஆன்மா என்றும் ஆன்மாவைச் சித்தம் என்றும், முந்தனை ஆன்மா என்றும் ஆன்மாவை முந்தன் என்றும் வந்திடும் - காரணங்கட்கெல்லாம் பரமகாரணனாகிய சிவபிரானை ஆன்மா என்றும் ஆன்மாவைச் சிவபிரான் என்றும் (இங்ஙனம் ஒவ்வோர் அவதரங்களின் உபசாரமாகக்) கூறப்படும், எந்தன் ஆன்மா என்றது மற்றொன்றைக்காண் - (அல்லதூஉம் உள்ளவாறு நோக்குவார்க்கு) எந்தன் ஆன்மா என்னும் வழக்கில் ஆன்மா என்றது தன்னோடு இயைபுடைய பிறிதொன்றின்மேல் ஆகுபெயராய் நிற்கும் (ஆகலான் அவ்வழக்குப்பற்றி நின்கருத்து நிரம்புமாறில்லை) என்க.

(பொ - ரை.) அல்லதூஉம், உள்ளவாறு நோக்குவார்க்கு என்தன் ஆன்மா என்னும் வழக்கில் ஆன்மா என்றது தன்னோடு இயைபுடைய பிறிதொன்றின்மேல் ஆகுபெயராய் நிற்கும் ஆகலான், அவ்வழக்குப் பற்றி நின்கருத்து நிரம்புமாறு இல்லை. எ - ம்.

ஆகலான் அவ்வழக்குப்பற்றி நின்கருத்து நிரம்புமாறு இல்லையென்பது குறிப்பெச்சம்.

அவ்வாறு ஆகுபெயராய் ஆண்டாண்டு வருதலை எடுத்துக்காட்டுவார், புந்தியை மனமதென்றும் மனமது புந்தியென்றும் சிந்தையைச் சீவன் என்றும் சீவனைச் சிந்தை என்றும் முந்தனை ஆன்மாவென்றும் ஆன்மாவை முந்தன் என்றும் வந்திடும் என்றார்.

ஏனை மூவகைக்கோசம் மாத்திரையே வேறெனக்கொண்டு விஞ்ஞான மயகோசம் ஆனந்தமயகோசம் இரண்டும் முறையே சீவான்மாவும் பரமான்மாவுமாம் என்பார் மதத்தை மறுத்தற் பொருட்டு, அவற்றை இங்ஙனம் வேறு எடுத்தோதி வலியுறுத்தவாறு.

இவை நான்கு செய்யுளானும் உலகவழக்கின் வைத்துணர்த்தி மேலது வலியுறுத்தப்பட்டது. (உஅ)

அறிவுடல் சிந்தை ஆன்மா அணைதலால் ஆன்மா என்பர்
எறிசுடர் விளக்கு இருக்கும் இடத்தையும் விளக்கென் றுற்போல்
பொறிபுலன் கரணம் எல்லாம் புலப்படும் அபேத மாகிப்
பிறிதரா தறிவது ஆன்மா அறிபொருள் பின்னம் ஆமே.

(ப - ரை.) *அறிவு உடல் சிந்தை ஆன்மா அணைதலால் ஆன்மா என்பர் - (ஆன்மாவின் வேறுகிய) அறிவு முதலிய அவ்வைங்கோசங் களை ஆன்மாப் பொருந்தல் பற்றி ஆன்மாவென உபநிடதங்களிற் கூறி யது என்பர் (அதுவும்), சுடர் எறி விளக்கு இருக்கும் இடத்தையும் விளக்கென்றுற்போல் - ஒளியை வீசும் விளக்கிருக்கின்ற தகழியை விளக்கென்றுற்போல(த் தானியாகு பெயராதற்குரிய இயைபுபற்றியே யன்றிப் பிறிதில்லை யாகலால்), பொறி புலன் கரணமெல்லாம் புலப் படும் அபேதமாகிப் பிறிதராது அறிவது ஆன்மா - பொறி புலன் கர ணம் முதலிய எல்லாவற்றின்கண்ணும் அறியப்படும் அபேதமாய்ப் பிரிதலின்றி அறிவதாகிய ஆன்மா, அறி பொருள் பின்னம் ஆமே-அறி யப்படும் அப்பொருள்கட்கு வேறு என்க.*

(பொ - ரை.) ஆன்மாவின் வேறுகிய அவ் ஐங்கோசங் களை ஆன்மா என உபநிடதங்களிற் கூறியதூஉம், விளக்குத் தகழியை விளக்கென்றுற்போலத் தானியாகுபெயராதற்கு உரிய இயைபுபற்றியே அன்றிப் பிறிதில்லை ஆகலால், அவை எல்லா வற்றின்கண்ணும் அபேதமாய்ப் பிறிதலின்றி அறிவதாகிய ஆன்மா அவற்றிற்கு வேறு எ - ம்.

*அறிவு உடல் சிந்தை என்றதும் பொறி புலன் கரணம் என்றதும் உபலக்கணம்.*

*எல்லாவற்றின்கண் என்னும் ஏழாவதும் அறிபொருட்கு என்னும் நான்காவதும் விகாரத்தால் தொக்கன.*

*அபேதமாகிப் பிறிதராது என்றது * "ஞானதிரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றல்" என்றுற்போலக் கொள்க.*

*இதனனே ஐங்கோசங்களை ஆன்மா என்னும் உபநிடதத்திற்குத் தாற்பரியங் கூறி மேலது வலியுறுத்தப்பட்டது.* (உக)

கண்டுணர் புருடன் வேறு கனவுகண்டு ஒடுங்கிக் காயம்
உண்டியும் வினையும் இன்றிக் கிடந்துயிர்த் திடஉ ணர்ந்து
கண்டிடுங் கனவுஞ் சொல்லி ஒடுக்கமுங் கருதி வேறுய்
உண்டியும் வினையும் உற்றிங்கு உணர்த்திட உணரா நிற்கும்.

(ப - ரை.) *கனவு கண்டு ஒடுங்கி உண்டியும் காயம் வினையும் இன் றிக்கிடந்து உயிர்த்திட உணர்ந்து - அன்னமயகோசம் முதலிய நான் கனையும்ஒரோ ஒன்றுக விட்டு விட்டு ஐந்து அவத்தைப்பட்டு விழித்தபின், இங்கு உணர்த்திட - இங்கே (அவை கூடிநின்று) அறிவிக்க, கண்டிடும்*

---

* சிவஞானபோதம், நான்காஞ் சூத்திரம், உ.

கனவு சொல்லியும் - (முறையே) காணப்பட்ட கனவைச் சொல்லியும், ஒடுக்கம் கருதியும் - சுழுத்தியினைக் கருதியும், வேறாய் உண்டியும் வினையும் உற்று உணரா நிற்கும் - அவைகட்கு வேறாய் (உண்டி வினைகளின்றிக் கிடந்து உயிர்த்த துரிய துரியாதீதங்களை) உண்டி வினைகள் உறுதலாகிய மறுதலையின் வைத்தும் (அங்ஙனம் அவத்தைப் பட்டவாற்றை) அறியா நிற்கும் ஆகலால், கண்டு உணர் புருடன் வேறு- (இதனானும்) கண்டறியப்பட்ட உயிர் (அவற்றின்) வேறு எனத் தெளியப்படும் என்க.

(பொ - ரை.) அன்னமயகோசம் முதலிய நான்கனையும் ஒரோ ஒன்றாக விட்டுவிட்டு அஞ்சு அவத்தைப்பட்டு விழித்த பின், அவை கூடிநின்று அறிவிக்க முறையே சொல்லியுங் கருதியும் உண்டிவினை உறுதலாகிய மறுதலையின் வைத்தும் அங்ஙனம் அவத்தைப்பட்டவாற்றை அறியாநிற்கும் ஆதலால், இதனானும் உயிர் அவற்றின் வேறு எனத் தெளியப்படும் எ - ம்.

அவை கூடிய பின் அன்றி அறிவு நிகழாமையால் அறிதற்கு அவை ஏதுவாதல் பெறப்பட்டது.

ஒடுக்கம் என்றது சுழுத்தியை; அது கனவுபோற் சொல்ல வாராமையிற் கருதி யுணர்தற்பாலதாயிற்று.

சித்தமுஞ் செல்லாத ஏனையிரண்டுங் கருதவும் வாராமையின் மறுதலையின் வைத்து உணர்தற்பாலவாயின.

உணர்ந்தபின் என்றது உணர்ந்தெனத் திரிந்து நின்றது; உணர்தல் ஈண்டுத் துயில் எழுதன்மேற்று.

இதனானே அவத்தைப்படும் இயல்பின் வைத்துணர்த்தி மேலது வலியுறுத்தப்பட்டது.

தோற்பாவை யென்பது முதல் இத்துணையுங் கூறியவாற்றான் மேலைச் சூத்திரத்தின் "உற்றுச் செயிருறும்" (சூத். ௩. செ. க.) என்பது முதலிய நாற்கூற்றுப் பொருளையும் வலியுறுத்தவாறும் ஆயிற்று. (௩௦)

புருடனே அறிவன் ஆகில் பொறிபுலன் ஆதி போதந்
தருவதேன் அறிவு மாயா தனுகர ணாதி பற்றி
வருவதிங்கு அநாதி ஆக மலத்தினின் மறைந்து நிற்பன்
அருவனாய் இவற்றோ டாளும் அமைச்சரும் அரசும் போல்வன்.

**(ப - ரை.)** புருடன் அறிவனே ஆகில் - ஆன்மா (முதல்வன்போலச்) சுத்த சித்தேயாகின், பொறி புலன் ஆதி போதம் தருவது என்- மாயாகாரியங்களைப் பற்றிநின்று அறிதல் வேண்டா, இவற்றோடு அமைச்சரும் ஆளும் அரசும் போல்வன் - (அவ்வாறன்றி) அமைச்சரும் ஆளுகின்ற அரசும்போல அவற்றுடன் நின்று, மாயா தனு கரணாதி பற்றி இங்கு அறிவு வருவது - அம்மாயா கருவிகளைப் பற்றி இங்கே அறிதல்

உண்மையால், அநாதியாக மலத்தினின் மறைந்து அருவனாய் நிற்பன்- அநாதியே ஆணவமலத்தின் மறைந்து அருவனாய் நிற்றல் பெறப்படும் என்க.

(பொ - ரை) ஆன்மா முதல்வன்போலச் சுத்தசித்தேயாகின் மாயா காரியங்களைப் பற்றிநின் றறிதல் வேண்டா, அவ்வா றன்றி அமைச்சரும் அரசும்போல் உடன் நின்று மாயாகருவிகளைப் பற்றி அறிதல் உண்மையால் அநாதியே ஆணவமலத்தின் மறைந்து அருவனாய் நிற்றல் பெறப்படும் எ - ம்.

. தேற்ற ஏகாரத்தை அறிவன் என்பதனோடுங் கூட்டி உரைக்க.

என் என்பது ஈண்டு வேண்டாமை குறித்து நின்றது.

போல்வன் என்பது முற்றெச்சம்.

பின்வரும் அனுமானத்தை வலியுறுத்தற்பொருட்டுப் புருடனே அறிவன் ஆகில் பொறிபுலன் ஆதிபோதந் தருவது என் எனத் தருக்கம் எடுத்து ஓதினார்.

இதனானே ஞானச்செய்தி அநாதியே மறைத்து நிற்கும் பசுத்துவம் உடையனாதல் காரியானுமானத்தின் வைத்துணர்த்தி வலியுறுத்தப் பட்டது.

அறிவு இச்சை செயல்கள் என்பது முதல் இத்துணையும் பரமதங் களைப் பரிகரித்து ஆன்மாவுக்கு இலக்கணங் கூறும் முகத்தால் இரண் டாங் கூற்றை வலியுறுத்தவாறு.

இனி ஒன்பது செய்யுளான் மூன்றாங் கூற்றைத் தெரித்துக் கூறுகின்றார். (௩௧)

---

## மூன்றுமதிகரணம்

படைகோடு பவனி போதும் பார்மன்னன் புகும்போது இல்லின்
கடைதோறும் விட்டு விட்டுக் காவலும் இட்டுப் பின்னர்
அடைதரும் தனியே அந்தப் புரத்தினில் அதுபோல் ஆன்மா
உடலினில் அஞ்ச வத்தை உறும்உயிர் காவ லாக.

(ப - ரை.) ஆன்மா - புருடன் (அவற்றொடு அமைச்சரும் அரசும் போலுதலின்), படைகொடு பவனி போதும் பார்மன்னன் - அமைச்சர் படைத்தலைவர் முதலிய பரிசனங்களோடு உலாப்போந்த அவனிமன்னன், இல்லின் புகும்போது - (மீள) மாளிகையின்கண் புகும் இடத்து, கடைதொறும் விட்டு விட்டுக் காவலும் இட்டு - வாயில்கள் தோறும் (அவரவர்க்கு) விடைகொடுத்து (நிறுத்தி)க் காவலும் வைத்து, பின்னர் அந்தப்புரத்தினில் தனியே அடைதரும் அதுபோல் - பின்னர் அந்தப் புரத்தின்கண்ணே தனியே செல்லுமாறுபோல, உடலினில் உயிர் காவலாக - உடம்பின்கண் (முறையே அக்கருவிகளினீங்கிப்) பிராணவாயுவைக் காவலாக (நிறுத்தி), அஞ்சு அவத்தை உறும் - ஐவகை அவத்தை உறும் என்க.

(பொ - ரை.) புருடன் அவற்றொடு அமைச்சரும் அரசும் போலுதலின் அரசன் போல் அவற்றை விட்டு விட்டுச் சென்று ஐவகை அவத்தை உறும் எ - ம்.

இதனானே வெவ்வேறு அவத்தை அணைதரும் ஆறு மேற்கூறிய உவமையொடு படுத்து வகுத்துக் கூறப்பட்டது. (௩௨)

சாக்கிரம் முப்பத் தைந்து நுதலினில் கனவு தன்னில்
ஆக்கிய இருபத் தைந்து களத்தினில் சுழுனை மூன்று
நீக்கிய இதயந் தன்னில் துரியத்தில் இரண்டு நாபி
நோக்கிய துரியா தீதம் நுவலின்மூ லத்தின் ஒன்றே.

(ப - ரை.) நுதலினில் சாக்கிரம் முப்பத்தைந்து - (ஆன்மா அரசன் போல விட்டு விட்டுச் சேறற்கண்) இலாடத்தானத்திற் சாக்கிராவத்தை உறும்வழி முப்பத்தைந்து கருவிகளும், களத்தினில் கனவு தன்னில் ஆக்கிய இருபத்தைந்து - கண்டத்தானத்தில் சொப்பனவத்தை உறும் வழி ஆக்கப்பட்ட இருபத்தைந்து கருவிகளும், நீக்கிய இதயந்தன்னில் சுழுனை மூன்று - நீக்கப்பட்ட இருதயத்தானத்தில் சுழுத்தியவத்தை உறும்வழி மூன்று கருவிகளும், நாபி துரியத்தில் இரண்டு - நாபித்தானத்தில் துரியாவத்தை உறும்வழி இரண்டு கருவிகளும், நுவலின் மூலத்தின் நோக்கிய துரியாதீதம் ஒன்றே - சொல்லுமிடத்து மூலத்தானத்தில் ஆராயப்படுந் துரியாதீதாவத்தை உறும்வழி ஒரு கருவியுமாம் என்க.

(பொ - ரை.) ஆன்மா அரசன்போல விட்டுவிட்டுச் சேறற் கட்படும் அவத்தையாவன : சாக்கிரமுதலியனவாம். அவ்விடங்க

ளாவன : இலாடம் முதலியனவாம். ஆண்டாண்டு நிற்குங் கருவிகளாவன : முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றும்ஆம் எ - ம்.

அசிந்திய விசுவசாதாக்கியத்தில் அவத்தைக்கு நிற்குங் கருவிகளிற் கலாதிகளையும் உடன்கூட்டியெண்ணி நாற்பத்தொன்று முதலியனவாகத்தொகை கூறுதலானும், கலாதிகள் உளவாகவே சுத்தத்துவங்களின் தொழிற்பாடும் ஆண்டுள என்பது பெறப்படுதலானும், கலாதிகள் இல்வழிப் புருடதத்துவம் ஒன்றெனவைத்தெண்ணப்படுதல் செல்லாமையானும், ஈண்டு முப்பத்தைந்து முதலியனவாகத்தொகை கூறியது மலைவாம்போலுமெனின், ஆகாது ; கடைதொறும் விட்டுவிட்டென்ற உவமைக்கேற்ப விடப்படுதன் மாலையவாய் நிற்குங் கருவிகள் மாத்திரைக்கே ஈண்டுத் தொகை கூறப் புகுந்தாராகலானும், அதுபற்றிக் கலாதிகளின் ஐயஞ் செல்லாமைப்பொருட்டு அவற்றைப் புருடதத்துவத்துள் அடக்கி அதனையும் உடன்வைத்தெண்ணினாராகலானும் என்க.

துரியாதீதத்தில் காரணசரீர மாத்திரையே யன்றிக் கஞ்சுக சரீரம் இல்லையென்றது ஆண்டுக்கலாதிகள் வேறு நில்லாது அதனோடு ஒற்றித்து நிற்கும் என்னுங் கருத்தே பிறிதில்லையெனக் கொள்க. (ருரு)

இருவகை சாக்கி ராதி அவத்தைகள் இயல்பு தானும்
ஒருவகை கீழே நூக்கி உற்பவங் காட்டும் ஒன்று
பெருகமேல் நோக்கித் தீய பிறப்பறுத் திடுமி யோகில்
தருவதோர் சமாதி தானுந் தாழ்ந்துபின் சனனஞ் சாரும்.

(ப - ரை.) சாக்கிராதி அவத்தைகள் இயல்புதானும் இருவகை - (மேற்கூறிப்போந்த) சாக்கிர முதலிய அவத்தைகள் ஐந்தும் கீழ்நோக்கிச் சென்று ஒடுங்கும் முறையும் மேல்நோக்கித் தோன்றும் முறையும் பற்றி இருவகைப்படும், ஒருவகை கீழே நூக்கி உற்பவங் காட்டும் - அவற்றுள் ஒன்றாகிய ஒடுங்கு முறையது (கன்மார்ச்சிப்புக் கேதுவாகலாற்) கீழ்ச்செலுத்திப் பிறவிக்கு வித்தாம், ஒன்று பெருக மேல்நோக்கித் தீய பிறப்பு அறுத்திடும் - பிறிதொன்றாகிய தோன்றுமுறையது (கன்ம நுகர்ச்சிக் கேதுவாகலாற்) பரம்பரையில் கொடிய பிறவி அறுதற்குக் காரணமாய் மேற்படும், யோகில் தருவதோர் சமாதி தானும் தாழ்ந்து பின் சனனஞ் சாரும் - (இனி இதயமுதல் துவாதசாந்த மீறாகிய தானங்களில் புறக்கரணம் உட்கரணங்களைப் பற்றியும் பற்றாதும் பிரத்தியாகாரம் முதல் ஐவகைப்பட்டு) நிகழும் யோகாவத்தையும் (அதுபோல) ஒடுங்கியும் பின்னர்த் தோன்றியும் அவ்வாறே பயன் தருவதன்றிப் பிறிதன்று என்க.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த சாக்கிரம் முதலிய ஐந்தும் கீழ்நோக்கிச் சென்று ஒடுங்கும் முறையும் மேல்நோக்கித் தோன்றும் முறையும் பற்றி இருவகைப்படும். அவற்றுள் ஒடுங்கு முறையது கன்மார்ச்சிப்புக்கு ஏதுவாகலாற் கீழ்ச்செலுத்திப் பிறவிக்கு வித்தாம்; தோன்று முறையது கன்மநுகர்ச்சிக்கு ஏதுவாகலால் பரம்பரையில் பிறவி யறுத்தற்குக் காரணமாய் மேற்

படும். இனி இதயமுதல் துவாதசாந்தம் ஈறுகிய தானங்களில் புறக்கரணம் உட்கரணங்களைப் பற்றியும் பற்றுதும் பிரத்தியாகாரம் முதல் ஐவகைப் பட்டு நிகழும் யோகாவத்தையும் அது போல ஒடுங்கியுந் தோன்றியும் அவ்வாறே பயன் தருவதன்றிப் பிறிதன்று எ - ம்.

யோகில் தருவதோர் சமாதி உண்டென்பதும் அனுவாதமுகத் தான் ஈண்டே பெற்றும்.

தாழ்தல் - இழிதல். சனனஞ்சார்தல் - ஏறுதல்.

இந்த யோகாவத்தையைத்தானே மீட்சியில்லாதாகிய ஞானுவத்தை போலுமெனக் கொண்டு மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காமைப் பொருட்டு இதனை அதனோடு ஒப்பவைத்து ஈண்டுக் கூறினர்.

இச் செய்யுளில் கூறிய மூன்று பேதமும் முறையே சகலத்திற் கேவலஞ் சகலத்திற் சகலஞ் சகலத்திற் சுத்தம் எனப்படுமென்க.

இதனுள், இருவகைப் பிறப்பறுத்திடும் என்றது தாப்பிசையாய் அறிதரு முதலவத்தை அடைதரும் இடத்தே ஐந்துஞ் செறிதரும் என வருகின்றதனோடுஞ் சென்றியைந்து பொருள் தரும் ஆகலான் அதற்கும் இவ்வாறு உரைத்துக் கொள்க. (௩௪)

அறிதரு முதல்அவத்தை அடைதரும் இடத்தே ஐந்துஞ்
செறிதருங் கரணந் தன்னிற் செயல்தோறுங் கண்டு கோள்நீ
பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற அருளால் ஆங்கே
குறியோடும் அஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட.

(ப - ரை.) அறிதரு முதல் அவத்தை அடைதரும் இடத்தே - (சாக்கிராதி அவத்தையென மேற்கூறிப்போந்த ஐந்தனுள்) அறிகின்ற முதலவத்தையாகிய சாக்கிரத்தை அடையப் பெறும் இலாடத்தானத்தின் கண்ணேயும், ஐந்தும் செறிதரும் - சாக்கிரமுதல் ஐந்தவத்தையுள வாம், கரணந் தன்னில் செயல்தொறும் நீ கண்டுகொள் - (அவை) கருவியான் (விடயங்களை யறியுஞ்) செய்கைதோறும் (அதிநுணுக்கமாய் இடையீடின்றி நிகழுமாறு நுண்ணுணர்வால்)உன்னல் கண்டுகொள்ளப் படும், பிறிவிலா ஞானத்தோரும் - (இனி இவையேயன்றிப்) பிறிவரிய ஞானத்தை அறிந்தோரும், பிறப்பு அற அருளால் ஆங்கே வீடு கூட - பிறப்பு நீங்கி அவ்வருள் ஞானத்தால் அவ்விடத்து வீடுபேற்றை யடைதற்கு, குறியொடும் அஞ்சவத்தை கூடுவர் - (கேவல சகலங்கள் நீங்கிய சுத்தத்தினும்) அவ்வாறே ஐவகை அவத்தையைக் கூடுவர் (அவை உண்மையதிகாரத்துள் உணர்த்த நின்றன) என்க.

(பொ - ரை.) சாக்கிராதி அவத்தையென மேற்கூறிப் போந்த ஐந்தனுள் முதல் அவத்தையாகிய சாக்கிரத்தானத்தின் கண்ணேயுஞ் சாக்கிரமுதல் ஐந்தவத்தை யுளவாம். அவை கருவியான் விடயங்களை யறியுஞ் செய்கைதோறும் அதிநுணுக்கமாய் இடையீடின்றி நிகழுமாறு நுண்ணுணர்வாற்கண்டு கொள்

ளப்படும். இனி இவையே அன்றிக் கேவல சகலங்கள் நீங்கிய சுத்தத்தினும் அவ்வாறே ஐவகை அவத்தையுள, அவை உண்மை யதிகாரத்துள் உணர்த்த நின்றன எ - ம்.

முதல் அவத்தை அடைதரும் இடமாவது மேற்கூறிய இலாடத் தானம்.

அறிதரும் இடத்தேயென இயையும்.

சுத்தாவத்தையினியல்பு ஈண்டுக் கூறுதற்கோர் இயைபில்லை யாயினும் அவத்தை யெனப்படுவன ஈண்டுக் கூறியவை மாத்திரையே போலும் என மலையாமைப் பொருட்டு இவ்வாறு கூறிஒழிந்தார். (௩௫)

ஐந்துசாக் கிரத்தின் நான்கு கனவினிற் சுழுனை மூன்று
வந்திடுந் துரியந் தன்னின் இரண்டு ஒன்று துரியா தீதந்
தந்திடுஞ் சாக்கி ராதி யவத்தைகள் தானந் தோறும்
உந்திடுங் கரணந் தன்னிற் செயல்தோறும் உணர்ந்து கொள்ளே.

(ப - ரை.) சாக்கிராதி யவத்தைகள் - (அறிதரு முதலவத்தை யடைதருமிடத்தேயென மேற்கூறிப்போந்த) சாக்கிராதி யவத்தைகள் (ஐந்தனுள்), சாக்கிரத்தின் ஐந்து - சாக்கிரத்திற் (சுத்தவித்தை ஈறாகிய) ஐந்து கருவியும், கனவினின் நான்கு - சொப்பனத்தின் (மகேச்சுர மீறாகிய) நான்கு கருவியும், சுழுனை மூன்று - சுழுத்தியிற் (சாதாக்கிய மீறாகிய) மூன்று கருவியும், வந்திடும் துரியந் தன்னின் இரண்டு - வருகின்ற துரியத்திற் (சத்தியீறாகிய) இரண்டு கருவியும், தந்திடும் துரியா தீதம் ஒன்று - பொருந்தப்பட்ட துரியாதீதத்திற் (சிவதத்துவமாகிய) ஒரு கருவியும், தானந்தோறும் - கலாதிகள் தொழிற்படு மிடந்தோறும், கரணந்தன்னில் செயல்தொறும் - கருவியான் (விடயங்களையறியுஞ்) செய்கைதோறும், உந்திடும் உணர்ந்துகொள்ளே - (அக்கலாதிகளைச்) செலுத்திநிற்றலை (நீ நுண்ணுணர்வான்) உணர்ந்து கொள்வாயாக என்க.

(பொ - ரை.) அறிதருமுதலவத்தை அடைதரும் இடத்தேயென மேற்கூறிப்போந்த சாக்கிராதி அவத்தைகள் ஐந்தனுள், சாக்கிரத்தில் சுத்தவித்தை ஈறாகிய ஐந்து கருவியும், சொப்பனமுதலிய நான்கினும் முறையே அவற்றுள் ஒரோவொன்று ஒழித்தொழிந்த கருவியுங் கலாதிகளைச் செலுத்தி நிற்கும் எ - ம்.

தானந்தோறும் - கலாதிகள் தொழிற்படும் இடந்தோறும்.

உந்துதல் - செலுத்துதல்.

இச்செய்யுள் பிறிதோரவத்தைக்கு ஓதியதுபோலுமென மலையாமைப்பொருட்டுக் கரணந் தன்னின் செயல்தொறுங் கண்டுகொள்ளென மேற்கூறியவதனை ஈண்டு மறித்துணர்வு நிகழக் கூறினர் ; இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப.

ஈண்டு ஐந்து நான்கு மூன்று இரண்டு ஒன்றென்றது செலுத்துங் கருவிகளை என்பது, உந்திடும் என்றதனானும் "சுத்தக் கருவிகள் ஐந்துங் கொண்டே சொல் அவத்தை ஐந்துஞ்-சித்திக்கும் போதத்தில் ஒன்றொன்று சென்றிடும்" என்பதனானும் அறிக.

இனி இவ்வாறன்றி அறிதரும் முதல்அவத்தை அடைதரும் இடத்தே ஐந்துஞ் செறிதரும் என மேற்கூறிப் போந்ததனையே ஈண்டு ஐந்து சாக்கிரத்தின் என்று அனுவதித்து ஏனைச் சொப்பன முதலிய வற்றின் முறையே அவை நான்கு மூன்றிரண் டொன்று பொருந்து மென்றவாறாகக் கொண்டு உரைத்தலும் ஒன்று; இப்பொருட்குச் சாக் கிராதி அவத்தைகள் ஐந்தெனக் கூட்டுக; தானம் நுதல் முதலிய இடம்; உந்துதல் பொருந்துதல்.

இவை நான்கு செய்யுளானும் மேல் ஐந்தவத்தை என்றவற்றின் பெயரும், வகையும் இடமும், அவற்றது இயல்பும் இவை என்பது கூறப்பட்டது. (௩௬)

கேவல சகல சுத்தம் என்றுமூன் றவத்தை ஆன்மா
மேவுவன் கேவ லந்தன் உண்மைமெய் பொறிகள் எல்லாங்
காவலன் கொடுத்த போது சகலனும் மலங்கள் எல்லாம்
ஓவின போது சுத்தம் உடையன்உற் பவந்து டைத்தே.

(ப - ரை.) ஆன்மா கேவல சகல சுத்தம் என்று மூன்றவத்தை மேவுவன் - ஆன்மா (அவ்வாறு நிகழும் காரிய அவத்தைகளை உறுதற் குக் காரணமாகக்) கேவலம் சகலம் சுத்தம் என மூன்றவத்தை எய்து வன், கேவலம் தன் உண்மை - அவற்றுட் கேவலமாவது (தன் இச்சா ஞானக் கிரியைகளின் நிகழ்ச்சி சிறிதும் இன்றித்) தான்மாத்திரையே உளனாதலாம், மெய் பொறிகளெல்லாம் காவலன் கொடுத்தபோது சகலனும் - (பின்பு) தனுகரணாதியோடும் முதல்வன் கூட்டக் கூடி (அவை ஒருபுடை விளங்கும்) அவதரத்திலே சகலனும், மலங்களெல் லாம் ஓவினபோது உற்பவம் துடைத்தே சுத்தம் உடையன் - (பின்பு) பஞ்சமலங்களும் நீங்கிப் பிறவி ஒழிந்து (சிவத்தோடு கூடி அவ்இச்சா ஞானக் கிரியைகள் எங்குமாய் வியாபித்து) விளங்கும் அவதரத்திலே சுத்தமுடையனும் எனப்படும் என்க.

(பொ - ரை.) ஆன்மா அவ்வாறு நிகழுங் காரிய அவத்தை களை உறுதற்குக் காரணமாகக் கேவலஞ் சகலஞ் சுத்தம் என மூன்றவத்தை எய்துவன். அவற்றுள் கேவலமாவது தன் இச்சா ஞானக் கிரியைகளின் நிகழ்ச்சி சிறிதுமின்றித் தான் மாத்திரையே உளனாதல்; பின்பு தனுகரணாதியோடுங் கூடி அவை ஒருபுடை விளங்கும் அவதரஞ் சகலம்; பின்பு பஞ்ச மலங்களும் நீங்கிச் சிவத்தோடு கூடி அவ் இச்சா ஞானக் கிரியை கள் எங்குமாய் வியாபித்து விளங்கும் அவதரஞ் சுத்தம் எனப் படும் எ - ம்.

இதனானே மேற்கூறிப் போந்த அவத்தைகட்குக் காரணம் இவை யென்பதூஉம் அவற்றது இயல்புங் கூறப்பட்டன. (௩௭)

---

1. சிற்றம்பலநாடிகள் கலித்துறை, ௩௭.

அறிவிலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்க ளோடுஞ்
செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்கள் இல்லான்
குறியிலன் கருத்தா அல்லன் போகத்திற் கொள்கை யில்லான்
பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தில் ஆன்மா.

(ப - ரை.) ஆன்மா - (மேற்கூறிப்போந்த மூன்றவத்தை உறுதற் குரிய) ஆன்மா, அமூர்த்தன் - (வரக்கடவனவாகிய காரியங்களுள்) உடம்பு முன்னில்லாதவனும், கலாதியோடும் சேர்வு இலன் - கலாதி யறிவோடு முன் சேர்தல் இல்லாதவனும், அராகாதி குணங்களோடும் செறிவு இலன் - புத்தி குணம் எட்டினையும் (ஏனைப் போக்கியகாண்டக் கருவிகளையும்) முன் பொருந்தாதவனும், குறி இலன் - இச்சை முன் இல்லாதவனும், அறிவு இலன் - அறிவுமுன் இல்லாதவனும், செயல்கள் இல்லான் - ஒரு தொழிலும் முன் இல்லாதவனும், கருத்தா அல்லன் - தனக்கென ஒரு சுதந்திரம் முன் இல்லாதவனும், போகத்திற் கொள்கை இல்லான் - போகத்தில் முன் கொள்கை இல்லாதவனும், நித்தன் - தோற்றக் கேடுகள் முன்இல்லாதவனும், வியாபி - ஏகதேசியாதல் முன்இல்லாதவனுமாய், கேவலத்தில் மலத்தினோடும் பிறிவு இலன் - கேவலாவத்தையில் ஆணவமலத்தோடு மாத்திரையே கூடி நிற்பன் என்க.

(பொ - ரை.) வரக்கடவனவாய அறிதன்முதல் ஏகதேசி யாதல் ஈறாகிய பத்துக் காரியங்களுள் ஒன்றும் இன்றி ஆணவ மலத்தோடு மாத்திரையே கூடிநிற்பது கேவலம் எ - ம்.

ஈண்டு அமூர்த்தம் என்றது உடம்பின் [1]பிராக்கு அபாவத்தை; நித்தம் என்றது தோற்றக் கேடுகளின் பிராக்கு அபாவத்தை ; வியாபகம் என்றது ஏகதேசதத்தின் பிராக்கு அபாவத்தை.

ஏனையின்மைகளும் அவ்வப் பிராக்கு அபாவங்களைக் குறித்து நின்றன ஆதலான் இவ் இலக்கணங்கள் ஏனைஅவத்தைகளிற் செல்லாமையின் இவற்றுள் ஒன்றே கூற அமையுமாயினும், கேவலந்தன் உண்மை யென்றது விளங்குதற்பொருட்டு இவை அனைத்தும் வகுத்துக் கூறினார் ; பிறிவிலன் மலத்தினோடும் என்றதும் அதன்பொருட்டு.

ஈண்டுக் குறியென்றது முதனிலைத் தொழிற்பெயராய் இச்சையை யுணர்த்தி நின்றது என்பது செயவினைச் சாரவைத்தலான் அறிக.

அறிவிலன் என்றதனையும் ஈண்டுத் தந்துரைக்க.

அராகாதி குணம் என்றது புத்திகுணம் எட்டினையும்; அராகாதி குணங்களென்ற உபலக்கணத்தால் ஏனைப் போக்கியகாண்டக் கருவி களுங் கொள்ளப்படும்.

இதனானே தன் உண்மை கேவலமாதல் காட்டப்பட்டது. (ரு௮)

உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல்
வருசெயன் மருவிச் சத்தம் ஆதியாம் விடயந் தன்னில்
புரிவதுஞ் செய்திங்கு எல்லா யோனியும் புக்கு ழன்று
திரிதருஞ் சகல மான அவத்தையில் சீவன் சென்றே.

---

1. பிராக்கு - சென்றது ; முன்.

(ப - ரை.) சீவன் - (மேற்கூறிப்போந்த கேவலாவத்தை பொருந்திய) ஆன்மா, உருவினைக்கொண்டு - (அமூர்த்தனாதற்கு மறுதலையாகிய) உருவினைக்கொண்டும், போக(த்து) (மருவி) - (கலாதியோடுஞ் சேர்விலனாதற்கு மறுதலையாகிய) போககாண்டமாய கலாதியோடு செறிந்தும், போக்கியத்து (மருவி)-(அராகாதி குணங்களோடுஞ் செறிவிலனாதற்கு மறுதலையாகிய) போக்கியகாண்டமாய புத்தியாதியைச் செறிந்தும், உன்னல் (மருவி) - (குறியிலனாதற்கு மறுதலையாகிய) இச்சை யுற்றும், செப்பல் (மருவி) - (அறிவிலனாதற்கு மறுதலையாகிய) நால்வகை வாக்குக்களானிகழும் அறிவுற்றும், வரு செயல் மருவி-செயல்களில்லானாதற்கு மறுதலையாகிய) வரப்பட்ட தொழில்கள் உற்றும், சத்தம் ஆதியாம் விடயந் தன்னில் புரிவதுஞ் செய்து - (கருத்தாவல்லனாதற்கு மறுதலையாகிய) சத்தாதி விடயத்தில் விருப்பஞ்செய்தும், (போகத்திற் கொள்கையில்லானாதற்கு மறுதலையாகிய) போகநுகர்ந்தும், இங்கு எல்லா யோனியும் புக்கு உழன்று - ஈண்டு (நித்தனாற்கு மறுதலையாகிய) தோற்றக்கேடுகளிற் புக்குழன்றும், சகலமான அவத்தையில் சென்றே திரிதரும் - (வியாபியாதற்கு மறுதலையாகிய) ஏகதேசியாய் (இப்பத்துக்காரியமு முடையனாய்ச்) சகலாவத்தையிற் சீவித்து நிற்பன் என்க.

(பொ - ரை.) மேற்கூறிய இன்மைகள் பத்துக்கும் மறுதலையாகிய இப்பத்துக் காரியமும் உடையனாய்ச் சீவித்து நிற்பது சகலம் எ - ம்.

போககாண்டமாகிய கலாதியைப் போகம் என்றும் போக்கிய காண்டமாகிய புத்தியாதியைப் போக்கியம் என்றுங் கூறினர்.

உன்னல் என்றது ஈண்டு விரும்புதன்மேற்று.

செப்பல் என்றது செப்பப்படுவனவாய நால்வகை வாக்குக்களையும் உணர்த்தி அவை காரணமாய் நிகழும் அறிவின்மேல் ஆகுபெயராய் நின்றது.

புரிவதும் என்ற உம்மையான் நுகர்வதும் என்றது எஞ்சிநின்றது.

உருவினைக்கோடல் அமூர்த்தனாதற்கும், போகபோக்கியத்துள் செறிதல் கலாதியோடுஞ் சேர்விலன் அராகாதிகுணங்களோடுஞ் செறிவிலனாதற்கும், உன்னல் செப்பல் வருசெயன்மருவுதல் அறிவிலன் செயல்களில்லான் குறியிலன் ஆதற்கும், சத்தமாதியாம்விடயந்தன்னில் புரிவதுஞ்செய்தல் கருத்தா அல்லன் ஆதற்கும், உம்மையாற் போந்த நுகர்வதுஞ் செய்தல் போகத்திற் கொள்கையில்லான் ஆதற்கும், எல்லாயோனியும் புக்குழலுதல் நித்தன் ஆதற்கும், சென்றுதிரிதரல் வியாபி ஆதற்கும் மறுதலை ஆயவாறு கண்டுகொள்க.

இதனானே மெய் பொறிகளெல்லாங் காவலன் கொடுத்தபோது சகலனாதல் வகுத்துக் கூறப்பட்டது. (௩௯)

இருவினைச் செயல்கள் ஒப்பின் ஈசன்தன் சத்தி தோயக்
குருஅருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமலம் அறுத்துப் பண்டைச் சிற்றறிவு ஒழிந்து ஞானம்
பெருகிநா யகன்தன் பாதம் பெறுவது சுத்த மாமே.

(ப - ரை.) இருவினைச் செயல்கள் ஒப்பின் - (மேற்கூறிய பத்தினுள் சத்தமாதியாம் விடயந்தன்னிற் புரிவதுஞ்செய்தல் கழிதற்கு ஏதுவாகிய) இருவினையொப்பின்கண்ணே, ஈசன்தன் சத்திதோய - (போகபோக்கியத்துக் கருவிகளின் செறிவு கழிதற்கு ஏதுவாகிய) சிவ சத்திநிபாதம் உறுதலால், குரு அருள் பெற்று - (உருக்கழிதற்கு ஏதுவாகிய) குரு அருள் பெற்றும், ஞான யோகத்தைக் குறுகி - (எல்லா யோனியும் புக்குழலுதல் கழிதற்கு ஏதுவாகிய) ஞானசாதனம் அடைந்தும், முன்னைத் திரிமலம் அறுத்து - (சென்றுதிரிதலாகிய ஏகதேசத் தன்மை கழிதற்கு ஏதுவாகிய) அநாதி மும்மலம் நீக்கியும், பண்டைச் சிற்றறிவு ஒழிந்து - (சத்தம் ஆதியாம் விடயந்தன்னின் நுகர்வது கழிதற்கு ஏதுவாகிய) பழைய வாதனை நீக்கியும், ஞானம் பெருகி - (பாச அறிவிச்சை செயல்கள் கழிதற்கு ஏதுவாகிய) ஞானம் பெருக்கியும் (முறையே கிடைப்ப அவற்றான் அக்காரியம் பத்தும் நீங்கப்பெற்று), நாயகன்தன் பாதம் பெறுவது சுத்தமாமே - சிவபிரான் திருவருளைக் கூடுதல் சுத்தாவத்தை என்க.

(பொ - ரை.) மேற்கூறிய பத்தனுள் சத்தம் ஆதியாம் விடயந்தன்னிற் புரிவதுஞ்செய்தல் கழிதற்கு ஏதுவாகிய இருவினை யொப்பும், போகபோக்கியக் கருவிகளின் செறிவு கழிதற்கு ஏதுவாகிய சத்திநிபாதமும், உருக்கழிதற்கு ஏதுவாகிய குரு அருளும், எல்லாயோனியும் புக்கு உழலுதல் கழிதற்கு ஏதுவாகிய ஞானசாதனமும், சென்று திரிதருதலாகிய ஏகதேசத்தன்மை கழிதற்கு ஏதுவாகிய மும்மல நீக்கமும் சத்தம் ஆதியாம் விடயந்தன்னின் நுகர்வது கழிதற்கு ஏதுவாகிய வாதனை நீக்கமும்: பாச அறிவு இச்சை செயல்கள் கழிதற்கு ஏதுவாகிய ஞானப்பெருக்கமும் முறையேகிடைப்ப, அவற்றான் அக்காரியம் பத்தும் நீங்கப்பெற்றுத் திருவருளைக் கூடுதல் சுத்தம் எ - ம்.

சத்திநிபாதத்திற்கு மூலமாகிய மலபரிபாகமும் இருவினையொப்புக்கு மூலமாகிய சிவபுண்ணியமும் என்னும் இன்னோரன்னவற்றை ஈண்டுக் கூறாது ஒழிந்தார், மேற்கூறிய காரியம் பத்தும் நீங்குதற்கு ஏதுவான மாத்திரையே ஈண்டுக் கூறப்புகுந்தாரன்றி அனைத்துங் கூறப் புகுந்தாரல்லர் ஆகலின்; அவை எல்லாம் முன்னர்க் கூறப்படும்.

இதனானே மலங்கள் எல்லாம் ஓவினபோது சுத்தம் உடையனுமாறு வகுத்துக் கூறப்பட்டது.

புருடனே அறிவனாகில் என்றது முதல் இத்துணையும் வெவ்வேறு அணைதரும் என்ற மூன்றாங் கூற்றை வகுத்தோதியவாறு. (சo)

நான்காஞ் சூத்திரமுடிந்தது

ஆகத் திருவிருத்தம் - உ௩o

---

# ஐந்தாஞ் சூத்திரம்

நான்காஞ் சூத்திரத்திற் பசு இயல்பு கூறிய ஆசிரியர், அதன்மேல் நின்ற பாசத்தின் இயல்பு கூறுவாராய் அதனையுள்ளடக்கி நிற்குந் திரோதானசத்தியின் இயல்பு ஐந்தாஞ் சூத்திரத்திற் கூறுகின்றார்.

பொறிபுலன் கரணம் எல்லாம் புருடனால் அறிந்தான் மாவை
அறிதரா அவையே போல ஆன்மாக்கள் அனைத்தும் எங்குஞ்
செறிதருஞ் சிவன்ற னாலே அறிந்திடுஞ் சிவனைக் காணா
அறிதருஞ் சிவனே எல்லாம் அறிந்தறி வித்தும் நிற்பன்.

(ப - ரை.) புருடனால்-(மேற்கூறிப்போந்த) புருடனாலே, பொறி கரணம் எல்லாம் - ஐம்பொறி அந்தக் கரணம் முதலியன, புலன் அறிந்து - தத்தம் விடயங்களை இஃதின்ன தென்று அளவிட்டு அறிந்தும், ஆன்மாவை அறிதரா அவையேபோல - (அறிகின்ற தம்மையும் தம்மை அதிட்டித்து நின்று செலுத்தும்) அப்புருடனையும் அறிய மாட்டா அவைபோல, எங்கும் செறிதருஞ் சிவன் தனாலே - எவ்விடத்தும் வியாபகமாகிய முதல்வனது சிற்சத்தியால், அறிந்திடுஞ் சிவனைக் காணா ஆன்மாக்கள் அனைத்தும் - (வினைப்பயன்களை) அறிந்து அனுபவிக்குந் (தம்மையுந் தம்மைச் செலுத்திநிற்குந்) திருவருளையும் அறிய மாட்டாத ஆன்மாக்களை எல்லாம், அறிதரும் சிவனே எல்லாம் அறிந்து அறிவித்து நிற்பன் - (முடிவின்கண்) உண்மை அறிவைத் தரக்கடவோனாகிய சிவபிரானே முழுதும் அறிந்தும் அறிவித்தும் உடனிற்பன் என்க.

(பொ - ரை.) தன்னை அறிய மாட்டாத பொறி முதலியவற்றைத் தானறிந்து அறிவித்து உடன் நிற்கும் புருடன்; அது போலத் தன்னை அறியமாட்டாத அப்புருடனைஅறிந்து அறிவித்து உடன் நிற்பது சிவம் எ - ம்.

சிவனே எல்லாம் அறிந்து அறிவித்து நிற்பன் எனப் பொருட்கண் ஓதியதனை உவமையினும் ஏற்குமாறு இயைவித்து உரைத்துக் கொள்க.

திரோதானசத்தியின் இயல்பை உபசாரத்தால் சிவன்மேல் ஏற்றிக் கூறியவாறு.

அறிதருஞ் சிவன் முடிவின்கண் உண்மை அறிவைத் தரக்கடவோனாகிய சிவன்; அறி முதனிலைத்தொழிற் பெயர்.

இச்செய்யுள் முதல்நூல் அஞ்சாஞ் சூத்திரம்போல இருகூற்றதாமாறு கண்டு கொள்க.

அவற்றுள் முதற்கூற்றுப்பொருளை உள்ளடக்கி நிற்கும் இரண்டாங் கூற்றை அவ்வம் மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்துகின்றார். (க)

# இரண்டாமதிகரணம்

இறைவனே அறிவிப் பானேல் ஈண்டறிவு எவர்க்கும் ஒக்கும்
குறைவதி கங்கள் தத்தங் கன்மமேல் கோமான் வேண்டா
முறைதரு செயற்குப் பாரும் முளரிகட்கு இரவி யும்போல்
அறைதரு தத்தங் கன்மத்து அளவினுக்கு அளிப்பன் ஆதி.

(ப - ரை.) இறைவனே அறிவிப்பானேல் - இறைவனே உணர்த்துவன் ஆயின், ஈண்டு அறிவு எவர்க்கும் ஒக்கும் - ஈண்டு அறிவுகள் யாவர்க்கும் ஒரு பெற்றியவாம், குறைவு அதிகங்கள் தத்தம் கன்மம் ஏல் - ஏற்றத்தாழ்வுகளாய் நிகழ்வதற்குக் காரணம் அவ்வக்கன்மம் என்னில், கோமான் வேண்டா - வேறும் ஓர் இறைவன் வேண்டாவாம் (ஆகலின்), முளரிகட்கு இரவியும் - பங்கயத்தினது அலர்ச்சிக்கு(ப் பங்கயமேயன்றி) இரவியும், முறைதரு செயற்குப் பாரும் போல் -( உழுதல் எருப்பெய்தல் வித்தல் கட்டல் நீர்கால்யாத்தல் காத்தலாகிய) இம் முறையாற் றரப்படுஞ் செயல்களின் பயனுக்கு (அச்செயலேயன்றி) விளைநிலமும் (காரணமாதல்) போல், அறைதரு தத்தம் கன்மத்து அளவினுக்கு அளிப்பன் ஆதி - சொல்லுகின்ற அவ்வக்கன்ம பக்குவத்திற்கு ஈடாகப் பலனைத் தருவன் வேறோர் இறைவன் என்க.

(பொ - ரை) அறிவித்தற்பொருட்டு இறைவன் வேண்டப்படும் எனக் கொள்வார்க்கும், அறிவுகள் ஒருபெற்றியவாதல் இன்றி ஏற்றத்தாழ்வுகளாய் நிகழ்தற்குக் காரணங் கன்மம் எனக் கொள்ளவேண்டுதலின் அதுவே அமையும் வேறும் ஓர் அறிவிப்பானைக் கோடல் மிகையாமால் எனின், அற்றன்று, பங்கயத்தினது அலர்ச்சிக்குப் பங்கயமே அன்றி இரவியும், உழவு முதலிய செயல்களின் பயனுக்கு அச்செயலே அன்றி விளைநிலமும், காரணமாதல் கண்டாம் அன்றே, அவைபோல் அவ்வக் கன்மம் பக்குவம் ஆதலும் பயன் தருதலும் வேறோர் இறைவனை இன்றி அமையாமையின் மிகையாதல் யாண்டையது? எ - ம்.

குறைவு அதிகங்கள் தத்தங் கன்மம் எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். செயல் ஆகுபெயர்.

முறைதரு செயல், உழுதல் எருப்பெய்தல் வித்தல் கட்டல் நீர்கால்யாத்தல் காத்தல் என்னும் முறையால் தரப்படுஞ் செயல் என்க.

அற்றேல், கன்மத்தோடுங் கூடிய உயிரே அதற்குக் காரணமாதல் அமையும் வேறும் ஓர் இறைவன் எற்றுக்கு என்பாரை நோக்கி எழுந்தது வருஞ் செய்யுள் என்பது. (உ)

அறிந்திடும் ஆன்மா ஒன்றை ஒன்றினால் அறித லானும்
அறிந்தவை மறத்த லானும் அறிவிக்க அறித லானும்
அறிந்திடுந் தன்னை யுந்தான் அறியாமை யானுந் தானே
அறிந்திடும் அறிவன் அன்றாம் அறிவிக்க அறிவன் அன்றே.

(ப - ரை.) *அறிந்திடும் ஆன்மா* - அறியப்பட்டு வரும் இவ்வுயிர், *ஒன்றை ஒன்றினல் அறிதலானும்* - ஒவ்வொரு விடயத்தை ஒவ்வோர் இந்திரியத்தால் அறிதலானும், *அறிந்தவை மறத்தலானும்* - அறியப் பட்டவற்றை மீள மறத்தலானும், *அறிவிக்க அறிதலானும்* - (ஒருவன்) உணர்த்த உணர்தலானும், *அறிந்திடும் தன்னையும் தான் அறியாமை யானும்* - இவ்வாறு அறிகின்ற தன்னையும் தான் அறியாமையானும், *தானே அறிந்திடும் அறிவன் அன்றாம்* - தானே அறியும் முதல்வன் போலச் சுதந்திர அறிவின்றி, *அறிவிக்க அறிவன் அன்றே* - அறிவிக்க அறியுந் தன்மைத்து என்க.

(பொ - ரை.) இந்நான்கு ஏதுக்களானும் அறிவுநிகழ்ச்சிக் குப் பொறிபுலன் முதலியவற்றோடு ஒப்ப வேறுகாரணத்தை அவாய் நிற்பதன்றி உயிர் தானே அறியவற்று அன்று எ - ம்.

ஒன்றை ஒன்றினல் அறிதலே அதன் இயல்பு என்பாரை நோக்கி அறிந்தவை மறத்தலானும் என்றும், அறிந்ததனைப் பின் அறிய வேண் டாமையின் மறக்கலாயிற்று என்பாரை நோக்கி மீள அறிவிக்க அறித லானும் என்றும், எவ்வாற்றானும் அறிதலில் திரிபில்லையன்றே என் பாரை நோக்கி அறிந்திடுந் தன்னையுந்தான் அறியாமையானும் என்றுங் கூறினர்.

இதனனே சாங்கியர்மதம் பரிகரித்து முதற்கூற்றை வலியுறுத்த வாறும் ஆயிற்று. விதந்து கூறாது ஒன்றை ஒன்றினல் எனப் பொதுப் படக் கூறியதும் அதன் பொருட்டு.

அற்றேல், ஈண்டு ஒன்றினல் எனப்பட்ட மாயேயமே அதற்கு அமையும் இறைவன் எற்றுக்கு என்பாரை நோக்கி எழுந்தது வருஞ் செய்யுள் என்பது. (ரு)

கருவியால் பொருளால் காட்டால் காலத்தால் கருமந் தன்னல்
உருவினல் அளவால் நூலால் ஒருவரால் உணர்த்த லானும்
அருவனய் உண்மை தன்னில் அறியாது நிற்ற லானும்
ஒருவனே எல்லாத் தானும் உணர்த்துவன் அருளி னலே.

(ப - ரை.) *கருவியால்* - (உயிர்செலுத்தப்படும்) ஆன்மதத்துவத் தானும், *பொருளால்* - தாத்துவிகத்தானும், *காட்டால்*-(உயிரின் அறிவு இச்சைசெயல்களை) விளக்குவனவாய கலைமுதலியவற்றாலும், *காலத் தால்* - (கன்மத்தை முந்தாது பிந்தாது வரைஅறுத்துச் செலுத்துங்) காலதத்துவத்தானும், *கருமந்தன்னல்* - கன்மத்தை ஏறாது குறையாது நிறுத்தும் நியதிதத்துவத்தானும், *உருவினல்* - உடம்பானும், *அள வால்* - பிரமாணங்களினனும், *நூலால்* - நூல்கட்குக்காரணமாகிய நால் வகை வாக்குக்களானும், *ஒருவரால் உணர்த்தலானும்* - ஒரு சேதனப் பொருள் (ஒரு விடயத்தை) உணர்த்த (உயிர்உணர்த) லானும், *உண்மை தன்னில் அருவனய் அறியாது நிற்றலானும்* - (அல்லுழித்) தன் உண் மையில் அருவனய் உணராமையானும், *எல்லாத்தானும் அருளினலே உணர்த்துவன் ஒருவனே* - இவை யனைத்தையுங் கொண்டு கூட்டி அரு ளால் அறிவிப்பான் ஒரு சேதனன் (வேறு வேண்டப்படும் ஆகலான் இறைவனை இன்றி அறிதல் அமையாது) என்க.

(பொ - ரை.) கருவி முதலிய எட்டும் ஒருசேதனப்பொருளுங் கூடிநின்று ஒருவிடயத்தை உணர்த்த உயிர் உணர்தலானும், அல்வழி உணராமையானும், இவை அனைத்தையுங் கொண்டு கூட்டி அறிவிப்பான் ஒரு சேதனன் வேறு வேண்டப்படும் ஆகலான் இறைவனை இன்றி அறிதல் அமையாது எ - ம்.

கருவி உயிர்செலுத்தப்படும் ஆன்மதத்துவம்.

பொருள் தாத்துவிகம்.

காட்டு உயிரின் அறிவு இச்சை செயல்களை விளக்குவனவாய கலை முதலியன.

காலம் கன்மத்தை முந்தாது பிந்தாது வரையறுத்துச்செலுத்துங் காலதத்துவம்.

கருமம் கன்மத்தை ஏறாது குறையாது நிறுத்தும் நியதிதத்துவம்.

உரு உடம்பு.

அளவை பிரமாணம்.

நூல் நூல்கட்குக் காரணமாய நால்வகை வாக்கு.

ஒரு விடயத்தை யறிதற்கண் இவற்றுள் ஒன்றை இன்றியும் அமையாமை கண்டுகொள்க.

கருமமும் நூலும் ஆகுபெயர்.

இயற்பெயர்ப் பொருளாக வைத்துரைப்பாரு முளர்.

தன்உண்மை உண்மையெனத் தலைக்குறை.

உண்மையில் ஒன்றும் இலனாதல்பற்றி அருவன் என்றார்.

இவை மூன்றுசெய்யுளானும், முறையே கன்மமும் உயிரும் மாயேயமும் என்னும் இவையே ஆண்டைக்கு அமையும் என்னும் ஆருகதர் மீமாஞ்சகர் சாங்கியர் முதலியோரை மறுத்துப் பாரிசேட அளவையான் அறிதருஞ் சிவனே எல்லாம் அறிந்து அறிவித்து நிற்றல் வலியுறுத்தப்பட்டது. (௪)

கருவியும் பொருளுங் காட்டுங் காலமுங் கருமங் தானும்
உருவமும் அளவும் நூலும் ஒருவரும் உணர்த்தல் இன்றி
அருவனாய் உலகம் எல்லாம் அறிந்தவை ஆக்கி வேறாய்
ஒருவனே உயிர்கட்கு எல்லாம் உயிருமாய் உணர்த்தி நிற்பன்.

(ப - ரை.) ஒருவனே - இறைவன், கருவியும் பொருளும்காட்டும் காலமும் கருமந்தானும் உருவமும் அளவும் நூலும் ஒருவரும் உணர்த்தல் இன்றி அருவனாய் வேறாய்-கருவிமுதலியன கூடியாதல் மேலொரு சேதனப்பொருளாதல் அறிவித்தல் இன்றித் தானே தமியனாய், உலகம் எல்லாம் அறிந்து - (கேவலத்தின்) உயிர்கள் எவைக்கும் சூக்கும ஐந்தொழில் செய்தும், அவை ஆக்கி - (பின்னர்) அவைகட்குச்

சிருட்டி (ஆதி தூல ஐந்தொழில்) செய்தும், உயிர்கட்கு எல்லாம் உயிருமாய் உணர்த்தி நிற்பன் - (பின்பும்) அவ் ஆன்மாக்கட்கு எல்லாம் (முதலவத்தை அடைதரும் இடத்தே) உயிரும் ஆய் அதிசூக்கும ஐந்தொழில் செய்து நிற்பன் என்க.

(பொ - ரை.) இறைவனுக்குக் கருவி முதலியன கூடி அறிவு நிகழ வேண்டாமையின், உயிர்கட்குப் போலத் தனக்கு மேலொருவன் அவாவப்படும் போலும் என்னும் அநவத்தைக்கு இடமின்றித் தானே தமியனாய் அறிந்தும் ஆக்கியும் உணர்த்தியும் நிற்கும் எ-ம்.

உலகெலாம் அறிந்து என்றது கேவலத்தில், [1]சூக்குமஐந்தொழில் செய்தன்மேற்று.

ஆக்கிஎனவே இனம்பற்றி ஏனை நான்கு தொழில்களும் உடன் கொள்ளப்படும். அவை [1]தூலஐந்தொழில் என்பது.

உணர்த்தி நிற்பன் என்றது முதல்அவத்தை அடைதரும் இடத்தே செயற்பாலனவாய் ஈண்டுஎடுத்துக்கொண்ட [1]அதிசூக்கும ஐந்தொழின் மேற்று.

அறிதலும் ஆக்குதலுமாகிய இருதிறத்து ஐந்தொழிலும் முதல்வன் செயலாதன் மேற்கூறிப் போந்தமையின் அவைபோல் இவையும் முதல்வன் தொழிலேயாம் என்பார், அறிந்து ஆக்கி உணர்த்தி நிற்பனென உடன் கூறினார்.

இதனானே மேற்கூறியது பற்றி அநவத்தை இன்றாமாறு கூறப்பட்டது.

அற்றாயினும், கருவி அறிதலால் வரும் பயன் உயிர்க்கு ஆயவாறு போல உயிர் அறிதலால் வரும் பயனும் அதனோடு உவமிக்கப்படும் இறைவனுக்கு ஆவான் செல்லும், செல்லவே இறைவனும் பந்தம் உறுவனெனப்பட்டு வழுவாம் ஆகலின் இறைவன் உயிர்போல் அறிவிப்பன் என்றல் இழுக்காம்போலும் என்னும் அவ்வாதிகளை நோக்கி எழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (௯)

இறைவன்தன் சந்நி திக்கண் உலகின்தன் சேட்டை என்னும்
மறைகளும் மறந்தாய் மாயை மருவிடான் சிவன்அ வன்கண்
உறைதரா தசேத னத்தால் உருவுடை உயிர்கட்கு எல்லாம்
நிறைபரன் சந்நி திக்கண் நீடுணர் உதிக்கும் அன்றே.

(ப - ரை.) இறைவன்தன் சந்நிதிக்கண் உலகின்தன் சேட்டை என்னும் மறைகளும் மறந்தாய் - இறைவன் சந்நிதியாலன்றி உயிர் சேட்டியாமைக்கு (மேற்காட்டிய பாரிசேட அளவையே அன்றி) ஆகம அளவையும் (இனிது விளங்கக் கிடத்தலின் அதனையும்) அறியாத (மறித்து மறித்துப் பிணங்குகின்ற) பேதாய், எல்லாம் நிறைபரன் சந்நிதிக்கண் நீடு உணர்வு உருவுடை உயிர்கட்கு உதிக்கும் அன்றே - எல்

1. 'அவையே.' சிவஞான போதம், சூ. உ.

லாவற்றினும் நிறைந்து நின்ற இறைவன் சந்நிதியின்கண்ணே நிகழும் அவ் அறிவின் பயன் (வினைக்கீடாக வரும்) வடிவுடைய உயிர்கட்கே உண்டாம், சிவனவன்கண் உறைதராது - (அதுவன்றி) இறைவனுக் காதல் செல்லாது, அசேதனத்தால் மாயை மருவிடான் - சடமாகிய உலகம் (அவனெதிர்) முனைத்து நிற்றல் ஆற்றாமையால் என்க.

(பொ - ரை) இறைவனால் அன்றி உயிர் சேட்டியாமைக்கு மேற்காட்டிய பாரிசேட அளவையே அன்றி ஆகம அளவையும் இனிது விளங்கக் கிடத்தலின் அதனையும் அறியாது மறித்து மறித்துப் பிணங்குகின்ற பேதாய்! எல்லாவற்றினும் நிறைந்து நின்ற இறைவன் சந்நிதியின் நிகழும் அவ்வறிவின் பயன் வினைக்கு ஈடாய் வரும் வடிவுடைய உயிர்கட்கே உண்டாம்; அதுவன்றி இறைவனுக்கு ஆதல் செல்லாது, சடமாகிய உலகம் அவன் எதிர் முனைத்து நிற்றல் ஆற்றாமையான் எ - ம்.

மறந்தாய்என்பது விளியுருபேற்ற பெயர். மாயையும் உணர்வும் ஆகுபெயர். உயிர்கட்கு உதிக்கும்என இயையும். பிரிநிலைஏகாரம் விரித்துரைக்க.

ஐம்பொறிபோலன்றி உணர்தற்பயன் உயிர்க்கே ஆதற்கு ஏதுக் கூறுவார், உருவுடையுயிரென விசேடித்தார். சந்நிதிக்கண் நீடுணர்வு உதிக்கும் என்றதும் அதன் பொருட்டு. [1]"வினையால் கண்டறிந்து நிற்குங்காண் - எண்ணன் சிவன்அசத்தை இன்று" என்றார் முதல் நூல் ஆசிரியரும்.

இதனானே அறிவித்தல்பற்றி இறைவனுக்குத் துடக்கின்மை கூறப்பட்டது. (சு)

உலகமே உருவ மாக யோனிகள் உறுப்ப தாக
இலகுபேர் இச்சா ஞானக் கிரியையுட் கரண மாக
அலகிலா உயிர்ப்பு லன்கட் கு அறிவினை ஆக்கி ஐந்து
நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்.

(ப - ரை.) (புருடன் உடம்பு முதலியவற்றைக் கொண்டு நின்று உணருமாறுபோல) நாதன் - இறைவனும், உலகமே உருவமாக - (தனக்கு) இருநூற்றிருபத்துநாலு புவனமும் திருமேனியாகவும், யோனிகள் உறுப்பதாக - எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி பேதங் களும் அவயங்களாகவும், இலகு பேர் இச்சா ஞானக் கிரியை உட்கரண மாக - மிக்க விளக்கமுடைய இச்சா ஞானக்கிரியைகள் உட்கரணமாக வும் (கைக்கொண்டு), அலகு இலா உயிர்கட்குப் புலன் அறிவினை ஆக்கி - எண்ணிறந்த உயிர்களிடத்தே அறிவுக்கு அறிவாய் நின் றுணர்த்தி, நலம் மிகு தொழில்கள் ஐந்தோடும் - (அங்ஙனம் உணர்த்து தலாகிய) நன்மை மிகுந்த அதிசூக்கும ஐந்தொழில்களையுமே, நாடகம் நடிப்பன் - நாடகமாகச் செய்தருளுவன் என்க.

---

1. 'மன்னுசிவன்' சிவஞானபோதம், ஐந்தாஞ் சூத்திரம், ரு.

(பொ - ரை.) புருடன் உடம்பு முதலியனவற்றைக் கொண்டு நின்று உணருமாறுபோல, இறைவன் உலக முதலிய வற்றைக் கைக்கொண்டு நின்றுணர்த்துவன் எ - ம்.

எனவே, தன் உடல் பொறி கரணங்களைச் செலுத்துதற்கண் உயிர்க்கு விகாரமில்லாமைபோல இறைவனுக்கு அதுபற்றி விகார மில்லை யென்றவாறாயிற்று. புலன் ஆகுபெயர்.

இறைவன் ஐந்தொழில் செய்தல் உயிர்கள் போலக் கரணத்தான் அன்றிச் சங்கற்பமாத்திரையாற் செய்வது என்பது தோன்ற, நாடகம் நடிப்பன் என்றார்.

ஈண்டு ஐந்தொழில் என்றது அறிவித்தற்கட்படும் அதிசூக்கும ஐந் தொழிலை.

இதனானே அதுபற்றி விகாரமின்மை கூறப்பட்டது.

அற்றேல், இவை நலமிகுதொழிலாமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (எ)

தெரிந்துகொண் டோரோரொன்றாகச் சென்றைந்து புலனும் பற்றிப்
புரிந்திடும் உணர்வி னோடும் போகமுங் கொடுத்து யோனி
திரிந்திடும் அதுவுஞ் செய்து செய்திகண்டு உயிர்கட் கெல்லாம்
விரிந்திடும் அறிவுங் காட்டி வீட்டையும் அளிப்பன் மேலோன்.

(ப - ரை.) மேலோன் - இறைவன், ஐந்தும் பற்றிப் புலன் ஒரோ ஒன்றாகத் தெரிந்து கொண்டு சென்று - (இங்ஙனம்) ஐம்பொறி வழி யாக விடயங்களில் ஒவ்வொன்றாக அறிந்து செல்லுதற்கேதுவாகிய, உணர்வினோடும் புரிந்திடும் - (ஏகதேச) அறிவை நிகழ்வித்து, போக மும் கொடுத்து - (சிறு) போகங் கொடுத்து, யோனி திரிந்திடும் அதுவும் செய்து - பிறவியிற்படுத்து, உயிர்கட்கு எல்லாம் செய்தி கண்டு - (அதனால்) உயிர்கள் எவைக்கும் பருவம் முதிர்வித்து, விரிந்தி டும் அறிவும் காட்டி - வியாபக அறிவை நிகழ்வித்து, வீட்டையும் அளிப்பன் - பரபோகமுங் கொடுத்தருளுவன் என்க.

(பொ - ரை.) இறைவன் இங்ஙனம் ஏகதேச அறிவை நிகழ் வித்துச் சிறுபோகங் கொடுத்துப் பிறவியிற் படுத்துதல், அத னாற் பருவம் முதிர்வித்து வியாபக அறிவை நிகழ்வித்துப் பர போகமுங் கொடுத்தற்பொருட்டு எ - ம்.

ஏகதேச அறிவு நிகழ்ந்தன்றிச் சிறுபோகநுகர்ச்சி செல்லாமையும் வியாபக அறிவு நிகழ்ந்தன்றிப் பரபோகநுகர்ச்சி செல்லாமையும் உணர்த்துவார், புரிந்திடும் உணர்வினோடு போகமுங் கொடுத்து என் றும், விரிந்திடும் அறிவுங் காட்டி வீட்டையும் அளிப்பன் என்றுங் கூறினர்.

இதனானே தூலஐந்தொழிற்கட் படுவதாகிய அவ் அதிசூக்கும ஐந் தொழிற்குப் பயன் கூறப்பட்டது.

அற்றேனும் அதனால் இறைவனுக்காகக் கடவது என்னை யென் பாரை நோக்கி யெழுந்தது வருஞ் செய்யுள் என்பது. (அ)

அருளது சத்தி யாகும் அரன்தனக்கு அருளை இன்றித்
தெருள்சிவம் இல்லை அந்தச் சிவம் இன்றிச் சத்தி இல்லை
மருளினை அருளால் வாட்டி மன்உயிர்க் களிப்பன் கண்கட்கு
இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்.

**(ப - ரை.)** *அருளது அரன் தனக்குச் சத்தி ஆகும் - (அங்ஙனங் கொடுத்துக் காட்டி அளிப்பதாகிய அக்) கருணையும் இறைவனுக்கு (இயற்கைக் குணமெனப்படுஞ்) சத்தியாம், அருளை இன்றித் தெருள் சிவம் இல்லை அந்தச் சிவம் இன்றிச் சத்தி இல்லை - அவ் அருட் குணத்தை இன்றிக் குணியாகிய தெருள் சிவம் இல்லை அச்சிவத்தை இன்றி அருள் இல்லை (ஆதலால்), கண்கட்கு இருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல - கண்கட்குப் புற இருளினைக் கிரணத்தால் ஓட்டிப் பிரகாசத்தினைச் செய்கின்ற ஞாயிறுபோல, மன்னுயிர்க்கு மருளினை அருளால் வாட்டி அளிப்பன் 'ஈசன் - நிலைபெற்ற உயிர்கட்கு மயக்கத்தினைத் தனது அருளாலே நீக்கி அநுக்கிரகஞ் செய்வன் இறைவன் (அவனுக்கு அவ் அருட்குணம் மேம்படுதலின் வேறாய் ஆண்டைக் காகக் கடவது பிறிதில்லை) என்க.*

**(பொ - ரை.)** *அங்ஙனங் கொடுத்துக் காட்டி அளிப்பதாகிய அக்கருணை இறைவனுக்கு இயற்கைக் குணம் எனப்படுஞ் சத்தியாகலான், குணங் குணியை விட்டு நீங்காமையின் ஞாயிற்றிற்கு ஒளிபோல இறைவனுக்கு அவ் அருட்குணம் மேம்படுதலின் வேறாய் ஆண்டைக்கு ஆகக் கடவது பிறிதில்லை எ - ம்.*

*'இதனானே அவ் அருள் இறைவனுக்கு அணிகலமாதல் கூறப்பட்டது.* (௯)

**ஐந்தாஞ் சூத்திர முடிந்தது.**

**ஆகத் திருவிருத்தம் - ௨௩௧.**

# ஆறுஞ் சூத்திரம்

இனி எஞ்சிநின்ற பதிப்பொருளுக்கு இலக்கணம் ஆறுஞ் சூத்திரத்தில் கூறுகின்றார்.

அறிவுறும் பொருளோ ஈசன் அறிவுறா தவனே என்னின்
அறிபொருள் அசித்து அசத்தாம் அறியாதது இன்றாம் எங்குஞ்
செறிசிவம் இரண்டும் இன்றிச் சித்தோடு சத்தாய் நிற்கும்
நெறிதரு சத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றி டாவே.

(ப - ரை.) ஈசன் அறிவுறும் பொருளோ அறிவுறாதவனே என்னின் - சிவபிரான் சுட்டி அறியப்படும் பொருளோ ஒருவாற்றானும் அறியப்படாத பொருளோ எனின், அறிபொருள் அசித்து அசத்தாம் - சுட்டியறியப்படும் பொருளாகில் சடமாய் அழிந்து போவதுமாம், அறியாதது இன்றாம் - ஒருவாற்றானும் அறியப்படாத பொருளாகில் சூனியமாம், நெறிதரு சத்தின் முன்னர் அசத்தெல்லாம் நின்றிடாவே (ஆகலான்) - நெறியாகிய சிவஞானத்தால் விளக்கப்படுஞ் சிவத்தின் எதிர் அசத்தாகிய பாசஞானம் சிறிதும் நில்லாமையின், எங்கும் செறி சிவம் - எவ்விடத்தும் வியாபகமாகிய சிவம், இரண்டும் இன்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும் - அவ்விரண்டு தன்மையும் இன்றிச் சித்துச் சத்தாகி நிற்கும் என்க.

(பொ - ரை.) சிவன் சுட்டி அறியப்படும் பொருளாயின் சடமாய் அழிந்து போவதுமாம்; ஒருவாற்றானும் அறியப் படாத பொருளாயின் சூனியமாம்; நெறியாகிய சிவஞானத் தால் தரப்படுஞ் சிவத்தின் எதிர் அசத்தாகிய பாசஞானஞ் சிறிதும் நில்லாமையின் சிவம் அவ்விரண்டு தன்மையும் இன் றிச் சித்துச்சத்தாகி நிற்கும் எ - ம்.

இருவர் கூற்றாய் வேறு முடிபுகோடலின் இணைவழுவின்மை யுணர்க.

அசத்தெனவே அசித்தாதலும் அடங்குமாயினும், விளங்குதற் பொருட்டு வேறு கூறினார். சித்தொடு சத்தாய் நிற்கும் என்றதும் அது; சடத்தை நீக்குதற் பொருட்டுமாம்.

தருதல் ஈண்டு விளங்குதன்மேற்று.

ஆண்டுச் சத்தென்றது சிவம் என்னுந் துணையாய் நின்றது.

அசத்துமுன் நில்லாமையின் அறிபொருளாதலும் நெறிதருசத் தாகலின் அறியாப்பொருளாதலும் இல்லையென்பார், நெறிதருசத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றிடா ஆகலான் இரண்டும் இன்றி என் றார். ஆகலான் என்பது சொல்லெச்சம்.

முதல்வனுக்குத் தடத்தலக்கணம் எனப்படும் பொது இயல்பு மேற்புனருற்பவம் வருமாறு உணர்த்துமுகத்தாற் பெறுவிக்கப்பட்டமையால் இது சொரூபலக்கணம் எனப்படுஞ் சிறப்பியல்பு எனக் கொள்க. அற்றாகலின்அன்றே உண்மையதிகாரத்தைச் சார ஈண்டு வைத்து ஓதியதூஉம் என்க.

முதல்நூல் ஆறுஞ்சூத்திரத்திற்கொண்ட இருகூற்றுறும் அறியாதது இன்றும் என்றதனை வேறுகோடலால் இச்செய்யுள் மூக்கூற்றதாயவாறு கண்டு கொள்க. (க)

---

## முதலதிகரணம்

ஆவதாய் அழிவ த்ாகி வருதலால் அறிவு தானுந்
தாவலால் உலகு போகந் தனுகர ணாதி யாகி
மேவலான் மலங்கள் ஆகி விரவலான் வேறாம் ஆகி
ஓவலால் அசத்தாஞ் சுட்டி உணர்பொருள் ஆன எல்லாம்.

(ப - ரை.) அறிவுதானும் - சுட்டறிவாவது, ஆவதாய் அழிவதாகி வருதலால் - தோற்ற நாசம் உறுதலானும், தாவலால் - ஓரிடம் விட்டு ஓரிடந் தாவுதலானும், தனு கரண உலகு போகம் ஆதியாகி மேவலால் - தனுகரண புவனபோக முதலியனவாய்ப் பல்வேறு வகைப் படுதலானும், மலங்களாகி விரவலால் - மலத்தோடு விரவுதலானும், வேறுமாகி ஓவலால் - வேறுபட்டொழிதலானும் (அசத்தேயாகலின்), சுட்டி உணர் பொருள் ஆனவெல்லாம் அசத்தாம் - (இவ்வறிவினாற்) சுட்டி அறியப்பட்ட பொருளனைத்தும் அசத்தாவன (அன்றி அவற்றுள் ஒரு பொருளுஞ் சத்தாதல் செல்லாது) என்க.

(பொ - ரை.) சுட்டறிவாவது காலத்தான் ஏகதேசமாதலும் இடத்தால் ஏகதேசமாதலும் அதுவதுவாய்ப் பலவேறு வகைப்படுதலும் மலத்தொடு விரவுதலும் வேறுபடுதலுமாகிய இவ்வியல்புகளுடைமையான் அசத்தேயாகலின், இவ்வறிவினால் அறியப்பட்டன அனைத்தும் அசத்தாவன அன்றி அவற்றுள் ஒரு பொருளுஞ் சத்தாதல் செல்லாது எ - ம்.

அசித்தாமென்பதூஉம் பாடம். உம்மை முன்னையது இழிவு சிறப்பு.

இதனானே அறிபொருள்களின் ஒருசாரனவே யன்றி அனைத்தும் அசத்தாதல் இல்லையென்னுந் தார்க்கிகரை நோக்கி அறிபொருளனைத்தும் அசத்தென்பது அவ்வறிவியல்பு பற்றித் தெரித்துணர்த்தப் பட்டது. (உ)

மண்தனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வும்
எண்தரு பூத பேத யோனிகள் யாவும் எல்லாங்
கண்ட இந் திரமா சாலங் கனக்கழு திரதங் காட்டி
உண்டுபோல் இன்றாம் பண்பில் உலகினை அசத்தும் என்பர்.

(ப - ரை.) மண்தனில் வாழ்வும் - மண்ணுலகின் (அரசனாய்) வாழ்தலும், வானத்து அரசு அயன் மாலார் வாழ்வும் - விண்ணுலகின் இந்திரன் அயன் மால் முதலியோர் பதவியைப் பொருந்தி வாழ்தலும், எண்தரு பூதபேத யோனிகள் யாவும் - பூதபரிணாமமாகிய எண்பத்து நான்கு நூறாயிர யோனிபேதங்கள் எவற்றினும் பொருந்தி வாழ்தலுமாய, கண்ட எல்லாம் - காணப்பட்டன அனைத்தும், மா இந்திரசாலம் - (தோன்றும்பொழுதே இல்லையாய்வேறுபடும்) பெரிய இந்திரசாலமும், கனா - (கடைபோதலின்றி இடையே அழியப்படும்) கனாக்காட்சியும்,

கழுதிரதம் - (ஒரு காரணங் காட்டி அழியப்படும்) பேய்த்தேரும் போல, உண்டு போல் காட்டி - நெடுங்காலம் நிலைபெறுவனபோலத் தோன்றி, இன்றாம் பண்பில் - (அங்ஙனம்) விரையக் கெட்டு மறைந்து போம் இயல்புபற்றி, உலகினை அசத்தும் என்பர் - அவற்றை அசத் தெனக் கூறுவர் என்க.

(பொ - ரை.) காணப்பட்டன அனைத்தும் இந்திரசாலம் முதலியனபோல நெடுங்காலம் நிலைபெறுவனபோலத் தோற்றி அங்ஙனம் விரையக்கெட்டு மறைந்துபோம் இயல்புபற்றி அவற்றை அசத்தென்றல் அமைவுடைத்து எ - ம்.

அசத்தும் என்னும் உம்மை பொருள் தன்மையாற் சத்தென்பது பட நின்ற எதிர்மறை.

இந்திரசாலம் தோன்றும்பொழுதே இல்லையாய் வேறாவனவற்றிற் கும், கனாக்காட்சி கடைபோதலின்றி இடையே அழிவனவற்றிற்கும், கழுதிரதம் ஒரு காரணங்காட்டி அழிவெய்துவனவற்றிற்கும் உவமை யாயின.

இதனானே சற்காரியவாதத்தில் அசத்தென ஒன்றின்மையின் ஈண்டறிபொருள் அசத்தென்றல் அமையுமாறு யாங்ஙனம் என்னுஞ் சாங்கியரை நோக்கி, அறிபொருள் அசத்தாமாறு உவமையோடு படுத் துக் காட்டப்பட்டது.

இவை யிரண்டு செய்யுளும் அறிபொருள் அசித்து அசத்தாம் என்ற முதற் கூற்றை வலியுறுத்தவாறு. (ரு)

---

## இரண்டாமதிகரணம்

உணராத பொருள்சத் தென்னின் ஒருபயன் இல்லை தானும்
புணராது நாமுஞ் சென்று பொருந்துவ தின்றாம் என்றுந்
தணவாத கருமம் ஒன்றுந் தருவதும் இல்லை வானத்து
இணரார்பூந் தொடையும் யாமைக் கெழுமயிர்க் கயிறும் போலும்.

(ப - ரை.) உணராத பொருள் சத்தென்னின் ஒரு பயன் இல்லை-(அறிபொருள்போல) அறியப்படாத பொருட்குத் (தோற்றக்கேடு முதலியன இன்மையான்) அதனைச் சத்தெனக் கொண்டாற்படும் இழுக்கென்னை யெனின் (அங்ஙனம் கொண்டதனாற்) பெறக்கடவதோர் பயனில்லையாம், என்றுந் தானும் புணராது நாமும் சென்று பொருந்துவது இன்றாம் - ஒரு ஞான்றும் அதுவும் பொருந்தாது நாமும் அதனோடு பொருந்துமாறும் இல்லை, தணவாத கருமம் ஒன்றும் தருவதும் இல்லை-அதனால் ஆகக்கடவதோர் நீங்காத செயலும் இல்லையாம், வானத்து இணர் ஆர் பூந்தொடையும் யாமைக்கு எழுமயிர்க் கயிறும் போலும்-(ஆதலால்) ஆகாயப் பூவானியன்ற மாலையும் ஆமை மயிரான் இயன்ற கயிறும் போல (உணராத பொருள்களின் வைத்தறியப்படுதலான் அது பொருளன்று) என்க.

**(பொ - ரை.) அறிபொருள்போல அறியப்படாத பொருட்குத் தோற்றக்கேடு முதலியன இன்மையான் அதனைச் சத்தெனக் கொண்டாற்படும் இழுக்கென்னை யெனின், அங்ஙனங் கொண்டதனாற் பெறக்கடவதோர் பயனில்லை, ஒருஞான்றும் அதனோடு எமக்கோர் இயைபு உண்டாமாறும் இல்லை, அதனால் ஆகக்கடவதோர் செயலும் இல்லையென்பது ஆகாயப்பூவான் இயன்ற மாலை ஆமை மயிரான் இயன்ற கயிறு முதலிய உணராத பொருள்களின் வைத்தறியப் படுதலான், அது பொருளன்று எ - ம்.**

ஆகாயத்தினும் ஆமையினும் பூவும் மயிரும் புலனாதலன்றி அதிசூக்குமமாயுள, அவற்றான் ஆகற்பாலனவும் உள எனக்கொண்டு பிணங்குவா ருளராயினும், அவரை மறுத்தற்பொருட்டு அறிந்து செய்வதொரு வினைமுதலை இன்றியமையாத காரியப்பொருண்மேல் வைத்துக் கூறினார்.

இதனானே அறியாதது உண்டென்றாற்படும் இழுக்கென்னை யென்னும் மாணாக்கனை நோக்கி இரண்டாங்கூறு வலியுறுத்தப்பட்டது.

அற்றேல், இவ்விரண்டும் இன்றி நிற்கும் பொருளை அநிருவசனீயம் என்னாது சித்தொடு சத்தாய் நிற்கும் என்றது யாங்ஙனம் என்னும் மாயாவாதியை நோக்கியெழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (௪)

## மூன்றாமதிகரணம்

தத்துவஞ் சத்த சத்துச் சதசத்தும் அன்றேன் றாலேன்
உய்த்துணர்ந் துண்டோ இன்றோ என்றவர்க் குண்டேன் றோதில்
வைத்திடுஞ் சத்தே யாகும் மனத்தோடு வாக்கி றந்த
சித்துரு அதுவ சித்தாம் மனத்திறைல் தேர்வ தெல்லாம்.

(ப - ரை.) தத்துவம் சத்து அசத்துச் சதசத்தும் அன்றென்றால் என் - (மேற்கூறிப்போந்த இருதிறனும் அல்லாத) பிரமப்பொருளாவது உள்பொருளும் அன்று இல்பொருளும் அன்று இரண்டுமாவதும் அன்று (வேறும் அன்று) என்று அநிர்வசனமாகக் கூறிற் படும் இழுக்கென்னையெனின் (நன்று சொன்னாய்), உய்த்து உணர்ந்து உண்டோ இன்றோ என்றவர்க்கு - (அங்ஙனம்) உய்த்துணர்ந்து (அநிர்வசனமாய்க் கூறப்படும் பொருளொன்று) உண்டோ இல்லையோ என வினாயினார்க்கு, உண்டென்று ஓதில் வைத்திடும் சத்தேயாகும் - (இல்லையெனில் உணராத பொருட்கு ஓதிய குற்றமாம் என்று அஞ்சி) உண்டென்று கூறுவாயாகிற் (பிரமம்) உள்பொருளாவதாம் (அன்றி அநிர்வசனமாதல் இன்று என்பதற்கு உன் வாய்மொழியே சான்றாயிற்று), மனத்திறைல் தேர்வதெல்லாம் அசித்தாம் - (உள்பொருளாயின் அறியப்படுக எனில்) சுட்டுணர்விற் பட்டன வெல்லாஞ் சடமாய் அழிவெய்தி விடுமாதலால், மனத்தொடு வாக்கு இறந்த சித்துரு அது - மனவாக்குக்களாய சுட்டுணர்வினைக் கடந்துநின்ற சேதனப்பொருளே அது என்க.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த இருதிறனுமல்லாத பிரமப் பொருளாவது உள்பொருளுமன்று இல்பொருளுமன்று இரண்டுமாவதுமன்று வேறுமன்று என்று அநிர்வசனமாகக் கூறிற்படும் இழுக்கென்னை யெனின், நன்று சொன்னாய்; அங்ஙனம் அநிர்வசனமாய்க் கூறப்படும் பொருளொன்று உண்டோ இல்லையோ என வினாவினார்க்கு இல்லையென்னில் உணராத பொருட்கு ஓதிய குற்றமாம் என்று அஞ்சி உண்டென்று கூறுவாயாகின், பிரமம் உள்பொருளாவதன்றி அநிர்வசனமாதலின்று என்பதற்கு உன் வாய்மொழியே சான்றாயிற்று. உள்பொருளாயின் அறியப்படுக எனிற் சுட்டுணர்விற்பட்டன எல்லாஞ் சடமாய் அழிவெய்திவிடுமாதலாற் சுட்டுணர்வினைக் கடந்து நின்ற சேதனப் பொருளே யது எ - ம்.

தேர்வதெல்லாம் என்பது [1] 'உள்ளியதெல்லா முடனெய்தும்' என்றாற்போல ஒருமைப்பன்மை மயக்கம்.

அற்றேல், அறிபொருளும் அன்று அறியாததும் அன்று என விடுப்பதூஉம் சத்து அசத்துச்சதசத்தும் அன்று என்பதுபோல் அநிர்வசனமாய் முடியுமன்றே யென்னும் அவ்வாதியை நோக்கி அவ்வாசங்கை நீக்குதற்கு எழுந்தது வருஞ்செய்யு ளென்பது. (௫)

1. திருக்குறள், வெகுளாமை, ௬.

அறிபொருள் அசித்தாய் வேறும் அறிவுருப் பொருள் சத்தென்னின்
அறிபவன் அறியா னாகில் அதுஇன்று பயனும் இல்லை
அறிபவன் அருளி னாலே அநந்நிய மாகக் காண்பன்
அறிபொருள் அறிவாய் வேறாய் அறிவருள் உருவாய் நிற்கும்.

(ப-ரை.) அறிபொருள் அசித்தாய் வேறும் - அறியப்பட்ட பொருள் சடமாய் அழிதலுமாம், அறிவுருப் பொருள் சத்தென்னின் - அறியப்படாத (பொருட்குத் தோற்றக்கேடு முதலியன இன்மையான்) அதனைச் சத்தெனக் கொள்ளின், அறிபவன் அறியானாகில் அது இன்று பயனும் இல்லை - அறியவல்ல ஆன்மாவால் அறிதல் (வேண்டும் அஃது) இன்றேல் அங்ஙனங் கொண்ட பொருளும் இல்லையாய் (அதனாற் பெறக் கடவதோர்) பயனுமில்லை, அறிபவன் அநந்நியமாக அருளினாலே காண் பன் - (ஆகலான் அவ்விருதிறனும் இழுக்குப்படும் என்னும் அதனை) அறிய வல்லான் ஒருவன் (அச்சிவப்பொருளை) அதனோடு ஒற்றித்து நின்று அவ்வருளானே அறிவன், அறிபொருள் அறிவாய் வேறாய் அறிவு அருள் உருவாய் நிற்கும் - (அங்ஙனம்) அறியப்படும் பொருளாகிய அது தான் அவ்வறிவேயாய் வேறுமாய் உடனுமாய் நிற்பதோர் இயல்பிற்றும் என்க.

(பொ-ரை.) மேற்கூறிப்போந்தவாற்றால் அவ்விருதிறனும் இழுக்குப்படும் என்னும் அதனை அறியவல்லான் ஒருவனுக்கு அச்சிவப்பொருள் அதனோடு ஒற்றித்து நின்று அவ்வருளானே அறியற்பாலதாம், அங்ஙனம் அறியப்படும் பொருளாகிய அது தான் அவ்வறிவேயாய் வேறுமாய் உடனுமாய் நிற்பதோர் இயல் பிற்றாகலான் எ-ம்.

அறியுமாறு இது வென்பது பாரிசேடப் பிரமாணத்தான் உணர்த் துவார் 'அறிபொருள் அசித்தாய் வேறும் அறிவுருப் பொருள்சத் தென் னின் அறிபவன் அறியானாகில் அது இன்று பயனும் இல்லை' யென மேற்போந்ததனை அனுவதித்துக்கொண்டு கூறினர்.

கிழவன் அறிந்தான் கிழத்தி அறிந்திலள் என்புழிப்போல அதனை யென்னும் உருபேற்ற சுட்டுப்பெயர் வருவித்துரைக்க.

அறிவு அருள் உருவாய் நிற்குமெனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார்; உடனாய் நின்றன்றி அறிவை அருளுதல் செல்லாமை யின் அஃது அதற்குக் காரணமாதல் அறிக.

அநந்நியமாயவழிக் காண்பானும் காட்சிப்பொருளாமாறும் அருளா னுபகரிக்கப்படுமாறும் யாங்ஙனஞ் செல்லும் என்பாரை நோக்கி, அறி வேயாதலும் வேறாதலும் உடனாதலுமாகிய மூத்திறமுந் தன்கண் தோன்ற நின்றதோர் அத்துவித இயைபு உடைமையின் அவ்வாறாதல் செல்லும் என்பார், அறிபொருள் அறிவாய் வேறாய் அறிவு அருள் உரு வாய் நிற்கும் இயல்பும் உடன் கூறினர்.

இவை இரண்டு செய்யுளானும் மாயாவாதி மதம்பற்றி யாசங்கித் துப் பரிகரித்து மூன்றாங்கூறு வலியுறுத்தப்பட்டது.

அற்றேல், அருளால் அநந்நியமாகக்காண்டல் எற்றுக்கு யோகபாவனை செய்து காணவே அமையும் என்னும் பாதஞ்சலரை நோக்கியெழுந்தது வருஞ்செய்யு ளென்பது. (௬)

பாவிப்ப தென்னிற் பாவம் பாவகங் கடக்கிற் பாவம்
பாவிக்கும் அதுநான் என்னிற் பாவகம் பாவங் கெட்டுப்
பாவிப்ப தென்னிற் பாவம் பாவனை இறந்து நின்று
பாவிக்கப் படுவ தாகும் பரம்பரன் அருளி னாலே.

(ப - ரை.) பாவிப்பதென்னின் பாவம் - (நீ கூறும் பாவனையாவது) கருவிகளோடு கூடி நின்று செய்வதெனிற் சகலமாய்ப் போகலானும், பாவகம் கடக்கின் பாவம் - கருவிகளை நீங்கி நின்று பாவிப்பதென்னின் அப்பொழுது கேவலம் வந்து தலைப்படுமாகலானும், பாவம் கெட்டுப் பாவிப்பதென்னின் பாவம் - இரண்டுமின்றிப் பாவிப்பதென்னின் அஃது அநிர்வசனீயமெனப்பட்டுப் பாழாய் முடியுமாகலானும், பாவிக்கும் அதுநானென்னின் பாவகம் - (அவ்வாறன்றிப் பாவனைக் கெய்தாத பொருளை எய்தியதாகவைத்துப்) பாவிக்கும் பொருள் யான் என்று தன்மேல் வைத்துப் பாவிப்பது என்னில் அதனான் ஆவதோர் பயன் இல்லை யாகலானும், பாவனை இறந்து நின்று பரம்பரன் அருளினாலே பாவிக்கப் படுவதாகும் - (அப்பாவனை யனைத்தும் நாடகமாத்திரையேயாம் ஆகலான் மேற்கூறியவாறு) அநந்நியமாய் நின்று அப்பரம்பரன் அருளாற் காண்டலே ஈண்டைக்குரிய பாவனை யாவதன்றிப் பிறிதில்லை என்க.

(பொ - ரை.) நீ கூறும் பாவனையாவது, கருவிகளோடுங் கூடி நின்று செய்வதெனிற் சகலமாய்ப் போகலானும், கருவிகளை நீங்கி நின்று பாவிப்பதென்னில் அப்பொழுது கேவலம் வந்து தலைப்படும் ஆகலானும், இரண்டுமின்றிப் பாவிப்பதென்னில் அஃது அநிர்வசனீயம் எனப்பட்டுப் பாழாய் முடியும் ஆகலானும், அவ்வாறன்றிப் பாவனைக்கு எய்தாத பொருளை எய்தியதாக வைத்துப் பாவிக்கும் பொருள் யான் என்று தன்மேல் வைத்துப் பாவிப்பது என்னில் அதனான் ஆவதோர் பயனில்லையாகலானும், அப்பாவனை யனைத்தும் நாடகமத்திரையேயாம் ஆகலான் மேற்கூறியவாறு அநந்நியமாய் நின்று அவ்வருளாற காண்டலே ஈண்டைக்குரிய பாவனை யாவதன்றிப் பிறிதில்லை எ - ம்.

பாவிக்கும் அதுநான் என்னிற் பாவகம் என்பதனை இறுதிக்கண் வைத்துரைக்க.

பாவம் பாவகம் நாடகமென்பன ஒரு பொருட்கிளவி.

இதனானே பாதஞ்சலர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து மேலது வலியுறுத்தப்பட்டது.

அற்றாயினும், பரம்பரன் அருளினாலே பாவிக்கப்படுவது என்றது மலமாசு தீர்ந்தவழிச் சிவத்தோடொப்பதாய உயிரறிவே அதனை யறி

யும் என்றுற் படுமிழுக்கு என்னை யென்னும் சமவாத சைவரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யு ளென்பது. (எ)

அந்நியம் இலாமையானும் அறிவினுள் நிற்ற லானும்
உன்னிய எல்லாம் உள்நின் றுணர்த்துவன் ஆதலானும்
என்னது யானேன் றேதும் இருஞ்செருக் கறுத்த லானும்
தன்னறி வதனுற் காணுந் தகைமையன் அல்லன் ஈசன்.

(ப - ரை.) ஈசன் அந்நியம் இலாமையானும் அறிவினுள் நிற்றலானும் உன்னிய எல்லாம் உள் நின்று உணர்த்துவன் ஆதலானும் - (அச்) சிவம் ஒன்றாய் வேறாய் உடனுமாய் நிற்பதொன்று ஆகலானும், யான் என்னது என்று ஓதும் இரும் செருக்கு அறுத்தலானும்-(அந்நிலை) அறிவானும் அறிபொருளும் அறிவுமெனப் பகுத்தறிய வாராமையானும், தன் அறிவதனுல் காணும் தகைமையன் அல்லன் - (அஃது) உயிரறிவால் அறியப்படுவதொன்றன்று என்க.

(பொ - ரை.) அச்சிவம் ஒன்றாய் வேறாய் உடனுமாய் நிற்ப தொன்றாகலானும், அந்நிலை அறிவானும் அறிபொருளும் அறிவும் எனப் பகுத்தறிய வாராமையானும், அஃது உயிர் அறிவால் அறியப்படுவ தொன்றன்று எ - ம்.

உன்னிய எல்லாம் உள் நின்று உணர்த்துவன் என்பதற்கு [1]மேல் அறிவருளுருவாய் நிற்கும் என்பதற்கு உரைத்தாங்கு உரைக்க.

செருக்கா லுண்டாகிய பகுத்துணர்வைச் செருக்கென உபசரித்தார்.

அற்றேல், அம்முத்திறம் ஆண்டுளே என்பது எற்றுற் பெறுதும் என்னும் அவரை நோக்கி அஃதுணர்த்துதற் கெழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (அ)

ஒன்றெனும் அதனுல் ஒன்றேன் றுரைப்பதுண் டாகை யாலே
நின்றனன் வேறாய்த் தன்னின் நீங்கிடா நிலைமை யாலே
பின்றிய உணர்வுக் கெட்டாப் பெருமையன் அறிவி னுள்ளே
என்றும்நின் றிடுத லாலே இவனவன் என்ன லாமே.

(ப - ரை.) ஒன்றெனும் அதனுல் ஒன்றென்று உரைப்பது உண்டு ஆகையாலே வேறாய் நின்றனன் - சிவமும் உயிரும் ஒன்றென்பாரை நோக்கி அங்ஙனம் அறிவதொரு பொருள் உண்டு என்பதுபற்றி வேறாய் நிற்றல் பெற்றும், தன்னின் நீங்கிடா நிலைமையாலே பின்றிய உணர்வுக்கு எட்டாப் பெருமையன் - (வேறு என்பாரை நோக்கி) அறிவுக்கறிவு பிரிந்துதோன்றுமை பற்றி வேறென்னும் அறிவுக்கெட்டாது உடனுதல் பெற்றும், அறிவின் உள்ளே என்றும் நின்றிடுதலாலே

1. காரணத்தைக் காரியமாக உபசரித்தார் உடனுய் நின்றன்றி உணர்த்துதல் செல்லாமையின் அஃது அதற்குக் காரணமாதல் அறிக. 'அறி பொருள்' சித்தி. சுக - சு.

இவன் அவனென்னலாமே-(அவ்வளவே கூறுவாரை நோக்கி) அவ்வறிவினுள்ளாக என்ஞான்றும் (நீர் நிழல்போல் ஒற்றித்து) நிற்றல்பற்றி உயிரே சிவமெனும்படி ஒன்றுதல் பெற்றும் (ஆகலான் அப்பெற்றித்தாய அத்துவித நிலையை அருளினாலே அநந்நியமாகக் காண்டலே தக்கது) என்க.

(பொ - ரை.) சிவமும் உயிரும் ஒன்று என்பாரை நோக்கி அங்ஙனம் அறிவதொரு பொருள் உண்டு என்பது பற்றி வேறாய் நிற்றல்பெற்றும்; வேறு என்பாரை நோக்கி அறிவுக்கறிவு பிரிந்து தோன்றாமைபற்றி வேறென்னும் அறிவுக்கெட்டாது உடனாதல் பெற்றும்; அவ்வளவே கூறுவாரை நோக்கி அவ்வறிவினுள்ளாக நீர் நிழல்போல் ஒற்றித்து நிற்றல்பற்றி உயிரே சிவம் எனும் படி ஒன்றுதல் பெற்றும்; ஆகலான் அப்பெற்றித்தாய அத்துவித நிலையை அருளினாலே அநந்நியமாகக் காண்டலே தக்கது எ - ம்.

இவையிரண்டு செய்யுளானுஞ் சிவசமவாதி மதம்பற்றி ஆசங்கித்துப் பரிகரித்து மேலது வலியுறுத்தப்பட்டது. (௬)

ஆறஞ்சூத்திர முடிந்தது

ஆகத் திருவிருத்தம் - ௨௬அ.

---

# சாதனவியல்

## ஏழாஞ் சூத்திரம்



நாலாஞ் சூத்திரமுதலிய மூன்றனும் பொருளியல்பு கூறிய ஆசிரியர், நிறுத்தமுறையானே, வேண்டுஞ் செய்தி முறைமையெனப்படுஞ் சாதனங்களது இயல்பு மூன்று சூத்திரத்தாற் கூறுவான் தொடங்கினர். அவற்றுள், மேற்கூறிப்போந்த முப்பொருள்களுட் சாதித்துப் பெறுதற்குரிய அதிகாரம் உடையது இது என்பது பாரிசேட அளவையின் வைத்து உணர்த்துதற்கெழுந்தது ஏழாஞ் சூத்திரம்.

அனைத்துஞ்சத் தென்னின் ஒன்றை யறிந்திடா தசத்தால் என்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிருள் இரவி முன்போல்
நினைப்பதிங் கசத்தே யென்னிற் சத்தின்முன் நிலாமை யானுந்
தனைக்கோடோன் றுணர்த லானுந் தானசத் துணரா தன்றே.

(ப - ரை.) சத்து அனைத்தும் (அறிவது) என்னின் - (மேலைச் சூத்திரத்து வரைசெய்து உணர்த்திய சத்தசத்துக்களைப் பகுத்தறியும் பொருள் யாது என வினயினர்க்குச்) சத்தாகிய சிவமே அசத்தாகிய பாசம் அனைத்தினையும் அறிவது எனச் சிவாத்துவித சைவர் விடுப்பின், ஒன்றை அறிந்திடாது-(சத்தாகிய சிவம் வியாபக அறிவாதலான் எவற்றினையும் ஒருங்கே அறிந்து நிற்பதன்றி ஏகதேசமாய்ப் பகுத்து) ஒன்றை அறியுமாறு இல்லை, அசத்தால் (அறிவது) என்னின்-(அற்றேல் சிவம் வியாபக அறிவாயினும் உயிரின்பொருட்டு) அசத்தெனப்படுங் கருவி கரணங்களிடமாக நின்று (அங்ஙனம் பகுத்து)அறிதல் கூடுமெனின், இரவிமுன் இருள்போல் சத்தின்முன் அசத்து முனைத்திடாது - இரவிமுன் இருள்போலச் சத்தெதிர் அசத்து முனைத்து நில்லாமையின் (அசத்தினிடமாக நின்று அங்ஙனம் அறியும் என்பதுங் கூடாது), இங்கு அசத்தே நினைப்பது என்னின் - (இனி விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியில்) அசத்தாகிய கருவியே (சித்தாகிய சிவத்தைச் சிவ கரணமாய் நின்று) அறிவது எனச் சிவசங்கிராந்த வாதிகள் விடுப்பின், சத்தின் முன் நிலாமையானும், சத்தெதிர் முனைத்து நில்லாதென (மேற்கூறின) மையானும், தனைக்கொடு ஒன்று உணர்தலானும்-பிறிதொன்று உணர்வதற்குத் தான் கருவியாய் நிற்பது அன்றித் தனக்கோர் அறிவில்லது) ஆகலானும், அசத்துத்தான் உணராது அன்றே - அசத்து (சத்தை) அறியும் என்பதுங் கூடாது என்க.

(பொ - ரை.) மேலைச்சூத்திரத்து வரைசெய்து உணர்த்திய சத்து அசத்துக்களைப் பகுத்தறியும் பொருள் யாது என வினயினர்க்கு, சத்தாகிய சிவமே அசத்தாகிய பாசம் அனைத்தினையும் அறிவது எனச் சிவாத்துவித சைவர் விடுப்பின், சத்தாகிய சிவம் வியாபக அறிவாதலால் எவற்றினையும் ஒருங்கே யறிந்து நிற்ப

தன்றி ஏகதேசமாய்ப் பகுத்து ஒன்றை அறியுமாறில்லை; அற்றேல், சிவம் வியாபக அறிவாயினும் உயிரின்பொருட்டு அசத்தெனப்படுங் கருவி கரணங்களிடமாக நின்று அங்ஙனம் பகுத்தறிதல் கூடுமெனின், இரவிமுன் இருள்போலச் சத்தெதிர் அசத்து முனைத்து நில்லாமையின் அசத்திடமாய் நின்று அங்ஙனம் அறியும் என்பதுங் கூடாது; இனி விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியில் அசத்தாகிய கருவியே சத்தாகிய சிவத்தைச் சிவகரணமாய் நின்று அறிவது எனச் சிவசங்கிராந்தவாதிகள் விடுப்பின், சத்தெதிர் முனைத்து நில்லாதென மேற்கூறினமையானும் பிறிதொன்று உணர்வதற்குத் தான் கருவியாய் நிற்பதன்றித் தனக்கோர் அறிவில்லது ஆகலானும் அசத்துச்சத்தை அறியும் என்பதுங் கூடாது எ - ம்.

எனவே, பாரிசேட அளவையான் இவ்விரண்டினும் வேறாய் எஞ்சி நின்ற பசுப்பொருளே இவ்விரண்டினையும் பகுத்தறியும் என்பது பெறப்பட்டது.

படவே முதல்நூல் ஏழாஞ் சூத்திரம்போல இச்செய்யுளும் முக்கூற்றது ஆயவாறு காண்க.

அனைத்தையும் என இரண்டாவது விரித்து உரைக்க.

அறிவது என்பது அவாய் நிலையான் வந்தது; அஃது அசத்தால் என்பதனோடுங் கூட்டி உரைக்கப்பட்டது.

முனைத்திடாமையாவது இது குடம், இஃது ஆடையென நம்மனோரால் சுட்டி அறியப்படுமாறு போல முதல்வனால் சுட்டி அறியப்படுவதாய் வேறு நில்லாமை.

இதனுட்போந்த முக்கூற்றினுள், முன்னை இருகூற்றினும் விரிக்கக்கடவதாய விசேடம் இன்மையின் அவற்றை ஈண்டே வினா விடைகளால் தொகுத்து உணர்த்தி, ஏனை மூன்றாங் கூற்றை மூன்று செய்யுளான் விரித்து உணர்த்துகின்றார்.

அவற்றுட் பாரிசேட அளவையாற் பெறப்பட்டு எஞ்சி நின்ற [1]பொருளை இனிது விளக்கி அதன் இயல்பு வரைசெய்து உணர்த்துதற்கெழுந்தது வருஞ் செய்யுளென்பது. (க)

---

1. உயிர்.

## மூன்றுமதிகரணம்

சத்தசத் தறிவ தான்மாத் தான்சத்தும் அசத்தும் அன்று
நித்தனுய்ச் சதசத் தாகி நின்றிடும் இரண்டன் பாலும்
ஒத்துடன் உதித்து நில்லா துதியாதும் நின்றி டாது
வைத்திடுந் தோற்றம் நாற்றம் மலரினில் வருதல் போலும்.

(ப - ரை.) *சத்து அசத்து அறிவது ஆன்மா - (தம்முள் உரிமை யில்லாத) சத்து அசத்து என்கின்ற அவ்விரண்டினையும் அறிவது ஆன்மாவேயாம், தான் சத்தும் அசத்தும் அன்று - அதுதான் சத்து அசத்து என்கிற அவ்விரண்டிற்கும் வேருய், இரண்டன்பாலும் உதித்து உடன் ஒத்து நில்லாது - அவ்விரண்டன் பகுதியினும் விளங்கித் தோன்றி அவற்றோடு ஒப்ப நிற்பதும் அன்ருய், உதியாது நின்றிடாது - விளங்காது சூனியமாய் நிற்பதும் அன்ருய், வைத்திடும் தோற்றம் - நிற்கும் முறைமை, மலரினில் நாற்றம் வருதல் போலும் - மலரின்கண் நாற்றம் (அவ்விரு வகையுமன்றி அதன்கண் அடங்கித்) தோன்றுமாறு போல, சதசத்தாகி நித்தனுய் நின்றிடும் - அதுவதுவாய் நின்று (தோன்றுவதோர் இயல்பாம் ஆகலின் அஃது அவைபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டனையும் அறியும் முகத்தான் அறியப்படுஞ்) சதசத்தாவதோர் உரிமை யுடைத்தாகலான் என்க.*

(பொ - ரை.) *தம்முள் உரிமையில்லாத அவ்விரண்டினையும் அறிவது ஆன்மாவேயாம்; அதுதான் அவ்விரண்டற்கும் வேருய் இரண்டன்பாலும் மலரின்கண் நாற்றம்போல்[1] அதுவதுவாய் நின்று சத சத்தாவதோர் உரிமையுடைத்தாகலான் எ-ம்.*

*உயிர் அவ்விரண்டின் வேருயும் அதுவதுவாய் நிற்பதொன்று என்ற இதனுனே, சத்தசத்தறிவதாகிய ஆன்மாத் தன்னை அறியுமோ அறியாதோ எனக் கடாயினுர்க்கு அவைபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையும் அறியுமுகத்தான் அறியப்படுவதாம் எனத் தன்னை அறியுமாறு கூறியதூஉம் ஆயிற்று.*

*அற்றேல், சிவன் சீவன் இரண்டுஞ் சித்தாகவும், சிவன் எதிர் மூனைத்து நிற்றல் ஆற்றுத அசத்துச் சீவனுல் அறியப்படுவதாய் அதன் எதிர் மூனைத்து நிற்றல் ஆற்றுதற்கு என்னையோ காரணம் என்பாரை நோக்கி எழுந்தது வருஞ்செய்யு ளென்பது.* (உ)

சுத்தமெய்ஞ் ஞான மேனிச் சோதிபால் அசத்தஞ் ஞானம்
ஒத்துறு குற்றம் எல்லாம் உற்றிடும் உயிரின் கண்ணே
சத்துள போதே வேறுஞ் சதசத்தும் அசத்தும் எல்லாம்
வைத்திடும் அநாதி யாக வாரிநீர் லவணம் போலும்.

---

1. ‘உற்ற ஆக்கையின்’. அ. திருவாசகம், அதிச. கூ.

(ப - ரை.) மெய்ஞ்ஞானமேனிச் சுத்தசோதிபால் அசத்து அஞ்ஞானம் ஒத்துறு - (அநாதியாகிய முப்பொருளுட் சிவம் உயிர் இரண்டும் நித்த வியாபக சித்தாதற் பொதுமையான் ஒக்குமாயினும் அவற்றுள்) உண்மை ஞானமே திருமேனியாகவுடைய சிவம் அதிசூக்கும சித்தாதலின் ஆண்டு அசத்தாய பாசம் நிற்றலாற்றாது, உயிரின்கண்ணே குற்றம் எல்லாம் உற்றிடும் - உயிர் தூலசித்தாதலின் அதன் எதிரே பாசங்கள் முனைத்து நிற்றலாற்றும், சத்து உளபோதே வேறாஞ் சதசத்தும் அசத்தும் எல்லாம் அநாதியாக வைத்திடும் - (அங்ஙனம்) சத்தாகிய அச்சிவம் என்றுள்ளது அன்றே வேறாகிய சதசத்தாய உயிர்களும் (உள்ளனவாக அவ்வுயிர்களை) அசத்தாகிய பாசங்கள் அநாதியாகப் பற்றி நிற்கும் (என்பது), வாரி நீர் லவணம் போலும் - (கடலும் நீரும் தூயனவேயாகவுங் கடலின் மருவலாற்றாது) கடல் நீரின் (மருவிநிற்கும்) உப்புப் போலும் (ஆகலான் ஆண்டைக்கு வேறு காரணம் இல்லை) என்க.

(பொ - ரை.) அநாதியாகிய முப்பொருள்களுட் சிவம் உயிர் இரண்டும் நித்த வியாபக சித்தாதற் பொதுமையான் ஒக்குமாயினும் அவற்றுட் சிவம் அதிசூக்கும சித்தாதலின் ஆண்டு அசத்து நிற்றலாற்றாது, உயிர் தூலசித்தாதலின் அதனெதிர் முனைத்து நிற்றலாற்றும் என்பது கடலும்நீருந் தூயனவேயாகவுங் கடலின் மருவலாற்றாது கடல் நீரின் மருவி நிற்கும் [1]உப்புப் போலும் ஆகலான் ஆண்டைக்கு வேறு காரணமில்லை எ - ம்.

இலவணமென்பதன் இகரம் விகாரத்தால் தொக்கது.

சுத்தமெய்ஞ்ஞானமேனிச் சோதிபால் அசத்தஞ்ஞானம் ஒத்துறு என்ற இதனானே முன்னை யிருகூற்றையும் ஒருவாற்றானே வலியுறுத்தவாறும் ஆயிற்று.

தூலசித்தென்பது [2]உயிரென்னும் பெயரானும் உவமையானும் பெறுதும்.

அற்றேல், சிவம் அதிசூக்கும சித்தென்பதும் உயிர் தூலசித்தென்பதும் எற்றாற் பெறுதும் என்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுள் என்பது. (௩)

அறிவிக்க அறித லானும் அழிவின்றி நிற்ற லானுங்
குறிபெற்ற சித்துஞ் சத்துங் கூறுவ துயிருக் கீசன்
நெறிநித்த முத்த சுத்த சித்தென நிற்பன் அன்றே
பிறிவிப்பன் மலங்க ளெல்லாம் பின்னுயிர்க் கருளி னாலே.

(ப - ரை) அறிவிக்க அறிதலானும் - தன்னறிவு நிகழ்ச்சிக்கு வியஞ்சகத்தையின்றி அமையாமையானும், (அறிந்தபின்) அழிவின்றி நிற்றலானும் - அறிந்தபின் அழிவின்றி நிற்றலானும், உயிருக்குக் குறி

---

1. ஆன்மா = வியாபகம் சித்த சித்து. 'அந்தக்கரண.' சிவஞா. சூ. ௪. பேருரை.

2. 'மெய்ஞ்ஞானம்' சிவஞா, சூ. எ. ௩-௩.

பெற்ற சித்தும் சத்தும் கூறுவது - உயிர் தூலசித்தென்பதூஉம் தூல சத்தென்பதூம் கூறப்படும், ஈசன் உயிர்க்கு மலங்களெல்லாம் பின் அருளினாலே பிறிவிப்பன் - முதல்வன் அவ்வுயிரின்கண்ண தாகிய மலத்தைப் பின்னர் அருளான் நீக்கி அறிவிக்கும் வியஞ்சகப் பொரு ளாகலால், நெறி நித்த முத்த சுத்த சித்(துச் சத்)தென நிற்பன் அன்றே - சிவபிரான் (தனக்கொரு வியஞ்சகம் வேண்டாத) முறைமை யுடைய நித்த முத்த அதிசூக்கும சித்தாயும் சத்தாயும் நிற்பன் என்க.

(பொ - ரை.) தன்னறிவு நிகழ்ச்சிக்கு வியஞ்சகத்தையின்றி யமையாமையால் உயிர் தூலசித்தென்பதூம், அவ்வுயிரின் கண்ணதாகிய மலத்தை நீக்கி அறிவிக்கும் வியஞ்சகப் பொரு ளாகலாற் சிவம் தனக்கொரு வியஞ்சகம் வேண்டாத அதி சூக்கும சித்தென்பதூஉம், இனிது விளங்கும் எ - ம்.

இவ்வியல்பு கண்ணொளி ஞாயிற்றினொளிகளின் வைத்துக் கண்டு கொள்க.

சித்தியல்புபோற் சத்தியல்பினும் வேற்றுமை காட்டுவார், அழி வின்றி நிற்றலாற் சத்துங்[1] கூறுவதென்றார்.

அறிவிக்க அறிதலானும் அறிந்தபின் அழிவின்றி நிற்றலானும் என் றுரைக்க; அறிந்தபின்னென்றது ஆற்றலான் வந்தது.

சுத்தசித்தென்புழியுஞ் சத்தென்பது கூட்டியுரைக்கப்படும்.

பிறிவிப்பன் மலங்களெல்லாம் பின்னுயிர்க்கருளினாலே என்ற இத னால் வருகின்ற சூத்திரத்திற்குத் தோற்றுவாய் செய்ததூஉமாயிற்று.

இவை மூன்று செய்யுளானும் முறையே உயிர்க்குச் சத்து அசத்து இரண்டினையும் அறியும் உரிமை உண்மையும், அதற்குக் காரணமும், அஃதாண்டுளதாமாறுந் தெரித்துணர்த்திப் பாரிசேட அளவையாற் பெறப்பட்ட மூன்றூங் கூற்றுப்பொருள் வலியுறுத்தப்பட்டது. (௩)

**ஏழாஞ் சூத்திரமுடிந்தது.**

**ஆகத் திருவிருத்தம் - ௨௫௨.**

---

1. உண்மையறிந்தபின் பிறப்பின்றியிருத்தலின் உயிர்சத்து ஆனால் சிவம் நித்த முத்த சத்து.

# எட்டாஞ் சூத்திரம்

மேலைச்சூத்திரத்தால் சாதித்துப் பெறும் உரிமை தனக்கே உண்டு என்பது உணர்ந்த உயிர்க்கு அப்பேறு தனக்கு வேண்டற்பாலது என்பதூஉம், அதற்குச் சிறந்த சாதனமாவது இது என்பதூஉம், அது வருவாயும் உணர்ந்தன்றிச் சாதனஞ் செய்தற்கு மனவெழுச்சி செல்லாமையின், மனவெழுச்சி சேறற்பொருட்டு அவற்றை உணர்த்துதற்கு எழுந்தது எட்டாஞ் சூத்திரம்.

எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

(ப - ரை.) மன்னவன்தன் மகன் - மன்னவ குமாரனானான் ஒருவன், வேடரிடத்தே தங்கி வளர்ந்து - (பிள்ளைமைப்பருவத்து மடமையால்) வேடருட்பட்டுப் (பரதந்திரனாய்த் தன் சாதிக்குரிய பெருந்தகைமை யிழந்து இழிதொழில் பயிற்றி) வளர்ந்து, அவனை அறியாது மயங்கி நிற்ப - அவ்வரசனை(யுந் தன்னையும்) அறியாது மயக்கமுற்று நிற்க, பின் அவனும் நீ என்மகன் என்று அவரின் பிரித்து - பின்பு (தந்தையாகிய) அவ்வரசனும் நீ என்மகன் என்று அறிவுறுத்தி அவ்வேடரினின்றும் (அவனைப்) பிரிப்பித்து, பெருமையொடும் தான் ஆக்கிப் பேணு மாபோல் - பெருந்தகைமையோடும் தானும் வண்ணஞ் செய்து போற்றுமாறுபோல், துன்னிய ஐம்புல வேடர் சுழலிற் பட்டு - (தன்னிலையிற் பிறழ்ந்து) நெருங்கிய ஐம்பொறிவேடர் சுழலிற்பட்டு அறிவிழந்து, துணைவனையும் அறியாது துயருறும் தொல் உயிரை - (தன்னை அறியாமையே யன்றித்) தலைவனையும் அறியாது நிலைபெற்ற உயிர் வருந்துமாற்றை, மன்னும் அருள் - இறப்பில் தவமுதிர்ச்சி நோக்கி, குரு ஆகி வந்து -(நித்த முத்த சுத்த சித்தனப்படும் அவ்ஈசன்) குரு வடிவங் கொண்டு எழுந்தருளி வந்து (உணர்த்தி), அவரின் நீக்கி மலம் அகற்றி - அவ் ஐம்பொறியின் நின்று நீங்குமாறு மலவலியைக் கெடுத்து, தானாக்கி மலர் அடிக்கீழ் வைப்பன் - (மீட்டுத்) தொன்னிலையாய தன் வண்ணமாக்கி (அவ்வுயிரை) மலர்போலுந் திருவடிக்கீழ் வைத்து வாழ்விப்பன் என்க.

(பொ - ரை.) உயிர் தன்னிலையிற் பிறழ்ந்து ஐம்பொறிகளுட் பட்டு அறிவிழந்து வருந்தும் ஆற்றை, நித்தமுத்தசுத்த

சித்தெனப்படும் அவ்வீசன், குரு வடிவங் கொண்டு எழுந்தருளி வந்து தவமுதிர்ச்சி நோக்கி உணர்த்தி மீட்டுத் தொன்னிலையிற் பிறழாதுவைத்து வாழ்விப்பன் எ - ம்.

இங்ஙனம் வாழ்வித்தல் ஈசனுக்குக் கடப்பாடாதல் இனிது விளக்குவார், பிள்ளைமைப்பருவத்து மடமையால் வேடருட்பட்டுப் பரதந்திரனாய்த் தன் சாதிக்குரிய பெருந்தகைமை யிழந்து இழிதொழில் பயிற்றி வருந்தும் மன்னவ குமாரனுவான் ஒருவனுக்கு அவன் தந்தை செய்யும் உதவியை எடுத்துக்காட்டிக் கூறினார்.

மும்மலச் சுழலிற்பட்டு வருந்துதல் காட்சிப்புலனாதல் செல்லாமையின், அதனை யொழித்துக் காட்சிப்புலனாய் எளிதின் அறியப்படுவதாய ஐம்பொறிச்சுழலிற் படுதலே யீண்டெடுத்துக் கூறினார், தூல அருந்ததி நயம் பற்றிச் சோபான முறையின் வைத்துணர்த்துதல் மரபாகலின்.

துணைவனையும் என்னும் உம்மை தன்னை யறியாமையே யன்றி யென இறந்தது தழீஇயது ; சிறப்புமாம்.

மன்னும் அருள் என்றது ஈண்டு இறப்பில் தவத்தின்மேற்று. மூன்றுவதுவிரித்துரைக்க.

என்மகன் நீ யென்று என உவமையுட் கூறுதலாற் பொருளினும் உணர்த்தியென்பது வருவித்துரைக்கப்பட்டது. [1]'தவத்தினின் உணர்த்த' என்றார் முதல்நூல் ஆசிரியரும்.

இங்ஙனம் உரைத்தவாற்றான் முதனூல் எட்டாஞ் சூத்திரம்போல இச்செய்யுளும் நாற்கூற்றதாமாறு கண்டுகொள்க.

இவற்றுட் குருவாகிவந்து உணர்த்தியென்ற முதற்கூற்றுப் பொருளை ஒன்பது செய்யுளான் வகுத்துக் கூறுவான் தொடங்கினார். (க)

---

1. சிவஞானபோதம், 'தவஞ்செய்தார்.' 'ஐம்புலவேடர்.'

## முதல திகரணம்

உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றும்
உயரும்விஞ்ஞா னகலர்பிர ளயாகலர் சகலர்
நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்மம் மாயை
நிற்குமுதல் இருவர்க்கும் நிராதார மாகிக்
கரையிலருட் பரன்துவிதா சத்திநிபா தத்தாற்
கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம ஒப்பில்
தரையில்ஆ சான்மூர்த்தி ஆதார மாகித்
தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்.

(ப - ரை.) *உரைதரும் இப் பசு* - (எண்ணரிதாய்) உரைக்கப்படும் இவ்வுயிர்களெல்லாம், *உணரின்* - உணருமிடத்து, *உயரும் விஞ்ஞான கலர் பிரளயாகலர் சகலர்* - உயர்ந்த விஞ்ஞானகலரும் பிரளயாகலரும் சகலரும் (என), *நிரையின் மலம் மலம் கன்மம் மலம் கன்மம் மாயை நிற்கும்* - முறையே ஆணவமலமும் அதனோடு கன்மமலமும் அவைகளோடு மாயாமலமுமாய் நிற்கும் (பந்தவேறுபாட்டான்), *மூன்று வர்க்கமாம்* - மூவகைப்படும், *சகலர்க்கு* - (அவற்றுள் மும்மலங்களும் உடைய) சகலவர்க்கத்திற்கு, *கன்ம ஒப்பில்* - இருவினையொப்பின்கண், *சதுர்த்தா சத்திநிபாதத்தால்* - மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரமென்னும் நால்வகைச் சத்திநிபாத முறைமையின் வைத்து (அரிதுணர்த்தவேண்டுதலின்), *தரையில் ஆசான் மூர்த்தி தரித்து ஆதாரமாகி மலம் ஒழிப்பன்* - இவ்வுலகின்கண் (அவ்வுயிர்கட்கே) குருமூர்த்தியை அதிட்டித்து நின்று சாதாரதீக்கை செய்து மலத்தை நீக்குவன், *முதல் இருவர்க்கும்* - ஒருமலம் இருமலமுடைய மற்றை இருவர்க்கத்திற்கும், *துவிதா சத்திநிபாதத்தால்* - தீவிரம் தீவிரதரம் என்னும் இருவகைச் சத்திநிபாதத்தின் வைத்து (உணர்த்த அமையும் ஆதலின்), *கரையில் அருட்பரன் நிராதாரமாகி மலம் கழிப்பன்* - அளவிடுதற்கரிய கருணைவடிவாகிய முதல்வன் (சகலவர்க்கம்போல் குருவடிவின் மறைந்து நின்று படர்க்கையான் உணர்த்தப்பட்டு அரிதுணரவேண்டாத அவ்விருதிறத்து உயிர்கட்கும் முறையே உள் நின்றும் முன்நின்றும் உணர்த்துவதாகிய) நிராதாரதீக்கைசெய்து மலத்தை நீக்குவன் என்க.

(பொ - ரை.) எண்ணரிய உயிர்கள் எல்லாம் பந்தவேறுபாட்டான் மூவகைப்படும். அவற்றுள் மும்மலங்களும் உடைய சகலவர்க்கத்திற்கு நால்வகைச் சத்திநிபாத முறைமையின் வைத்து அரிதுணர்த்த வேண்டுதலின், அவ்வுயிர்கட்கே குருவாகி வந்து உணர்த்தியென மேற்கூறிய சாதாரதீக்கை செய்வது. ஒருமலம் இருமலம் உடைய மற்றை இருவர்க்கத்திற்குந் தீவிரந் தீவிரதரம் என்னும் இருவகைச் சத்திநிபாதத்தின் வைத்து உணர்த்த அமையும் ஆதலின், சகலவர்க்கம்போற் குருவடிவின் மறைந்து நின்று படர்க்கையானுணர்த்தப்பட்டு அரி

துணரவேண்டாது அவ்விருதிறத்துயிர்கட்கும் முறையே உள் நின்றும் முன்னின்றும் உணர்த்துவதாகிய நிராதார தீக்கை செய்யப்படும் எ - ம்.

இதனுனே தீக்கை இருவகைத்து என்பதூஉம் அவ்விருவகைக்கும் உரியார் இவரென்பதூஉங் கூறப்பட்டன.

இனி இவ்விரண்டனுள் ஈண்டெடுத்துக்கொண்ட சாதாரதீக்கையிற்படும் பாகுபாடும் அவற்றது இயல்பும் வகுத்துக் கூறுதற்கெழுந்தன வருஞ் செய்யுட்கள் என்பது. (௨)

பலவிதம்ஆ சான்பாச மோசனந்தான் பண்ணும்
 படிநயனத் தருள்பரிசம் வாசகமா னதமும்
அலகில்சாத் திரம்யோகம் அவுத்தி ராதி
 அநேகம்உள அவற்றின்அவுத் திரியிரண்டு திறனும்
இலகுஞா னங்கிரியை யெனஞானம் மனத்தால்
 இயற்றுவது கிரியைஎழிற் குண்டமண் டலாதி
நிலவுவித்துச் செய்தல்கிரி யாவதிதான் இன்னும்
 நிர்ப்பீசஞ் சபீசம்என இரண்டாகி நிகழும்.

(ப - ரை.) பலவிதம் - (அவ்வுயிர்க்கண்ணதாகிய மலபரிபாகம்) பலவகைப்படுதலின், ஆசான் பாசம் மோசனந்தான் பண்ணும்படி - (அதற்கேற்ப) ஆசிரியன் அம்மலத்தை மோசிக்கும்படி (செய்யும் சாதார தீக்கையும்), நயனத்து அருள் பரிசம் வாசகம் மானதமும் அலகுஇல் சாத்திரம் யோகம் அவுத்திராதி அநேகம் உள - திருவருள் நோக்கமும் பரிசமும் வாக்கும் பாவனையும் மிக்க நூல்களும் யோகமும் ஔத்திரி சாம்பவம் முதலியனவுமாகப் பலவேறு வகைப்படும், அவற்றின் அவுத்திரி - அவற்றுள் (ஏனைத்தீக்கைகளெல்லாம் தனக்கு அங்கமாக உடைத்தாய்ச் சிறந்த) ஔத்திரிதீக்கையாவது, இலகு ஞானம் கிரியை என இரண்டு திறனும் - விளங்குகின்ற ஞானவதி கிரியாவதியென்று இருவகைப்படும், எழிற் குண்ட மண்டலம் ஆதி மனத்தால் கிரியை இயற்றுவது ஞானம் - (அவற்றுள்) அழகினையுடைய குண்டம் மண்டலம் அங்கி நெய் சுருக்கு சுருவமுதலிய அனைத்தும் மனத்தாற் (கற்பித்துக்கொண்டு விதிப்படி அகத்தே ஆகுதிமுதலிய) கிரியை செய்வது ஞானவதி, நிலவுவித்துச் செய்தல் கிரியாவதி - (அவையனைத்தும் புறத்தே) நிலவக்கொண்டு (புறம்பே அக்கிரியை) செய்வது கிரியாவதி யெனப்படும், தான் - (இங்ஙனம் இருவகைப்பட்ட) ஔத்திரி தீக்கைதான், இன்னும் நிர்ப்பீசம் சபீசம் என இரண்டாகி நிகழும் - இன்னும் நிர்ப்பீசம் சபீசம் என வெவ்வேறு இருவகைப்படும் என்க.

(பொ - ரை.) அவ்வுயிர்க்கண்ணதாகிய மலபரிபாகம் பலவகைப்படுதலின், அம்மலத்தை மோசிக்குஞ் சாதாரதீக்கையும் அதற்கேற்பத் திருநோக்கம் முதலியனவாகப் பலவேறு வகைப்படும். அவற்றுள் ஏனைத் தீக்கைகளெல்லாந் தனக்கு அங்கமாக உடைத்தாய்ச் சிறந்த ஔத்திரி தீக்கையாவது ஞானவதி

கிரியாவதியென்று இருவகைப்படும். அவற்றுட் குண்டமண்டலம் அங்கி நெய் சுருக்குச் சுருவம் முதலிய அனைத்தும் மனத்தாற் கற்பித்துக்கொண்டு விதிப்படி அகத்தே ஆகுதி முதலிய கிரியை செய்வது ஞானவதி ; அவையனைத்தும் புறத்தே நிலவக்கொண்டு புறம்பே அக்கிரியை செய்வது கிரியாவதி எனப்படும். இங்ஙனம் இருவகைப்பட்ட ஔத்திரி தீக்கைதான் இன்னும் நிர்ப்பீசம் சபீசம் என வெவ்வேறு இருவகைப்படும் எ - ம்.

கிரியை இயற்றுவது என மாறுக.

ஔத்திராதியென்றதனாற் சாம்பவதீக்கை முதலியனவுந் தழுவப்பட்டன.

நயன தீக்கை முதலிய ஆறும், சுதந்திரமாய்ச் செய்யப்படுவனவும் அவுத்திரிக்கு அங்கமாய்ச் செய்யப்படுவனவும் என்று இருவகைப்படும். அவற்றுள் முன்னையவை ஔத்திரிக்கு உரியரல்லாதார்க்குச் செய்யப்படுவன எனக்கொள்க.

ஹாரதசஹிதம் ஹௌத்திரி ; ஹாரதம் ஓமம்.[1]  (௩)

பாலரொடு வாலீசர் விருத்தர்பணி மொழியார்
பலபோகத் தவர்வியாதிப் பட்டவர்க்குப் பண்ணுஞ்
சீலமது நிர்ப்பீசஞ் சமயா சாரந்
திகழ்சுத்தி சமயிபுத் திரர்க்கு நித்தத்து
ஏலும்அதி காரத்தை யியற்றித் தானும்
எழில்நிரதி காரையென நின்றிரண்டாய் விளங்குஞ்
சாலநிகழ் தேகபா தத்தி ேனாடு
சத்தியநிர் வாணம்எனச் சாற்றுங் காலே.

(ப - ரை.) நிர்ப்பீசம் - (அவ்விரண்டனுள்) நிர்ப்பீசதீக்கையாவது, (மலபரிபாகம் உடையவராயும் தீக்கைப்பின் ஒருதலையான் வழுவின்றிச் செய்யக்கடவனவாய சமயாசாரங்களை அநுட்டிக்கும் ஆற்றல் அறிவு இலராகிய) பாலரொடு வாலீசர் விருத்தர் பணிமொழியார் பலபோகத்தவர் வியாதிப்பட்டவர்க்கு - பாலரும் அறிவீனரும் முதியோரும் மெல்லிய வசனத்தையுடைய மாதரும் பலபோகத்தினையுடையவரும் மிக்க நோயினையுடையவருமாகிய இவர் முதலாயினார்க்கு, திகழ் சமயாசாரம் சுத்தி - (ஆசாரியனானவன் அதனை உணர்ந்து வினைக் கன்மங்களோடுகூட) விளங்குகின்ற சமயாசாரத்தையும் (ஆகுதியாற்) சுத்திசெய் தொழித்து, நித்தத்து ஏலும் அதிகாரத்தை இயற்றி - நித்தியகன்ம மாத்திரையின் என்றவாறு அனுட்டிக்கும் அதிகாரம் உடையவராகச் செய்து (சமயாசாரங்களைச் சுத்தி செய்து ஒழித்தமையின்) எழில் நிரதிகாரையென நின்று - (நைமித்திகத்தும் காமியத்தும் அதிகாரங் கொடாமையான் இது) அழகுபொருந்திய நிரதிகாரதீக்கையெனப்பட்டு, அதுதானும் - அத்தீக்கை மூன்றனுள், சமயி புத்திரர்க்

1. சிவாக்கிரயோகி

குப் பண்ணும் சீலம் - சமயி புத்திரர்க்குச் செய்வதாகிய சமயமும் விசேடமும் (ஒரோவொன்றேயாம்), சாற்றும் காலே - (ஏனை நிருவாண தீக்கையைச்) சொல்லுமிடத்து, சால நிகழ் தேக பாதத்தினோடு சத்திய நிர்வாணம் என இரண்டாய் விளங்கும் - மிக்கு நிகழ்கின்ற தேகாந்தத்தின் முத்தியைப் பயக்கும் அசத்தியோ நிருவாணம் எனவும் அப்பொழுதே முத்தியைப் பயக்கும் சத்தியோ நிருவாணம் எனவும் இரு வகைப்படும் என்க.

(பொ - ரை.) அவ்விரண்டனுள் நிர்ப்பீச தீக்கையாவது, மலபரிபாகம் உடையவராயுந் தீக்கைப்பின் ஒருதலையான் வழுவின்றிச் செய்யக்கடவனவாய சமயாசாரங்களை அனுட்டிக்கும ஆற்றல் அறிவு இலராயினார்க்கு ஆசாரியனானவன் அதனையுணர்ந்து ஏனைக் கன்மங்களோடுகூடச் சமயாசாரத்தையும் ஆகுதியாற் சுத்திசெய்தொழித்து, நித்தியகன்ம மாத்திரையின் ஏன்றவாறு அனுட்டிக்கும் அதிகாரம் உடையராகச் செய்வதாம; ஆயினும் சமயாசாரங்களைச் சுத்தி செய்து ஒழித்தமையின் நைமித்திகத்துங் காமியத்தும் அதிகாரங்கொடாமையான்; இது நிரதிகாரதீக்கையெனப்படும் அத்தீக்கை மூன்றனுட் சமயமும் விசேடமும் ஒரோவொன்றேயாம். ஏனை நிருவாண தீக்கை தேகாந்தத்தின் முத்தியைப் பயக்கும் அசத்தியோ நிருவாணம் எனவும் அப்பொழுதே முத்தியைப் பயக்குஞ் சத்தியோ நிருவாணம் எனவும் இருவகைப்படும் எ - ம்.

சமயாசாரசுத்தியோடு செய்யப்படும் நிருவாணதீக்கையும் அதற்கங்கமாயுஞ் சுதந்திரமாயுஞ் செய்யப்படுஞ் சமயவிசேடங்களும் நிர்ப்பீச தீக்கை யெனக்கொள்க. (௪)

ஓதியுணர்ந் தொழுக்கநெறி யிழுக்கா நல்ல
உத்தமர்க்குச் செய்வதுயர் பீசம்இவர் தம்மை
நீதியினான் நித்தியநை மித்திககா மியத்தின்
நிறுத்திநிரம் பதிகாரம் நிகழ்த்துவதுஞ் செய்து
சாதகா சாரியரும் ஆக்கி வீடு
தருவிக்கும் உலோகசிவ தருமிணியென்று இரண்டாம்
ஆதலினான் அதிகாரை யாஞ்சமய விசேட
நிருவாணம் அபிடேகம் இவற்றடங்கும் அன்றே.

(ப - ரை) உயர்பீசம் - (இனி) உயர்ந்த சபீசமாவது, ஓதி உணர்ந்து ஒழுக்கநெறி இழுக்கா நல்ல உத்தமர்க்கு - (மலபரிபாகத்தோடுகூடக்) கற்றறிந்து ஒழுக்கவழியில் வழுவாது நிற்கும் (ஆற்றன் மிக்குடைய) உத்தமத்தில் உத்தமராயினார்க்கு, நிறுத்திச் செய்து - (ஆசிரியனானவன் அஃதறிந்து சமயாசார கன்மமாத்திரம்) நிறுத்தி (ஏனையவற்றைச் சுத்தி) செய்து ஒழித்து, இவர் தம்மை நீதியினான் - இவரை முறைமையான், நித்திய நைமித்திக காமியத்தின் நிரம்பு அதி

காரம் நிகழ்த்துவதும் செய்து - நித்திய நைமித்திக காமியமாகிய மூன்றினும் பேரதிகாரம் உடையராகச் செய்வதாம் (ஆகலின்), அதிகாரையாம் - (இது) சாதிகாரதீக்கை யெனவும் பெயர் பெறும், சாதகாசாரியரும் ஆக்கி வீடு தருவிக்கும் - (இத்தீக்கைப்பேறுடையார் தீக்கைவேறுபாட்டாற்) சாதகரும் ஆசாரியரும் என்று இருதிறப்படுவர், உலோக (தருமிணி) சிவதருமிணியென்று இரண்டாம் - (இந்தச் சபீச தீக்கைதான் இல்லறம் உடையார்க்குத் திரோதான சுத்திரூப சிகாச்சேதம் இன்றிச் செய்வதாகிய) உலோகதருமிணியும் (துறவறம் உடையார்க்குத் திரோதான சுத்திரூப சிகாச்சேதத்தோடு செய்வதாகிய) சிவதருமிணியும் என்று இருவகைப்படும் (இவை முறையே பௌதிக தீக்கை நைட்டிகதீக்கையெனவும் பரியாயப் பெயர் பெறும்), ஆதலினாற் சமய விசேட நிருவாணம் அபிடேகம் இவற்று அடங்கும் அன்றே- இவ்வாறாதலிற் சமயம் விசேடம் நிருவாணம் அபிடேகம் என்னும் பேதமெல்லாம் நிர்ப்பீசம் சபீசம் என்னும் இவ்விரண்டினுள் அடங்கும் என்க.

(பொ - ரை.) இனிச் சபீசமாவது, மலபரிபாகத்தோடு கூடக் கற்றறிவும் ஆற்றலும் மிக்கு உடையராயினர்க்கு, ஆசாரியனவான் அஃதறிந்து சமயாசார கன்மமாத்திரம் நிறுத்தி ஏனையவற்றைச் சுத்திசெய்து ஒழித்து நித்திய கன்மம் முதலிய மூன்றினும் பேரதிகார முடையராகச் செய்வதாம்; ஆகலின், இது சாதிகார தீக்கையெனவும் பெயர்பெறும். இத்தீக்கைப் பேறுடையார் தீக்கை வேறுபாட்டாற் சாதகரும் ஆசாரியரும் என்று இருதிறப்படுவர். இந்தச் சபீசதீக்கைதான் இல்லறம் உடையார்க்குத் திரோதான சுத்திரூப சிகாச்சேதம் இன்றிச் செய்வதாய உலக தருமிணியும் துறவறம் உடையார்க்குத் திரோதான சுத்திரூப சிகாச்சேதத்தோடு செய்வதாகிய சிவதருமிணியும் என்றிருவகைப்படும். இவை முறையே பௌதிக தீக்கை நைட்டிக தீக்கையெனவும் பரியாயப் பெயர் பெறும். சமயம் விசேடம் நிருவாணம் அபிடேகம் என்னும் பேதமெல்லாம் நிர்ப்பீசம் சபீசம் என்னும் இவ்விரண்டனுள் அடங்கும் எ - ம்.

சமயாசார சுத்தியின்றிச் செய்யும் நிருவாணதீக்கையும் அதற்கங்கமாய்ச் செய்யப்படுஞ் சமயவிசேடங்களுஞ் சபீசதீக்கையெனக் கொள்க.

உத்தமத்தில் உத்தமர் என்பார் நல்ல உத்தமர் என்றார்; ஓதியுணர்தலும் ஒழுக்கநெறி இழுக்காமையும் ஆகிய இரண்டும் உடையார் உத்தமத்தில் உத்தமர் எனவே, அவ்விரண்டினில் ஒன்று இல்லாதார் உத்தமத்தில் மத்திமர் என்பதூஉம், இரண்டும் இல்லாதார் உத்தமத்தில் அதமர் என்பதூஉம் பெற்றாம்; பெறவே, நிர்ப்பீசம் சபீசம் என்று இருதிறப்படுஞ் சாதார தீக்கைக்குரியார் இவ்வாறு முத்திறப்படுவர் என்பதாயிற்று.

இங்ஙனம் கூறிய ஆற்றால் ஔத்திரியெனத் தொகையான் ஒன்றும், ஞானவதி கிரியாவதியென வகையான் இரண்டும், ஞானவதி நிர்ப்

பீசஞ் சபீசம் கிரியாவதி நிர்ப்பீசஞ் சபீசமென விரியான் நான்கும் ஆயவாறு காண்க.

நிர்ப்பீசம் சபீசம் என்னும் இவற்றின் விரியாகிய சமயவிசேடம் முதலியவற்றின் இயல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

இவை மூன்று செய்யுளானுஞ் சாதாரதீக்கையின் வகையும் அவற்றியல்புகளுந் தொகுத்துக் கூறப்பட்டன. (ரு)

அழிவிலாக் கிரியையினுன் ஆதல்சத்தி மத்தான்
ஆதல்அத்து வாசுத்தி பண்ணிமலம் அகற்றி
ஒழிவிலாச் சிவம்பிரகா சித்தற்கு ஞானம்
உதிப்பித்துற் பவந்துடைப்பன் அரன்ஒருமூ வர்க்கும்
வழுவிலா வழியாறும் மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்
கழிவிலா துரைத்தமுறை யொன்றின்ஒன்று வியாத்தி
கருதுகலை சத்தியின்கண் சத்திசிவன் கண்ணும்.

(ப - ரை.) அரன் - முதல்வன் (குருமூர்த்தியை அதிட்டித்து நின்று), மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் ஆறும் வழுவிலா வழி - மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலைகள் என அறுவகைப்படும் வழுவில்லாத அத்துவாக்கள், கழிவிலாது உரைத்த முறை ஒன்றின் ஒன்று வியாத்தி - நீங்குதலின்றி (இங்ஙனம்) சொல்லிய முறையே ஒன்றின் ஒன்று அடங்க, கருது கலை சத்தியின்கண்-(இறுதிக்கண் வைத்துக்) கருதப்படும் கலை திரோதான சத்தியினும், சத்தி சிவன் கண்ணும் - அத்திரோதானசத்தி சிவத்தினும் (அடங்கும் ஆறு உணர்ந்து அவ்வாறு அடக்கி), அழிவிலாச் சத்திமத்தான் ஆதல் கிரியையினுன் ஆதல் - (நிர்ப்பீசம் சபீசம் எனத் தனித்தனி இருவகைப்படும் என்று மேற்கூறிப்போந்த) கெடுதல் இல்லாத ஞானவதி கிரியாவதி யென்னும் இரண்டனுள் ஒரு தீக்கையானே, ஒருமூவர்க்கும் அத்துவா சுத்திபண்ணி மலம் அகற்றி - உத்தமத்தில் உத்தமர் முதலிய அம்மூவர்க்கும் அறுவகை அத்துவாக்களையும் சோதிக்கு முகத்தாற் (பிறவிக்கு ஏதுவாகிய) மலத்தைக் கெடுத்து, ஒழிவிலாச் சிவம் பிரகாசித்தற்கு ஞானம் உதிப்பித்து - எங்கணும் வியாபகமாகிய சிவம் பிரகாசித்தற்கு ஏதுவாகிய ஞானத்தைக் கொடுத்து, உற்பவம் துடைப்பன் - பிறவியை ஒழிப்பன் என்க.

(பொ - ரை.) அரன், குரு மூர்த்தியை அதிட்டித்து நின்று, மந்திரம் முதல் அறுவகைப்படும் அத்துவாக்கள் ஒன்றின் ஒன்று அடங்க, இறுதிக்கண் நின்ற கலை திரோதானசத்தியினும் அது சிவத்தினும் அடங்கும் ஆறு உணர்ந்து, அவ்வாறு அடக்கி நிர்ப்பீசம் சபீசம் எனத் தனித்தனி இருவகைப்படும் என மேற்கூறிப்போந்த ஞானவதி கிரியாவதி யென்னும் இரண்டனுள் ஒரு தீக்கையானே உத்தமத்தின் உத்தமர் முதலிய அம்மூவர்க்கும் அறுவகை அத்துவாக்களையுஞ் சோதிக்கும் முகத்

தாற் பிறவிக்கு ஏதுவாகிய மலத்தைக் கெடுத்துச் சிவம் பிரகாசித்தற்கு ஏதுவாகிய ஞானத்தைக் கொடுக்கும் எ - ம்.

கிரியை ஆகுபெயர்.

"ஔத்திரி இரண்டுதிறனும் இலகுஞானங் கிரியையென" முதற்கண் எடுத்துக்கொண்டு முடிவின்கண் "அழிவிலாக் கிரியையினுதல் சத்திமத் தானுதல்" என முடித்தமையின், இடைக்கண் கூறப்பட்டன எல்லாம் இவ்விரண்டற்கும் பொதுவாமாறு காண்க; சோமசம்புபத்ததி வருணபத்ததி முதலியவற்றினும் இவ்வாறே கூறப்பட்டன.

இதனுனே ஆசிரியன் தீக்கை செய்யும் ஆறு தொகுத்துக் கூறப்பட்டது. (சு)

மந்திரங்கள் முதல்ஐந்துங் கலையைந்தின் வியாத்தி
மருவுமந் திரம்இரண்டு பதங்கள் நாலேழ்
அந்தநிலை யெழுத்தொன்று புவனம் நூற்றெட்
டவனிதத் துவம் ஒன்று நிவிர்த்திஅயன் தெய்வம்
வந்திடும்மந் திரம்இரண்டு பதங்கள் மூவேழ்
வன்னங்கள் நாலாறு புரம்ஐம்பத் தாறு
தந்திடுந்தத் துவங்கள்இரு பத்து மூன்று
தரும்பிரதிட் டாகலைமால் அதிதெய்வந் தானும்.

(ப-ரை.) மந்திரங்கள் முதல் ஐந்தும் கலை ஐந்தின் வியாத்தி- (அசுத்தம் மிச்சிரம் சுத்தம் என்னும் மூவகை அத்துவாக்களும்) மந்திரங்கள் முதலாக ஐவகைப்பட்டு (ஒன்றின் ஒன்று வியாத்தியாய் முறையானே) பஞ்சகலைகளுள் அடங்குமாறு (யாங்ஙனமெனின்), மந்திரம் இரண்டு - மந்திரம் இரண்டும், பதங்கள் நாலேழ் - பதம் இருபத்தெட்டும், அந்த நிலை எழுத்து ஒன்று - இறுதிக்கண்ணதாகிய எழுத்து ஒன்றும், புவனம் நூற்றெட்டு - புவனம் நூற்றெட்டும், அவனி தத்துவம் ஒன்று - பிருதிவி தத்துவம் ஒன்றும் ஆகிய இவைகள் (ஒன்றின் ஒன்ருக), நிவிர்த்தி மருவும் - நிவிர்த்திகலையில் அடங்கும், அயன் தெய்வம் - (அதற்குப்) பிரமன் அதிதேவதையாம், வந்திடும் மந்திரம் இரண்டு - வாராநின்ற மந்திரம் இரண்டும், பதங்கள் மூவேழ் - பதம் இருபத்தொன்றும், வன்னங்கள் நாலாறு - எழுத்து இருபத்து நான்கும், புரம் ஐம்பத்தாறு - புவனம் ஐம்பத்தாறும், தந்திடும் தத்துவங்கள் இருபத்து மூன்று - தாராநின்ற தத்துவம் இருபத்து மூன்றும் ஆகிய இவைகள் (ஒன்றின் ஒன்ருக), பிரதிட்டாகலை தரும்-பிரதிட்டாகலையில் அடங்கும், மால் அதிதெய்வம் தான் ஆம் - (அதற்குத்) திருமால் அதிதேவதையாம் என்க. (எ)

வித்தையின்மந் திரம்இரண்டு பதநால் ஐந்து
விரவும்எழுத் தேழுபுரம் இருபத் தேழு
தத்துவமும் ஓரேழு தங்கும்அதி தெய்வந்
தாவில்உருத் திரனுகுஞ் சாந்தி தன்னின்

வைத்தனமந் திரம்இரண்டு பதங்கள்பதி னொன்று
வன்னம்ஒரு மூன்றுபுரம் பதினெட் டாகும்
உத்தமமாந் தத்துவமும் ஒருமூன் றாகும்
உணரில்அதி தேவதையும் உயர்ஈச னாமே.

(ப - ரை.) மந்திரம் இரண்டு - மந்திரம் இரண்டும், பதம் நாலைந்து - பதம் இருபதும், விரவும் எழுத்து எழு - பொருந்திய எழுத்து எழும், புரம் இருபத்தேழு - புவனம் இருபத்தேழும், தத்துவம் ஓரேழும்-வித்தியாதத்துவம் எழும் ஆகிய இவைகள் (ஒன்றின் ஒன்றாக) வித்தையின் தங்கும் - வித்தியாகலைக்கண்ணே அடங்கும், தாவு இல் உருத்திரன் அதிதெய்வம் ஆகும்-(அதற்கு) முடிவு இல்லாத உருத்திரன் அதிதேவதையாம், மந்திரம் இரண்டு - மந்திரம் இரண்டும், பதங்கள் பதினொன்று - பதம் பதினொன்றும், வன்னம் ஒரு மூன்று-எழுத்து மூன்றும், ஆகும் புரம் பதினெட்டு - ஆகிய புவனம் பதினெட்டும், உத்தமமாம் தத்துவம் ஒரு மூன்றும் ஆகும் உத்தமமாகிய தத்துவம் மூன்றும் ஆகிய இவைகள் (ஒன்றின் ஒன்றாக), சாந்தி தன்னின் வைத்தன - சாந்திகலைக்கண் அடங்கும், உணரில் உயர் ஈசன் அதிதேவதையும் ஆமே - உணருமவழி (அதற்கு) மகேச்சுரன் அதிதேவதையாம் என்க. (அ)

சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்கள்
தாம்மூன்று பதமோன்றக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுரம் மூவைந்து தத்துவங்கள் இரண்டு
மருவும்அதி தேவதையும் மன்னுசதா சிவராம்
ஏய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்கள்
எண்பத்தோன் றக்கரங்கள் ஐம்பத்தோன் றாகும்
ஆய்ந்தபுரம் இருநூற்றோ டிருபத்து நாலாம்
அறிதருதத் துவம்முப்பத் தாறுகலை ஐந்தே.

(ப - ரை.) மந்திரங்கள் தாம் மூன்று - மந்திரம் மூன்றும், பதம் ஒன்று - பதம் ஒன்றும், அக்கரங்கள் பதினாறு - எழுத்துப் பதினாறும், வாய்ந்த புரம் மூவைந்து - சிறந்த புவனம் பதினைந்தும், தத்துவங்கள் இரண்டு - தத்துவம் இரண்டும் ஆகிய இவைகள் (ஒன்றின் ஒன்றாக), சாந்தியாதீதகலை தன்னின் மருவும் - சாந்தியாதீத கலைக்கண்ணே அடங்கும், மன்னு சதாசிவர் அதிதேவதையும் ஆம் - (அதற்கு) நிலை பெற்ற சதாசிவர் அதிதேவதையாம், ஏய்ந்த முறை - பொருந்திய இம் முறையே, மந்திரங்கள் பதினொன்று - சத்தியோசாதம் முதலிய பதினொரு மந்திரங்களும், பதங்கள் எண்பத்தொன்று - சிவாயநமோ நம முதலிய எண்பத்தொருபத மந்திரங்களும், ஆகும் அக்கரங்கள் ஐம்பத்தொன்று - க்ஷகாரமுதலாகிய வன்னம் ஐம்பத்தொன்றும், ஆய்ந்தபுரம் இருநூற்றோடு இருபத்துநாலாம் - சிறந்த அநாசிருதபுவனம் முதல் புவனம் இருநூற்றிருபத்துநான்கும், அறிதருதத்துவம் முப்பத்தாறு - அறியப்பட்ட பிருதிவிதத்துவ முதலிய தத்துவம் முப்பத்தாறும், கலை

ஐந்தே - நிவிர்த்திகலை முதலிய கலை ஐந்தும் ஆக(ச் சங்கார முறையின் வைத்தெண்ணி இவ்வாறு கண்டுகொள்க) என்க.

(பொ - ரை.) அத்துவாக்கள் ஒன்றின் ஒன்று வியாத்தியாய் முறையானே பஞ்சகலைகளுள் அடங்குமாறு யாங்ஙனம் எனின்; அசுத்தம் மிச்சிரஞ் சுத்தமென்னும் மூவகை அத்துவாக்களும் ஐவகைப்பட்டுப் பஞ்சகலைகளுள் அடங்குமாறு சங்கார முறையின் வைத்தெண்ணி யிவ்வாறு கண்டு கொள்க எ - ம்.

மந்திர முதலியவற்றிற்குங் கலையில் வியாத்தி கூறியது பரம்பரையின் வியாப்பியமாதல் பற்றியாதலான், மேல் ஒன்றின் ஒன்று வியாத்தி என்பதனோடு முரணுமை யறிக.

சாந்தியாதீதகலை நீட்டும்வழி நீட்டல்.

இவை மூன்று செய்யுளானுந் தீக்கை செய்தற்கண் அத்துவாக்கள் ஒன்றின் ஒன்று வியாத்தியாதல் அறிந்து அடக்குமாறு வகுத்துக் கூறப்பட்டது.

அற்றேல், இறைவன் இங்ஙனம் குருமூர்த்தியை அதிட்டித்து நின்று செய்யுந் தீக்கையில் ஏனை மலசுத்திகளை ஒழித்து அத்துவசுத்தியே மிகுத்துக் கூறியது என்னை யென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ் செய்யு ளென்பது. (௯)

மூன்றுதிறத் தணுக்கள்செயுங் கன்மங் கட்கு
முன்னிலையாம் மூவிரண்டாம் அத்து வாவின்
ஆன்றமுறை யவையருத்தி யறுத்துமல முதிர்வித்து
அரும்பருவம் அடைதலுமே ஆசா னாகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
துகளறுத்தங் கத்துவாத் துடக்கறவே சோதித்து
என்றஉடற் கன்மம்அனு பவத்தினால் அறுத்திங்
கினிச்செய்கன்ம மூலமலம் ஞானத்தால் இடிப்பன்.

(ப - ரை.) அணுக்கள் மூன்று திறத்துச் செயுங் கன்மங்கட்கு ஆன்மாக்கள் மனம்வாக்குக்காயம் என்னும் முத்திறத்தால் ஈட்டப்படும் கன்மங்கள் எவைக்கும், முன்னிலையாம் மூவிரண்டாம் அத்துவாவின் ஆன்ற முறை அவை அருத்தி அறுத்து - (பற்றுக்கொடுத்து நிற்கும்) முன்னிலையாகிய ஆறத்துவாவினும் (ஈட்டிய முறையானன்றிப்) பக்குவமான முறையான் அக்கன்மங்களை (இறைவன்) நுகர்வித்து ஒழித்து, மலம் முதிர்வித்து - ஆணவமலத்தை முதிர்வித்து, அரும் பருவம் அடைதலுமே ஆசானாகித் தோன்றி - (அவ்வுயிர்கட்கு) அரிய பருவம் வந்துழிக் குருவடிவாய் எழுந்தருளி, அத்துவாத்துடக்கு அறவே சோதித்து அங்கு நுகராதவகை முன்செய் கன்மத் துகள் அறுத்து - (கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையால்) மாயேயமாகிய அத்துவபந்தம் ஒழியும்படி சோதித்து ஆண்டு நுகராவண்ணம் (எஞ்சிநின்ற) சஞ்சித கன்மத் துகளைச் சுத்திசெய்து, உடல் என்ற கன்மம் அனுபவத்தினால்

அறுத்து - உடல் முகந்துகொண்ட பிராரத்த கன்மத்தை அனுபவத்தினால் ஒழித்து, மூலமலம் இங்கு இனிச்செய் கன்மம் - அநாதியாகிய ஆணவமலத்தையும் இவ்விடத்து (வாதனைபற்றி நிகழும்) ஆகாமிய மலத்தையும், ஞானத்தால் இடிப்பன் - (ஒளிமுன் இருள்போல) ஞான சத்தியால் ஒழிப்பன் என்க.

(பொ - ரை.) அநாதிமறைப்பாகிய ஆணவமலமும் வாதனை பற்றி நிகழும் ஆகாமிய வினையும் ஒளிமுன் இருள்போல இறைவனது ஞானசத்தியால் ஒழியற்பாலன; அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு ஈட்டிய முறையான் அன்றிப் பக்குவ முறையான் நுகர்விக்கப்பட்டு எஞ்சிக்கிடந்த கன்மமலமும்[1] அதற்குப் பற்றுக் கொடுத்து நிற்கும் முன்னிலையாகிய மாயேய மலமுங் கிரியாசத்தி[2] யால் ஒழியற்பாலன; உடம்பு முகந்து கொண்ட பிராரத்தகன்மம் அனுபவத்தால் ஒழியற்பாலது. இங்ஙனமாகலாற் கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையால் எஞ்சி நின்ற கன்மங்களைச் சுத்தி செய்தற்பொருட்டு, அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய அத்துவசுத்தியே ஈண்டுக் கூறப்பட்டன எ - ம்.

அநாதிமறைப்பாகிய ஆணவமலமும் வாதனைபற்றி நிகழும் ஆகாமிய வினையும், ஒளிமுன் இருள்போல இறைவனது ஞானசத்தியால் ஒழியற்பாலன; அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு ஈட்டிய முறையான் அன்றிப் பக்குவமுறையான் நுகர்விக்கப்பட்டு எஞ்சிக் கிடந்த கன்மமலமும் அதற்குப் பற்றுக்கொடுத்து நிற்கும் முன்னிலையாகிய மாயேயமலமுங் கிரியாசத்தியால் ஒழியற்பாலன; உடம்பு முகந்து கொண்ட பிராரத்தகன்மம் அநுபவத்தால் ஒழியற்பாலது; இங்ஙனமாகலாற் கிரியாசத்தி விருத்தியாகிய தீக்கையால் எஞ்சிநின்ற கன்மங்களைச் சுத்தி செய்தற்பொருட்டு, அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய அத்துவசுத்தியே ஈண்டுக் கூறப்பட்டது என வகுத்தோதற்பாலன வற்றை விரிவஞ்சி ஒரு முடிபாக வைத்தோதினார்.

இரண்டும் ஒருபொருள் வினையாதற்குரிய இயைபுதோன்ற, 'அருத்தி யறுத்துத் தோன்றி யறுத்' தென உடன் கூறினார்.

ஆன்றமுறை பக்குவமான முறை.

மலமுதிர்தலாவது தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்களெல்லாவற்றோடுங் கூடிப் பதன் அழியுஞ் செவ்வித்தாதல்.

உயிர் பருவமடைதலாவது அறிவித்தவாறே அறியவல்லுஞ் செவ்வித்தாதல்.

அரும் பருவமென்றார், எய்துதற்கு அருமைநோக்கி. அது வருஞ் செய்யுளிற் பெறப்படும்.

---

1. சஞ்சிதம்; எஞ்சுவினை. 2. தீக்கை.

பருவம் அடைதலுமே ஆசானாகித் தோன்றி என்றதனானே, பருவம் அடையாதார்க்குத் தீக்கை செய்தலும் அடைந்தார்க்கு அது செய்யாமையும் பழுது என்பது பெற்றாம்.

இதனானே அத்துவசுத்தியின் சிறப்புக் கூறப்பட்டது.

"உரைதரும்" என்பதுமுதல் இத்துணையுங் குருவாகிவந்துணர்த்தியென்னும் முதற்கூற்றுப் பொருளை விரித்துணர்த்தியவாறு.

இனி "மன்னும் அருளால் உணர்த்தி" யென்னும் இரண்டாங்கூற்றினை இருபத்தைந்து செய்யுளான் விரித்து உணர்த்துகின்றார். (க0)

---

## இரண்டாமதிகரணம்

புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலும்ஆச் சிரம
அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவர் இதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்.

(ப - ரை.) (மேற்கூறிய அரும்பருவம் அடைதல்) *புறச்சமய நெறி நின்றும்* - புறச்சமய நூல்வழியே ஒழுகியும், *அகச்சமயம் புக்கும்* - அகச்சமய நூல்வழியே சென்றொழுகியும், *மிருதி புகல் வழி உழன்றும்* - மிருதி நூல் சொல்லும் வழியே சென்றொழுகியும், *புகலும் ஆச்சிரம அறத்துறைகள் அவை அடைந்தும்* - (வேதங்களிற்) கூறிய வாறு ஆச்சிரம தருமநெறிகளின் வழுவாது ஒழுகியும், *அருந்தவங்கள் புரிந்தும்* - செயற்கரிய தவங்களைச் செய்தும், *அருங்கலைகள் பல தெரிந்தும்* - அரிய கலைஞானங்கள் பலவற்றைப் பயின்றும், *ஆரணங்கள் படித்தும்* - வேதங்களை ஓதியும், *சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும்* - சிறப்பினையுடைய புராணங்களை அறிந்தும், *வேதசிரப் பொருளை மிகத்தெளிந்தும்* - உபநிடதப்பொருளை மிக (ஆராய்ந்து) தெளிவுற்றும், *சென்றால் சைவத்திறத்து அடைவர்* - (இங்ஙனஞ் சோபான முறையாற் பல பிறவிகளினும் ஏற்பட்டு நிகழ்ந்து முற்றுப் பெற்றுச், சென்றாற் சைவக் கூற்றின் முடிபாகிய சித்தாந்த சைவத்தைத் தலைப்படுவர் (அன்றி ஒருங்கே ஒருகாலத்து முற்றுப்பெறுவதன்று), *இதில் சரியை கிரியா யோகம் செலுத்தியபின்* - இச்சித்தாந்த சைவத்திலும் சரியை கிரியா யோகங்களை அநுட்டித்து முற்றியபின், *ஞானத்தால் சிவன் அடியைச் சேர்வர்* - ஞானத்தைப் பெற்று அதனாற் சிவபிரான் திருவடிகளைச் சேர்வர் என்க.

(பொ - ரை.) மேற்கூறிய அரும்பருவம் அடைதல் இங்ஙனஞ் சோபானமுறையாற் பல பிறவிகளினு மேற்பட்டு நிகழ்ந்து முற்றுப்பெறுவதன்றி ஒருங்கே ஒருகாலத்து முற்றுப் பெறுதன்று எ - ம்.

சைவத்திறம் என்றது சைவக் கூற்றின் முடிபாகிய சித்தாந்த சைவத்தை.

சென்றால் என்பது சேறல் அருமை விளக்கி நின்றது.

இதனானே மேற்கூறிய பருவமடையும் முறைமை கூறுமுகத்தான் மன்னும் அருள் என்றதன் வகையும் அவற்றிற்கு வாயில் இவை யென்பதூஉம் வருத்துக் கூறப்பட்டன. (கக)

இம்மையே ஈரெட்டாண் டெய்திஎழி லாரும்
ஏந்திழையார் முத்தியென்றும் இருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே யென்றும்முத்தி யைந்து கந்தம்
அறக்கெடுகை யென்றும்அட்ட குணமுத்தி யென்றும்
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி யென்றும்
விவேகமுத்தி யென்றுந்தன் மெய்வடிவாஞ் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி யென்றுஞ்சேப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே.

(ப - ரை) (ஏனைச் சமயநூலார் கூறும் முத்திகளாவன சோபான முறையான் நிலமுதல் நாதம் ஈறாய்க் கிடந்த முப்பத்தாறு தத்துவங்களின் இடைக்கட் படுவனவாம் என்னை) இம்மையே ஈரெட்டு ஆண்டு எய்தி எழில் ஆரும் ஏந்திழை ஆர் முத்தியென்றும் - உலகாயத நூலார் இம்மைக்கண்ணே பதினாறு ஆண்டுள்ள அழகு பொருந்திய ஆபரணங்கள் அணிந்த அரிவையரைக் கூடி இன்புறுதலே முத்தியென்றும், அம்மையே இருஞ் சுவர்க்க முத்தியென்றும் - மீமாஞ்சைநூலார் (யாகாதி கன்மங்கள் செய்து) அம்மைக்கண்ணே பெருமையாகிய சுவர்க்காதிலோக போகம் நுகர்தலே முத்தியென்றும், ஐந்து கந்தம் அறக்கெடுகைமுத்தியென்றும் - சவுத்திராந்திக நூலார் உருவ முதலிய ஐவகைக் கந்தங்களும் முற்றக்கெடுதலே முத்தியென்றும், அட்ட குணம் முத்தியென்றும் - ஆருகத நூலார் அநந்தஞான முதலிய எண் குணம் அடைதலே முத்தியென்றும், மெய்ம்மையே பாடாணம் போல்கை முத்தியென்றும் - வைசேடிக நூலார் மெய்ம்மையாகப் பாடாணம்போற் கிடக்கையே முத்தியென்றும், - விவேக முத்தியென்றும் - சாங்கியநூலார் (தத்துவங்களைப் பகுத்துணரும்) விவேக ஞானமே முத்தியென்றும் மாயாவாத நூலார் (மாயை பிரமங்களை) விசாரிப்பதே முத்தியென்றும், தன் மெய்வடிவாஞ் சிவத்தைச் செம்மையே பெறுகை முத்தியென்றும் செப்புவர்கள் - சிவசமவாதிகள் முதலிய அகச்சமய நூலார் தன் உண்மை வடிவாகிய சிவசாரூபம் முதலிய பதமுத்திகளைச் செவ்விதாகப் பெறுதலே முத்தியென்றும் கூறுவர் (என்பதாம்), இங்கே யாம் செப்புவது - ஈண்டு (வேதாகம நூலுண்மையுணர்ந்த) யாங் கூறுமுத்தியாவது, சிவன் அடியைச்சேரும் முத்தி - (முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட) சிவபிரான் திருவடியைச் சேரும் முத்தியாம் என்க.

(பொ - ரை.) ஏனைச் சமயநூலார் கூறும் முத்திகளாவன சோபானமுறையால் நிலமுதல் நாதமீறாய்க்கிடந்த முப்பத்தாறு தத்துவங்களின் இடைக்கட்படுவனவாய அரிவையர் இன்புறு முத்தி முதலாயினவாம். வேதாகம நூலுண்மை யுணர்ந்த யாங் கூறுமுத்தியாவது முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட சிவனடியைச் சேரு முத்தியாம் எ - ம்.

விவேகமுத்தி இரட்டுறமொழிதல்.

ஏந்திழையை யென்னும் இரண்டாவது விகாரத்தால் தொக்கது. ஆர்முத்தி வினைத்தொகை.

உம்மையை எதிரதுதழீஇற்றாக்கி ஈண்டுக் கூறாத சமயமுத்திகளையும் இவற்றுடன் வைத்துக் கூறிக்கொள்க.

இதனானே புறச்சமய நெறிநிற்றன் முதலியன வெல்லாஞ் சைவத் திறத்தடைதற்குச் சோபான முறையான் வாயிலாமாறு அவற்றது பயன் கூறுமுகத்தானே இனிது விளக்கப்பட்டது. (கஉ)

ஓதுசம யங்கள்பொருள் உணரும் நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னின்
இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினான் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதியா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்
ஆதலினால் இவையெல்லாம் அருமறையா கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீ ழடங்கும்.

(பதை - ரை.) ஓது சமயங்கள் - சொல்லப்பட்ட சமயங்களும், பொருள் உணரும் நூல்கள் - அச்சமயப் பொருள்களை உணர்த்தற்கு ஏதுவாகிய நூல்களும், ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் உள பலவும் - மாறுபட்டனவாகவுள்ளன பலவாதலின், இவற்றுள் சமயம் யாது பொருள் நூல் யாது இங்கு என்னின் - இவற்றுள் (முதன்மையான) சமயம் யாது அச்சமயப்பொருளை (உணர்த்தும்) நூல் யாது இவ்விடத்து என்னின், இது ஆகும் அது அல்லது எனும் பிணக்கது இன்றி - இது பொருந்தும் அது பொருந்தாது என்னும் பிணக்கின்றி, நீதியினான் இவை யெல்லாம் ஓரிடத்தே காண நின்றது யாதொரு சமயம் - முறைமையான் இவையனைத்தும் ஒருங்கே காணப்பட்டு நின்றது எச்சமயமோ, அது சமயம் பொருள் நூல் ஆதலினான் - அதுவே (முதன்மையான) சமயமும் அச்சமயப் பொருளை (உணர்த்தும் நூலே) நூலுமாதலின், இவையெல்லாம் அருமறை ஆகமத்தே அடங்கியிடும் - (கண்ணில்லார் பலர் குழீஇக் கொண்டு வேழம்நின்றுழித் தலைப்பட்டுக் கையினால் தைவந்து வேறு வேறு கூறும் இலக்கணங்களெல்லாம் கண்ணுள்ளான் ஒருவன் கண்டு கூறும் அதன் இலக்கணத்துள் ஏகதேசமாய்க் காணப்பட்டு அடங்குமாறு போல ஏனைச் சமயநூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாயவாறுபற்றி) அவ்வந் நூல்களிற் கூறும் பொருளியல்புகளெல்லாம் (முற்றுணர்வுடைய முதல்வனாற்செய்யப்பட்ட) அரிய வேதாகமங்களிற் (கூறும் பொருளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்றுள்) அடங்குதலின் (அதுவே முதன்மையான சமயமாம்), அவை இரண்டும் அரன் அடிக்கீழ் அடங்கும் - (சிவபிரானாற் செய்யப்பட்டு அவனையே தமக்கு முதலாகக் கொண்டுரைக்கும்) அவ்விருவகை நூலும் அவ்விறைவன் திருவடியில் அடங்குதலின் (அவையே நூல்களாம்) என்க.

(பொ - ரை.) கண்ணில்லார் பலர் குழீஇக்கொண்டு வேழம் நின்றுழித் தலைபட்டுக் கையினால் தைவந்து வேறு வேறு கூறும் இலக்கணங்கள் எல்லாம் கண்ணுள்ளான் ஒருவன் கண்டு கூறும்

அதன் இலக்கணத்துள் ஏகதேசமாய்க் காணப்பட்டு அடங்குமாறு போல, ஏனைச் சமயநூலார் தத்தஞ் சிற்றறிவுக்குப் புலனாயவாறு பற்றி அவ்வந்நூல்களிற் கூறும் பொருளியல்புகளெல்லாம் முற்றுணர்வுடைய முதல்வனாற் செய்யப்பட்ட வேதாகமங்களிற் கூறும் பொருளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்றுள் அடங்கும். சிவபிரானாற் செய்யப்பட்டு அவனையே தமக்கு முதலாகக் கொண்டுரைக்கும் அவ்விருவகை நூலும் அவ்விறைவன் திருவடியில் அடங்கும் எ - ம். (௧௩)

அருமறைஆ கமமுதனூல் அனைத்தும்உரைக் கையினான்
அளப்பரிதாம் அப்பொருளை அரன்அருளால் அணுக்கள்
தருவர்கள்பின் தனித்தனியே தாம்அறிந்த அளவில்
தர்க்கமோடுத் தரங்களினாற் சமயஞ்சா தித்து
மிருதிபுரா ணங்கலைகள் மற்றும் எல்லாம்
மெய்ந்நூலின் வழிபுடையாம் அங்கம்வே தாங்கஞ்
சுருதிசிவா கமம்ஒழியச் சொல்லுவதொன் றில்லை
சொல்லுவார் தமக்கறையோ சொல்லோ னாதே.

(ப - ரை.) (நூலெனப்படுவன எல்லாம் ஒரு நிகரன ஆதல் இன்றி முதனூல் வழிநூல் சார்புநூல் பூருவபக்கநூலெனப் பலவேறுவகைப்பட்டு மேன்மேல் நூல்களை நோக்கிக் கீழ்க்கீழ்நூல்கள் மென்மையுடையனவாம்) சமயம் - (அவற்றுள் ஏனைச்) சமயநூல்களெல்லாம், அனைத்தும் உரைக்கையினான் முதனூல் அருமறை ஆகமம் அளப்பரிதாம் அப்பொருளை - அனைத்துங் கூறுகையால் முதனூலாகிய அரியவேதாகமங்களினது அளவிடற்கு அரிய உயர்ந்த பொருளை, அணுக்கள் அரன் அருளால் பின் தனித்தனியே - (முழுவதும் உள்ளவாறு உணரமாட்டாத) உயிர்கள் முதல்வன் அருளால் (அவற்றுட் சிலபொருளைப்) பிற்காலத்தே (சமுத்திரகலச நயம் பற்றி) ஆண்டாண்டு எடுத்துக்கொண்டு, தாம் அறிந்த அளவில் - தத்தம் அறிவு அளவுக்கேற்ப, தர்க்கமொடு உத்தரங்களினால் சாதித்துத் தருவர்கள்-பூருவபக்க சித்தாந்தங்களினாற் சாதித்துத் (தொகுத்தும் விரித்துஞ்) செய்த நூலாதலான் (அவையெல்லாம் பூருவபக்க நூலெனப்படும்), மிருதி புராணம் கலைகள் மற்றும் எல்லாம் - (சமய நூல் அல்லவாகிய) மிருதி புராணம் கலைகள் உபாகமம் முதலாயின எல்லாம், மெய்ந் நூலின்வழி (ஆம்) - மெய்ம்மையாகிய அவ்வேதாகமப் பொருளை (உள்ளவாறு உணர்ந்தோர் அவற்றைப் பிறர்க்கு இனிது விளக்குதற்பொருட்டு நால்வகை யாப்பினுள் ஒன்றான்) வழிப்படுத்துச்செய்த (நூலாகலான் அவை வழி) நூலெனப்படும், அங்கம் - வேதாங்கம் புடையாம் - (ஏனைக் காருடம் தக்கிணம் முதலிய) ஆகமாங்கங்களும் (சிக்கை கற்பசூத்திரம் முதலிய) வேதாங்கங்களும் (முறையேஅவ்விரண்டையும் உள்ளவாறு உணர்தற்குச் சார்பாய்ப் புடைபட்டு நிகழ்தலின் அவை) சார்பு நூலெனப்படும், சுருதி சிவாகமம் ஒழியச் சொல்லுவது ஒன்று இல்லை-(இவ்வாறன்றி) வேதாகமங்களின் அடங்காத (பொருளாய் ஒன்றனை யெடுத்துக்கொண்டு சுதந்திரமாய்ச் செய்யு) நூல் ஒன்றும் இல்லை, சொல்லுவார் தமக்கு அறையோ சொல்

லொணுதே - (உண்டு என்று) சொல்(லிப்பிணங்)கும் பேதைகட்கு உத்தரஞ் சொல்லித் தெருட்டல் இயலாது என்க.

(பொ - ரை.) நூலெனப்படுவன எல்லாம் ஒருநிகரன ஆதல் இன்றி முதனூல், வழிநூல், சார்புநூல், பூருவபக்க நூல் எனப் பல வேறுவகைப்பட்டு மேன்மேனூல்களை நோக்கிக் கீழ்க் கீழ் நூல்கள் மென்மையுடையனவாம். அவற்றுள் ஏனைச் சமய நூல்கள் எல்லாம் முதல் நூலாகிய வேதாகமப் பொருளை முழுவதும் உள்ளவாறு உணரமாட்டாதார் அவற்றுட் சில பொருளைச் சமுத்திரகலசநயம்பற்றி ஆண்டாண்டு எடுத்துக்கொண்டு தத்தம் அறிவளவுக்கு ஏற்பத்தொகுத்தும் விரித்துஞ் செய்த நூல் ஆகலான் அவையெல்லாம் பூருவபக்க நூலெனப்படும். சமய நூல் அல்லவாகிய மிருதி புராணங்கலைகள் மற்றும் என்பதனல் தழுவப்படும் உபாகமம் முதலாயின எல்லாம் அவ்வேதாகமப் பொருளை உள்ளவாறு உணர்ந்தோர் அவற்றைப் பிறர்க்கு இனிது விளக்குதற்பொருட்டு நால்வகை யாப்பினுள் ஒன்றன் வழிப் படுத்துச்செய்த நூல் ஆகலான் அவை வழிநூல் எனப்படும். ஏனைக் காருடந் தக்கிணம் முதலிய ஆகமாங்கங்களும், சிக்கை கற்பசூத்திரம் முதலிய வேதாங்கங்களும் முறையே அவ்விரண்டனையும் உள்ளவாறு உணர்தற்குச் சார்பாய்ப் புடைபட்டு நிகழ்தலின், அவை சார்புநூல் எனப்படும். இவ்வாறன்றி வேதாகமங்களின் அடங்காத பொருளாய் ஒன்றனை எடுத்துக்கொண்டு சுதந்திரமாய்ச் செய்யும் நூல் ஒன்றும் இல்லை, உண்டு என்று சொல்லிப் பிணங்கும் பேதைகள் என் கடவார் எ - ம்.

*சமுத்திரகலசநயம் பற்றி எடுத்துக்கொண்டு தருதற்கும் அவர் சுதந்திரர் அல்லர் என்பார், அரனருளால் என்றார்.*

*பிறநூல் திகழ்பூர்வம் என முன் வருதலின் ஈண்டு வேறு கூறாது ஒழிந்தார்.*

*சாதித்துத் தருவர்கள் என இயையும். ஆம் என்பதனை மேலுங் கூட்டுக.*

*ஆகம அங்கத்தை அங்கம் என்றது தலைக்குறை. ஒன்றும் என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது.*

*அறை உத்தரம்.*

*எல்லாம் அருமறை ஆகமத்தே காணப்பட்டு அடங்குதலை இனிது விளக்கியவாறு.* (௧௪)

வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூல்இவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அநாதிஅம லன்தருநூல் இரண்டும்
ஆரணநூல் போதுசைவம் அருஞ்சிறப்பு நூலாம்

நீதியினுன் உலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கும்
நிகழ்த்தியது நீண்மறையின் ஒழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கும் நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும்.

(ப-ரை.) வேதநூல் சைவநூல் என்று இரண்டு ஆதி நூல்கள்-வேதம் சிவாகமம் இரண்டும் (ஏனையோராற் செய்யப்படும் வழிநூல் சார்புநூல் பூருவபக்க நூல்களின் ஒன்றாகவைத்து எண்ணுதற்கு ஒருவாற்றானும் இயைபின்றி அவையனைத்திற்கும்) முதனூலாகி, அநாதி அமலன் தருநூல்-அநாதி முத்தனாகிய இறைவனால் தரப்படும் நூலாக, வேறு உரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள் - ஏனையவெல்லாம் இவையிரண்டினின்றும் விரிந்த நூல்கள் ஆகலின், இரண்டுமே நூல்-இவ்விருவகை நூலுமே நூலென்று உயர்த்துக் கூறப்படுவனவாம் (அற்றேல் முதல்வனால் தரப்படும் முதனூலை ஒன்றாக வைத்தெண்ணுமல் இங்ஙனம் இருவகைப்படுத்து எண்ணியது என்னையெனின் அஃதொக்கும்), உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் நீதியினுன் ஆரணம் சைவம் நிகழ்த்தியது - (முதல்வன், பெருங்கருணையாளனாகலின்) உலகத்தார் உய்தற்பொருட்டும் சத்திநிபாதம் உடையார் உய்தற்பொருட்டும் (திருவுளத்திற்கருதிப் பொருள் பலபடத்தோன்றுஞ் சூத்திரமும் அதனை அவ்வாறாகவொட்டாது தெளித்து உரைக்கும் பாடியமும்போல) முறையே வேதமும் சிவாகமமும் செய்யப்பட்டன ஆகலான், பொது நூல் அருஞ் சிறப்பு நூலாம் - (அவையிரண்டும் முறையானே) பொது நூல் அரிய சிறப்புநூல் எனப் (பட்டுச் சூத்திரமும் பாடியமும்போல வேறுவைத்து எண்ணப்)பட்டன, நீள் மறையின் ஒழிபொருள் வேதாந்தத் தீது இல் பொருள் கொண்டு உரைக்கும் சைவநூல் - (இங்ஙனம்) விரிந்த வேதத்துட் கூறும் (கருமகாண்டப்பொருள்கட்கு இன்றியமையாது வேண்டப்பட்டு) எஞ்சிநின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள குற்றமற்ற பொருள்களையும் வேறு எடுத்துக்கொண்டு இனிது விளக்குவது சிவாகமம் ஆதலான், பிறநூல் திகழ் பூர்வம்-(இதனின் வேறாய வேதத்தின் பூருவபக்கப் பொருளைச் சொல்லும்) ஏனை நூல்கள் எல்லாம் விளங்குகின்ற பூருவபக்கநூல் எனவும், சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும் - (அதன் சித்தாந்தப்பொருளைச் சொல்லுவதாய) சிவாகமம் சித்தாந்த நூல் எனவுமாம் என்க.

(பொ-ரை.) வேதஞ்சிவாகமம் இரண்டும், ஏனையோர் செய்யப்படும் வழிநூல் சார்புநூல் பூருவபக்க நூல்களின் ஒன்றாக வைத்து எண்ணுதற்கு ஒருவாற்றானும் இயைபு இன்றி அவையனைத்திற்கும் முதனூலாகி அநாதி முத்தனாகிய இறைவனால் தரப்படும் நூலாக, ஏனைய எல்லாம் இவையிரண்டினின்றும் விரிந்த நூல்களாகலின் இவ்விருவகை நூலுமே நூலென்று உயர்த்துக் கூறப்படுவனவாம். அற்றேல், முதல்வனால் தரப்படும் முதனூலை ஒன்றாகவைத் தெண்ணுமல் இங்ஙனம் இருவகைப் படுத் தெண்ணியது என்னை யெனின், அஃதொக்கும்; முதல்வன் பெருங்கருணையாளன் ஆகலின் உலகத்தார் உய்தற் பொருட்டுஞ் சத்திநிபாதம் உடையார் உய்தற் பொருட்டுந் திரு

வுளத்திற் கருதி, பொருள் பலபடத் தோன்றுஞ் சூத்திரமும் அதனை யவ்வாறுகவொட்டாது தெளித்து உரைக்கும் பாடியமும் போல முறையே வேதமுஞ் சிவாகமமுஞ் செய்யப்பட்டன ஆகலான் அவையிரண்டும் முறையானே பொது நூல் சிறப்புநூல் எனப் பட்டுச் சூத்திரமும் பாடியமும்போல வேறுவைத்தெண்ணப் பட்டன. இங்ஙனம் வேதத்திற் கூறுங் கருமகாண்டப் பொருள்கட்கு இன்றியமையாது வேண்டப்பட்டு எஞ்சி நின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக்கொண்டு இனிது விளக்குவது சிவாகமம் ஆகலான், இதனின் வேறுய வேதத்தின் பூர்வபக்கப் பொருளைச் சொல்லும் ஏனை நூல்கள் எல்லாம் பூர்வபக்க நூலெனவும அதன் சித்தாந்தப் பொருளைச் சொல்லுவதாய சிவாகமம் சித்தாந்த நூலெனவுமாம் எ - ம்.

*சிவாகமத்தின் சிறப்புக் கூறியவாறு.*

*இவ்வாறன்றி உரைப்பன எல்லாம் போலியென்பதுசொற்கிடக்கை முறையானும் மகுடாகமம் முதலியவற்றானும் அறிக.*

*இவை மூன்று செய்யுளானும் அவ்வர்நூல்களது இயல்பு கூறுமுகத்தான் மேலது வலியுறுத்தப்பட்டது.* (கரு)

சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
சேனனம்ஒன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று
மொழிந்திடவும் உலகர்எல்லாம் மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுஎன்ன பிராந்தி.

(**ப - ரை.**) *செனனம் ஒன்றிலே சிவன் தன் திருக் கடைக்கண் சேர்த்தி - சிவபிரான் தனது (காருண்ணியத்தால் ஆசிரியமூர்த்தமாய் எழுந்தருளிப் பக்குவான்மாக்களுக்குச்) செனனம் ஒன்றிலே திருக் கடைநோக்கஞ் சேர்த்தல் முதலிய தீக்கைசெய்து, ஞானவாரி மடுத்து ஆனந்தம் பொழிந்து - ஞானசாகரத்தின் மூழ்குவித்துச் சிவானந்தம் மேலிடச்செய்தும், (செனனம் ஒன்றிலே) மலம் கழுவிச் சீவன் முத்த ராக வைத்து - அவ் வொரு பிறப்பிற்றனே மும்மல அழுக்கை நீக்கிச் சீவன் முத்தராகச் செய்து, ஆண்டுவரும் பிறப்பை அறுத்து - அவ் விடத்தே மேல்வரும் பிறவியை ஒழித்தும், முத்தாந்தப் பாதமலர்க் கீழ் வைப்பன் என்று - முத்தி முடிபாகிய திருவடிமலர்க்கீழ் அடங்கி நிற்கச் செய்வன் என்றும் (கூறுதற்கு வழியாகலான்), சித்தாந்தத்தே மொழிந்திடவும் - (இத்துணைப் பெருமைத்தாகிய) சித்தாந்தநெறி (வீடுபேற்றிற்கு நேர்வழியென) உபமந்நியர் அகத்தியர் முதலிய உயர்ந்தோ*

ரெல்லாம் வாயுசங்கிதை சிவகீதை முதலியவற்றுள் விரித்தெடுத்தோத வும், உலகரெல்லாம் மூர்க்கராகிப் பித்தாந்தப் பெரும் பிதற்றுப் பிதற்றி - உலகத்தார் அனைவரும் (அதனைத் தெளியமாட்டாது தத் தமக்கு வேண்டியவாறெல்லாம்) துரபிமானங்கொண்டு பித்தமுடிவா கிய பெரும் பித்தாற் பிதற்றி, பாவப் பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இது என்ன பிராந்தி - அப்பாவத்தாற் பெருங் கொடுநரகத்தின் வீழ்வர் ஈதென்னை மயக்கம் என்க.

(பொ - ரை.) இத்துணைப் பெருமைத்தாகிய சித்தாந்த நெறி வீடுபேற்றிற்கு நேர்வழியென உபமன்னியன், அகத்தி யன் முதலிய உயர்ந்தோரெல்லாம் வாயுசங்கிதை, சிவகீதை முதலியவற்றுள் விரித்தெடுத்தோதவும், அதனைத் தெளியமாட் டாது தத்தமக்கு வேண்டியவாறெல்லாந் துர்அபிமானங் கொண்டு பிதற்றும் அவ்வுலகத்தார் என்கடவர் எ - ம்.

ஔத்திராதி யென்றாற்போல முத்தியந்தம் முந்தாந்தமென மரீஇ யிற்று.

பித்தாந்தம் பித்தமுடிபு; பெரும் பித்து என்பதாம். (௧௬)

இறைவனு வான்ஞான மெல்லாம் எல்லா
முதன்மையனுக் கிரகமெல்லாம் இயல்புடையான் இயம்பும்
மறைகள்ஆ கமங்களினுன் அறிவெல்லாந் தோற்றும்
மரபின்வழி வருவோர்க்கும் வாரா தோர்க்கும்
முறைமையினல் இன்பத்துன் பங்கொடுத்த லாலே
முதன்மையெலாம் அறிந்தும்முயங் கிரண்டு போகத்
திறமதனல் வினையறுக்குஞ் செய்தி யாலே
சேரும்அனுக் கிரகமெலாங் காணுதும்நாஞ் சிவற்கே.

(ப - ரை.) எல்லாஞானம் எல்லாமுதன்மை எல்லா அனுக்கிர கம் சிவற்கே நாம் காணுதும் - முற்றுணர்வு முடிவிலாற்றல் பேரருளா கிய மூன்றும் சிவபிரானுக்கே (யுள என்பது) யாந் தெளிந்தேம் (எங் ஙன மெனின்), இயம்பு மறைகள் ஆகமங்களினுன் அறிவெல்லாம் தோற்றும் - மேற்கூறியவாற்றாற் பெறப்பட்ட வேதாகமங்களை அரு ளிச்செய்த ஏதுவான் முற்றுணர்வு தெளியப்படும், மரபின்வழி வரு வோர்க்கும் வாராதோர்க்கும் முறைமையினல் இன்பத்துன்பம் கொடுத் தலாலே முதன்மை யெலாம் அறிந்தும் - அவ்வேதாகமங்களின் நெறிச் செல்வோர்க்கும் செல்லாதோர்க்கும் அம்முறையே சுகதுக்கம் அளித்த லாகிய ஏதுவான் முடிவிலாற்றல் தெளியப்படும், முயங்கு இரண்டு போகத்திறமதனல் வினை அறுக்கும் செய்தியாலே அனுக்கிரகம் எல் லாம் சேரும் - பொருந்திய இன்பத்துன்ப நுகர்ச்சிக் கூறுபாட்டால் (அதற்குக் காரணமாகிய) இருவினைகளை நீக்கும் ஏதுவாற் பேரருள் தெளியப்படும், இயல்பு உடையான் இறைவன் ஆவான் - (ஆகலான் அங்ஙனம் இம் மூன்று குணமும்) இயல்பாகவுடைய அம் முதல்வன் (செனனம் ஒன்றிலே திருக்கடைக்கண் சேர்த்தி ஞானவாரிமடுத்து

ஆனந்தம் பொழிதற்கும் அச் செனனம் ஒன்றிலேதானே மலங்கழுவிச் சீவன் முத்தராக வைத்தாண்டு வரும் பிறப்பை யறுத்தற்கும் பாத மலர்க்கீழ் வைத்தற்கும்) வல்லவனுவான் என்க.

(பொ - ரை.) முற்றுணர்வு முதலிய மூன்றுஞ் சிவபிரானுக்கே யுள வென்பது மேற்கூறியவாற்றாற் பெறப்பட்ட மறையாகமம் இயம்புதன் முதலிய மூன்றேதுவானும் முறையே யறியக் கிடத்தலான், அங்ஙனம் இம் மூன்று குணமும் இயல்பாக வுடைய அம்முதல்வன் செனனம் ஒன்றிலே திருக்கடைக்கண் சேர்த்தி ஞானவாரிமடுத்து ஆனந்தம் பொழிதற்கும் அச் செனனம் ஒன்றிலே தானே மலங்கழுவிச் சீவன் முத்தராக வைத்தாண்டு வரும் பிறப்பை யறுத்தற்கும் பாதமலர்க்கீழ் வைத்தற்கும் வல்லவனுவான் எ - ம்.

இறைவன் என்றது வல்லவன் என்னுந் துணையாய் நின்றது.

பல சனனங்களிலும் ஆகாதவற்றையெல்லாம் ஒரு சனனத்திலே தானே அங்ஙனமாகச் செய்யுமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி யவ்வாசங்கை நீக்கி மேலதனை வலியுறுத்தியவாறு.

இதற்குப் பிறரெல்லாம் ஒரியைபின்றுதன் மேலும் கூறியது கூறல் என்னும் வழுப்படவைத் துரைப்ப.

இவையிரண்டு செய்யுளானுஞ் சைவத்திறத்து அடைதற் சிறப்புக் கூறப்பட்டது. (கஎ)

சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கந்
தாதமார்க் கம்என்றுஞ் சங்கரனை யடையும்
நன்மார்க்கம் நால்அவைதாம் ஞான யோக
நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்
சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய
சாரூப்பிய சாயுச்சியம் என்றுசதுர் விதமாம்
முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபதம் என்பர்.

(ப - ரை.) சங்கரனை அடையும் நன் மார்க்கம் - (அங்ஙனம் சைவத் திறத்தடைந்தார்) சிவபிரான் திருவடியைச் சேர்தற்குரிய நன்மையாகிய நெறி, தாதமார்க்கம் சற்புத்திரமார்க்கம் சகமார்க்கம் சன்மார்க்கம் என்றும் நால் - தாச நெறியென்றும் நன்மையாகிய புத்திர நெறியென்றும் தோழ நெறியென்றும் நன்னெறியென்றும் நான்குவகைப் படுதலின், அவைதாம் நற்சரியை கிரியா யோகம் ஞானமென நவிற்றுவதும் செய்வர் - அவையே சிவசரியை கிரியை யோகம் ஞானமென்று பெயர்வழங்குவர், சன்மார்க்க முத்திகள் சாலோக்கியசாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியம் என்று சதுர்விதமாம் - அந்நன்மையாகிய நெறிகட்குப் பயன் (முறையே) சிவசாலோக சாமீப சாரூப சாயுச்சியம் என

நான்குவகைப்படும், மூன்றினுக்கும் முத்திபதம் என்பர் - (அவற்றுள்) சிவ சரியை முதலியவற்றான் எய்தும் சிவ சாலோகம் முதலிய மூன்றனைப் பதமுத்தி (யாகிய அபரமுத்தி) யெனக் கூறுவர், முன் ஞானமார்க்கத்தால் எய்தும் முத்தி முடிவென்பர் - முதன்மையாகிய ஞானவழியான் எய்துஞ் சிவசாயுச்சியத்தைப் பரமுத்தியெனக் கூறுவர் என்க.

(பொ - ரை.) அங்ஙனஞ் சைவத்திறத் தடைந்தார் சிவனடியைச் சேர்தற்குரிய நெறி தாதமார்க்கம் முதலிய நான்கு வகைப்படுதலின், அவையே சரியை முதலிய பெயரான் வழங்கப்படும். அவற்றிற்குப் பயன் முறையே சாலோகம் முதலிய அபர முத்தியுஞ் சாயுச்சியமாகிய பரமுத்தியுமாம் எ - ம்.

சாலோக்கிய முதலியவற்றிற்குப் பொருள் வருகின்ற செய்யுட்கள் நான்கினும் ஆசிரியர்தாமே மொழிபெயர்த்து உரைக்கின்ற வாற்றான் அறிக.

இதனானே சைவத்திறத்தடைந்தாராற் செலுத்தப்படுஞ் சரியை முதலிய நான்கும் முத்திநெறி யாதற்கட்படும் பேதமும் அவற்றின் பயனுங் கூறப்பட்டன. (கஅ)

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன்தன் கோயில்
தலம்அலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டால்அடியேன் செய்வ
தியாதுபணி யீர்என்று பணிந்தவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியைசெய்வோர் ஈசன்உல கிருப்பர்.

(ப - ரை.) தாதமார்க்கம் சாற்றில் - (அந்நான்கனுள்ளே) தாசநெறியைப் பேசுமிடத்து, சங்கரன் தன் கோயில் தலம் அலகு இட்டு - சிவபிரானுடைய திருக்கோயிலின் மாட்டுத் திருவலகிட்டு, இலகு திருமெழுக்கும் சாத்தி - விளங்கும்படி திருமெழுக்கிட்டு, தீது இல் திருவிளக்கு இட்டு - குற்றமற்ற பிரகாசம் பொருந்திய திருவிளக்கிட்டு, திருநந்தவனமும் செய்து - அழகிய நந்தனவனங்கள் வைத்து, போதுகளும் கொய்து - திருப்பள்ளித் தாமங்கள் எடுத்து, பூந்தார் மாலை கண்ணி புனிதற்குப் பல சமைத்து - பொலிவாகிய மலரான் இயன்ற மாலை (இண்டை முதலிய) கண்ணிகள் சிவபிரான் திருமேனியிற் பொலிவுறும் வண்ணம் பலவாக அமைத்து, புகழ்ந்து பாடி - முதல்வனுடைய புகழ்தற்கரிய மேலாகிய சீர்த்தியினை வாயார வாழ்த்தி, திருவேடங் கண்டால் அடியேன் செய்வது யாது பணியீர் என்று பணிந்து அவர்தம் பணியும் இயற்றுவது - சிவனடியார் திருவேடத்தைக் கண்ணுற்ற அளவில் அடியேனாற் செய்யத்தக்க குற்றேவல் யாது அதனை யருளவேண்டுமென்று வணங்கி அவர் அருளிச் செய்யும் பணிவிடையுஞ்

செய்வதாம், இச்சரியை செய்வோர் - (புறத்தொழின்மாத்திரையானே உருவத்திருமேனியை நோக்கி வழிபடுதலாகிய) இச்சரியையினை அனுட்டித்தோர், ஈசன் உலகு இருப்பர் - சிவசாலோகமாகிய பதமுத்தியைப் பெறுவர் என்க.

(பொ - ரை.) புறத்தொழின் மாத்திரையானே உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சரியை யெனப்படும் எ - ம். (௧௯)

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனம்அமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனம்மூர்த்தி மூர்த்தி மானுஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினுல் அருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடும் எரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்
நின்மலன்தன் அருகிருப்பர் நினையுங் காலே.

(ப - ரை.) புத்திரமார்க்கம் புகலின் - புத்திர நெறியைச் சொல்லுமிடத்து, புதிய விரைப் போது புகை ஒளி மஞ்சனம் அமுது முதல் கொண்டு - புதிதாகிய வாசனையுடைய மலர்கள் தூபம் தீபம் திருமஞ்சனம் திரு அமுது முதலிய (பூசோபகரணங்களெல்லாந் தேடி அமைத்துக்) கொண்டு, ஐந்து சுத்தி செய்து ஆசனம் மூர்த்தி மூர்த்திமானும் சோதியையும் பாவித்து ஆவாகித்து - பஞ்சசுத்திகள் பண்ணி (ச் சிவாசனமூர்த்தி மூலங்களாலே முறையே) ஆசனமிட்டு மூர்த்தியை எழுந்தருளச்செய்து மூர்த்திமானுகிய பரஞ்சோதியைப் பாவனைசெய்து ஆவாகித்து, சுத்த பத்தியினுல் அருச்சித்து - நிருமலமாகிய மெய்யன்பினுல் அருச்சனை செய்து, பரிவினொடும் பரவிப் போற்றி - விருப்பத்தோடு துதித்து வழிபாடியற்றி, நித்தலும் எரியில் வரு காரியமும் பண்ணி - நித்தியாக்கினி காரியமுஞ் செய்து (முடிப்பதாம்), நினையுங் காலே இக் கிரியையினை இயற்றுவோர்கள் நினையுமிடத்து(ப் புறத்தொழில் அகத் தொழிலென்னும் இரண்டானும் அருவுருவத் திருமேனியை நோக்கி வழிபடுதலாகிய) இக்கிரியையினை அனுட்டித்தோர், நின்மலன்றன் அருகு இருப்பர் - சிவசாமீபமாகிய பதமுத்தியைப் பெறுவர் என்க.

(பொ - ரை.) புறத்தொழில் அகத்தொழில் என்னும் இரண்டானும் அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு கிரியை எனப்படும் எ - ம். (௨0)

சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ்
சலிப்பற்று முச்சதுர முதல்ஆதா ரங்கள்
அகமார்க்கம் அறிந்தவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்

முகமார்க்க அமுதுடலம் முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தன் முதலாக வினைகள்
உகமார்க்க அட்டாங்க யோக முற்றும்
உழத்தல்உழந் தவர்சிவன்தன் உருவத்தைப் பெறுவர்.

(ப - ரை.) *சகமார்க்கம் உழத்தல்* - தோழநெறிப் பயிற்சியாவது, *இரண்டும் தடுத்து* - (உச்சுவாசம் நிச்சுவாசம்) இரண்டையும் அடக்கி, *வளி சலிப்பு அற்று* - (சுழுமுனைமார்க்கத்திலே) பிராணவாயுவைச், சலனம் அற நிறுத்தி, *புலன் ஒடுக்கி* - விடயங்களின் வழி (மனத்தைச் செல்ல ஒட்டாது) மீட்டு, *முச்சதுரமுதல் ஆதாரங்கள் அகமார்க்கம் அறிந்து* - முக்கோணம் சதுரம் முதலிய (வடிவினவாகிய மூலாதாரம் சுவாதிட்டானமாதிய) ஆறு ஆதாரங்களின் அந்தர்மாதிருகாக்கிரமத்தை உணர்ந்து, *அவற்றின் அரும்பொருள் உணர்ந்து* - அவ்வாதாரங்களின் அரிய அதிதேவதைகளைத் தியானித்து (அவ்வாறுதாரங்களினும் அசபா சத்தி சிவான்மிகையாய் நிற்கு முறைமையை நோக்கி), *அங்கு அணைந்து போய் மேல் ஏறி* - மூலாதாரந்தொடங்கி (விநாயகர் முதலாகிய தேவதைகளை)ப் பொருந்தி மேலாகிய (பிரமரந்திரமளவும் அசபையுடன்) சென்றடைந்து, *அலர்மதி மண்டலத்தின் முகமார்க்க அமுது* - (அப்பிரமரந்திரத்தின்கண்ணதாகிய தாமரை முகையை) அலர்வித்து (அதன் கேசராக்கிரத்துள்ள) சந்திரமண்டலத்தை (மூலாக்கினியினால் இளகப் பண்ணி) அவ்வழித்தாக ஒழுகும் அமிர்தத்தை, *உடலம் முட்டத் தேக்கி* - தேக முழுவதும் நிரப்பி, *முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக* - பூரணப் பிரகாசத்தைத் தியானித்தன் முதலிய(வாம்), *வினைகள் உகமார்க்க அட்டாங்க யோகம் முற்றும் உழந்தவர்* - வினைகள் கெடுதற்குரிய வழியாகிய (இயமம் நியமம் முதலிய) இவ்வட்டாங்க யோகம் என்னும் (அகத்தொழின் மாத்திரையானே அருவத்திருமேனியை நோக்கி வழிபடுதல்) முற்றும் அனுட்டித்தோர், *சிவன் தன் உருவத்தைப் பெறுவர்* - சிவசாரூபமாகிய பதமுத்தியைப் பெறுவர் என்க.

(பொ - ரை.) அகத்தொழின் மாத்திரையானே அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு யோக மெனப்படும் எ - ம்.

*சகமார்க்கம் உழத்தல் என வினைமுடிக்க.*

*இவ்வியோகம் உழந்தவர் என எடுத்துக்கொண்டுரைக்க.* (௨௧)

சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டும்
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

(ப - ரை.) சன்மார்க்கம் - நன்னெறியாவது, சகலகலை புராணம் வேதம் சாத்திரங்கள் சமயங்கள் தாம் பலவும் உணர்ந்து - எல்லாக் கலை ஞானங்களும் புராணங்களும் வேதசிவாகமங்களிலுள்ள கருமகாண்டங் களும் (ஏனை) நூல்களும் (மற்றச்) சமயசாத்திரங்கள் பலவும் ஆராய்ந்து, பல் மார்க்கப் பொருள் பலவும் கீழாக (க் கழித்து) - பலவழிப்படுகின்ற பொருள் முழுவதும் கீழெனக்கண்டு கழித்து, மேலாம் பதி பசு பாசம் தெரித்து - மேலாய பதி பசு பாசம் என்னும் முப்பொருளையும் (தடத்த லக்கணத்தின் வைத்து வகுத்து) உணர்த்தி, பரசிவனைக் காட்டும் நன் மார்க்க ஞானத்தை நாடி - (அம்மூன்றனுட்) பதிப்பொருள் (ஏனைப் பாச பசுக்களுக்கு மேலாதல்) இனிது விளங்கச் சொரூபலக்கணத்தின் வைத்துணர்த்துதலாகிய நல்வழிக்கு ஏதுவான ஞானகாண்டத்தை (ஓதல் கேட்டல்களுடன்) சிந்தித்து, ஞான ஞேயமொடு ஞாதிருவும் நாடாவண்ணம் பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி-(புறத்தொழில் அகத் தொழில் இரண்டும் இன்றி அறிவுத்தொழின் மாத்திரையானே அம் மூன்று திருமேனிக்கும் மேலாய்) ஞாதிரு ஞான ஞேயமாகிய பகுப் பின்றி அத்துவிதமாய் இயைந்த (அகண்டாகார நித்த வியாபக சச்சிதா னந்தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற) சிவபிரான்மாட்டுச் செய்யும் வழிபாடாகும், ஞானப் பெருமையுடையோர் - (இம்) மகிமை பொருந் திய ஞானத்தினை அநுட்டித்தோர், சிவனைப் பெறுவர் காணே - சிவசா யுச்சியமாகிய பரமுத்தியைப் பெறுவர் என்க.

(பொ - ரை.) புறத்தொழில் அகத்தொழில் இரண்டும் இன்றி அறிவுத்தொழின் மாத்திரையானே அம்மூன்று திரு மேனிக்கும் மேலாய் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந் தப் பிழம்பாய் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்திற் செய்யும் வழிபாடு ஞான மெனப்படும் எ - ம்.

அவ்வழிபாடு இவையென்பது முன்னர் வகுத்துக் கூறப்படும்.

ஈண்டு வேதம் என்றது வேதஞ் சிவாகமம் என்னும் இரண்டினும் உள்ள கருமகாண்டத்தை. சிவாகமமும் வேதம் என வழங்கப்படும்.

கீழுள்ளவற்றைக் கீழெனக் கண்டு கழித்தாலன்றி மேலுள்ளன பயன்படா என்பார், கீழாக என்றார். கழித்தென்பது சொல்லெச்சம்.

பதி பசு பாசந் தெரித்தலாவது அம்மூன்று பொருளையுந் தடத்த லக்கணத்தின்வைத்து வகுத்துணர்த்துதல். பரசிவனைக் காட்டலாவது அம்மூன்றனுட் பதிப்பொருள் ஏனைப்பாச பசுக்களுக்கு மேலாதல் இனிது விளங்கச் சொரூபலக்கணத்தின் வைத்துணர்த்துதல். ஈண்டு ஞானம் என்றது ஞானசாத்திரத்தின் மேற்று. தெரித்துக்காட்டு ஞான நூல் எனவே, ஞானகாண்டம் எல்லாந் தூலாருந்ததி நியாயம்பற்றி இங்ஙனம் இரு பகுதிப்பட நிகழும் என்பதாயிற்று.

நாடுதல் சிந்தித்தல். நாடியெனவே, நாடுதற்கு வேண்டப்படும் ஓதல் கேட்டல்களும் உடன்கொள்ளப்படும்.

பின்மார்க்கச்சிவன் வினைத்தொகை. பின்னுதல் அத்துவிதமாய் இயைதல்.

நாடாவண்ணம் பின்னிய சிவனென்றுரைக்க. மார்க்கம் இடைப் பிறவரல்.

சன்மார்க்கமாவது உணர்ந்து கழித்து நாடி உடனும் பெற்றி என வினைமுடிபு செய்க.

மேல் இச்சரியை இக்கிரியை யென்றாற்போல ஈண்டும் இஞ் ஞானப் பெருமையெனச் சுட்டு வருவித்துரைக்க.

இவை நான்கு செய்யுளானும் மேலெடுத்துக்கொண்ட சரியை முதலிய நான்கிற்கும் இலக்கணங் கூறப்பட்டது. (உஉ)

ஞானநூல் தனையோதல் ஓது வித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றா
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவன்அடி அடைவிக்கும் எழில்ஞான பூசை
ஊனமிலாக் கன்மங்கள் தபஞ்சேபங்கள் தியானம்
ஒன்றுக்கொன் றுயரும்இவை யூட்டுவது போகம்
ஆனவையான் மேலான ஞானத்தால் அரனை
அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோர் எல்லாம்.

(பதை - ரா.) ஒன்றுக்கு ஒன்று உயரும் - (சிவதருமோத்தரத்திற் கூறியவாறே) ஒன்றற்கு ஒன்று ஏற்றமாகிய (கன்மம்முதல் ஞானம் ஈறாகிய வேள்வி ஐந்தனுள்), ஊனம் இலாக் கன்மங்கள் தபம் செபங் கள் தியானம் இவை போகம் ஊட்டுவது ஆனவையான் - குறைவில் லாத கன்மவேள்வி தவவேள்வி செபவேள்வி தியானவேள்வி யென்னு முன்னைய நான்கும் போகத்தை ஊட்டுவனவாகலின், ஞானநூல்தனை ஓதல் - (நூலின்கண் அதிகாரம் உடையராயினர்) ஞானநூலைத் தாம் ஓததலும், ஓதுவித்தல் - (அந்நூலைப்) பிறர்க்கு ஓதுவித்தலும், நற் பொருளைக் கேட்பித்தல் - நன்மையாகிய அந்நூற்பொருளைத் (தமது மதிநுட்பத்தால் உணர்ந்து) பிறருக்கு உரைத்தலும், நன்றாத் தான் கேட்டல் - (ஆசிரியனை வழிபட்டு அந்நூற்பொருளைத்) தானு செவ்வி தாகக் கேட்டலும், ஈனம் இலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் எழில் ஞானபூசை - குறைவில்லாத அப்பொருளைச் சிந்தித்தலுமாகிய ஐவகைப்பட்ட அழகிய ஞானவேள்வி யொன்றுமே, இறைவன் அடி அடைவிக்கும் - வீடு பேற்றைத் தருவதாம் (ஆதலால்), வீடு எய்த அறிந்தோர் எல்லாம் - அவ்வீடுபேற்றை அடைய உணர்ந்தோர் எல்லா ரும், மேலான ஞானத்தால் அரனை அருச்சிப்பர் - (அங்ஙனம் ஐவகை யான்) மேம்பட்ட ஞானவேள்வியினாலே சிவபிரானை நோக்கி வேட்கற் பாலர் என்க.

(பொ - ரை.) சிவதருமோத்தரத்திற் கூறியவாறே ஒன் றற்கு ஒன்று ஏற்றமாகிய கன்மவேள்வி தவவேள்வி செப வேள்வி தியானவேள்வி ஞானவேள்வியென்னும் ஐந்தனுள், முன்னைய நான்கும் போகத்தை யூட்டுவனவாக, ஓதன்முதல் ஐவகைப்பட்ட ஞானவேள்வி யொன்றுமே வீடுபேற்றைத் தருவ தாகலான் அஃது உணர்ந்தோரால் அங்ஙனம் ஐவகை ஞான வேள்வியே வேட்கற்பாற்று எ - ம்.

தெளிதற்கும் நிட்டைக்கும் நூல் வேண்டாமையின் நூலானுகற் பாலனவாய ஏனை ஐந்துமே ஈண்டுவேள்வியென்று எடுத்துக்கொள்ளப் பட்டன.

நற்பொருளைத் தான்கேட்டல் கேட்பித்தல் எனக் கேட்டற்குப் பின்வைத்தோதாமையான், ஈண்டுக் கேட்பித்தலென்றது. ஆசிரியனை வழிபட்டுத் தான் கேட்டலின்றியும் ஓதவும் ஓதுவிக்கவும் பெற்று நூலின்கண் அதிகாரம் உடையராயினர் அந்நூற்பொருளைத் தமது மதிநுட்பத்தானுணர்ந்து தம்மாலோதுவிக்கப்பட்டார்க்கு உரைத்தலை யென்பது பெற்றும்.

கேட்டற்குப் பின்னர்த்தாகிய ஏனைக் கேட்பித்தல், பிறர்க்குரை யிடத்தே நூற்கலப்பானும் என்பவாகலிற் சிந்தித்தற் பயத்ததாய் அத னுள் அடங்குதலின், வேறுவைத் தெண்ணவேண்டாவாயிற்று. அற்று கலினன்றே வருஞ் செய்யுளிற் கேட்டற்குப்பின் சிந்தித்தலே கூறி யொழிந்ததூஉம் என்க. (உ௯)

கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை
கிளத்தல்என ஈர்இரண்டாங் கிளக்கின் ஞானம்
வீட்டையடைந் திடுவேர்நிட்டை மேவி னேர்கள்
மேவாது தப்பினவர் மேலாய பதங்கட்(கு)
ஈட்டியபுண் ணியநாத ராகி யின்பம்
இனிதுநுகர்ந் தரனருளால் இந்தப் பார்மேல்
நாட்டியநற் குலத்தினில்வந் தவதரித்துக் குருவான்
ஞானநிட்டை யடைந்தடைவர் நாதன் தாளே.

(ப - ரை.) கிளக்கில் ஞானம் - மேற்கூறிய (ஞானவேள்வி ஐந்த னுள் முன்னைய மூன்றினும் ஆசிரியன் அறிவுறுக்கும் உண்மைஞானம் நிகழாமையின்) உண்மை ஞானம் எனப்படுவன, கேட்டலுடன் சிந்தித் தல் தெளிதல் நிட்டைகிளத்தலென ஈரிரண்டேயாம் - (ஏனை)க் கேட் டல் சிந்தித்தல்களும் (சிந்தித்ததனைப் பின்னர்த்) தெளிதலும் (தெளிந்தவாறே அதன்பின்) நிட்டைகூடுதலுமென்னும் நான்கேயாம், நிட்டை மேவினேர்கள் வீட்டை அடைந்திடுவர் (இம்முறையேவந்து) நிட்டை பொருந்தினேர் வீட்டினைத் தலைப்படுவர், மேவாது தப்பின வர் - (இந்நான்கினுள்) மேவுதலின்றி (த்தீக்கையில் அத்துவசுத்தி பண் ணப்பட்டு ஓதல் ஓதுவித்தல் கேட்பித்தல் மாத்திரையின் நின்று) தப் பினவர், மேலாய பதங்கட்கு ஈட்டிய புண்ணியநாதராகி இன்பம் இனிது நுகர்ந்து - மேலாய பதமுத்திகட்கு ஈட்டப்பட்ட புண்ணியத் தலைவராய் (ஆண்டுவைகி) இன்பத்தினை நன்குபெற அனுபவித்து, அரன் அருளால் இந்தப் பார்மேல் நாட்டிய நற்குலத்தினில் வந்து அவ தரித்து - முதல்வன் ஆணையான் (அவைகளினின்று நீங்கி) இவ்வுலகத் தின்கண்ணே உயர்ந்த நற்குலத்தில் தோன்றிய துணையானே, குரு வான் ஞான நிட்டை அடைந்து நாதன்தாள் அடைவர் - ஆசிரியன் (மாட்டுக் கேட்டல் முதலிய நெறி) யால் ஞான நிட்டையினைத் தலைக் கூடி வீடுபேறு எய்துவர் என்க.

(பொ - ரை.) மேற்கூறிய ஞானவேள்வி யைந்தனுள் முன்னைய மூன்றினும் ஆசிரியன் அறிவுறுக்கும் உண்மைஞானம் நிகழாமையின், உண்மைஞானம் எனப்படுவன ஏனைக் கேட்டல் சிந்தித்தல்களுஞ் சிந்தித்ததனைப் பின்னர்த் தெளிதலுந் தெளிந்தவாறே யதன்பின் நிட்டைகூடுதலும் என்னும் நான்கேயாம். இம்முறையே வந்து நிட்டைபொருந்தினோர் வீட்டினைத் தலைப்படுவர். இந்நான்கினுள் மேவுதலின்றித் தீக்கையில் அத்துவ சுத்தி பண்ணப்பட்டு ஓதல் ஓதுவித்தல் கேட்பித்தன் மாத்திரையினின்று தப்பினவர், பதமுத்திகளின் வைகி நீங்கிய துணையானே ஆசிரியன் மாட்டுக் கேட்டல் முதலிய நெறியான் நிட்டையினைத் தலைக்கூடி வீடுபேறு எய்துவர் எ - ம்.

ஓதன் முதலிய மூன்றின்நின்றோர்க்குங் கேட்டன் முதலிய ஆசிரியனையின்றி யமையா என்பது உணர்த்துதற்பொருட்டு, இந்தப் பார்மேல் நாட்டிய நற்குலத்தினில் வந்து அவதரித்து என்ற துணையேயாகலின் அதுவே நியதமன்றெனக் கொள்க. சரியை முதலியவற்றின் நின்றோரும் அங்கு 'நாதனே முன்னிற்கின் நணுகுவர்நற் றோளே' யென வருஞ்செய்யுளிற் கூறப்படுதலின்.

இனிமேவாது தப்பினவர் என்பதற்குக்கேட்டன் முதலிய மூன்றினின்று தப்பினவர் என்று உரைப்பாரும் உளர்; கேட்ட பின்னர்க் கேட்கவேண்டாமையானும், சிந்தித்தபின் நூல்வேண்டாமையானும், தெளிந்தவழி நிட்டைமேவுதற்கு இடையீடு இன்மையானும், கேட்டன் முதலியவற்றின் நின்றோர் சுத்த தத்துவ புவனங்களின் அபர முத்தராக வைகியவாறே பரமுத்தியைத் தலைப்படுவதன்றி மீளுதல் இன்மையானும், அவர்களைச் சரியை முதலியவற்றின் நின்றோரோடு ஒப்பவைத்து அங்ஙனம் உரைத்தல் சிறிதும் ஏலாமையானும், மேலைச்செய்யுளோடு இயைபுபடாமையானும்; அவர் உரைப்பன எல்லாம் போலியென்று ஒழிக.

இவையிரண்டு செய்யுளும் மேற்கூறிய ஞானமாவது இத்துணைப் பகுதித்து என்பதூஉம் அவற்றுட் பொதுச் சிறப்புஆமாறும் அவற்றிற்குரிய பயன்வேறுபாடும் உணர்த்தியவாறு. (௨௪)

தானமியா கந்தீர்த்தம் ஆச்சிரமந் தவங்கள்
சாந்திவிர தங்கன்ம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வர்
ஈசனியோ கக்கிரியா சரியையினின் நின்றோர்
ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லாம்
ஒடுங்கும்போ தரன்முனிலா தொழியின்உற்ப வித்து
ஞானநெறி யடைந்தடைவர் சிவனை யங்கு
நாதனே முன்னிற்கின் நணுகுவர்நற் றோளே.

(ப - ரை) தானம் - தானங்கள் கொடுத்தலும், யாகம் - வேள்விகள் வேட்டலும், தீர்த்தம் - புண்ணிய தீர்த்தங்கள் ஆடலும், ஆச்சிர

மம் - தத்தம் நிலைகளில் தவறாது நிற்றலும், தவங்கள் - தபசுகள் புரிதலும், சாந்தி - பிராயச்சித்தங்கள் பண்ணலும், விரதம் - விரதங்கள் காத்தலும், கன்மயோகங்கள் சரித்தோர் - கர்மயோகங்கள் இயற்றலுமாகிய இவைகளை அநுட்டித்தோர், ஈனம்இலாச் சுவர்க்கம் பெற்று இமைப்பு அளவில் மீள்வர் -(இன்ப) மிக்குடைய துறக்கஉலகத்தினைப் பொருந்தி(ப் போகங்களை நுகர்ந்து) விரைந்து மீளுவராகின் (மேலே மேலே போயும் மீளுதற்கு ஏதுவாகிய அப்பசுபுண்ணியம் போலன்றி), ஈசன் சரியை கிரியா யோகினின் நின்றோர் - முதல்வன் (விதித்த மேம்பட்ட) சரியை கிரியா யோகங்களாகிய சிவபுண்ணியங்களை (விதிவழி) அனுட்டித்தோரும், ஊனம் இலா முத்திபதம் பெற்று - (உண்மை ஞானம் மேவாது தப்பினவரோடு ஒப்பத் தத்தமக்குரிய) நிருமலமாகிய பதமுத்திகளின் (நெடுங்காலம்) வைகி, உலகமெல்லாம் ஒடுங்கும்போது அரன்முன் நிலாது ஒழியின் - பிரபஞ்ச முழுதுஞ் சங்காரப்படும் பொழுது முதல்வன் முன்னின்று அருளானுகில், உற்பவித்து ஞான நெறி அடைந்தே சிவனை அடைவர் - மீட்டுஞ் சனனத்தை யுற்று (முடிவின்கண் எவ்வாற்றானும் குருஅருளான்) ஞானநெறியைத் தலைப்பட்டே வீடு எய்துவர், அங்கு நாதன் முன்னிற்கின் நற்றாளே நணுகுவர் - (அங்ஙனஞ் சாலோக முதலிய பதமுத்தி பெற்றோரும்) ஆண்டு முதல்வன் அருளப்பெறின் திருவடியிற் கலப்பர் என்க.

(பொ - ரை.) மேலேமேலே போயும் மீளுதற்கு ஏதுவாகிய பசுபுண்ணியம்போல் அன்றி, மேம்பட்ட சரியை முதலிய சிவபுண்ணியங்களை விதிவழி அனுட்டித்தோரும் மேவாது தப்பினவரோடு ஒப்பத் தத்தமக்குரிய பத முத்திகளின் நெடுங்காலம் வைகி முடிவின்கண் எவ்வாற்றானும் ஞான நெறியைத் தலைப்பட்டே வீடெய்துவர் எ - ம்.

இச்செய்யுள் சரியை முதலியவற்றிற்குப் பயன் மேற்கூறிய சாலோக முதலிய பதமுத்தி மாத்திரையே போலுமென்னும் ஆசங்கையை நீக்கியதூஉம் ஆயிற்று. (உரு)

சிவாஞனச் செயலுடையோர் கையில் தானந்
திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
பவமாயக் கடலினமுந் தாவகை யெடுத்துப்
பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத்
தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
சரியைகிரி யாயோகந் தன்னிலுஞ்சா ராமே
நவமாகுந் தத்துவஞா னத்தை நல்கி
நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்குந் தானே.

(ப - ரை.) சிவஞானச்செயலுடையோர் கையின் தானம் திலம் அளவே செய்திடினும் - (விதிவழியின்றிப் பத்திவழியின்நின்றோர் சிவ ஞானிகள் கையின்கண்ணே தானஞ்செய்தளித்த பொருள் சிறிதேயாயினும், நிலம் மலை போல் திகழ்ந்து - நிலமும் மலையும்போல மிக் கோங்குதலான் (அத்தானம் அப்பத்தருக்கு), பரபோகம் துய்ப்

பித்து - மேலாகிய (சிவசாலோகாதி பதங்களை ஒருதலையாக நண்ணி ஆண்டுளவாகிய) இன்பங்களை அனுபவிக்கச்செய்து, பவமாயக்கடலின் அழுந்தாதவகை எடுத்து - சனன மரண வஞ்சக்கடலின்கண் அமிழ்ந்தாவண்ணம் எடுத்து, பாசத்தை அறுக்க - பாசத்தினை நீக்க, தவம் ஆரும் பிறப்பு ஒன்றின் சாரப்பண்ணி - தவஞ் செய்தற்குரிய (உயர்ந்த குலத்தில்) ஒரு பிறவியை அடையச்செய்து, சரியை கிரியா யோகந்தன்னினும் சாராமே - சரியை கிரியா யோகங்கள் (ஏனோர்க் குப் போலக் காலநீட்டிப்பும் அருமையுமின்றி) எளிதிற் கைகூடி முற் றுப்பெறச் செய்து, நவம் ஆகும் தத்துவ ஞானத்தை நல்கியே நாதன் அடிக்கமலங்கள் நணுகுவிக்கும் தான் - (முடிவின்கண்ணே) புதுமை யாகிய உண்மை ஞானநெறியைத் தலைப்படுத்தியே முதல்வனது செங்கமல மலர்போலுந் திருவடியாகிய வீட்டினை எய்துவிக்கும் என்க.

**(பொ - ரை.) விதிவழியின்றிப் பத்திவழியில் நின்று பத முத்தியைப் பெற்றோர் முடிவின்கண் ஞான நெறியைத் தலைப் பட்டே வீடு எய்துவர் எ - ம்.**

பத்திநெறியின்நின்றோர்க்குப் பக்குவ மிகுதிப்பாட்டாற் சரியை கிரியா யோகம் எளிதிற் கைகூடி முற்றுப்பெறுவனஅன்றி ஏனோர்க்குப் போலக் காலநீட்டிப்பும் அருமையும் உடையன அல்ல என்பார், சரியை கிரியா யோகந் தன்னினுஞ் சாராமே யென்றார் ஆகலின், சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர் என மேற்கூறிய சோபான முறையோடு முரணாமை யறிக.

இவை நான்கு செய்யுளானும் ஐவகைவேள்வி ஆற்றினோர் பெறும் பயனும், சரியை முதலியவற்றிற் சரித்தோர்பெறும் பயனும் சிவஞானி கட்குச் செய்யுந் தானப்பெருமை கூறுமுகத்தாற் பத்திநெறியின் நின்றோர் பெறும் பயனும் உணர்த்தும் முகத்தானே, எந்நெறியின் நின்றோர்க்கும் வீடுபேறெய்துதற்கண் ஞானநெறியாகிய சன்மார்க்கம் இன்றியமையாச் சிறப்பிற்று என்பது கூறப்பட்டது. (உசு)

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்லஆ கமஞ்சொல்ல அல்லவாம் என்னும்
ஊனத்தார் என்கடவர் அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தம்உயர் மெய்ஞ்ஞா னந்தான்
ஆனத்தால் அதுபோவ தலர்கதிர்முன் இருள்போல்
அஞ்ஞானம் விடப்பந்தம் அறும்முத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
இறைவன்அடி ஞானமே ஞானம் என்பர்.

**(ப - ரை.)** ஞானத்தாலே வீடென்று - (மேற் கூறியவாற்றால் ஏனைய எல்லாம் ஞானத்தைப் பயப்பிக்கும்) ஞானம் ஒன்றே வீடுபேற் றிற்குச் சிறந்த காரணம் என்று, நான்மறைகள் புராணம் நல்ல ஆகமம் சொல்ல - நான்கு வேதங்களும் பதினெண்புராணங்களும் இருபத் தெட்டுச் சிவாகமங்களுமாகிய பிரமாண நூல்களெல்லாந் துணிந்து

கூறுவதாகவும், அல்லவாம் என்னும் ஊனத்தார் என் கடவர் - அவற்றோடு பிணங்கி (வீடுபேற்றிற்குத் தீக்கை மாத்திரையே அமையும் ஐவகை வேள்வி முதலிய கன்மங்களே அமையும் பத்திநெறிமாத் திரையே அமையுமென்று இவ்வாறு) பிதற்றும் பேதை நீரார் (ஒரு வாற்றானுந்) தெருட்டற்பாலர் அல்லர் எனவும், அஞ்ஞானத்தால் பந்தம் உறுவது தான் - (ஞானமல்லாதனவெல்லாம் அஞ்ஞானமாக லின்) அவ்வஞ்ஞானப் பகுதிகளாற் பந்த முறுதலே (அன்றி வீடு பேறடைதல் கூடாதெனவும்), அது அலர் கதிர்முன் இருள்போல் உயர் மெய்ஞ்ஞானந்தான் ஆனத்தால் போவது - அவ்வஞ்ஞானப் பகுதிகளெல்லாம் விரிந்த ஒளிமுன் இருள்போல மேம்பட்ட உண்மை ஞானத்தின் முன்னர்ச் சத்திகெட்டொழியும், அஞ்ஞானம் விடப் பந்தம் அறும் முத்தி ஆகும் - அவ்வஞ்ஞானப்பகுதிகள் ஒழியவே (அவற்றானு கிய) பந்தம் நீங்கும் (அது நீங்கவே) முத்திநிலை கைகூடும் ஆகலான் (ஞானம் ஒன்றே முத்திக்குச் சிறந்த காரணம் எனவும்), ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம் - (ஞானத்துள்ளும்) தார்க்கிகர் சாங்கியர் மாயாவாதி முதலியோர் கூறும் ஞானங்களெல்லாம் பாசஞான பசு ஞானங்க ளாகலான் (அவையும் பந்த முறுத்துவனவேயன்றி வீடெய்து விக்கமாட்டாமையின்), இறைவன் அடிஞானமே ஞானம் என்பர் - (அவற்றின்வேறாய) முதல்வன் திருவடி ஞானம் ஒன்றே அப்பெற்றித் தாகிய ஞானமாவது எனவுங் கூறுவர் (அந்நூல்களின் உண்மையுணர்ந் தோர்) என்க.

(பொ - ரை.) மேற்கூறியவாற்றால் ஏனையவெல்லா ஞானத் தைப் பயப்பிக்கும் ஞானம் ஒன்றே வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமாவது என்பது வேதம் முதலிய பிரமாண நூல்கட் கெல்லாந் துணிபாகவும், அவற்றோடு பிணங்கி வீடுபேற்றிற்குத் தீக்கைமாத்திரையே அமையும் ஐவகை வேள்வி முதலிய கன் மங்களே அமையும் பத்திநெறி மாத்திரையே அமையும் என்று இவ்வாறு பிதற்றும் பேதை நீரார் ஒருவாற்றானுந் தெருட்டற் பாலர் அல்லரெனவும், ஞானம் அல்லாதன எல்லாம் அஞ்ஞான மாகலின் அவ்வஞ்ஞானப் பகுதிகளாற் பந்தமுறுதலின்றி வீடு பேறடைதல் கூடாதெனவும் அவ்வஞ்ஞானப் பகுதிகளெல்லாம் ஒளிமுன் இருள்போல ஞானத்தின் முன்னர்ச் சத்திகெட் டொழியும் அவையொழியவே அவற்றானுய பந்தம் நீங்கும்; அது நீங்கவே, முத்திநிலை கைகூடும் ஆகலான் ஞானம் ஒன்றே முத் திக்குச் சிறந்த காரணம் எனவும், ஞானத்துள்ளும் தார்க்கிகர், சாங்கியர், மாயாவதி முதலியோர் கூறும் ஞானங்களெல்லாம் பாசஞான பசுஞானங்கள் ஆகலான் அவையும் பந்த முறுத்து வனவேயன்றி வீடெய்துவிக்க மாட்டாமையின் அவற்றின் வேறாய திருவடிஞானம் ஒன்றே அப்பெற்றித்தாகிய ஞான மாவது எனவுங் கூறுவர் அந்நூல்களின் உண்மையுணர்ந்தோர் எ - ம்.

ஏகாரம் இரண்டும் பிரிநிலைக்கண் வந்தன.

சொல்லவும் எனச் சிறப்பும்மை விரித்துரைக்க. தான் இரண்டும் அசை.

ஆனத்தால் ஆனவதனல் என்க. ஆன என்பதனுள் அகரமும் அதனல் என்பதனுள் அன்சாரியையுந் தொடைநோக்கி விகாரத்தால் தொக்கன. [1]'பெற்றத்தாற் பெற்ற பயன்' என்ருற்போல. ஆதல் உண்டாதல்.

இதனனே பிறஎல்லாம் வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமல்ல வாதல் இனிது விளக்கி மேலது வலியுறுத்தப்பட்டது.

இத்துணையும் ஞானத்தின் இயல்பும் அதன் பயனும் பொதுவகையாற்கூறி, இனிச் சிறப்புவகையாற் கூறுகின்ருர். (உஎ)

சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றுந் தோன்றத்
தூரியனுஞ் சிவன்தோன்றுந் தானுந் தோன்றுந்
தொல்லுலகம் எல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை யெல்லாமுன் நிகழ்ந்து தோன்றும்.

(ப-ரை) தோன்றியிடச் செய்ய சுடர் -(தனது கிரணத்தோடுந்) தோன்றுஞ் செம்மையாய ஞாயிற்றின் (சந்நிதி மாத்திரையானே), சூரியகாந்தக் கல்லின் இடத்தே சோதி (நிகழ்ந்து) தோன்றுமாபோல்-சூரியகாந்தக் கல்லின்கண்ணே நெருப்பு விளங்கித் தோன்றுமாறு போல, அருளான் வந்துதோன்ற ஆரியனும் ஆசான் - கேட்பித்தலோடும் வந்து தோன்றும் மேம்பட்ட ஞானசிரியன் (சந்நிதிமாத்திரையானே), ஆன்மாவின் அடிஞானம் (நிகழ்ந்து) தோன்றும்-மாணக்கன் மாட்டு (மேல் ஈரிரண்டாங் கிளக்கின் ஞானம் என்றவற்றுள்) முந்திய ஞானமாகிய கேட்டலறிவு விளங்கித் தோன்றும், தோன்றத் தூரியனும் சிவன் (முன்னிகழ்ந்து) தோன்றும்-(அது) தோன்றவே முதல்வனுகிய பதியும் நிருவிகற்பமாய் விளங்கித் தோன்றும், (தன்னுள்ளே) தானும் (முன்னிகழ்ந்து) தோன்றும்-அப்பதியினுள்ளே பசுவும் நிருவிகற்பமாய் விளங்கித்தோன்றும், தன்னுள்ளே தொல் உலகமெல்லாம் முன்னிகழ்ந்து) தோன்றும் - அப்பசுவினுள்ளே பழைய பிரபஞ்ச வடிவாகிய பாசமும் நிருவிகற்பமாய் விளங்கித் தோன்றும், நேரியனுய் உயிர்க்கு உயிராய் (நின்றநிலை) - (இறைவன் அணுவோரண்டமாம்படி[2]) நேரியன் ஆகலால் உயிர்க்குயிராய் நின்ற நிலையும், பரியனுமாய் எங்கும் நின்ற நிலையெல்லாம் முன்நிகழ்ந்து தோன்றும் - (அண்டம் ஓர் அணுவாம் படி) பரியனுமாகலால் யாண்டும் நின்ற (பூரண) நிலையுமாகிய எல்லாம் நிருவிகற்பமாய் விளங்கித் தோன்றும் என்க.

(பொ-ரை.) தனது கிரணத்தோடுந் தோன்றும் ஞாயிற்றின் சந்நிதி மாத்திரையானே சூரியகாந்தக்கல்லின்கண் நெருப்பு

1. திருக்குறள், ௫உச. 2. 'அண்டமோர்' கூ. திருவி. கருவூர். கூ.

விளங்கித் தோன்றுமாறுபோலக் கேட்பித்தலோடுந் தோன்றும் ஆசிரியன் சந்நிதிமாத்திரையானே மாணுக்கன்மாட்டு, மேல் ஈரிரண்டாங் கிளக்கின் ஞானம் என்றவற்றுள் முந்திய ஞான மாகிய கேட்டலறிவு விளங்கித் தோன்றும்; அது தோன்றவே பதி முதலிய முப்பொருளும் அவை யொன்றின் ஒன்று வியாபக வியாப்பியங்கள் ஆமாறும் நிருவிகற்பமாய்த் தோன் றும் எ - ம்.

அருளான் என்புழி ஆன் உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது; [1]'தூங்குகையானோங்குநடைய' என்றாற்போல. ஈண்டு அருளென்றது ஏற்புழிக்கோடலாற் கேட்பித்தலை யுணர்த்திற்று. ஆசிரியன் நூற்பொருளுரைக்கும்வழி ஆசிரியன் ஞானமே மாணுக்கன் மாட்டுச் சென்று பற்றுவது போலுமென்னும் ஆசங்கை யறுத்தற் பொருட்டுத் தோன்றத் தோன்று மென்றார். உவமை கூறியதுமது. சடத்துக்கன்றிச் சித்துக்குச் [2]"சங்கிரமங் கூடாதென்பது சிவாகம நூல் துணிபு என்க.

அணு ஓர் அண்டமாம்படி நேரியன் ஆகலால் உயிர்க்குயிராதலும் அண்டம் ஓர் அணுவாம்படி பரியனும் ஆகலால் எங்கும் நிற்றலும் பெறப்படும் என்பார், 'நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும் நின்றநிலை' யென்றார்.

முன்னிகழ்ந்தது என்பதனை யாண்டுங் கூட்டுக; முன்னிகழுந் தோற்றமாவது சவிகற்பத்துக்கு முன்னாக நிகழும் நிருவிகற்பத் தோற்றம்.

இதனானே கேட்டல் ஆமாறும் அதன்கண் நிகழும் அனுபவமுங் கூறப்பட்டன. (உஅ)

மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாத
  மேவுதலும் ஞானம்விளைந் தோர்குருவின் அருளாற்
புக்கநுட்டித் தேநிட்டை புரிந்து ளோர்கள்
  பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரியம் இன்றி ஓட்டில்
  தபநியத்தில் சமபுத்தி பண்ணிச்சங் கரனோடு
ஒக்கவுறைந் திவர்அவனை யவன்இவரை விடாதே
  உடந்தையாய்ச் சிவன்தோற்றம் ஒன்றுமே காண்பர்.

(ப - ரை.) மிக்கது ஒரு பக்குவத்தின் மிகு சத்திநிபாதம் மேவுதலும் - பக்குவமுதிர்ச்சியான் நாலாஞ்சத்திநிபாத மேவிய இடத்தே (அவர்க்கு), ஞானம் விளைந்து - அக்கேட்டலறிவு (மந்தமாதலின்றி) முதிர்ந்து (முறுகவிளையும்), ஓர் குருவின் அருளால் புக்கு - (அப்பொழுது) தம்மாசிரியராதல் தம்மோடொருசாலை மாணுக்கராய்த் தம்

1. புறநானூறு, உஉ.
2. சங்கிரமம் - சென்று பற்றுதல்.

மின் மூத்தாருள் ஒருவராதல் சிந்திப்பிக்க (ப்பெறும் அந்நூற்பொருளின்கண்ணே கருத்தொருங்கி) நுழைந்து, அநுட்டித்தே நிட்டை புரிந்துளோர்கள் - (முன்னெடுபின் மலைவற ஏது திருட்டாந்தம் முதலியவற்றாற்) சிந்தித்து நிட்டை (கூடுதற்கண்) வேட்கை மிக்குடையராகப் பெற்றார், பூதலத்தின் தக்க பிரியாப்பிரியம் இன்றி - இவ்வுலகின் கண்ணே தக்க விருப்பு வெறுப்பின்றி (ச் சிந்தித்தற்கருமமே மேற்கொண்டு), ஓட்டில் தபநியத்தில் சமபுத்தி பண்ணி - ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவதாய்[1] (மற்றென்றினும் பற்றொன்றின்றி), புகழ் சீவன் முத்தராகி - புகழத்தக்க சீவன் முத்தரோடு ஒத்து, அவன் இவரை இவர் அவனை விடாதே உடந்தையாய்ச் சங்கரனோடு ஒக்க உறைந்து - பேரறிவாகிய சிவமுஞ் சிற்றறிவாகிய தாமும் (ஞாயிற்றினொளியும் கண்ணொளியும் போல்) அத்துவிதமாய் (த் தாஞ்) சிவத்தோடு கூட நிற்றலான், சிவன் தோற்றம் ஒன்றுமே காண்பர் - (ஆண்டுத் தாமுளராதல் அறியப்பெறாது) சிவத்தோற்றம் ஒன்றுமே காணப்பெற்று (நிருவிகற்பஞ் சவிகற்பம் என்னும் இரண்டற்கும் இடைநிலத்தே) நிற்பர் என்க.

(பொ - ரை.) பக்குவ முதிர்ச்சியால் நாலாஞ்சத்திநிபாத மேவப் பெற்றார்க்கு அக்கேட்டல் அறிவு மந்தமாதலின்றி முதிர்ந்து முறுக விளையும்; அப்பொழுது தம்மாசாரியராதல் தம்மோடு ஒருசாலை மாணக்கராய்த் தம்மின் மூத்தாருள் ஒருவராதல் சிந்திப்பிக்கப்பெறும் அந்நூற்பொருளின் கண்ணே கருத்தொருங்கி நுழைந்து முன்னெடுபின் மலைவற ஏது திருட்டாந்தம் முதலியவற்றாற் சிந்தித்து நிட்டைகூடுதற்கண் வேட்கை மிக்குடையராகப் பெற்றார், சிந்தித்தற் கருமமே மேற்கொண்டு மற்றென்றினும் பற்றொன்றின்றிச் சீவன் முத்தரோடு ஒத்துப் பேரறிவாகிய சிவமுஞ் சிற்றறிவாகிய தாமும் ஞாயிற்றினொளியுங் கண்ணொளியும்போல் அத்துவிதமாய் நிற்றலான், ஆண்டுத் தாமுளராதல் அறியப்பெறாது சிவத் தோற்றம் ஒன்றே காணப்பெற்று நிருவிகற்பஞ் சவிகற்பம் என்னும் இரண்டிற்கும் இடைநிலத்தே நிற்பர் எ - ம்.

மிக்கதொருபக்குவத்தின் மிகு சத்திநிபாதம் மேவுதலும் ஞானம் விளைந்து எனவே, அஃதங்ஙனம் மேவாதவழி அக்கேட்டல் அறிவு முறுகுதலின்றி அஃகி நிகழும் என்பதாயிற்று.

விளைந்தவழியென்பது விளைந்தெனத் திரிந்தது.

ஓர்குருவெனப் பொதுப்படக் கூறினர், ஒருசாலை மாணக்கராய்த் தம்மின் மூத்தாரையுந் தழுவுதற்கு. புரிதல் விரும்புதல்.

சீவன்முத்தராகி என்புழி ஆக்கச்சொல் உவமப்பொருள் குறித்து நின்றது; [2] 'ஆள்வாரிலி மாடு ஆவேனோ' என்றாற்போல. உடந்தையாய் உறைந்து காண்பர் என்றது, மழைபெய்து குளம் நிறைந்தது என்றாற் போலக் காரண காரியப்பொருட்டாய் நின்றது. உம்மை

1. 'கேடும்' கஉ. பெரியபு. திருக் - அ.
2. 'இரங்கும்' திருவாசகம், கோயின்மூத்த திருப்பதிக. எ.

சிறப்பு. ஏகாரம் பிரிநிலை. [1]"அடைபவர் சிவமேயாகும் அதுவன்றித் தோன்றும் என்ற கடனது என்' என்பதும் இந்நிலையெனக் கொள்க.

இதனானே சிந்தித்தல் ஆமாறும் அதன்கண் நிகழும் அனுபவமுங் கூறப்பட்டன. (உக)

[2]அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயிற்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதம்எல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதாரன் ஆயே.

(ப - ரை.) *அருளினான் அறியாமை அறிவு அகற்றி* - ஆசிரியன் திருவருளால் அறியாமையும் அறிதலும் ஆகிய இருவகைப் பாசங்களும் நீங்கி, *அறிவினுள்ளே அறிவுதனை அறியாதே அறிந்து* - தம்மறிவின் கண்ணே கேட்டலறிவினைக் கேட்குமுறையிற் கேட்டு, *குறியாதே குறித்து*-சிந்திக்கு முறைமையிற் சிந்தித்து, *குழைந்து அந்தக்கரணங்களோடும் கூடாதே வாடாதே இருப்பை யாயின்*-(பின்பு) அன்புசெய்து அந்தக்கரணங்களிற் சேராது அடங்கிநிற்கப் பெறுவாரானால் (தமக்கு), *பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றி* - பிரிதலில்லாத முதல்வன் இயல்பு (கேட்டற்காலத்துப் பொருள் தன்மைபற்றிப்) பேதமாய்த் தோன்றி, *பிரபஞ்ச பேதமெல்லாம் தானாய்த் தோன்றி* - (சிந்தித்தற் காலத்து) உலகபேதம் அனைத்தினுங் (கலப்புப்பற்றி) அபேதமாய்த் தோன்றி, *இவையெல்லாம் அல்லவாகி* - (தெளிந்தபின்) இவ்விரண்டும் அன்றி, *நெறியாலே என்றும் நின்றே நிராதாரனாய்த் தோன்றிடுவன்*- (நேரியனும் பரியனும் ஆயதோர்) முறைமை பற்றி என்ஞான்றும் (எவற்றினும் ஒற்றித்து) நின்றே ஒன்றினும் பற்றிலனாய் (வேறு) தோன்றும் என்க.

(பொ - ரை.) ஆசிரியன் திருவருளால் இருவகைப் பாசங்களும் நீங்கிக் கேட்கும் முறைமையிற் கேட்டுச் சிந்திக்கும் முறைமையிற் சிந்தித்துப் பின்பு அன்புசெய்து அடங்கி நிற்கப் பெறுவார்க்கு, முதல்வன் இயல்பு கேட்டற் காலத்துப் பொருள் தன்மை பற்றிப் பேதமாய்த் தோன்றிச் சிந்தித்தற்காலத்துக் கலப்புப்பற்றி அபேதமாய்த் தோன்றித் தெளிந்தபின் இவ்விரண்டுமின்றி நேரியனும் பரியனுமாயதோர் முறைமை பற்றி எவற்றினும் ஒற்றித்து நின்றே ஒன்றினும் பற்றிலனாய் வேறு தோன்றும் எ - ம்.

நின்று நிராதாரனாய்த் தோன்றிடுவன் எனக் கூட்டுக.

---

1. சிவப்பிரகாசம், உண்மை - உக.
2. 'பாதிவிருத்' தாயுமானார் - குரும, ரு

தெளிதல் ஆமாறும் அதன் பயனும் இனிது விளங்குதற் பொருட்டு மேற்கூறிப் போந்தவற்றையும் அனுவதித்து உடன் கூறினர்.

கூடாதே வாடாதேயென ஈண்டுக் கூறவே, ஏனைக் கேட்டல் சிந்தித்தல்களின் ஒரோவழிக் கூடுதலும் வாடுதலும் நிகழும் என்பதாயிற்று. அற்றாகலினன்றே ஆண்டு இவ்வாறு இனிது விளங்கப்பெறாதாயிற்றென்பது.

இருத்தல் அருமை நோக்கி இருப்பையாயின் என்றார்.

இதனானே தெளிதல் ஆமாறும் அதன்கண் நிகழும் அனுபவமுங் கூறப்பட்டன. (௩0)

புண்ணியம்மேல் நோக்குவிக்கும் பாவங்கீழ் நூக்கும்
புண்ணியனைப் பூசித்த புண்ணியத் தினாலே
நண்ணியஞா னத்தினால் இரண்டினையும் அறுத்து
ஞாலமொடு கீழ்மேலும் நண்ணா னாகி
எண்ணும்இக லோகத்தே முத்திபெறும் இவன்தான்
எங்கெழில்என் ஞாயிறெமக் கென்றுகுறை வின்றிக்
கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து காயங்
கழிந்தக்கால் எங்குமாய்க் கருதரன்போல் நிற்பன்.

(ப - ரை) கீழ்நூக்கும் பாவம் மேல் நோக்குவிக்கும் புண்ணியம் - (வியாபகமாகிய உயிர் அவ்வியல்பு இழந்து ஏகதேசப்பட்டுக்) கீழேசென்று துன்பத்தை நுகர்தற்குக் காரணமாகிய பாவமும் மேலே சென்று இன்பத்தை நுகர்தற்குக் காரணமாகிய புண்ணியமும் (தளையே யாகலின்), இரண்டினையும் - (அவ்வினைத்தளை) இரண்டனையும், புண்ணியனைப் பூசித்த புண்ணியத்தினாலே நண்ணிய ஞானத்தினால் அறுத்து - சிவபிரானை அருச்சித்தலென்னும் ஞானநூல் ஓதன்முதற் சிந்தித்தலீறாகிய ஞான பூசையின் பயனாய் நிகழ்ந்த தெளிதலுணர் (வெனப்படும் அரத்) தான் அறுத்து, ஞாலமொடு கீழ்மேலும் நண்ணானாகி - (காரணமின்மையிற் காரியமாகிய) பூமி நரக சொர்க்கங்களிற் செல்லுத(லாகிய ஏகதேசச் செலவும்) இன்றாய் ஒழிந்தாராகி, இவன்தான் கண்ணுதல் தன் நிறைவதனில் கலந்து - (அஃதொழியவே) அவர் (கரணங்களின் வயத்தராதலின்றி மேல் அங்ஙனந் தோன்றிய) இறைவனது வியாபகத்தைத் தலைப்பட்டு, ஞாயிறு எங்கு எழில் என் எமக்கென்று குறைவு இன்றி - ஞாயிறு எவ்விடத்து எழினும் அதனாலே தமக்காவதோர் பயனின்மை தெரிந்தவராய் (ஒருவாற்றானும்) குறைவின்மையை அடைந்து, எண்ணும் இகலோகத்தே முத்தி பெறும் - (இவ்விதமாகக்) கருதும் இம்மையே சீவன் முத்தராகி, காயம் கழிந்தக்கால் எங்குமாய்க் கருது அரன்போல் நிற்பன் - (மாசு நீங்கியவழி ஆடையினது வெண்மை ஆடை முழுதும் விளங்கினாற்போல இங்குளி வாங்குங் கலம் போல் உழல்வதாகிய) இவ்வுடம்பு நீங்கப்பெறும் (பரமுத்தி) நிலையில் (தமது வியாபகம்) எங்கணும் (அறிவு விளங்கப்பெற்றுக்) கருதுகின்ற முதல்வனோடு ஒத்து நிற்பர் என்க.

(பொ - ரை.) வியாபகமாகிய உயிர் அவ்வியல்பு இழந்து கீழும் மேலும் ஏகதேசப்பட்டுச் சேறற்குக் காரணம், அங்ஙனஞ் சென்று அவ்வப் பயன் நுகரச்செய்யும் இருவினைத்தளையே யாக லின், அத்தளை யிரண்டனையும் ஞானநூல் ஓதன் முதற் சிந்தித்த லீறாகிய ஞான பூசையின் பயனாய் நிகழ்ந்த தெளிதல்உணர்வு எனப்படும் அரத்தான் அறுக்கப் பெற்றார்க்கு, காரணமின்மை யிற் காரியமாகிய ஏகதேசச் செலவும் இன்றாய் ஒழியும்; அஃது ஒழியவே, அவர் கரணங்களின் வயத்தராதலின்றி மேல் அங்ஙனந் தோன்றிய இறைவனது வியாபகத்தைத் தலைப்பட்டு ஒருவாற் றானுங் குறைவின்றி இம்மையே சீவன் முத்தராகி, மாசு நீங்கிய வழி ஆடையின் வெண்மை ஆடை முழுதும் விளங்கினாற்போல் இங்குளி வாங்குங் கலம்போல் உழல்வதாகிய இவ்வுடம்பு நீங்கப் பெறும் பரமுத்தி நிலையில் தமது வியாபகம் எங்கணும் அறிவு விளங்கப்பெற்று முதல்வனோடொத்து நிற்பர் எ - ம்.

*சிவசமமாதற்குரிய சாதாரண தன்மமாவது இஃது என்பார், எங்கு மாய் என்றார்.*

*தெளிந்தார்க்குக் கண்ணுதல்தன் நிறைவதனிற் கலத்தற்கண் இடையீடின்மை இனிது விளக்குவார், இடையீடாவன இவையென் பதூஉம் அவை கழிந்தவாறும் உடன் கூறினார்.*

*கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்தார்க்குப் பண்டை ஏகதேச வுணர்வு தூர்ந்து போதலின், ஏகதேச உடம்பின் நிகழும் இன்பத் துன் பத்திற்கு ஏதுவாகிய உற்பாதம் முதலியவற்றை நோக்கி வரக்கடவ தோர் கவலையின்மையின், [1]'எங்கு எழிலென் ஞாயிறு எமக்கு என்று குறைவின்றி நிற்பாராயினாரென்பது. [2]'தனக்குவமையில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லான்-மனக்கவலை மாற்ற லரிது' என எதிர்மறை முகத்தாற் கூறியதும் இது பற்றியென்க.*

*கலந்து முத்திபெறும் இவன் என இயையும்.*

*இதனானே நிட்டையாமாறும் அதன் பயனுங் கூறப்பட்டன.* (௩க)

ஞாலமதின் ஞானநிட்டை யுடையோ ருக்கு
நன்மையோடு தீமையிலை நாடுவதோன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமோடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமலம் இல்லை
கோலமிலை புலனில்லை கரணம் இல்லை
குணம்இல்லை குறியில்லை குலமும் இல்லை
பாலருடன் உன்மத்தர் பிசாசர்குணம் மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வர்.

---

1. *'உங்கையிற்' திருவாசகம், திருஎம் - கக.*
2. *திருக்குறள், கடவுள் வாழ்த்து, எ.*

(ப - ரை.) ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு - இவ்வுலகத்தின்கண் ஞானநிட்டையினையுடையார்க்கு, நன்மையொடு தீமை இலை - நன்மைதீமைகளாகிய இருவினைகளும் இல்லை, ஒன்று நாடுவது இல்லை - (வினைகளைச் செய்தாராயினும்) ஒருபலத்தை நாடுவதும் இல்லை, சீலம் இலை - சமயாசாரங்கள் அனுட்டிக்க வேண்டுவதும் இல்லை, தவம் இல்லை - தவங்கள் பண்ண வேண்டுவதும் இல்லை, விரதமொடு ஆச்சிரமச் செயல் இல்லை - விரத அனுட்டானங்களும் ஆச்சிரம தருமங்களும் அனுட்டிக்க வேண்டுவதும் இல்லை, தியானம் இலை - தியான பாவனைகள் செய்ய வேண்டுவதும் இல்லை, சித்தமலம் இல்லை - சித்த சலனமும் இல்லை, கோலம் இலை - சமயத்துக்கேற்ற வேடங்கள் தரிக்க வேண்டுவதும் இல்லை, புலன் இல்லை - விடயங்களை விடுதல் பற்றுதல் வேண்டுமென்ற நியமமும் இல்லை, கரணம் இல்லை - அந்தக் கரணங்களை அடக்கவேண்டும் என்பதும் இல்லை, குணம் இல்லை - தாமத இராசத குணங்களை அடக்கிச் சத்துவகுணச் செய்கைகளைச் செய்ய வேண்டும் என்ற நியமமும் இல்லை, குறி இல்லை - ஒருகுறியின்கண்ணே நிற்க வேண்டும் என்பதும் இல்லை, குலமும் இல்லை - குலதன்மத்திலே ஒழுகவேண்டும் என்பதும் இல்லை, பாலருடன் உன்மத்தர் பிசாசர் குணம் மருவி - பாலர் போல (அறவொழிதலும்) உன்மத்தர்போல (ஒருகாற்செய்து ஒருகால் ஒழிதலும்) பேய் பிடியுண்டவர்போல(ச் செயலிழப்பின் நின்று செய்தலுமாகிய) குணங்களைப் பொருந்தி, பாடலினொடு ஆடல் இவை பயின்றிடினும் பயில்வர் - (பரமானந்தமே வீட்டாற்) பாடல் ஆடல்களாகிய தொழில்களைச் செய்திடினுஞ் செய்வர் என்க.

(பொ - ரை.) இந்த நிட்டையுடையார்க்கு விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் வேண்டாம், அவர் [1]செய்தன வெல்லாந் தவமாம் எ - ம்.

பாலர் குணம் அற ஒழிதற்கும், உன்மத்தர் குணம் ஒருகாற்செய்து ஒருகால் ஒழிதற்கும், பிசாசர் குணம் செயல் இழப்பின்நின்று செய்தற்கும் உவமையாயின ; இவ்வாறன்றி, மேல் உணவு தேடாமை முதலியவற்றிற்கு அம்மூன்றும் உவமையாயின என்பாருமுளர் ; இச்செய்யுளினெடுத்துக்கொண்ட பொருளோடு இயைபின்மையானும் [2]'பாலருன்மத்தர் பிசாசரில் எனவும் - உறங்கினேன்கை வெறும்பாக்கெனவுந் - தானே தவிராதானால்' எனப் பிறாண்டுந் தவிர்தன்மாத்திரைக்கே அவற்றை யெடுத்துக் காட்டியவாற்றானும், அஃது ஈண்டைக்கு ஏலாமை அறிக.

பாடலினொடு ஆடல் இவை பயிறல் பரமானந்த மேலீடு நோக்கி நிகழ்வது என்க. (௬௨)

தேசம்இடங் காலந்திக் காசனங்கள் இன்றிச்
செய்வதொன்று போற்செய்யாச் செயலதனைச் செய்தங்கு
ஊசல்படும் மனமின்றி யுலாவல் நிற்றல்
உறக்கம்உணர்வு உண்டிபட் டினியிருத்தல் கிடத்தல்

1. 'வந்து' பெரிய. சண்டே-௫௩. 'அவாவினை' திருக். ௩௬௭.
2. சங்கற்பநிராகரணம் - உ.

மாசதனில் தூய்மையினின் வறுமை வாழ்வின்
வருத்தத்தில் திருத்தத்தின் மைதுனத்திற் சினத்தின்
ஆசையினின் வெறுப்பின்இவை யல்லாதும் எல்லாம்
அடைந்தாலும் ஞானிகள்தாம் அரனடியை அகலார்.

(ப - ரை.) ஞானிகள்தாம் - சிவஞானிகளாவார், தேசம் இடம் காலம் திக்கு ஆசனங்கள் இன்றி ஒன்று செய்வதுபோல் செய்யாச் செயலதனைச் செய்து - ஓர்தேயம் ஓரிடம் ஒருகாலம் ஒருதிக்கு ஓர் ஆசனம் முதலிய இன்றிச் (செய்தற்கெளிய) ஒரு தொழில் செய்வதுபோற் செய்தற்கரிய செயல்களைச் செய்து, உலாவல் நிற்றல் - உலாவுதல் நிற்றல்களையும், உறக்கம் உணர்வு - உறங்குதல் விழித்தல்களையும், உண்டி பட்டினி - உண்ணுதல் உண்ணாமைகளையும், இருத்தல் கிடத்தல் - இருத்தல் கிடத்தல்களையும், மாசதனின் தூய்மையினின் - மாசுடைமை தூய்மை யுடைமைகளையும், வறுமை வாழ்வின் - நல்குரவு செல்வங்களையும், வருத்தத்தின் திருத்தத்தின் - நட்ட இன்பங்களையும், மைதுனத்தின் சினத்தின் - புணர்ச்சி கோபங்களையும், ஆசையினின் வெறுப்பின் - விருப்பு வெறுப்புக்களையும், இவை அல்லாதும் எல்லாம் அடைந்தாலும் - இவையன்றி (விகாரம் உறுதற்கு ஏதுவாகத் தம்முள் மாறுபட்ட தொழில்) பலவற்றையுஞ் செய்தாராயினும், அங்கு ஊசல்படு மனம் இன்றி அரன் அடியை அகலார் - அவ்விடத்தே (அவைபற்றி அவர்) சிறிதும் விகாரமுறுதலின்றி முதல்வன் திருவடியைவிட்டு நீங்குவாரல்லர் (உண்மையான் நோக்குவார்க்கு அவர் செய்யுஞ் செயல் வேறாகலான்) என்க.

(பொ - ரை.) விகாரம் உறுதற்கு ஏதுவாகத் தம்முள் மாறுபட்ட தொழில் பலவற்றையுஞ் செய்தாராயினும் அவை பற்றி அவர் சிறிதும் விகாரம் உறுவாரல்லர்; உண்மையான் நோக்குவார்க்கு அவர் செய்யுஞ் செயல் வேறாகலான் எ - ம்.

செய்யாச்செயலதனைச் செய்தற்கு வேறொரு நியதியும் வேண்டாம் என்பார், தேசம் இடங்காலந் திக்குஆசனங்கள் இன்றி யென்றார்.

இன்றிச்செய்வது எனவும் அடைந்தாலும் ஊசல்படும் மனமின்றி யெனவும் இயையும்.

அடைந்தாலும் என்னும் உம்மை சிறப்பின்கண் வந்தது; 'உவரி தோன்றிவாழ் தொழிலவாயினும் மயிலைதீஞ்சுவையுப்பிற் சிவணு தாங்கு' என்றாற்போல்.

இவையிரண்டு செய்யுளானும் நிட்டை மேவினோர்களது ஆசாரங் கூறப்பட்டது. (௩௩)

இந்நிலைதான் இல்லையேல் எல்லாம் ஈசன்
இடத்தினினும் ஈசனெல்லா இடத்தினினும் நின்ற
அந்நிலையை அறிந்தந்தக் கரணங்கள் அடக்கி
அறிவதொரு குறிகுருவின் அருளினல் அறிந்து

மன்னுசிவன் தனையடைந்து நின்றவன்ற னாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரம்அதனில் துரியா தீதந்
தோன்றமுயல் சிவாநுபவஞ் சுவாநுபூ திகமாம்.

(ப - ரை.) இந்நிலைதான் இல்லையேல் - இங்ஙனங் கூறிய முறையானே அகம்புறம் என்னுமல் எங்கணும் ஏக நிலையாய்க் கண்டு இறைநிறைவில் அழுந்துவதாய நிட்டை மேவுதல் அரிதாய்ப் பண்டைப் பயிற்சி வயத்தாற் சுட்டுணர்வு பற்றிப் பிரபஞ்சங் காட்சிப்பட வருமாயின், ஈசன் எல்லா இடத்தினினும் எல்லாம் ஈசன் இடத்தினினும் நின்ற அந்நிலையை அறிந்து - (அதனைக் காணும்பொழுதே) இறைவன் அதற்குள்ளாயும் புறமாயும் நிற்கு நிலைமையும் உடன்கண்டு, அந்தக்கரணங்கள் அடக்கி - (அவ்வாறு அண்டத்தின் நிற்கும் நிலை அறிதல் அரிதாயின்) மனாதிகள் அடக்கி, குருவின் அருளினால் நின்று அறிவது ஒரு குறி அறிந்து-குருவருளாற் பிண்டத்தினிற்கு நிலையுள் ஒன்றின் வைத்தறிந்து, அவன்தனாலே மன்னுசிவன்தனை அடைந்து - அது வாயிலாகப் புகுந்தாதல் நிலைபெற்ற (அவ்) வியல்பைத் தலைப்பட்டறிந்து, மருவு பசுகரணங்கள் சிவகரணமாக - ஆண்டுக் காணுங் கரணங்களெல்லாம் பேரின்பமாகப் பேணி, துன்னிய சாக்கிரம் அதனின்-(இவ்வாறு) கருவிகளோடுந் தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்தில்தானே, துரியாதீதம் தோன்ற முயல் - (கருவியொன்றனோடுங்கூடாது தொழிலிறந்து நிற்கும்) நின்மல துரியாதீதநிலை கைகூடும்படி முயல்வீர், சிவாநுபவம் சுவாநுபூதிகமாம் - (அங்ஙனம் முயன்றால்) சிவாநுபவத்தைத் தமதாகக் கொண்டு அனுபவிக்கப்பெறலாம் என்க.

(பொ - ரை.) இங்ஙனங் கூறிய முறையானே, அகம்புறம் என்னுமை எங்கணும் ஏகநிலையாய்க் கண்டு இறைநிறைவில் அழுந்துவதாகிய நிட்டை மேவுதல் அரிதாய்ப் பண்டைப்பயிற்சி வயத்தாற் சுட்டுணர்வு பற்றிப் பிரபஞ்சங் காட்சிப்படவருமாயின், அதனைக் காணும்பொழுதே இறைவனதற்குள்ளாயும் புறமாயும் நிற்குநிலையும் உடன்கண்டு, அவ்வாறு அண்டத்தின் நிற்குநிலை அறிதல் அரிதாயிற் பிண்டத்தின் நிற்குநிலையுள் ஒன்றின்வைத்தறிந்து அதுவாயிலாகப் புகுந்தாதல் அவ்வியல்பைத் தலைப்பட்டறிந்து, ஆண்டுக் காணுங் கரணங்களெல்லாம் பேரின்பமாகப் பேணி, இவ்வாறு கருவிகளோடுந் தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்தில்தானே கருவியொன்றனோடுங் கூடாது தொழில் இறந்து நிற்கும் நின்மலதுரியாதீத நிலை கைகூடும்படி முயல்வீர், சிவானுபவந் தமதாகக்கொண்டு அனுபவிக்கப் பெறலாம் எ - ம்.

அந்நிலையை அறிந்து என்றது அண்டத்தின் வைத்தறிதலையெனவும், அறிவதொருகுறி குருவினருளினால் அறிந்தென்றது அவ்வறிவிற்கேதுவாய்ப் பிண்டத்தின் வைத்தறிதலையெனவும் உணர்க.

சிவன் ஆகுபெயர்.

அகரச்சுட்டு வருவித்துரைக்க.

முயலென்பது முன்னிலையேவல்.

சிவானுபவஞ் சுவானுபூதிகமென்புழித் தொக்குநின்ற வாறுவது முறையே செயப்படுபொருண்மைக்கண்ணும் வினைமுதற் பொருண்மைக்கண்ணும் வந்த காரகம்; அமிழ்தஉண்டி கடவுளருண்டி யென்றாற்போல.

இதனானே அந்நிட்டை மேவப் பெறுதார்க்கு அது பெறும் உபாயங் கூறப்பட்டது. (கூச)

சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்
சருவசங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் இவர்கள்
பாக்கியத்தைப் பகர்வதுஎன் இம்மையிலே உயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவர் அன்றே
ஆக்குமுடி கவித்தரசாண் டவர்களரி வையரோ
டனுபவித்தங் கிருந்திடினும் அகப்பற்றற் றிருப்பர்
நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற் றாலும்
நுழைவர்பிறப் பினின்வினைகள் நுங்கி டாவே.

(ப - ரை.) சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் - (இங்ஙனம் பசுகரணஞ் சிவகரணமாகத் துன்னிய) சாக்கிரத்தின் நின்றுகொண்டு தானே (கரணங்கடந்த) அதீதத்தைப் புரிந்தார், உலகில் சருவசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்கள் - இவ்வுலகின்கண்ணே கருவிகளினீங்கி (நிட்டை மேவினாரோடு ஒப்ப)ச் சிறந்தாரேயாவர், இவர்கள் பாக்கியத்தைப் பகர்வது என் - இவர்கள் (முற்பிறவியிற் செய்த) சிவபுண்ணியப் பேற்றைச் சொல்ல ஒண்ணுமையின், இம்மையிலே உயிரின் பற்று அறுத்துப் பரத்தை அடை பராவு சிவர் அன்றே - இம்மைக்கண் உயிர்ப்பற்று நீங்கிச் சிவத்தைப்பொருந்தி (இரண்டற நிற்கையாற்) சஞ்சரிக்கின்ற சிவமேயாவர், அவர்கள் ஆக்கு முடி கவித்து அரசு ஆண்டு அரிவையரோடு அனுபவித்து அங்கு இருந்திடினும் - அவ்வுண்மை அறிந்தார் ஆக்கப்பட்ட முடியினை அணிந்து அரசாட்சி செய்து அரிவையரோடு இன்புற்றிருந்திடினும், அகப்பற்று அற்று இருப்பர் - அகப்பற்று நீக்கினவரேயாவர் (ஆகலின் உண்டு உடுத்துப் பூசி முடித்துச் செய்யுந் தொழில் ஒப்புமையே பற்றி அவரை உலகத்தாரோடுவைத்து எண்ணற்க), நோக்கி இது புரியாதோர் புறப்பற்று அற்றாலும் - ஆராய்ந்து இவ்வகப்பற்று நீங்காதோர் புறப்பற்று நீங்கினும், வினைகள் நுங்கிடாவே பிறப்பினின் நுழைவர் - வினைகள் ஏறுதலிற் பிறப்பினை அடைவர் என்க.

(பொ - ரை.) இங்ஙனம் பசுகரணஞ் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரத்தின் நின்றுகொண்டுதானே கரணங் கடந்த அதீதத்தைப் புரிந்தார், கருவிகளின்நீங்கி நிட்டைமேவினாரோடு ஒப்பச் சிறந்தாரேயாவர்; அவ்வுண்மை அறிந்தார் உண்டு உடுத்துப் பூசிமுடித்துச் செய்யுந் தொழில் ஒப்புமையே பற்றி அவரை உலகத்தாரோடு வைத்து எண்ணற்க எ - ம்.

பராவுதல் சஞ்சரித்தல்.

இதனானே அங்ஙனம் முயன்றாரது பெருமை கூறப்பட்டது.

ஞானஅதிகாரப்பட்டமை பற்றி ஈண்டுக் கேட்டலுடன் வைத்து ஒருவாற்றால் தொகுத்தோதிய இன்னோரன்னவையெல்லாம் வருகின்ற சூத்திரங்களான் விரித்துக் கூறப்படும்.

புறச்சமயநெறி யென்பது முதல் இத்துணையும் இரண்டாங் கூற்றைத் தெரித்துணர்த்தியவாறு. (௩௫)

## மூன்றுமதிகரணம்

கருவிகழிந் தாற்காணார் ஒன்றும்எனிற் காணார்
காணாதார் கன்னிகைதான் காமரதங் காணாள்
மருவிஇரு வரும்புணர வந்த இன்பம்
வாயினாற் பேசரிது மணந்தவர் தாம் உணர்வர்
உருவின்உயிர் வடிவதுவும் உணர்ந்திலர்காண் சிவனை
உணராதார் உணர்வினால் உணர்வதுகற் பனைகாண்
அருள்பெறின்அவ் விருவரையும் அறிவிறந்தங் கறிவர்
அறியாரேற் பிறப்பும்விடா தாணவமும் அறாதே.

(ப - ரை.) *மருவி இருவரும் புணர வந்த இன்பம் வாயினால் பேச அரிது - பொருந்தி இருவரும் புணரவந்த இன்பம் வாக்காற்பேசுதல் அரிதாயினும், மணந்தவர்தாம் உணர்வர் - மணந்தவர்தாம் உணர்வரன்றி, காமரதம் கன்னிகைதான் காணாள் - அக்காமரசத்தினைக் கன்னிகை அறியாள் (அதுபோல), அருள்பெறின் அவ்விருவரையும் அறிவு இறந்து அங்கு அறிவர் - திருவருளைப் பெறின் தம்மையுந் தலைவனையும் (கருவி) அறிவிறந்து அங்கே அறிவர் அன்றி, காணாதார் காணார் அறியாரேல் - அறியமாட்டாத அபக்குவர் அதனைக் காணார் தாமே அங்ஙனம் அறியாரேல் (அவர்க்கு உணர்த்தும் வாயில் இல்லை இதுநிற்க), உருவின் உயிர் வடிவதுவும் உணர்ந்திலர்காண் - (பன்னிறங்களான் மயங்கித் தன்னொளி இழந்த படிகம்போலக்) கலையாதி மண்ணந்தமாகிய உருவான் (மயங்கியே) ஆன்மசொரூபம் உணரப் பெற்றிலர், உணராதார் உணர்வினால் சிவனை உணர்வது கற்பனை காண் - அதனை யுணராத சிவசங்கிராந்தவாதிகள் அப்பெற்றித்தாகிய உருவுணர்வால் (அவ்வான்மாவுக்குள்ளாகிய) சிவபிரானையும் அறிவாம் என்றல் பாவகமாத்திரையே யாகலான், கருவி கழிந்தால் ஒன்றும் காணார் எனின் - கருவியறிவு இறந்துநின்று அருளான் அறியப்பெறார் என்னின் (ஏகதேசமாகிய கருவியுள்ளளவும் ஏகதேசக் காட்சி நீங்காமையால்), பிறப்பும் விடாது ஆணவமும் அறாதே - பிறவி யொழியாது பிறவிக்கு மூலமாகிய ஆணவமலமும் பற்றறக் கழியாது என்க.*

(பொ - ரை.) *இருவரும் புணர வந்த இன்பம் பேசரிதாயினும் மணந்தவர் தாம் உணர்வர், அக்காமரசங் கன்னிகை காணாள்; அதுபோல அருள்பெறில் அவ் விருவரையும் அறிவிறந்து அங்கு அறிவர், காணமாட்டாத அபக்குவர் அதனைக் காணார்தாமேயாகலான் அவருக்கு உணர்த்தும் வாயிலில்லை. இது நிற்க, பன்னிறங்களான் மயங்கித் தன்னொளியிழந்த படிகம் போல உருவான் மயங்கியே ஆன்மசொரூபம் உணரப்பெற்றிலர்; அதனையுணராதார் அப்பெற்றித்தாகிய உருவுணர்வால் அவ்வான்மாவுக்குள்ளாகிய சிவனையும் அறிவாம் என்றல் பாவகமாத்திரையேயாகலாற் கருவியறிவிறந்து நின்று அருளான் அறியப்*

**பெறுதார்க்கு ஏகதேசமாகிய கருவியுள்ளளவும் ஏகதேசக் காட்சி நீங்காமையாற் பிறவியொழியாது; பிறவிக்கு மூலமாகிய ஆணவ மலமும் பற்றறக் கழியாது எ - ம்.**

இஃது எடுத்துக்காட்டுவமை. ஈண்டு உருவென்றது கலையாதி மண்ணந்தமாகிய கருவிக்கூட்டத்தை. இன் ஏதுப்பொருட்கண் வந்த ஐந்தாம் உருபு.

அது பகுதிப்பொருள் விகுதி.

உணராதார் சிவனையுணர்வது என இயையும். உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. உணராதார் என்றது சிவசங்கிராந்த வாதிகளை நோக்கிக் கூறியது.

காணிரண்டுங் கட்டுரைக்கண்வந்த அசைநிலை.

இதனானே பசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரத்தைப் பெற்றார் அதன்மேலுங் கரணங்கடந்த அதீதத்தைப் புரிதற்கு அறிவு செல்லுமாறு யாங்ஙன மென்னுஞ் சிவசங்கிராந்தவாதிகளை மறுக்குமுகத்தால், ' துன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையுமறியாது துயருறுந்தொல்லுயிர்' என்ற மூன்றாங்கூறு வலியுறுத்தப்பட்டது. (௩௬)

---

## நான்காம் அதிகரணம்

பன்னிறங்கள் அவைகாட்டும் படிகம்போல் உள்ளம்
பலபுலன்கள் நிறங்காட்டும் பரிசு பார்த்திட்டு
இந்நிறங்கள் என்நிறமன் றென்று தன்தன்
எழில்நிறங்கண் டருளினால் இந்நிறத்தின் வேறாய்ப்
பொய்ந்நிறஐம் புலநிறங்கள் பொய்யெனமெய் கண்டான்
பொருந்திடுவன் சிவத்தினொடும் போதான் பின்னை
முன்நிறைநீர் சிறைமுறிய முடுகி யோடி
முந்நீர்சேர்ந் தந்நீராய்ப் பின்நீங்கா முறைபோல்.

(ப-ரை.) பல் நிறங்களவை காட்டும் படிகம்போல் - (தன்னை யடுத்த) பன்னிறங்களின் இயல்பே (தன் மாட்டுக்) காட்டி நிற்கும் (பொது இயல்புடைய) படிகம்போல, உள்ளம் பல புலன்கள் நிறம் காட்டும் பரிசு பார்த்திட்டு - ஆன்மாவும் (தன்னாற் சாரப்பட்ட) கருவி களின் இயல்பே (தன் மாட்டுக்) காட்டிநிற்குந் தனது பொது இயல்பை (முன்னர்ச்) சிந்தித்து அறிந்துகொண்டு, இந்நிறங்கள் என்நிறம் அன்று என்று தன் தன் எழில்நிறம் இந் நிறத்தின் வேறாய் அருளினால் கண்டு- (பின்னர்ப் படிகவொளி அவற்றின் வேறுளதாயினாற்போல) இப்பொது இயல்பு எனது இயல்பன்று என்று தனது சிறப்பியல்பு இவற்றின்வேறாய் (உண்டு என்பதும்) அருளான் உணர்ந்து, பொய்ந்நிற ஐம்புல நிறங்கள் பொய்யென மெய் கண்டான் - (பின்பு அங்ஙனம்) பொது இயல்பையே (தன்னியல்பாகச் செய்து நிற்கும்) அக்கருவிஞானம் பொது இயல்பே யாய் ஒழியும்படி (தன் இயல்பு விளங்குதற்கு ஏதுவாகிய) உண்மை யுணர்ந்தான், சிவத்தினொடும் பொருந்திடுவன் - (அத்தன்னியல்பின் விளங்கித் தோன்றுஞ்) சிவத்தையுறுவன், பின்னைப்போதான் - மீள (அக்கருவிக் கூட்டத்திற்) செல்வானல்லன், முன் நிறைசிறைநீர் முறிய முடுகி ஓடி முந்நீர் சேர்ந்து அந்நீராய்ப் பின் நீங்கா முறைபோல் - முன் னிறைவுற்றுச் சிறைப்பட்ட நீர் முறிந்தவழி விரைந்தோடிக் கடலின் கட்சென்று அந்நீராய் அடங்கிப் பின் மீளாதவாறு போலும் என்க.

(பொ-ரை.) தன்னையடுத்த பன்னிறங்களின் இயல்பே தன்மாட்டுக் காட்டிநிற்கும் பொது இயல்புடைய படிகம்போல, ஆன்மாவுந் தன்னாற் சாரப்பட்ட கருவிகளின் இயல்பே தன் மாட்டுக் காட்டிநிற்கும், தனது பொது இயல்பை முன்னர்ச் சிந் தித்தறிந்துகொண்டு, பின்னர், அப்படிகவொளி யவற்றின் வேறுள தாயினாற்போல, தனது சிறப்பியல்பு இவற்றின் வேறாய் உண்டு என்பதும் உணர்ந்து, பின் அங்ஙனம் பொது இயல் பையே தன்னியல்பாகச் செய்துநிற்குங் கருவிஞானம் பொது இயல்பேயாய் ஒழியும்படி தன்னியல்பு விளங்குதற்கு ஏதுவாகிய உண்மை உணர்ந்தான் அத்தன்னியல்பின் விளங்கித்தோன்றுஞ் சிவத்தையுறுவன்; மீள அக்கருவிக் கூட்டத்திற் செல்வான்

அல்லன், சிறைப்பட்டநீர் முறிந்தவழிக் கடலிற் சென்று அடங்கி மீளாதவாறு போலும் எ - ம்.

கருவிகள் அப்பெற்றிய ஆயவழி அவற்றை நீங்கி அருள்பெறுமாறு யாங்ஙனம் என்று நோதலுறுவார்க்கு உபாயங் கூறியவாறு.

சேர்தற்கு இடையீடின்மை விளக்குவார், முடுகியோடி யென்றார். ()

எங்குந்தா னென்னின்நாம் எய்த வேண்டா
எங்குமிலன் என்னின்வே றிறையும் அல்லன்
அங்கஞ்சேர் உயிர்போல்வன் என்னின் அங்கத்
தவயவங்கள் கண்போலக் காணு ஆன்மா
இங்குநாம் இயம்புந்தத் துவங்களின்வைத் தறிவ
திறைஞானந் தந்துதாள் ஈதல்சுடர் இழந்த
துங்கவிழிச் சோதியும்உட் சோதியும்பெற் றுற்போற்
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவேன் காணே.

(ப - ரை.) எங்கும் தான் என்னின் நாம் எய்த வேண்டா - உயிர் கரணங்களெல்லாம் சிவமயமேயெனின் (வேற்றுமையின்மையாற் கருவி வழிச்செல்லுஞ் சகலநிலையைக் கைவிட்டுத் திருவடியை) யாம் தலைக்கூடவேண்டாமையானும், எங்கும் இலன் என்னின் வேறு இறையும் அல்லன் - (அதுபற்றி) எல்லாஞ் (சிவமாதல்) இல்லையெனின் (எவற்றினும் வியாபகமாய் உடன் நின்று செலுத்துவதாகிய) அவனது இறைமைக்கு இழுக்காய் முடியும் ஆகலானும், அங்கஞ்சேர் உயிர் போல்வன் என்னின் - இருவகையும் இன்றிக் கலப்பினால் உடம்பின் கட் பொருந்திய உயிர்போல ஒப்ப நிற்பன் என்பது பெறப்படும் ஆக லான், அங்கத்து அவயவங்கள் கண்போலக் காணு இங்கு - உடம்பின் கண் உளவாகிய (ஐந்து இந்திரியங்களினும் உயிர் ஒப்பநிற்பினும்) ஏனைஇந்திரியங்கள் நான்கும் (ஒளியால் அவ்வான்மபோதத்தோடும் விரவிச் செய்மைக்கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியுங்) கண் இந்திரியம்போல வியாபித்தறியமாட்டா (வாய்த் தம்மாட்டு வந்த விட யங்களை நின்றாங்கு நின்று இயைந்து அறிவனவேயாம் அன்றே) அது போல, ஆன்மா நாம் இயம்புந் தத்துவங்களின் வைத்து அறிவது - ஆன்மாவினும் நீ இயம்புந் தத்துவங்களினும் வைத்துப் பார்த்து (வேற் றுமை) அறிந்துகொள்ளப்படும், இறை ஞானம் தந்து தாள் ஈதல் - (ஆகலான் அப்பெற்றித்தாகிய உயிர் அப்பெற்றித்தாகிய கருவி ஞானத் தைக் கைவிட்டு) இறை ஞானந் தந்து திருவடிகளை ஈயப்பெறுதல், சுடர் இழந்த துங்க விழிச் சோதியும் உட்சோதியும் பெற்றாற்போல் - ஒளியிழந்த கண் மாசு நீங்கியவழித் தன்னொளியையும் (தனக்கு உள் ளொளியாய் நின்று செலுத்தும்) ஆன்மபோதத்தையும் (ஒருங்கே பெற் றாற்போலும் ஆகலின், சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவேன் காணே - (அவ்வழி இறைவன்) ஆன்மாவின் அறிவுக்கறிவாய்த் தோன் றுவான் (அன்றி ஏகதேசமாகிய ஏனைக் கருவி யறிவுக்குள் அறிவாய்த் தோன்றுவான் அல்லன்) என்க.

(பொ - ரை.) உயிர் கரணங்களெல்லாஞ் சிவமயமேயெனின் வேற்றுமையின்மையாற் கருவிவழிச் செல்லுஞ் சகல நிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக்கூட வேண்டாமையானும், அது பற்றி யெல்லாஞ் சிவமாதலில்லை யெனின் எவற்றினும் வியாபகமாய் உடன்னின்று செலுத்துவதாகிய அவனது இறைமைக்கு இழுக்காய் முடியும் ஆகலானும், இருவகையும் இன்றிக் கலப்பினால் உடம்பின்கண் உயிர்போல ஒப்பநிற்பன் என்பது பெறப்படும் ஆகலான், உடம்பின்கண் உளவாகிய ஐந்து இந்திரியங்களினும் உயிர் ஒப்ப நிற்பினும் ஏனைஇந்திரியங்கள் நான்கும் ஒளியால் அவ்வான்மபோதத்தோடும் விரவிச் சேய்மைக்கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியுங் கண்ணிந்திரியம்போல வியாபித்து அறியமாட்டாவாய்த் தம்மாட்டு வந்த விடயங்களை நின்றாங்கு நின்று இயைந்தறிவனவேயாம் அன்றே, அதுபோல ஆன்மாவினுந் தத்துவங்களினும் வைத்துப் பார்த்து வேற்றுமையறிந்து கொள்ளப்படுமாகலான், அப்பெற்றித்தாகிய உயிர் அப்பெற்றித்தாகிய கருவி ஞானத்தைக் கைவிட்டு இறைஞானந் தந்து திருவடிகளை ஈயப்பெறுதல், ஒளியிழந்த கண் மாசு நீங்கியவழித் தன்னொளியையுந் தனக்கு உள்ளொளியாய் நின்று செலுத்தும் ஆன்மபோதத்தையும் ஒருங்கே பெற்றாற்போலும் ஆகலின், அவ்வழி இறைவன் ஆன்மாவின் அறிவுக் கறிவாய்த் தோன்றுவான்அன்றி ஏகதேசமாகிய ஏனைக் கருவியறிவுக்குள் அறிவாய்த் தோன்றுவான் அல்லன் எ - ம்.

இறைவன் ஒப்ப நிற்பினும் ஏகதேசப்பொருள் ஏகதேசப்பொருளே வியாபகப்பொருள் வியாபகப்பொருளே யென்பர், உவமை யெடுத்துக் காட்டி ஆன்மாவினும் நாம் இயம்புந் தத்துவங்களினும் இங்கு வைத்தறிவதென்றார்.

நாம் என்னும் உளப்பாட்டுத் தன்மை "நாம் அரை யாமத் தென்னோ வந்துவைகி நயந்ததுவே'[1] என்றாற்போல ஈண்டிழித்தற் குறிப்புத்தோன்ற முன்னிலைக்கண் வந்தது.

அறிவதென்றது வியங்கோள்,[2] 'கொள்ளப்படாது மறப்பது' என்பதுபோல.

இங்கு என்பது உவம உருபு தோன்ற நின்றது.

ஈதல் ஆகுபெயர்.

இழந்த என்னும் அன் பெறாத அகரஈற்றுப் பலஅறிசொல் விழிகளை யுணர்த்திப் பெற்றாற்போல் என்னும் பயனிலைகொண்டது.

மாசுநீக்கந் தோன்றத் துங்கவிழிச் சோதியென்றார்.

யாண்டும் ஒப்பநிற்குஞ் சிவத்தினோடும் பொருந்தினவன் மீளினும் அதுபற்றி இழுக்கு என்னை யென்னுஞ் சிவாத்துவித சைவரை நோக்கி

1. 'காமரை' திருக்கோவையார், கசுஅ. 2. 'உள்ளப்' ஷை., அஎ.

ஒப்ப நிற்கும் வழியும் வேற்றுமை யுண்டு என்பது உவமை முகத்தான் இனிது விளக்கிப் 'போதான் பின்னே' (சூத். அ., செ. ௩௭.) யென்ற தனை வலியுறுத்தியவாறு. (௩௮)

பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் பரக்கும்
ஆசுபடும் மலமாயை யருங்கன்மம் அனைத்தும்
அரனடியை யுணரும்போ தகலும்பின் அணுகும்
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி
ஆசையொடும் அங்கும்இங்கும் ஆகியல மருவோர்
அரும்பாசம் அறுக்கும்வகை அருளின்வழி உரைப்பாம்.

(ப - ரை.) நேசமொடும் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும் நினைவுடையோர் - இடையறாத அன்போடு சிவத்தைப் பொருந்தி அதீதத்தையடையும் இச்சையுடையோர், நிலை அதுவேயாகி நின்றிடுவர் - அச்சுத்தாவத்தை நிலையேயாய் நிற்பர் (ஒரோவழி), படு குட்டத்தில் கல்லினை விட்டெறியப்படும்பொழுது நீங்கி அது விடும்பொழுதில் பரக்கும் பாசி - பொருந்திய தடாகத்திற் கல்லெறியும்போது நீங்கி அஃதில்லாத பொழுது பரக்கும் (அந்நீர்ப்) பாசிபோல, ஆசுபடு மலம் மாயை அருங்கன்மம் அனைத்தும் அரன் அடியை உணரும்போது அகலும் பின் அணுகும் - குற்றம்பொருந்திய மலமும் மாயையும் பெரிய கன்மமுமாகிய வெல்லாம் சிவத்தை உணரும்போது நீங்கி (அதனை யுணராத அற்றம் பார்த்து வந்து தலைப்படுதலாகிய) மீட்சிவருமாயின் (அது வாதனைபற்றி நிகழ்வதாகலின்), ஆசையொடும் அங்கும் இங்குமாகி அலமருவோர் அரும்பாசம் அறுக்கும் வகை அருளின் வழி உரைப்பாம் - (அங்ஙனம்) விருப்பத்தோடு சிவத்தின்மாட்டும் கருவிகளின்மாட்டும் மீண்டு சுழல்வோர் (அதற்கேதுவாகிய) பெரிய மலவாதனையைப் போக்கும்வண்ணம் அருளுபாயத்தை முன்னர்க் கூறுவாம் (அதனைக் கடைப்பிடித்துச் செய்து அவ்வாதனை நீக்கிக் கோடற்பாற்று) என்க.

(பொ - ரை.) சிவத்தைப் பொருந்தியவன் ஒரோவழிக் கருவிகளின் மீளவருமாயின் அது நீர்ப்பாசிபோல அற்றம் பார்த்து வந்து தலைப்படும் வாதனைபற்றி நிகழ்வதாகலின், அவ்வாதனை முன்னர்க் கூறப்படும் உபாயத்தைக் கடைப்பிடித்துச் செய்து நீக்கிக்கோடற்பாற்று எ - ம்.

இவை மூன்றுசெய்யுளானும் அவரின்நீக்கி மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன் என்ற நாலாங்கூற்றுப் பொருள் வலியுறுத்தப் பட்டது. (௩௯)

**எட்டாஞ் சூத்திரம் முடிந்தது.**

**ஆகத்திருவிருத்தம் - ௨௯௧.**

# ஒன்பதாஞ் சூத்திரம்

மேலைச் சூத்திரத்தாற் பேறு முதலியவற்றை உணர்ந்தானுக்கு அப்பேறு பயப்பதாகிய சாதனஞ்செய்யுமாறு வகுத்துக் கூறுதற்கு எழுந்தது ஒன்பதாஞ் சூத்திரம்.

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தே ராம்என்
றறிந்தகல அந்நிலையே யாகும் பின்னும்
ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படிஉச் சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலாம் ஓட.

(ப - ரை.) பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்ப அரிய பரம்பரனை - (மேற்கூறிய வாற்றால்) ஏனைப் பாசஞான பசுஞானங் களாகிய இருவகை ஞானங்களாலும் எய்துதற்கரியனுய பரம்பரனை, பதிஞானத்தாலே உள்ளத்தே நாடி - அவனது திருவடிஞானம் ஒன்றானே தன்னறிவின்கண் வைத்து ஆராய்ந்து, நேசமொடும் பாதநீழற் கீழ் நில்லாதே நீங்கிப் போதின் - நேசமொடுந் திருவடி நிழலின்கீழ் நீங் காதே தாங்கப் பெறுதவழி, ஆசை தரும் உலகமெலாம் அலகைத்தேரா மென்று அறிந்து அகல - பற்றுச் செய்தற்கேதுவாகிய எத்திறப்பட்ட பிரபஞ்சமும் (நின்றுழி நில்லாது பெயருங்) கானல்தேரின் இயல்பின வாகக் கண்டு கழிப்பவே, அந்நிலையே ஆகும் - (அத்திருவடிஞானம் விளங்கி) அந்நிலை கைகூடப்பெறும், பின்னும் உள்ளத்தே புகுந்து அளிப்பன் ஊனமெலாம் ஓட - அதன்பின்னும் அவ்வாறு உளத்தே ஞானத்தை விளக்கி ஞேயமாகிய தன்னை அளிப்பன் ஆதலாற் பாசம் முற்றும் நீங்கி வாதனைபற்றிச் சலியாமைப் பொருட்டு, ஓசைதரும் அஞ் செழுத்தை விதிப்படி உச்சரிக்க - அப்பொருள் பயக்குந் திருவஞ் செழுத்தை அவ்விதிப்படி (யறிந்து) உச்சரிக்க என்க.

(பொ - ரை) மேற்கூறியவற்றான் ஏனைஇருவகை ஞானங்களானும் எய்துதற்கு அரியனுகிய பரம்பரனை அவனது திருவடி ஞானம் ஒன்றானே தன்னறிவின்கண் வைத்து ஆராய்ந்து, நேச மொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தாங்கப்பெறுதவழிப் பற்றுச் செய்தற்கு ஏதுவாகிய எத்திறப்பட்ட பிரபஞ்சமும் நின்றுழி நில்லாது பெயருங் கானல்தேரின் இயல்பினவாகக் கண்டு கழிப்பவே, அத் திருவடிஞானம் விளங்கி அந்நிலை கைகூடப் பெறும். அதன்பின்னும் அவ்வாறு பாசத்தை ஒருவி ஞானத்

தைப் பெற்று ஞேயத்தைக் கண்ட காட்சி ஒரோவழி வாதனை பற்றிச் சலியாமைப்பொருட்டு, அப்பொருள் பயக்குந் திருவஞ் செழுத்தை அவ்விதிப்படி யறிந்து உச்சரிக்க எ - ம்.

ஈண்டு ஊனம் என்றது வாதனுமலத்தை.

நில்லாதே நீங்கிப் போதின்எனவே, அவ்வாறு நிற்றலும் அனுவாத முகத்தான் ஈண்டு விதிக்கப்பட்டதாயிற்று.

ஆகவே, இச்செய்யுள் முதனூல் ஒன்பதாஞ் சூத்திரம்போல முக் கூற்றதாயவாறு கண்டுகொள்க. (க)

---

## முதலதிகரணம்

வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா தித்திறங்கள் மேலாம்
நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்
நணுகிஆன் மாஇவைகீழ் நாட லாலே
காதலினுன் நான்பிரமம் என்னும் ஞானங்
கருதுபசு ஞானம்இவ னுடலிற் கட்டுண்
டோதியுணர்ந் தோன்றோன்று வுணர்ந்திடலாற் பசுவாம்
ஒன்றாகச் சிவனியல்பின் உணர்ந்திடுவன் காணே.

(ப - ரை.) பாசஞானம் - (மேற்கூறிப்போந்த மூவகை ஞானங்களுட்) பாசஞானமாவது, - வைகரி ஆதித்திறங்கள் வேதம் சாத்திரம் மிருதி புராணம் கலைஞானம் விரும்பு அசபை - வைகரிமுதலிய நால்வகை வாக்கின்பகுதியவாகிய வேதங்களும் சாத்திரங்களும் மிருதிகளும் புராணங்களும் மற்றக் கலைஞானங்களும் விரும்புகின்ற அசபையும் (ஆகிய சொற்பிரபஞ்சமும்), - மேலாம் நாதமுடிவான வெல்லாம் - (நிலமுதல்) மேலாகிய நாதமீறாகிய (பொருட்பிரபஞ்சமும் என்னும்) இவை (பற்றி நிகழும் ஏகதேசஞானம் அனைத்துமாம்), கருது பசுஞானம் - கருதுகின்ற ஏனைப் பசுஞானமாவது, நணுகி (ய) ஆன்மா இவைகீழ் நாடலாலே - (இவற்றைப்) பொருந்திய ஆன்மா இவையனைத்துந் தன் கீழ் வியாப்பியம் என்று அறி(ந்து நீங்கித் தான் அவற்றிற்குமேற்படு) தலான், காதலினுன் நான் பிரம மென்னும் ஞானம் - (அங்ஙனம் அதுபற்றி நிகழ்வதோர்) செருக்கால் (அநாதி முத்தனைப்போல முத்தனாகிய) யானும் (அவ்வாறு) பிரமமாவேன் எனச் (சடிதியின் மதிக்க வருவதோர்) சிவசமவாதஞானமாம் (அற்றேல் அறிந்து நீங்குதலின் வேற்றுமையின்மையிற் பசுவைச் சமப்பிரம மென்றற் கிழுக்கென்னை யெனின்), இவன் உடலில் கட்டுண்டு - இவ்வான்மாத் தூல சூக்கும பரதேகங்களாற் கட்டுண்டும், ஓதி உணர்ந்து - நூலுணர்வான் உணர்த்தவுணர்ந்தும், ஒன்று ஒன்றா உணர்ந்திடலால் - ஒவ்வோர் இந்திரியங்களினால் ஒவ்வொரு விடயங்களை யுணர்(ந்தும் இடையே நீங்கு)தலான், பசு ஆம் - அப்பசு (ஆதிமுத்த)னும், சிவன் - பதி, இயல்பின் ஒன்றாக உணர்ந்திடுவன் காணே - (ஒருவன் உணர்த்த உணர்தலின்றித்) தானே முழுதும் அறிந்தாங்கு அறி(ந்து அநாதியே நீங்கிய பேரறிவ)னாகலின் (அநாதிமுத்தனும்) இவ் வேறுபாட்டைத் தெற்றென வுணர்க என்க.

(பொ - ரை.) மேற்கூறிப்போந்த மூவகைஞானங்களுட் பாசஞானமாவது நாலவகைவாக்கின் பகுதியவாகிய வேதம் முதலிய சொற்பிரபஞ்சமும் நிலம்முதல் நாதமீறாகிய பொருட் பிரபஞ்சமும் என்னும் இவைபற்றி நிகழும் ஏகதேச ஞானமனைத்தும் எனவும், ஏனைப்பசுஞானமாவது இவற்றைப் பொருந்திய ஆன்மா இவையனைத்துந் தன்கீழ் வியாப்பியம் என்று

அறிந்து நீங்கித் தான்அவற்றிற்கு மேற்படுதலான் அங்ஙனம் அதுபற்றி நிகழ்வதோர் செருக்கால் அநாதிமுத்தனைப்போல முத்தனாகிய யானும்அவ்வாறு பிரமமாவேனெனச் சடிதியின் மதிக்க வருவதோர் சிவசமவாத ஞானமெனவும் உணர்க எ-ம்.

ஞானவேற்றுமை தெரித்துக் கூறியவாறு. அற்றேல், அறிந்து நீங்குதலின் வேற்றுமை யின்மையாற் சமப்பிரமமென்றற்கு இழுக் கென்னையென்னும் ஆசங்கை நீக்குதற்பொருட்டு அநாதிமுத்தனோடு ஆதிமுத்தனிடையறிந்து நீங்குதலின் வேற்றுமைபெரிதாதல் காட்டு வார், 'இவனுடலிற்கட்டுண்டு ஓதியுணர்ந்து ஒன்றொன்று உணர்ந்திட லாற் பசுவாம் ஒன்றாகச் சிவனியல்பின் உணர்ந்திடுவன்காணே' யென்றார். பசுத்துவநீங்கியவழியும் அவ்வாறு மதித்தல் பசுத்துவ வாதனை பற்றியாகலான் அது பசுஞானமேயாம் என்பது, நான் பிரமம் என்னும் ஞானம் ஏகான்மவாதம்பற்றி நிகழுஞானமெனினுமாம்.

நாடலாலெனவும் உணர்ந்திடலாலெனவும் உணர்ந்திடுவனென வுங் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். நாதம்முடிவான எல்லாம் என்றதும் அது.

நணுகிய என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக் கது; 'தகுவரியன்பு' என்றாற்போல.

'ஒன்றாகச் சிவனியல்பி னுணர்ந்திடுவன்காணே' யென்றதனாற் பதிஞானத்தியல்பு இதுவென்பதூஉம் பெறப்பட்டது.

அஃதங்ஙனமாக வைகரியாதித் திறங்களெல்லாம் பாசஞான மெனக் கழிப்பின் வைகரியாதித்திறத்துட்பட்ட ஞானநூல்தனை ஓதல் ஓதுவித்தல் முதலியன ஞானபூசையென மேற்கூறியது போலியாய் முடியும் போலுமெனின், முடியாது; பதிஞானம் விளங்குதற்கு ஏதுவா முகத்தாற் பயன்படுதலுடைமையின். (உ)

கரணங்கள் கெடஇருக்கை முத்தியாம் என்னிற்
கதியாகுஞ் சிலைமுட்டை கருமரத்தின் உயிர்கள்
மரணங்கோண் டிடஉறங்க மயங்கிமூர்ச் சிக்க
வாயுத்தம் பனைபண்ண வல்விடத்தை யடையச்
சரணங்கள் புகுநிழல்போல் தனையடையுஞ் சமாதி
தவிராது மலம்இதுவும் பசுஞான மாகும்
அரணங்கள் எரித்தவன்தன் அடியையறி விறந்தங்
கறிந்திடீர் செறிந்ததுகள் அகற்றி டீரே.

(ப-ரை.) கரணங்கள் கெட இருக்கை முத்தியாம் என்னின் - (அங்ஙனம் நான் பிரமம் என நிகழும் ஞானமேயன்றி) ஆன்மா இவை கீழ்நாடி நீங்குதன் மாத்திரையே முத்தியென்னின், சிலைமுட்டை கரு மரத்தின் உயிர்கள் (மருவக்)கதி ஆகும் - சிலையினும் முட்டையினும் கருப்பாசயத்தினும் மரத்தினும் உயிர்கள் பொருந்த முத்தியாதல் வேண்டும் (அங்ஙனம் இன்மையின்), (இதுவும்) - (அச்சிவசமவாத

ஞானத்திற்கு முன்னுக நிகழும்) இப்பாடாணவாதஞானமும், கரணங்கள் புகும்நிழல்போல் தனை அடையும் சமாதி (முத்தியாம் என்னின்) - (சேய்மைக்கட்சென்ற) ஒருவன்நிழல் (உச்சிப்போதின்கண் அங்ஙனஞ் சேறல் ஒழிந்து அவன்) அடியில் வந்து ஒடுங்கினாற்போல(க்கரணங்களிற் சென்ற தன்னறிவு பக்குவம் வந்துழி அங்ஙனஞ் சேறல் ஒழிந்து) தன்மாட்டு வந்தொன்றி நிராதாரமாய் நிற்கும் அதுவே முத்தியெனின், மரணங்கொண்டிட உறங்க மயங்கி மூர்ச்சிக்க வாயுத்தம்பனை பண்ண வல்விடத்தை அடைய(க்கதி ஆகும்) - மரணமாகிய பத்தாம் அவத்தை அடைந்த இடத்தும் உறங்கிய இடத்தும் மயக்கமுற்று மூர்ச்சித்த விடத்தும் பிராணவாயு இயங்காமல் தம்பித்த இடத்தும் கொடிய நஞ்சம் பொருந்திய இடத்தும் முத்தியாதல்வேண்டும் (அங்ஙனம் இன்மையின்), இதுவும் -(பாடாணவாத ஞானத்தின்பின்னுக நிகழும்) இப்பேதவாத ஞானமும் (என்னும் இவையும்), பசுஞானங்களாம், - அறிவு இறந்து அங்கு அரணங்கள் எரித்தவன்றன் அடியை அறிந்திடீர் - (ஆதலால்) சிவஞானத்தான் முப்புரங்களைத் தகித்த சிவபிரானை(யுந் தம்மையும்) அறியப்பெறுமின், செறிந்த துகள் அகற்றிடீரே - (அறிந்து உம்மைப்) பந்தித்த மலத்தை நீக்குமின், மலம் தவிராது - (மேற்கூறிய பசுஞானங்கட் கேதுவாகிய) பசுத்துவ வாதனை (இச் சிவஞானமுடையார்க்கன்றி) நீங்காது என்க.

(பொ - ரை.) அங்ஙனம் நான் பிரமம் என நிகழுஞானமேயன்றி ஆன்மா இவை கீழ்நாடி நீங்குதன் மாத்திரையே முத்தியாதல் அமையும் என அதற்கு முன்னுக நிகழும் பாடாணவாத ஞானமும், சேய்மைக்கட் சென்ற ஒருவன்நிழல் உச்சிப்போதின்கண் அங்ஙனஞ் சேறல் ஒழிந்து அவனடியுள் வந்தொடுங்கினாற் போலக் கரணங்களிற் சென்ற தன்னறிவு பக்குவம் வந்துழியங்ஙனஞ் சேறல் ஒழிந்து தன்மாட்டு வந்து ஒன்றி நிராதாரமாய் நிற்கும் அதுவே முத்தியாதல் அமையும் எனப் பாடாணவாத ஞானத்தின் பின்னுக நிகழும் பேதவாத ஞானமும் என்னும் இவையும் பசுஞானமாம். இவ்வாறு நிகழும் பசுஞானங்களுக்கு ஏதுவாகிய பசுத்துவ வாதனை இவற்றைக் கைவிட்டுச் சிவஞானத்தாற் சிவனையுந் தம்மையும் அறியப் பெற்றார்க்கன்றி நீங்காது எ - ம்.

இதுவும் உம்மை இறந்தது தழீஇயிற்று.

கதியாகுமென்றது செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சங்களோடு தனித்தனி சென்றியையும்.

சினைமுட்டை கருமரத்தினுயிர்கண் மருவ என்றுரைக்க. மருவ என்பது சொல்லெச்சம்.

முத்தியாம் என்னின் என்பதனைத் தனையடையுஞ் சமாதியென்பதனோடுங் கூட்டுக. ஞாயிற்றைக் காணப்பெறுதார்க்கு இருள்நீங்காதவாறுபோலத் தனையடையுஞ் சமாதி முத்தியென்பார் சிவனையறியப் பெறுமையின், அவர்க்கு மலந் தவிராதாயிற்றென்பது.

கதியாகும் எனவுந் தவிராது மலம் எனவும் ஈண்டுக் கூறியது, மேலைச்செய்யுளின் உணர்ந்திடலாற் பசுவாம் ஒன்ருகச் சிவன் இயல்பின் உணர்ந்திடுவன் என்ருற்போல ஆசங்கை நீக்கி அவை பசு ஞானமாதலை வலியுறுத்தற்பொருட்டு. (ஙு)

சிவனையவன் திருவடிஞா னத்தாற் சேரச்
 செப்புவது செயல்வாக்குச் சிந்தை யெல்லாம்
அவனையணு காஎன்றும் ஆத லானும்
 அவனடியவ் வொளிஞானம் ஆத லானும்
இவனுமியான் துவக்குதிரம் இறைச்சி மேதை
 என்புமச்சை சுக்கிலமோ இந்திரியக் கோத்தோ
அவமகல எனையறியேன் எனும்ஐயம் அகல
 அடிகாட்டி ஆன்மாவைக் காட்ட லானும்.

(ப - ரை.) சிந்தை வாக்குச் செயல் எல்லாம் - (ஈண்டுக் கூறிப் போந்த ஞானங்களுள்) மனவாக்குக்காயம் ஆகிய முப்பொறி முதலியன, அவனை என்றும் அணுகா ஆதலானும் - அவனை எஞ்ஞான்றும் அணுகாமையான் (அவைபற்றி ஏகதேசமாய் நிகழுஞ் சுட்டுணர்வாகிய பாச ஞானத்திற்)கும், இவனும் - இவ்வான்மாவும், யான் துவக்கு உதிரம் இறைச்சி மேதை என்பு மச்சை சுக்கிலமோ இந்திரியக் கொத்தோ - யான் தோல் இரத்தம் தசை மேதை அத்தி மச்சை சுக்கிலம் இந்திரியக் கூட்ட முதலியவோ என (ப் பலதலைப்பட்டு), அவம் அகல எனை அறியேன் எனும் ஐயம் ஆதலானும் - குற்ற மகல எனது சொரூபத்தையே அறியமாட்டேனென்னும், ஐயமுற்று நிற்றலான் (அங்ஙனம் நிற்கும் பசுஞானத்திற்)கும், அகல அவ்வொளி அடி காட்டி ஆன்மாவைக் காட்டலானும் அவன் அடிஞானம் - அவ் (ஐயம்) நீங்கித் தானே தன்னையும் விளக்கி ஆன்மாவையும் விளக்கித் தற்பிரகாசமும் பரப்பிரகாசமுமாய் நின்று (எல்லாப் பொருளையும் இனிது விளக்குவதாகிய) பதிஞானம் (போல விளக்கும் ஆற்றல் செல்லாமையா)னும், அவன் திருவடி ஞானத்தால் - அப்பெற்றித்தாகிய பதி ஞானம் ஒன்ருனே, சிவனைச் சேரச் செப்புவது - பதிப்பொருளை அங்ஙனம் அறியற்பாற்றென மேற்கொண்டது என்க.

(பொ - ரை.) ஈண்டுக் கூறிப்போந்த ஞானங்களுள் முப்பொறி முதலியனபற்றி ஏகதேசமாய் நிகழுஞ் சுட்டுணர்வாகிய பாசஞானத்திற்கும் தற்சொரூபமே அறியமாட்டாது பலதலைப்பட்டு ஐயுற்று நிற்பதாகிய பசுஞானத்திற்கும் தானே தற்பிரகாசமும் பரப்பிரகாசமுமாய் எல்லாப் பொருளையும் இனிது விளக்குவதாகிய பதிஞானம்போல, விளக்கும் ஆற்றல் செல்லாமையால் அப்பெற்றித்தாகிய பதிஞானம் ஒன்ருனே பதிப்பொருளை அங்ஙனம் அறியற்பாற்று என மேற்கொண்டது. எ - ம்.

சிவஞானத்தாலன்றி அறியப்படாமைக்கு ஏதுக்காட்டியவாறு. (சு)

கண்டிடுங்கண் தனைக்காணு கரணங் காணு
  கரணங்கள் தமைக்காணு உயிருங் காணு
உண்டியமர் உயிர்தானுந் தன்னைக் காணு
  துயிர்க்குயிராம் ஒருவனையுங் காணு தாகுங்
கண்டசிவன் தனைக்காட்டி உயிருங் காட்டிக்
  கண்ணுகிக் கரணங்கள் காணுமல் நிற்பன்
கொண்டரனை உளத்திற்கண் டடிகூடிற் பாசங்
  கூடாது கூடிடினுங் குறித்தடியின் நிறுத்தே.

(ப - ரை) கண்டிடும் கண் தனைக் காணு கரணம் காணு - பரப்பிரகாசமாய் நிற்கின்ற கண்ணனது தன்னியல்பையுங் காணமாட்டாது (தனக்கு முதலாகிய) அந்தக்கரணங்களையுங் காணமாட்டாது, (கண்டிடும்) கரணங்கள் தமைக்காணு உயிரும் காணு - பரப்பிரகாசமாய் நிற்கின்ற புத்திமுதலிய புறக்கரணமும் வித்தியாதத்துவமாகிய அகக்கரணமும் தம்மியல்பையுங் காணமாட்டா (தமக்கு விடயங்களைக்காட்டி முதலாய் நிற்கும்) உயிரையுங் காணமாட்டா (அவைபோல), உண்டி அமர் உயிர்தானும் தன்னைக் காணுது உயிர்க்கு உயிராம் ஒருவனையும் காணுதாகும் - பரப்பிரகாசமாய் நிற்கின்ற ஆன்மாவும் தன்னியல்பையும் அறியமாட்டாது தனக்குயிரா யுணர்த்திநிற்கும் முதல்வனையுங் காணமாட்டாதாகலின், தனைக்காட்டி உயிரும் காட்டிக் கண்டசிவன் - தற்சொரூபத்தையும் விளக்கி ஆன்மசொரூபத்தையும் விளங்கச்செய்து (தனக்கொரு காட்டின்றி) அறிந்தாங்கு அறிந்து (தற்பிரகாசமும் பரப்பிரகாசமுமாய் நிற்குஞ்) சிவஞானம், கண்ணுகிக் கரணங்கள் காணுமல் நிற்பன் - காட்டாகித் (தனக்கொரு) கரணங்கள் வேண்டாது நிற்குமாகலின், கொண்டு அரனை உளத்தில் கண்டு - (அச்சிவஞானத்தைக் காட்டாகக்) கொண்டு முதல்வனை அவ்வறிவினிற் காணப்பெற்று, அடிகூடின் பாசம் கூடாது - திருவடியைத் தலைக்கூடிற் பாசம் நீங்கும், கூடிடினும் குறித்து அடியின் நிறுத்தே - (நீங்காது) கலந்திடினும் சிவபாவனையை விடாது செய்து சிவபிரானை அவன் திருவடிஞானத்தாற் சேரலே பொருத்தமுடைத்து என்க.

(பொ - ரை.) பாசபசுஞானங்கள் பரப்பிரகாசமாய் நிற்பினுந் தற்பிரகாசமாய் நிற்றல் செல்லாது என்பது கண்மேல் வைத்து அறியக் கிடத்தலானும் ஏனைப் பதிஞானத்திற்குத் தற்பிரகாசமாய் நிற்றலுஞ் செல்லுமென்பது தானவ்விரண்டற்குங் காட்டாய்த் தனக்கொரு காட்டு வேண்டாது நிற்றல்பற்றி அறியப்படுதலானும், சிவனை அவன் திருவடி ஞானத்தாற் சேரலே பொருத்தம் உடைத்து எ - ம்.

மேலதற்குத் [1]தரிசனங் காட்டியவாறு.

காணுது என்னுந் துவ்வீறு விகாரத்தால் தொக்கது.

கண்டிடும் என்பதனைக் கரணங்களென்பதனோடுங் கூட்டுக. கண்டிடுதல் ஈண்டுப் பரப்பிரகாசமாதன் மேற்று. உண்டியமர்தலும் அது.

1. உதாரணம்.

எடுத்துக்காட்டுவமை.

தனைக்காட்டி உயிருங்காட்டிக் கண்டசிவன் என இயையும்.

காட்டிக்கண்ட சிவன் என்றது அனுவாதம்.

கண்ணுகி யென்பது காட்டாகி யென்றவாறு; [1]சொன்ன சிவன் கண்ணு என்ருற்போல.

கரணங்களாற் காணுமல் என மூன்ருவது விரித்துரைக்க.

கரணங்களெனவும் உயிரெனவும் அவ்வப்பொருண்மேல் வைத்து உபசரித்தார்.

இரண்டாங் கூற்றுக்குத் தோற்றுவாய் செய்வார், பாசங்கூடாது கூடிடினுங் குறித்தடியின் நிறுத்தேயென்ருர்.

இவை நான்குசெய்யுளானும் முதற்கூற்றின் பொருள் விளக்கப் பட்டது. (ரு)

---

1. சிவஞானபோதம் சூ. ரு, அதி. உ. மன்னு சிவன்.

## இரண்டாம் அதிகரணம்

குறித்தடியின் நின்றட்ட குணம்எட்டுச் சித்தி
கோகநதன் முதல்வாழ்வு குலவுபதம் எல்லாம்
வெறுத்துநெறி யறுவகையும் மேலோடுகீழ் அடங்க
வெறும்பொய்என நினைந்திருக்க மேலோடுகீழ் இல்லான்
நிறுத்துவதோர் குணம்இல்லான் தன்னைஒரு வர்க்கும்
நினைப்பரியான் ஒன்றும்இலான் நேர்படவந் துள்ளே
பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே
புகுந்திடுவேன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே.

(ப - ரை.) அடியில் குறித்து நின்று - (குருவின் அருளால் அறிவதொரு) குறியின்கண் உறைத்துநின்றுகொண்டு, அட்டகுணம் எட்டுச் சித்தி - (பைசாசபதத்தின் அட்டமாசித்தியை நோக்கி) எண்மடங்கேற்றமாகிய அட்டசித்தியையுடைய, கோகநதன் முதல் வாழ்வு குலவு பதம் எல்லாம் வெறுத்து - பிரமபதம் முதலிய திப்பியமகளிரும் அதிவிசித்திரமாகிய மாடமும் மாளிகையும் முதலிய போக்கியப் பொருட் சிறப்புக்களான் அழகு பெற்ற பதங்களையுடைய (காலாக்கினி புவன முதல் அனுசிருத புவனம் ஈறுயுள்ள) எவ்வகைப்பட்ட புவனமும் (இதற்குமுன் அனுபவித்துக் கழித்தமையிற் கான்ற சோறு எனக் கண்டு) அருவருத்துவிட்டு, அறுவகை நெறியும் மேலொடு கீழ் அடங்க வெறும் பொய்யென நினைந்து இருக்க - அறுவகை அத்துவாவுட்பட்ட (மூவகைப் பிரபஞ்ச)மும் காரணரூபத்திற் சிறிதுங் காணப்படாமையாற் (பித்திகைவடிவங் காண்பார்க்குக் காணப்படாதாய் அதன்கண் மறைந்த சித்திரவடிவம் போல) முழுப்பொய்யெனக் கண்டு (அவ்வாறு கண்ட காட்சி) சலியாதிருக்கப்பெறின், மேலொடு கீழ் இல்லான் - மேலொடு கீழ் இல்லாதாகியும், நிறுத்துவதோர் குணம் இல்லான் - குறித்தறிவதொருகுணம் இல்லாதாகியும், தன்னை ஒருவர்க்கும் நினைப்ப அரியான் - தான் ஒருவரானும் உணரப்படாதாகியும், ஒன்றும் இலான் - ஒருபற்றும் இலா (தாகியும் உள்ள அப்பிரபஞ்சத்திற்கு விலக்கணமான) ஞானசொரூபம், உள்ளே வந்து நேர்பட - அவ்வறிவின்கண் இனிது விளங்கித்தோன்றும் தோன்றவே, பொறுப்ப அரியபேரன்பை அருளி - (வறியார்க்கு நிதி வாய்த்துழிப்போல அதன்கட்) பொறுத்தற்கரிய பெருங்காதல் மீதூரும் அது மீதூரவே, அவன் வழியே ([1] 'இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம் - அன்பின் நிலையே யது' ஆகலான்) அவ்வன்பின்வழியே, எங்கும் இலாப் போகத்தைப் புரிந்தே - எவ்விடத்தும் அறிதற்கரிய பேரின்பமயமாய், புகுந்திடுவன் - புகுந்து உயிரின்கண் விளங்கித் தோன்றும் (அந்த ஞானத்திற்கு முதலாகிய) ஞேயம் என்க.

(பொ - ரை.) குருவின் அருளால் அறிவதொரு குறியின்கண் உறைத்துநின்று கொண்டு, காலாக்கினி புவனமுதல் அநா

---

1. திருவருட்பயன், இன்புறுநிலை, கo.

சிருதபுவனம் ஈறுயுள்ள எவ்வகைப்பட்ட புவனமும் இதற்கு முன் அனுபவித்துக் கழித்தமையிற் கான்ற சோறெனக் கண்டு அருவருத்துவிட்டு, அறுவகை அத்துவாவுட்பட்ட மூவகைப் பிரபஞ்சமுங் காரணரூபத்திற் சிறிதுங் காணப்படாமையாற் பித்திகைவடிவங் காண்பார்க்குக் காணப்படாதாய் அதன்கண் மறைந்த சித்திர வடிவம்போல முழுப்பொய்யெனக் கண்டு அவ்வாறு கண்ட காட்சி சலியாதிருக்கப்பெறின், அப்பிரபஞ்சத்திற்கு [1]விலக்கணமான ஞானசொரூபம் ஆண்டு இனிது விளங்கித் தோன்றும்; தோன்றவே, வறியார்க்கு நிதிவாய்த்துழிப்போல அதன்கண் பெருங்காதல் மீதூரும்; அது மீதூரவே [2] 'இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம் - அன்பின் நிலையே அது' வாகலான் அவ்வன்பின் வழியே பேரின்பமயமாய்ப் புகுந்து உயிரின்கண் விளங்கித் தோன்றும் அந்த ஞானத்திற்கு முதலாகிய ஞேயம் எ - ம்.

அட்டகுணம் எட்டுச்சித்தி கோகநதன் என்றது பைசாசபதத்தின் அட்ட மாசித்தியை நோக்கி எண்மடங்கு ஏற்றமாகிய அட்டசித்தியுடைய பிரமபதம் என அதன்பெருமை கூறியவாறு.

கோகநதன் ஆகுபெயர்; ஒற்றுமிகாமை வடநூன் முடிபு.

வாழ்வுகுலவுபதம் - திப்பிய மகளிரும் அதிவிசித்திரமாகிய மாடமும் மாளிகையும் முதலிய போக்கியப் பொருட்சிறப்புகளான் அழகு பெற்ற பதம்; ஒற்றுமைபற்றிக் குணங்குணியாக உபசரிக்கப்பட்டது.

இதனானே 'ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தேராம்'[1] (சூத். கூ., செ. க.) என்றறிந்து அகலுமாறும் அந்நிலையேயாமாறும் வகுத்துணர்த்தி இரண்டாங்கூறு வலியுறுத்தப்பட்டது. (சு)

---

1. மாறுபட்டதன்மை.
2. திருவருட்பயன், இன்புறுநிலை, க0.

## மூன்று மதிகரணம்

கண்டஇவை யல்லேன்நான் என்றகன்று காணுக்
கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினோடும் உளத்தவன்தான் நின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
விண்டகலும் மலங்களெல்லாங் கருடதியா னத்தால்
விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்
பண்டைமறை களும்அதுநான் ஆனேன் என்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே.

(ப - ரை.) கண்ட இவை நான் அல்லேன் என்று காணுக் கழி பரமும் நான் அல்லேன் என அகன்று - (உடம்பே நானென்றும் அது நீங்கியவழிப் பிரமம் நானென்றும் இங்ஙனம் விபரீதமாக உணர்கின்ற உயிராவது) சுட்டுணர்வுட்பட்ட உடம்புமுதலிய தொகுதியாகிய அப் பாசமும் நான் அன்றுஎன்றும் சுட்டுணர்விறந்து மேம்பட்டுநின்ற அப் பதிப் பொருளும் நான் அன்று என்றும் (இரண்டற்கும் வேறெனக் கண்டு வேறாகிய பாசத்தை மேற்கூறியவாற்றால்) ஒருவி, கசிந்த தொண்டினோடும் உளத்து அவன்தான் நின்ற கலப்பாலே கருதி - (ஏனைப்பதிப்பொருள் வேறாயினும் வியாப்பிய வியாபக பாவத்தாற் கண்ணொளியும் ஞாயிற்றின் ஒளியும்போல வேற்றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய) தனது கசிந்த தொண்டினையும் உளத்தே இறைவன் நின்ற கலப்பினையும் நோக்கிநின்று, சோகமெனப் பாவிக்க - (கருடோகம்பாவனை போலச்) சிவோகம்பாவனை ஒருவன் செய்யப்பெறுமாயின், கருட தியானத்தால் விடம் ஒழியுமது போல - அக்கருடன் அம்மாந்திரிகனுக்கு வேறாதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி விடயத்தை நீக்கித் தெளிவுசெய்யுமாறுபோல, வேறு இன்றித் தோன்றுவன் - சிவபிரானும் இவனில் வேறாதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி, மலங்களெல்லாம் விண்டு அகலும் விமலதையும் அடையும் - மலங்கள் முழுவதும் நீக்கிச் சுத்தனாகச் செய்வன், பண்டை மறைகளும் அது நானானேன் என்று பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணே - பழைய வேதாந்தமும் அதுநான் ஆனேன் என்னப் பாவிக்கச் சொல்லுவதும் இப்பாவனையையே என்க.

(பொ - ரை.) உடம்பே நானென்றும் அது நீங்கியவழிப் பிரமம் நானென்றும் இங்ஙனம் விபரீதமாக உணர்கின்ற உயிராவது, சுட்டுணர்வுட்பட்ட அப்பாசமும்அன்று; சுட்டுணர் விறந்து நின்ற அப்பதிப்பொருளும் அன்று ; இரண்டற்கும் வேறெனக் கண்டு, வேறாகிய பாசத்தை மேற்கூறியவாற்றால் ஒருவி, ஏனைப் பதிப்பொருள் வேறாயினும் வியாப்பிய வியாபக பாவகத்தாற் கண்ணொளியும் ஞாயிற்றினொளியும்போல, வேற்றுமை சிறிதுந் தோன்றாதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தனது தொண்டினை

யும் இறைவன் கலப்பினையும் நோக்கி நின்று, கருடோகம் பாவனைபோலச் சிவோகம்பாவனை ஒருவன் செய்யப்பெறுமாயின், அக்கருடன் அம் மாந்திரிகனுக்கு வேறாதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி விடத்தை நீக்கித் தெளிவு செய்யுமாறு போல, சிவனும் இவனில் வேறாதலின்றி அத்துவிதமாய்த் தோன்றி மலங்களை நீக்கிச் சுத்தனாகச் செய்வன்; வேதாந்த மகாவாக்கியத்திற்கும் இதுவே பொருளாகக் கொள்க எ - ம்.

இப்பாவனை இன்றியமையாச் சிறப்பிற்று என்பது உணர்த்துவார், பயனும் உடன் கூறினார்.

பரமும்என்ற உம்மை இறந்தது தழீஇயது.

பரம் அவனெனத் திணைமயங்கிற்று.

தொண்டாவது சார்ந்ததன்வண்ணமாம் இயல்புடைய உயிர், கழி பரமு நானல்லலேன் எனக் கருதியவழி முன்போல முனைத்தலின்றி ஒங்குஉணர்வின் உள்ளடங்கி அதன்வழித்தாய் நிற்றல். முனைத்து நின்று செய்யும் உலகத்தொண்டின் நீக்குதற்குக் கசிந்ததொண்டென விசேடித்தார். வேறாயவழியுஞ் சோகமெனப் பாவித்தற்குரிய இயைபு இருவர்மாட்டு முண்மை விளக்குவார் கசிந்த தொண்டினோடும் உளத்தவன்தான் நின்ற கலப்பாலே யென்றார். கருடபாவனையை எடுத்துக் காட்டியதும் அதன்கண் ஐயநீக்குதற்பொருட்டு என்பது. எனவே கருடோகமெனப் பாவிக்கும் அத்துவித பாவனைக்கு மந்திரத்தினது ஆற்றலும் அவ்வாற்றல்வழி நின்று பாவிக்கும் மாந்திரீகன் ஆற்றலும் ஒருதலையான் வேண்டப்பட்டு ஆண்டைக்கு நிலைபெறுமாறு போல, சிவோகம் எனப் பாவித்து நிற்கும் அத்துவித நிலைக்கு இறைவனது கலப்பும் இவனது தொண்டும் ஒருதலையான் வேண்டப்படும் என்பது போந்தமையால், அங்ஙனந் தொண்டு செய்தற்குரிய ஆன்மாவினது ஞானக்கிரியைகளும், கலத்தற்குரிய இறைவன் ஞானக்கிரியைகளும், ஆண்டுக் கேடின்றி நிலைபெறும் என்பதூஉம் அருத்தாபத்தியான் உணர்ந்து கொள்க;[1] 'உன்தன் குலம் இரண்டு என் குலம் இரண்டுங் குறுகிடாவண்ணம் இன்பமாய் என்பாற் கூத்தையுங் கொண்ட தெப்படிதான்' என, வியந்து கூறியதூஉம் இவ்வுண்மை நோக்கியென்க. இப்பெற்றித்தாகிய சுத்தாத்துவித வுண்மை யுணரமாட்டாதார், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் யாண்டும் இன்மையின், அது நானானேன் என்னும் ஒரு வார்த்தைப் பொருள்படுமாறு யாங்ஙனம் என்று ஆசங்கித்தார்க்கு, ஒன்றுகெட்டு ஒன்றாமெனக்கொண்டு பரிணமங்கூறுவாரும், அது நான் என்னும் இரு பெயரும் [2]விட்டுவிடாத ஆகுபெயரெனக்கொண்டு கேவலாத்துவிதங் கூறுவாரும், அவற்றுள் ஒன்றினை மாத்திரம் ஆகுபெயரெனக்கொண்டு விசிட்டாத்துவிதங் கூறுவாருமாய் இடர்ப்படுவர். அங்ஙனம் இடர்ப்பட்டுரைப்பன எல்லாம் பொருளல்ல என்பார், பண்டை மறைகளும் அது நான் ஆனேன் என்று பாவிக்கச் சொல்லுவது இப்பாவகத்தைக் காணேயென்றார். எனவே, வேதாந்த மகாவாக்கியமுஞ் சித்தாந்த மகாவாக்கியமும் பொருளான்

1. உலகுடைநாயனார், கழிநெடிலடியாசிரிய விருத்தம், ௬.
2. தர்க்கசங்கிரகம், ௬௧.

ஒன்று என்பதூஉம் பெறப்பட்டது. ஈண்டுக் கருடன் என்றது கருடனுக்கு அதி தெய்வமாகிய மந்திர சொரூபத்தையாகலின் அப்பாவனை மெய்யாதற்கு இழுக்கின்மை யுணர்க.

இதனானே திருவஞ்செழுத்தை விதிப்படி உச்சரிப்பார்க்கு வேண்டப்படும் பாவனை கூறப்பட்டது. (எ)

அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்
டஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத் தர்ச்சித்
தஞ்செழுத்தாற் குண்டலியின் அனலை யோம்பி
அணைவரிய கோதண்டம் அணைந்தருளின் வழிநின்
றஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்கமதி யருக்கன்
அணைஅரவம் போல்தோன்றும் ஆன்மாவில் அரனே.

(ப - ரை.) (ஆன்மா அரனுக்கு உடைமையாம் பரிசும்) ஆன்மாவை அரன் உடைய பரிசும் அஞ்செழுத்தால் (அறிந்திட்டு) - (கசிந்த தொண்டினொடும் உளத்தவன்தான் நின்ற கலப்பாலே சோகம் எனப் பாவித்தற்கண்) ஆன்மாவுஞ் சிவமும் அங்ஙனம் உடைமையும் உடையானுமாய் நிற்கும் பரிசை ஐந்தெழுத்தோது முறையின் வைத்து உணர்ந்து, அரன் உருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு - ([1]"ஆடும்படி கேள்" எனவும் [2]"சேர்க்குந்துடிசிகரம்" எனவும் ஓதியவாறே) அவன் திருமேனி ஐந்தெழுத்தால் அமைந்த பரிசம் உணர்ந்து, அங்க கர நியாசம் அஞ்செழுத்தாற் பண்ணி - (அம் முறையே) அங்கநியாச கரநியாசங்களும் அவ்வைந்தெழுத்தாற் செய்து கொண்டு (இருதயம் உந்தி புருவ நடுவென்னும் மூன்றும் பூசைத் தானம் ஓமத்தானம் தியானத்தானமாகக் கற்பித்துக்கொண்டு), இதயத்து ஆன்மாவின் அஞ்செழுத்தால் அர்ச்சித்து - இருதயத்தில் ஆன்மாவில் அவ் வஞ்செழுத்தாற் பூசித்து, குண்டலியின் அஞ்செழுத்தால் அனலை ஓம்பி - உந்தியில் அவ்வஞ்செழுத்தால் ஓமித்து, அணைவு அரிய கோதண்டம் அணைந்து - அணைதற்கரிய புருவநடுவிற் சேர்ந்து தியானித்து, அருளின்வழி நின்று அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க - அருள் வழித்தாக நின்று அவ்வஞ்செழுத்தை விதிப்படியே (மாறி நெஞ்சழுத்தி) உச்சரித்தல் செய்க (இவ்வாறு சிவோகம்பாவனையும் திருவைந்தெழுத்து மந்திரமும் அந்தரியாகக் கிரியையும் என்னும் இம் மூன்றும் ஒருவழிப்பட நின்றுகொண்டு அதனைக் கணிக்கப் பெறுவார்க்கு, மதி அருக்கன் அணை அரவம்போல் - நவக்கோள்களுள் (ஏனை யேழும்போலக் காண்டல்செல்லாத) இராகு கேதுக்கள் (உபராகத்திற்) சந்திராதித்தர்மாட்டுக் காணப்படுமாறுபோல, அரனே ஆன்மாவில் தோன்றும் - (முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் அறிவிற்கு விடயமாய்த் தோன்றும் ஏனைப் பசுபாசங்கள் போலப் புலனாகாத அப்) பதிப்பொருள் (அவ்வுச்சரிப்பின்) ஆன்மாவின் மாட்டு விளங்கித் தோன்றும் என்க.

---

1. உண்மை விளக்கம், ௩௩. 2. ஷை., ௩௪.

(பொ - ரை.) கசிந்த தொண்டினோடும் உளத்தவன் தான் நின்ற கலப்பாலே சோகமெனப் பாவித்தற்கண் ஆன்மாவுஞ் சிவமும் அங்ஙனம் உடைமையும் உடையானுமாய் நிற்கும் பரிசை ஐந்தெழுத்து ஓதும் முறையின் வைத்து உணர்ந்து,[1] 'ஆடும்படிகேள்' எனவும்[2] 'சேர்க்குந்துடிசிகரம்' எனவும் ஓதிய வாறே அவன் திருமேனி அஞ்செழுத்தால் அமைந்த பரிசும் உணர்ந்து, அம்முறையே அங்க நியாச கர நியாசங்களும் அவ் வைந்தெழுத்தாற் செய்துகொண்டு, இதயம் உந்தி புருவநடு வென்னும் மூன்றும் பூசைத்தானம் ஓமத்தானந் தியானத்தான மாகக் கற்பித்துக்கொண்டு, அங்ஙனம் வழிபட்டு நின்று கொண்டு அவ்வஞ்செழுத்தை விதிப்படியே மாறி நெஞ்சழுத்தி உச்சரித்தல் செய்க. இவ்வாறு சிவோகம் பாவனையுந் திருவஞ் செழுத்து மந்திரமும் அந்தரியாகக் கிரியையும் என்னும் இம் மூன்றனும் ஒருவழிப்பட நின்றுகொண்டு அதனைக் கணிக்கப் பெறுவார்க்கு நவக்கோள்களுள் ஏனையேழும் போலக் காண்டல் செல்லாத ராகுகேதுக்கள் உபராகத்திற் சந்திர ஆதித்தர் மாட்டுக் காணப்படுமாறுபோல, முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் அறிவிற்கு விடயமாய்த் தோன்றும் எனப் பசுபாசங்கள்போலப் புலனாகாத வழிப் பதிப்பொருள், அவ்வுச்சரிப்பில் ஆன்மாவின்மாட்டு விளங்கித்தோன்றும் எ - ம்.

அறிந்திட்டு என்பதனை மேலுங் கூட்டுக.

ஆன்மாவை அரன் உடைய பரிசும் என்ற உம்மையால் ஆன்மா அரனுக்கு உடைமையாம் பரிசும் அறிதலினால் அறிந்திட்டு என்பதூஉம் பெற்றாம்.

அரன் உருவும் என்ற உம்மை சிறப்பு.

அரன் உருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிதல் இதயத் திலான்மாவில் அவ்வாறு கண்டு அர்ச்சித்தற் பொருட்டென்க.

இனி உம்மையை எண்ணும்மையாக்கி, அஞ்செழுத்தால் ஆன் மாவை அரனுடைய பரிசும் அரனுருவும் அறிந்திட்டெனக் கண் ணழித்து, ஆன்மாவையும் அரனுடைய பரிசாகிய திருவருளையுஞ் சிவ சொரூபத்தையும் அஞ்செழுத்தால் உணர்ந்தென்றும், அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டென்பது அமைந்தொழிந்த மலங்களையும் ஐந்தெழுத்திலுணர்ந்தென்றும் உண்மைவிளக்கஞ் சிவப்பிரகாச முதலிய வற்றுள் ஓதியவாறு பற்றி உரைத்தலும் ஒன்று. இப்பொருட்குக் [1]'கற்பனவும் இனியமையும்' என்றாற்போல அமைதல் வேண்டாதொழி தன்மேற்று. மை அஞ்சனம் மலம் என்பன. ஒரு பொருட்கிளவி. ஈண்டு மலம் என்றது ஆணவ திரோதங்களை. இவை கழிந்தொழிந் தமைபற்றி வேறுவைத்து எண்ணப்பட்டன.

---

1. திருவாசகம், திருப்புலம்பல், ௩.

அணைந்து தியானித்து எனற்பாலது அணைந்தென்று உபசரிக்கப் பட்டது. அல்லுழிப் பயன்படாமை உணர்த்துவார் விதிப்படியென ஈண்டுங் கூறினார்.

இதனாலே ஆண்டைக்கு வேண்டப்படும் மந்திரமும் கிரியையுங் கூறப்பட்டன. (அ)

நாட்டும்இத யந்தானும் நாபியினில் அடியாய்
ஞாலமுதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய்
மூட்டுமோ கிநிசுத்த வித்தைமலர் எட்டாய்
முழுவிதழ்எட் டக்கரங்கள் முறைமையினின் உடைத்தாய்க்
காட்டுகம லாசனமேல் ஈசர்சதா சிவமுங்
கலாமூர்த்த மாம்இவற்றின் கண்ணுகுஞ் சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மாஞகிச் சத்தி
மேலாகி நிற்பன்இந்த விளைவறிந்து போற்றே.

(ப - ரை.) நாபியினில் - உந்தியில், ஞாலம் அடியாய் - பிருதிவி தத்துவம் கிழங்காகவும், முதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய் - (அப் பிருதிவியை) முதலாகவுடைய (ஏனை அப்பு முதலிய இருபத்து மூன்று) தத்துவங்களும் (அவ்வுந்தியினின்று தோன்றி) எண்விரலளவைத்தாயுள்ள நாளவடிவாகவும், மூட்டு மோகிநி சுத்தவித்தை மலர் எட்டாய்-பொருந்திய அசுத்த மாயையின் காரியமாகிய வித்தியா தத்துவங்கள் ஏழும் சுத்தவித்தையும் என்னும் எட்டுத் தத்துவங்களும் எட்டு இதழ் வடிவமாகவும், முழு இதழ் எட்டு அக்கரங்கள் முறைமையினில் உடைத்தாய் - சிதைவுறாத அவ்விதழ் எட்டும் (பிரணவாதி எட்டு) அக்கரங்களை முறையே உடையதாகவும், ஈசர் சதாசிவம் கலாமூர்த்த மாம் - ஈசுவரம் சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அறுபத்து நான்கு எனப்படுங் கேசரவடிவாகவும், சத்தி இவற்றின் கண்ணுகும் - சத்தி தத்துவம் (அக்கேசரங்களுக்கு உள்ளாகிய பொகுட்டு வடிவமாகவும்) அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தோர் பீசவடிவமாகவுமுடைய, நாட்டும் இதய கமலந் தானும் காட்டும் ஆசனம் - நாட்டப்படும் இருதய கமலம் விளங்கப்பெற்ற ஆசனமாம், மேல் சத்திமேலாகி - அதன்மேற் சத்தி மூர்த்தியாய் (நிற்கும்), வீட்டை அருள் சிவன் மூர்த்திமாஞகி நிற்பன் - வீடுபேற்றை யருளுகின்ற சிவபிரான் மூர்த்திமானாய் நிற்பன் ஆகலின், இந்த விளைவு அறிந்து போற்றே - இம் முறையை அறிந்து அருச்சிப்பாயாக என்க.

(பொ - ரை.) இதயத்து அர்ச்சித்தற்கு, நிலம் முதல் சத்தி தத்துவம் ஈறாகிய முப்பத்தைந்தினையுங் கிழங்கு முதற் பீசம் ஈறாகிய அவயவங்களாகவுடைய இதயகமலம் ஆசனமும், அதன்மேற் சத்திமூர்த்தியும் சிவன்[1] மூர்த்தி மானுமாம் எ - ம்.

சிவதத்துவஞ் சத்திதத்துவங்கட்குத் தம்முள் வேறுபாடு சிறிதாதல் பற்றிச் சிவதத்துவத்தை வேறெண்ணாது சத்திதத்துவத்துள் அடக்கிக் கூறினார்.

---

1. மூர்த்தியையுடையவன்.

சத்திமேலாகி யென்றதனுற் சத்தி மூர்த்தியென்பதூஉம் பெறப் பட்டது.

அற்றேல், மேல் ஐந்தெழுத்தால் அமைந்த உருவெனக் கூறி அதன்பின் ஆன்மாவில் அர்ச்சித்தெனவுங் கூறி ஈண்டுச் சத்தி மூர்த்தி யென்றன் மலைவாம்போலுமெனின், ஆகாது; அம்மூன்றும் முதல்வ னுக்கு முறையே தூலவடிவுஞ் சூக்குமவடிவும் அதிசூக்குமவடிவுமெனக் கோடலால் என்பது. அண்டம் ஓர் அணுவாம் பெருமைகொண்டு கரணங்கள் எல்லாங் கடந்து நின்ற அவ்விறைவனே அணு ஓர் அண்ட மாஞ் சிறுமைகொண்டு ஆன்மாக்களுய்தற்பொருட்டு உடம்பினுள்ளும் அவ்வாறு நிற்கின்றான். அதனையறிந்து செய்யாதவழிப் பூசையாற் பயனில்லை யென்பார், இந்த விளைவறிந்து போற்றேயென்றார். தன் னினமுடித்தலால் ஓமித்தல் தியானித்தல்களினும் இவ்வாறே உணர்ந்து செய்யப்படுமெனக் கொள்க. (கூ)

அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா
அறைந்திடுவர் அதுதானும் ஆன்மசுத்தி யாகுங்
கந்தமலர் புகையொளிமஞ் சனம்அமுது முதலாக்
கண்டனவெலாம் மனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தைதனில் அர்ச்சிக்கச் சிவனைஞா னத்தாற்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியரன் உளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே.

(ப - ரை.) தர்ப்பணத்தை விளக்க வந்திடும் அவ்வொளிபோல- கண்ணாடிக்கு(ப் பொடியிட்டு) விளக்க விளக்க ஒளிமேலிட்டு மாசு நீங்குமாறு போல, சிந்தைதனில் சிவனை-ஆன்மாவிற் சிவத்தை, கந்தம் மலர் புகை ஒளி மஞ்சனம் அமுது முதலாக் கண்டனவெலாம் மனத் தால் கருதிக்கொண்டு ஞானத்தால் அர்ச்சிக்கச் சிந்திக்கச்சிந்திக்க - சந்த னம்புட்பம் தூபம் தீபம் திருமஞ்சனம் திருவமுதுமுதலியவாகக் காணப் பட்ட பூசாதிரவியங்களெல்லாம் மனத்தாற் கற்பித்துக் கொண்டு ஞானத்தால் அருச்சித்தலும் ஓமித்தலுந் தியானித்தலும் (செய்யச் செய்ய), அரன் உளத்தே மருவி வரவர வந்திடுவன் - (ஆண்டு அச்) சிவம் உள்ளத்தின்கண்ணே பொருந்தி மேலிட்டு மேலிட்டு வந்து விளங்கித் தோன்றும் (தோன்றவே), பின் மலமானது அறுமே-பின்பு ஆணவமலந் (தேய்ந்து தேய்ந்து) பற்றறக் கழியும், அதுதானும் ஆன்ம சுத்தியாகும் அந்தரியாகந் தன்னை முத்திசாதனமா அறைந்திடுவர்- (அங்ஙனம்) அஃது ஆன்மசுத்திக்கே துவாகலான் அவ்வந்தரியாகத்தை (ஒருதலையான் வேண்டப்படும்) முத்திசாதனம் என்று அறிக என்பர் என்க.

(பொ - ரை.) கண்ணாடிக்குப் பொடியிட்டு விளக்க விளக்க ஒளிமேலிட்டு மாசு நீங்குமாறுபோல, ஆன்மாவில் அவ்வாறு ஞானத்தால் அர்ச்சித்தலும் ஓமித்தலுந் தியானித்தலுஞ் செய் யச் செய்ய ஆண்டுச் சிவம் மேலிட்டு மேலிட்டு வந்து விளங்கித் தோன்றும்; தோன்றவே ஆணவமலந் தேய்ந்து தேய்ந்து பற்றறக்

கழியும்; அங்ஙனம் ஆன்மசுத்திக்கு ஏதுவாகலான் அவ்வந் தரியாகம் ஒருதலையான் வேண்டப்படும் முத்திசாதனம் என்று அறிக எ - ம்.

அதுதானும் ஆன்மசுத்தியாகும் என ஒற்றுமைபற்றிக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். உம்மை சிறப்பு.

கந்தமலர் புகையொளி மஞ்சனம் அமுது முதலாக் கண்டன எலாம் மனத்தாற் கருதிக்கொண்டு சிந்தைதனில் அர்ச்சிக்க எனவே, அவற்றை யங்ஙனங் கற்பித்துக்கோடலும் அனுவாதமுகத்தாற் பெற்றாம். மனத்தாற் கருதுமாறு [1]'காயமே, கோயிலாகக் கடிமனம் அடிமையாக' என்பது முதலிய திருவாக்குக்களானும் அறிக.

ஞானத்தால் என்பதனை அர்ச்சிக்க என்பதனோடுங் கூட்டுக.

சிந்திக்க என்றது முன்னையது ஓமித்தன் மேற்று.

இவையிரண்டு செய்யுளானும் அந்தரியாகஞ் செய்யுமாறும் அஃது ஆண்டைக்கு ஒருதலையான் வேண்டப்படுவது என்பதூஉங் கூறப்பட்டன. (கo)

புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டிற்
பூமரத்தின் கீழ்உதிர்ந்த போதுகளுங் கொண்டு
சிறந்தாருஞ் சீர்ச்சிவனை ஞானத்தால் அங்குச்
சிந்திக்கும் படியிங்குச் சிந்தித்துப் போற்றி
அறம்பாவங் கட்குநாம் என்கடவேம் என்றும்
ஆண்டவனைக் கண்டக்கால் அகம்புறமேன் றுதே
திறம்பாதே பணிசெய்து நிற்கை யன்றே
சீரடியார் தம்முடைய செய்தி தானே.

(ப - ரை.) ஆண்டவனைக் கண்டக்கால்-(அகத்தாதல் புறத்தாதல் ஒரு குறியின்கண்) இறைவனைக் காணப்பெறின், அறம் பாவங்கட்கு நாம் என்கடவேம் என்று - (அகம்புறம் என்று இரண்டால் அர்ச்சனை புரியும் இந்தச் சகம்போல) புண்ணிய பாவங்கட்கு யாம் என்செயக் கடவமெனக் குறித்தலும் (இன்றி), அகம் புறம் என்னுதே திறம்பாதே பணிசெய்து நிற்கை அன்றே - அதுவேறு இதுவேறு எனப் பிரித்துக் காண்டலும் இன்றி (யாண்டும்) ஒரு பெற்றியராய் இட்டபணி செய்து நிற்றல் அன்றே, சீர் அடியார் தம்முடைய செய்தி தானே - மெய்யடியார் செய்தி (யாகலான்), சிறந்து ஆரும் சீர்ச் சிவனை - சிறந்து விளங்குகின்ற புகழையுடைய முதல்வனை, ஞானத்தால் அங்குச் சிந்திக்கும்படி- ஞானத்தால் அகத்தே காணும்படி, புறம்பேயும் இங்குச் சிந்தித்து-புறத்தேயும் ஒரு குறியிற் கண்டு, வேண்டின் பூமரத்தின் கீழ்உதிர்ந்த போதுகளும் கொண்டு - (உபகரணம்) வேண்டுமாயின் (முயன்று வருந்துதலும் பிற உயிர்களை வருத்துதலும் ஆகாமையாற்) பொலிவாகிய மரத்தின்கீழ் உதிர்ந்த பூக்களும் (யாறு குளம் முதலியவற்றின் உளதாகிய

1. திருநாவுக்கரசுநாயனர் தேவாரம், தனித்திருநேரிசை, ச.

நீரும் அயாசகமாய் வந்த அமுது முதலாயினவும்) கொண்டு, அரன் கழல்கள் போற்றிப் பூசிக்க - அம்முதல்வன் திருவடிகளை வழிபட்டுப் பூசிக்கக் கடவர் என்க.

(பொ - ரை.) அகத்தாதல் புறத்தாதல் ஒரு குறியின்கண் இறைவனைக் காணப்பெறின், அகம்புறம் என்று இரண்டால் அர்ச்சனை புரியும் இந்தச் சகம்போலப் புண்ணிய பாவங்களைக் குறித்தலின்றி அதுவேறு இதுவேறு எனப் பிரித்துக் காண்டலும் இன்றி யாண்டும் ஒரு பெற்றியராய் இட்டபணி செய்து நிற்றலே மெய்யடியார் செய்தியாகலான், அகத்தே காணும்படி புறத்தேயும் ஒரு குறியிற்கண்டு அரன் கழல் பூசிக்கற்பாற்று; அதற்கு உபகரணம் வேண்டுமாயின், முயன்று வருந்துதலும் பிற உயிர்களை வருத்துதலும் ஆகாமையான், மரத்தின்கீழ் உதிர்ந்த பூக்களும் ஆறு குளம் முதலியவற்றின் உளதாகிய நீரும் அயாசகமாய் வந்த அமுது முதலாயினவுமே ஆண்டைக்கு அமையும் எ - ம்.

போற்றிப் பூசிக்க என இயையும். புறம்பேயும் என்ற உம்மை இறந்ததுதழீஇயிற்று. போதுகளும் என்ற உம்மை எதிரது தழீஇயது. இதனானே புறப்பூசையும் ஆண்டைக்கு அங்கமாதல் கூறப்பட்டது. (கக)

இந்தனத்தின் எரிபாலின் நெய்பழத்தின் இரதம்
 எள்ளின்கண் எண்ணெயும்போல் எங்கும்உளன் இறைவன்
வந்தனைசெய் தெவ்விடத்தும் வழிபடவே யருளும்
 மலமறுப்போர் ஆன்மாவின் மலரடிஞா னத்தாற்
சிந்தனைசெய் தர்ச்சிக்க சிவனுளத்தே தோன்றித்
 தீயிரும்பைச் செய்வதுபோற் சீவன் தன்னைப்
பந்தனையை யறுத்துத்தா னாக்கித்தன் னுருவப்
 பரப்பெல்லாங் கொடுபோந்து பதிப்பன்இவன் பாலே.

(ப - ரை.) இந்தனத்தின் எரி (போல்)-விறகில் தீப்போல (உலகத்தார்க்குச் சிறிதுந் தோன்றாதவாறு மறைந்து உடனாயும்), பாலின் நெய் (போல்) - பாலின் நெய்போல (மந்ததரமலபாகம் உடையார்க்கு ஒருவாற்றால் தோன்றியுந் தோன்றாது மறைந்து உடனாயும்), பழத்தின் இரதம் (போல்) - பழத்தின் இரதம்போல (மந்த மலபாகம் உடையார்க்கு உய்த்துணரும் வழி விளங்கித் தோன்றுவதாயுடனாய்), எள்ளின்கண் எண்ணெயும் போல் - எள்ளின்கண் எண்ணெய்போல (த் தீவிர மலபாகமுடையார்க்கு இனிது விளங்கித் தோன்றினும் பிரித்தறியப்படாது உடனாயும்), இறைவன் எங்கும் உளன் - இறைவன் (அகம் புறம் என்னும் பிரிவின்றி) யாங்கணும் உளன் ஆகலான், எவ்விடத்தும் வந்தனை செய்து வழிபடவே அருளும் - (மேற்கூறியபடி) அகத்தாதல் புறத்தாதல் யாண்டு வந்தித்து வழிபடினும் அனுக்கிரகிக்கும் (என்பதே தேற்றம்), மலம் அறுப்போர் - (அங்ஙனமாயினும்)

வாதனுமலம் நீக்கலுறுவார்க்கு, மலர் அடி ஞானத்தால் ஆன்மாவில் சிந்தனை செய்து அர்ச்சிக்க - செங்கமல மலர்போலுந் திருவடிஞானத்தால் ஆன்மாவின் மாட்டு (அவ்வாறு வழிபடுதலாகிய) அகப்பூசை ஒருதலையான் வேண்டும் (இங்ஙனம் விசேட இயைபுடைய உரிமையால்), சிவன் தோன்றிப்பந்தனையை அறுத்து - இறைவன் விளங்கித் தோன்றி வாசனையைப் பற்றறத் துடைத்து, தீ இரும்பைச் செய்வது போல் சீவன்றன்னைத் தானுக்கி - தீ இரும்பைச் செய்வது போல உயிரைத் தன்வண்ணமாக்கி, தன் உருவப்பரப்பெல்லாம் கொடு போந்து இவன்பாலே உளத்தே பதிப்பன்-தனது பேரானந்தப் பெருஞ் செல்வம் முழுவதும் அருளி இவனதாகச் செய்தருளுவன் என்க.

(பொ - ரை.) இறைவன் அகம்புறம் என்னும் பிரிவின்றி யாங்கணும் உளன் ஆகலான், மேற்கூறியபடி அகத்தாதல் புறத்தாதல் யாண்டு வழிபடினும் அனுக்கிரகிக்கும் என்பதே தேற்றம். அங்ஙனமாயினும் ஆன்மாவின் கண்ணதாகிய வாதனு மலம் நீக்கலுறுவார்க்கு அகப்பூசையால் அவ்வாறு வழிபடுதல் ஒருதலையான்வேண்டும்; இறைவன் விளங்கித் தோன்றி வாசனையைப் பற்றறத் துடைத்தற்குந் தன்வண்ணமாக்கித் தனது பேரானந்தப் பெருஞ்செல்வம் முழுவதும் இவனதாகச் செய்தற்கும் உரிமையுடைய விசேட இயைபு ஆண்டையது ஆகலான் எ - ம்.

இந்தனத்தின் எரி உலகத்தார்க்குச் சிறிதுந் தோன்றாதவாறு மறைந்து உடனாய் நிற்றற்கும், பாலின்நெய் மந்ததரமலபாகம் உடையார்க்கு ஒருவாற்றால் தோன்றியுந் தோன்றாது மறைந்து உடனாய் நிற்றற்கும், பழத்தின் இரதம் மந்தமலபாகம் உடையார்க்கு உய்த்து உணரும்வழி விளங்கித் தோன்றுவதாய் உடனாய் நிற்றற்கும், எள்ளின்கண் எண்ணெய் தீவிரமலபாகம் உடையார்க்கு இனிது விளங்கித் தோன்றினும் பிரித்தறியப்படாது உடனாய் நிற்றற்கும், உவமையாயின.

[10x] எங்கும் உளன் இறைவன் என்றது எவ்விடத்தும் வழிபடவே யருளுதற்குரிய இயைபு விளங்குதற்கும், மலமறுப்போர் என்றதுந் தோன்றியறுத்து ஆக்கிப் பதிப்பன் என்றதும் ஆன்மாவிற் சிந்தனை செய்து அர்ச்சித்தற்குரிய விசேட இயைபு விளங்குதற்கும், ஏதுவாய் நின்றன.

தன்னுருவப் பரப்பெல்லாம் இவன்பாலே பதிதலாவது, தீ இரும்பைச் செய்வதுபோல இறைவனுக்குரிய முற்றுணர்வு முதலிய எண் குணங்களும் படிகம்போலச் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி அத்துவித இயைபானே இவன்மாட்டு விளங்கித்தோன்றுதல். அதுவே சீவானந்த மேலிடுதல் என்பது.

அர்ச்சிக்க என்றது வியங்கோள்; முடிபு வேறாகலிற் பால்வழுவின்மையுணர்க. அர்ச்சிக்க என்பதனை எச்சமாகக்கொண்டு பாடம் ஓதுவார் பால்வழுவாதலையும் நோக்கிற்றிலர் போலும்.

மேல் "அந்தரியாகந்தன்னையென்ற செய்யுளிற் பெறப்பட்டதனை ஈண்டுங் கூறுதல், கூறியது கூறலாம் போலும் என மலையற்க, வேண்டாது கூறி வேண்டியது முடித்தற்கு எழுந்தது இச்செய்யுளாகலின். இதனானே அப் புறப் பூசையில் அகப்பூசை விசேடம் உடைத்தென அதன் பெருமை கூறப்பட்டது.

இவை ஆறு செய்யுளானும் மூன்றுங் கூற்றின் பொருளைத் தெரித்து உணர்த்தியவாறு. (௧௨)

ஒன்பதாஞ் சூத்திர முடிந்தது

ஆகத்திருவிருத்தம் - ௯0௫

# பயனியல்

## பத்தாஞ் சூத்திரம்



இங்ஙனம் வேண்டுஞ் செய்தி முறைமைகள் மூன்று சூத்திரத்தால் வகுத்தோதிய ஆசிரியர், நிறுத்தமுறையானே அச்சாதனத்தாற் பெறப்படும் பெத்தநீக்கமும் முத்திப்பேறுமாகிய பயனியல்பு மூன்று சூத்திரத்தாற் கூறுவான் தொடங்கினர். அவ் விருவகைப்பயனுள் அப் பெத்தநீக்கம் ஆமாறு கூறுதற்கெழுந்தது பத்தாஞ் சூத்திரம்.

இவன்உலகில் இதம்அகிதஞ் செய்த எல்லாம்
இதம்அகிதம் இவனுக்குச் செய்தார்பால் இசையும்
அவன்இவனாய் நின்றமுறை யேக னாகி
அரன்பணியின் நின்றிடவும் அகலுங் குற்றஞ்
சிவனும்இவன் செய்தியெலாம் என்செய்தி யென்றுஞ்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவம்அகல உடனாகி நின்றுகோள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே.

(ப - ரை.) அவன் இவனாய் நின்ற முறை - (பதிஞானத்தால் அங்ஙனங் காணப்பட்ட) இறைவன் (பெத்தநிலையில் உடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி) ஆன்மாவேயாய் (ஒற்றுமைப்பட்டு ஆன்மாவின்வழி) நின்ற முறைமைபோல, ஏகனாகி அரன்பணியின் நின்றிடவும் - (ஈண்டான்மா அம்முதல்வனோடு உடனாய் நின்றறியினும்) தானென வேறுகாணப்படாதவாறு அவனோடு ஒற்றுமைப்பட்டு அவ் விறைபணியின் வழுவாது நிற்கப்பெறின் (அங்ஙனம் ஏகனாகி நிற்றலான் யான் எனது என்னுஞ் செருக்கு அறுதலின்), சிவனும் இவன் செய்தியெல்லாம் என் செய்தி என்றும் (உடனாகி நின்றுகொள்வன்) - அவ்விறைவனும் இவன் செய்யும் இதம் அகிதங்களெல்லாம் யான் செய்யும் இதம்அகிதங்கள் என உடனாய் நின்று என்றுகொள்வன் (அரன்பணியின் நிற்றலான் இந்திரியங்களின் வசமாய் நிற்கும் பாரதந்திரியம் ஒழிதலின்), இவனுக்குச் செய்தது எனக்குச் செய்தது என்றும் பவம் அகல உடனாகி நின்றுகொள்வன் - (அவ்விறைவனும்) இவனுக்கு (இன்பதுன்ப நுகர்ச்சியாமாறு) பிறர்செய்யும் இதம்அகிதங்களெல்லாம் எனக்கு (நுகர்ச்சியாமாறு) செய்தனவேயாமெனப் பிறவி நீங்க உடனாய்நின்று என்றுகொள்வன், பரிவால் பாதகத்தைச் செய்திடினும் (புண்ணியத்தைச் செய்திடினும்) பணி ஆக்கிவிடுமே - (இவ் விரு திறத்தானும் முறையே) அன்பொடும் இவன் செய்யும் இதம் அகிதங்கள் இவனுக்குப் பணியாய்முடியும், உலகில் இவனுக்கு இதம் அகிதம் செய்தார்பால் இவன் செய்த இதம் அகிதமெல்லாம் இசையும் -

உலகத்தின்கண் இவனுக்கு இதம் அகிதஞ் செய்தார்மாட்டு (அவ்விதம் அகிதங்கள் அவ்வளவினன்றி மிகுதிப்படுதற்கு இவன் செய்த இதம் அகிதம் (முறையே துணைக் காரணமாக) இயையும், குற்றம் அகலும் - (இங்ஙனம் ஆர்ச்சிப்பும் நுகர்ச்சியும் இவனைப் பந்தியாது ஒழியவே) ஏனைச் சஞ்சிதவினையும் மாயையும் ஆணவமுமாகிய குற்றங்கள் மூன்றும் (இவனைப் பந்திக்க மாட்டவாய்) விண்டொழியும் என்க.

(பொ - ரை.) பதிஞானத்தால் அங்ஙனங் காணப்பட்ட இறைவன் பெத்தநிலையிலுடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி ஆன்மாவேயாய் ஒற்றுமைப்பட்டு ஆன்மாவின் வழிநின்ற முறைமைபோல, ஈண்டு ஆன்மா அம் முதல்வனோடு உடனாய் நின்றறியினுந் தானென வேறு காணப்படாதவாறு அவனோடு ஒற்றுமைப்பட்டு அவ்விறைபணியின் வழுவாது நிற்கப் பெறின், அங்ஙனம் ஏகனாகி நிற்றலான் யான் எனது என்னுஞ் செருக்கு அறுதலின் அவ்விறைவனும் இவன் செய்யும் இதம் அகிதங்களெல்லாம் யான் செய்யும் இதம் அகிதங்கள் என உடனாய் நின்று ஏன்றுகொள்வன். அரன்பணியினிற்றலான் இந்திரியங்களின் வசமாய் நிற்கும் பரதந்திரியம் ஒழிதலின், அவ்விறைவனும் இவனுக்கு இன்பத்துன்ப நுகர்ச்சியாமாறு பிறர்செய்யும் இதமகிதங்களெல்லாம் எனக்கு நுகர்ச்சியாமாறு செய்தனவேயாமென உடனாய் நின்று ஏன்றுகொள்வன். இவ் விருதிறத்தானும் முறையே, இவன் செய்யும் இதம்அகிதங்கள் இவனுக்குப் பணியாய் முடியும், இவனுக்கு இதம் அகிதஞ் செய்தார்மாட்டு அவ் இதம்அகிதங்கள் அவ்வளவினன்றி மிகுதிப்படுதற்கு துணைக்காரணமாய் இயையும். இங்ஙனம் ஆர்ச்சிப்பும் நுகர்ச்சியும் இவனைப் பந்தியாதொழியவே, ஏனைச் சஞ்சித வினையும் மாயையும் ஆணவமும் ஆகிய குற்றங்கள் மூன்றும் இவனைப் பந்திக்கமாட்டாவாய் விண்டொழியும் எ-ம்.

நின்றிட என்பதனை ஈரிடத்துங்கூட்டி நிரனிறையாக வைத்து என்றென்னும் எச்சங்களைக் கொள்வதென்பதனோடேர் தனித்தனி கூட்டி, 'இவனுலகி'லென்னு முதலடியைப் 'பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே' யென்றதன் பின்னாக வைத்துரைத்துக் கொள்க.

நின்றிடவும் என்ற உம்மை சிறப்பு.

பாதகத்தைச் செய்திடினும் என்ற உம்மையாற் புண்ணியத்தைச் செய்திடிற் பணியாக்கிவிடுதல் கூறவேண்டாவாயிற்று.

அவை மிகுதிப்படுதற்குத்[1] துணைக்காரணமாய் இயையும் என்பது ஆற்றலாற்பெற்றாம். அது அவர்தாஞ் செய்வினை தன்னான் நலமுடனே பிறர் செய்வினை யூட்டி யொழிப்பானாய் என முன்வருகின்றவாற்றான் அறிக. செய்யுளின் கருத்தும் உணராது இவன் செய்த இதமகிதங்களை இவன்மாட்டுச் செய்தார்க் கியையும் என்று உரைப்பின்

1. விளைவிற்கு உரம் துணையாவதுபோல்.

இவன்மாட்டுச் செய்தவருடைய இதமகிதங்கள் வேறென்ஞய் முடியு மெனக் கடாயினர்க்கு விடையின்மையும், நியதி தப்புதலும் சிவஞானச் செயலுடையோர் கையிற்றூனர்திலமளவே செய்திடினும் அத்தானமே நிலமலைபோல் திகழும் என்றூற்போல்வனவற்றோடு முரணுதலுமாகிய குற்றங்கள் உளவாமாறு உணர்க.

உலகத்தார் பார்வைக்கு இவன் செய்தனவாகவும் அச்செயல் இதமகிதமாகவுந் தோன்றப்படுவன மாத்திரையேயன்றிப் பிறிதில்லை யென்பார், உலகில் என்றூர்.

அவன் என்பதும் இவன் என்பதும் மகாவாக்கிய வழக்கு.

இவ்வாறன்றி, நின்றிட என்னும் எச்சத்தை அகலும் என்பதனோடு முடிய வைத்துரைப்பார்க்கு, ஏனையன தம்முளவாய் நின்று ஒரு பொருண்மேல் வருவன அல்லவாய் முடிதலின், முதனூலோடு ஒத்து ஒரு பொருள் நுதலிய சூத்திரமாதற்கு ஏலாமை யறிக.

இச்செய்யுளிற் கூறப்படும் முக்கூற்றுள், ஒருவாற்றூன் ஈண்டு வலி யுறுக்கப்படும் இறுதிக்கூறு பதினென்றூஞ் சூத்திரத்தில் இயைபுபற்றி யெடுத்துக்கொண்டு தடைவிடைகளாற் சாதிக்க நின்றமையின், முன்னை யிருகூறுமே வேறெடுத்துக்கொண்டு ஓதப்படுவன எனக் கொள்க. (க)

# முதல் அதிகரணம்

யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதியான் என்னும்
இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடஅத் தத்துவன்தான் நேரே
தனையளித்து முன்னிற்கும் வினையொளித்திட் டோடும்
நான்செய்தேன் எனும்அவர்க்குத் தான்அங் கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம்
ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பின் அல்லால்
ஒருவருக்கும் யான்எனதிங் கொழியா தன்றே.

(ப - ரை.) யான்செய்தேன் பிறர்செய்தார் யான் என்னது என்னும் இக்கோணை - யான்செய்தேன் பிறர்செய்தார் யான் எனது என்னும் (அகங்கார மமகாரங்களாகிய செருக்குவிளைதற்கு ஏது வாகிய) மலக்கோணை, ஞான எரியால் வெதுப்பி நிமிர்த்து - ஏகனாகி நிற்கும் ஞானாக்கினியினாலே காய்ச்சி அக்கோணைத் தீர்த்து, தான் செவ்வேநின்றிட - தான் முதல்வன்வழித்தாக நிற்கவே, அத் தத்துவன் தான் தனை அளித்து நேரே முன் நிற்கும் - அம்முதல்வன் தற்சொரூபத்தை விளக்கி நேராக வெளிப்பட்டுத் தோன்றுமாகலின், வினை ஒளித்திட்டு ஓடும் - (புண்ணிய பாவமாகிய) வினைகள் (இவனைப்) பொருந்தாமல் (இவனுக்குப் பணியாய் இவனுக்கு இதம்அகிதஞ் செய்தார்பால் அவைமிகுதற்குத் துணைக்காரணமாய்) இயையும், நான் செய்தேன் எனுமவர்க்கு - (மேற்கூறிய) யான் செய்தேன் என்பது முதலிய நினைவுடையாருக்கு, தான் அங்கு இன்றிப் போகத்தை நண்ணுவிக்கும் - முதல்வன் விளங்கித் தோன்றுதலின்றி (க் கன்மத்துக் கீடாக) ப் போகத்தைப் புசிப்பித்து, கன்மம் பண்ணுவிக்கும் - (அங்ஙனம் புசிக்குமிடத்து) ஆகாமியவினையை ஏறச் செய்யுமாகலின், ஊன் செய்யா ஞானந்தான் உதிப்பின் அல்லால் - மாயா கருவிகளைப் பொருந்தியறிகிற சிற்றறிவினின்று நீங்கி ஏகனாகி நிற்கும் ஞானம் பெற்றாலன்றி, ஒருவருக்கும் யான் எனது இங்கு ஒழியாது அன்றே - யாவர்க்கும் யான் எனது என்னுஞ் செருக்கு ஒழிதலின்று என்க.

(பொ - ரை.) யான் எனது என்னுஞ் செருக்கு அற்றால் அன்றி, இறைவன் உடனாய்நின்று கோடலும் அதுபற்றி வினை நுகர்ச்சியும் ஆர்ச்சிப்பும் இவனுக்கு இல்லாதாதலும் அதுபற்றிக் குற்றம் அகலுதலும் ஆகிய இவை முறையே நிகழ்தல் செல்லாமையால், அச்செருக்கறுதியைப் பயப்பதூஉம் அவன் இவனாய் நின்றமுறை யேகனாகிநிற்கு ஞானம் ஒன்றேயன்றிப் பிறிதின்மையின், அச்செருக்கறுதியின்பொருட்டு அவ்வாறு நிற்கும் ஞானம் ஒருதலையான் வேண்டற்பாற்று எ - ம்.

வலியுறுத்தற்பொருட்டு உடம்பாட்டுமுகத்தானும் எதிர்மறைமுகத் தானுங் கூறினார். உருவகஞ் செய்ததும் அதனை இன்றியமையாமை விளக்குதற்பொருட்டு.

ஞானம் என்றது ஈண்டு ஏற்புழிக்கோடலால் **ஏகனாகிநிற்கு ஞானத்தின்**மேற்றாயிற்று.

இதனானே மேலைச்சூத்திரத்து ஓதியவாறு ஞாதிருவும் ஞானமும் ஞேயமுமாக நின்று காணுங் காட்சியே யமையும்; அதன்மேலும் ஏகனாகி நிற்றல் எற்றுக்கென்பாரை நோக்கி, அவ்வாறு நின்றாலன்றி யானென தென்னுஞ் செருக்கறுதன் முதலியன முறையே நிகழ்ந்து முத்தியைத் தலைக்கூடுதல் செல்லாது என முதற்கூறு வலியுறுத்தப்பட்டது. (உ)

# இரண்டாமதிகரணம்

இந்திரியம் எனைப்பற்றி நின்றேயென் வசத்தின்
இசையாதே தன்வசத்தே யெனையீர்ப்ப திவற்றைத்
தந்தவன்றன் ஆணைவழி நின்றிடலால் என்றுந்
தான்அறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் தாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி
வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்கள் உண்டேல்
முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள்
மூளாஅங் காளாகி மீளான் அன்றே.

(ப - ரை.) (உலகத்துப் பாடிகாவலராயினார் பிழைசெய் துள்ளாரைத் தம்முள் அடக்கித் தாம் ஈர்த்தவாறெல்லாம் பரதந்திரமாய்க் கிடப்பச்செய்வது தம்மை அவ்வாறு செய்விக்கும் அரசனது ஆணைவழி நிற்கும் அவ்வாற்றல் கொண்டன்றிப் பிறிதின்மையின் அதனையறிந்து அப் பாடி காவலர்க்குந் தமக்கும் இறைவனாகிய அவ்வரசனைத் தலைக்கூடப் பெற்று அவன் கருத்தின்வழி யொழுக வல்லராயவழி அவர் அப்பரதந்திரம் நீங்கி அரசனதருளாற் பாடிகாவலரையுந் தம் ஆணைவழியின் நிற்பித்துக் கொள்ளவல்ல சுதந்திரராவர் அதுபோல) இந்திரியம் எனைப் பற்றி நின்றே என்வசத்தின் இசையாதே எனைத் தன்வசத்தே ஈர்ப்பது - (வினைசெய்தமைபற்றி) இந்திரியங்கள் என்னைப் பற்றி நின்றே என்வசத்தவாய் நில்லாமல் என்னைத் தம்முள் அடக்கி ஈர் (த்த வழியெல்லாம் பரதந்திரப்பட்டுக் கிட) ப்பச் செய்வதும், இவற்றைத் தந்தவன்றன் ஆணைவழி நின்றிடலால் என்றும் தான் அறிந்திட்டு - அவற்றை அவ்வாறு செய்விக்கும் முதல்வனது ஆணைவழி அவை நிற்றலான் (அவ்வீர்த்தலை மாற்றுதற்கு உபாயமாவது யாமும் அவ்வாணைவழி நிற்றலென்றும் அவ்வாற்றல் கொண்டன்றிப் பிறிதில்லை) யென்றும் இவ்வாறுணர்ந்து, இவற்றினொடும் தனையுடையான் தாள்கள் வந்தனைசெய்து - அவ்விந்திரியங்களையுந் தன்னையும் உடையானாகிய அம்முதல்வன் தாள்(களைத் தலைக்கூடப் பெற்று அவன்) பணியின் நின்று ஒழுக ஒருவன் பெறுமாயின், அருளினால் இவற்றின் வலிவாட்டி வாட்டம் இன்றி இருந்திடவும் - (அவன் அம்முதல்வன்) திருவருளால் அவ்விந்திரியங்களைத் தன் ஆணைவழி நிற்பித்து (க் கொள்ளவல்ல சுதந்திரனாவன் அவ்வாறு முதல்வன் வழியின்) உறைத்துநிற்புழியும், வரும் செயல்கள் உண்டேல் முந்தன் உடைச் செயல் என்று முடித்து ஒழுக - (பயிற்சி பற்றி ஒரோவழி அவ்விந்திரியங்களின் குறும்பு நிகழுமாயின்) இந்திரியங்கட்கும் எனக்கும் ஒரு சுதந்திரமின்மையின் (அதுவும்) முதல்வன் செயலேயென்று வரைசெய்து பணியின் வழுவாது ஒழுகவே, வினைகள் மூளா - (அதுவாயிலாகப் புகுந்து கூடித் தொடக்கவல்ல) வினைகள் (அங்ஙனம் ஆகமாட்டாவாய்) மடங்கியொழியும் ஆகலான், அங்கு ஆளாகி மீளான் அன்றே - (அவ்வாறு) அடிமைத்திறத்து நின்றோன் மறித்துப் பொறிகளின் வழிப்பட்டுப் பரதந்திரனாவானல்லன் என்க.

(பொ - ரை.) உலகத்துப் பாடிகாவலராயினார் பிழைசெய்துள்ளாரைத் தம்முள் அடக்கித் தாம் ஈர்த்தவாறெல்லாம் பரதந்திரமாய்க் கிடப்பச் செய்வது தம்மை யவ்வாறு செய்விக்கும் அரசனது ஆணைவழி நிற்கும் அவ் வாற்றல் கொண்டன்றிப் பிறிதின்மையின், அதனையறிந்து அப் பாடிகாவலர்க்குந் தமக்கும் இறைவனாகிய அவ்வரசனைத் தலைக்கூடப்பெற்று அவன் கருத்தின்வழி யொழுகவல்லராயவழி, அவர் அப்பரதந்திரம் நீங்கி அரசன அருளாற் பாடிகாவலரையுந் தம்ஆணைவழி நிற்பித்துக் கொள்ளவல்ல சுதந்திரர் ஆவர். அதுபோல, வினைசெய்தமை பற்றி இந்திரியங்கள் என்னைத் தம்முள் அடக்கி ஈர்த்தவழியெல்லாம் பரதந்திரப்பட்டுக் கிடப்பச்செய்வதும் அவற்றை யவ்வாறு செய்விக்கும் முதல்வனது ஆணைவழியவை நிற்றலான், அவ் வாற்றல் கொண்டன்றிப் பிறிதில்லையென்று இவ்வாறுஉணர்ந்து அவ் விந்திரியங்களையுந் தன்னையும் உடையனாகிய அம்முதல்வன் தாள்களைத் தலைக்கூடப்பெற்று அவன்பணியினின்றொழுக ஒருவன் பெறுமாயின், அவன் அம்முதல்வன் திருவருளால் அவ்விந்திரியங்களைத் தன்னாணைவழி நிற்பித்துக்கொள்ளவல்ல சுதந்திரனாவன். அவ்வாறு முதல்வன்வழியின் உறைத்து நிற்புழியும் பயிற்சிபற்றி ஒரோவழி அவ்விந்திரியங்களின் குறும்பு நிகழுமாயின், இந்திரியங்களுக்கும எனக்கும் ஒரு சுதந்திரம் இன்மையின் அதுவும் முதல்வன் செயலேயென்று வரைசெய்து பணியின் வழுவாது ஒழுகவே, அதுவாயிலாகப் புகுந்துகூடித் தொடக்கவல்ல வினைகள் அங்ஙனம் ஆகமாட்டாவாய் மடங்கியொழியுமாகலான், அவ்வாறு அடிமைத்திறத்து நின்றோன் மறித்துப் பொறிகளின் வழிப்பட்டுப் பரதந்திரனுவானல்லன் எ - ம்.

குறிப்புருவகம்.

ஏகனாகி நிறற்லே யமையும், அதன்மேலும் அரன்பணியின் நிற்றல் எற்றுக்கு என்பாரை நோக்கி, ஏகனாகி நிற்பினுந் தன்பணி மடங்கினாலன்றி வினைத்தொடக் குறுதற்கேதுவாய் இந்திரியங்களின் வழிப்பட்டுச் செல்லும் பரதந்திரம் நீங்காமையின், அது நீங்குமாறு தான் பணியை நீத்தற்பொருட்டு அரன்பணியின் நிற்றலும் ஒருதலையான் வேண்டப்படும் என்று உணர்த்தியவாறு.

நின்றிடலால் ஈர்ப்பது என்று அறிந்திட்டு என இயையும். தான்: அசை. ஈர்ப்பது என்பது, அத்தொழிலின் மேல்நின்றது. என்றும் என்னும் உம்மை, அவ்வீர்த்தலை மாற்றுதற்கு உபாயமாவது யாமும் அவ்வாணைவழி நிற்றல் என்றும் அறிந்தென எதிரது தழீஇயிற்று.

இவற்றினொடுந் தனையுடையான் என்றது, குறிப்பேதுவாய் நின்ற பெயர்.

வந்தனைசெய்தல், ஈண்டு அரன்பணியின் நிற்றன் மேற்று.

வருஞ் செயல்கள், உண்டேல் என்பது, ஒருமைப்பன்மை மயக்கம்.

வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்களுண்டேன் முந்தனுடைச்செயலென்ன முடித்தொழுகுதல், [1]"யானும்அதுவே வேண்டின் அல்லால் - வேண்டும் பரிசொன் றுண்டென்னின் அதுவும் உன்தன் விருப்பன்றே" என்ற திருவாக்கினும் அறிக.

அவ்வாறு முடித்தொழுகவும் வருஞ்செயல்கள் உளவாம் போலும் என்பாரை நோக்கி அங்ஙனம் வரம்பின்றி அநவத்தை யாதலில்லை யென்பார், 'ஆளாகி மீளான்' என்றுங் கூறினர். (ரு)

சலமிலனாய் ஞானத்தால் தனையடைந்தார் தம்மைத்
தானாக்கித் தலைவன்அவர் தாஞ்செய்வினை தன்னால்
நலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானாய்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்
உலகினில்என் செயல்எல்லாம் உன்விதியே நீயே
யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றாய் என்றும்
நிலவுவதோர் செயல்எனக்கின் றுன்செயலே யென்றும்
நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந் தானே.

(ப - ரை.) நீயே உள் நின்றும் (செய்கின்றாய்) - நீயே எனக்கு உள்நின்று செய்கின்றாய் ஆகலின், உலகினில் நிலவுவதோர் செயல் எனக்கு இன்று என்செயல்எல்லாம் உன்விதியே என்றும் - உலகின் கண் விளங்குவதோர் செயல் எனக்கின்று என்னாற் செய்யப்படும் இதம் அகிதம்எல்லாம் நீ செய்யும் செயலேயென்றும், செய்வித்தும் செய்கின்றாய் - (நீயே பிறரைக்கொண்டு) செய்வித்தும் செய்கின்றாயாகலின், உன் செயலேயென்றும் - (பிறரால் எனக்குவரும் (இதம் அகிதங்களும்) நீ செய்யும் செயலே (பிறிதில்லை) யென்றும், நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந்தானே - (இங்ஙனம்) அவனருளையல்லது ஒன்றனையுங் கருதாராய்த் தம்மையிழந்து நிற்கப் பெறுவார்மாட்டு அஞ்ஞான கன்மம் பிரவேசிக்கமாட்டாதாய் ஒழிந்துவிடும் ஆகலான், ஆய் ஞானத்தால் தனை அடைந்தார்தம்மை - (அப்பெற்றித்தாகிய) மெய்யுணர்வால் தன்னை யடைக்கலம் புக்காரை, தானாக்கிக் காப்பன் - தன்னைப் போலச் சுத்தராகச்செய்து பாதுகாப்பவனும், நாடி (யும்) அவரை நணுகாமல் வினை - (மந்திரவலியான் அடங்கி இரைநுகரப் பெறாது கிடக்கும் பாந்தள் யாதானும் ஓர் இலக்குவந்து வாய்த்துழி வறிது கிடவாதவாறுபோல, அவர்மாட்டெழுந்தும் அவரைச் சாரமாட்டாது ஒழிந்துகிடந்த அவ்வாகாமியவினை (அவர்க்கு இதம் அகிதங்களைச் செய்வார் பிறர்உளராயவழி அவ்வியைபுபற்றி ஆண்டவ் விதம் அகிதங்கட்குத் துணையாய்த் தலைக்கூடற்பாலதாகலின்), அவர் தாம்செய்வினை தன்னால் பிறர்செய்வினை நலமுடனே ஊட்டி ஒழிப்பானாய் - அதனை அவ்வாறு செலுத்திப் பிறர்செய்யும் இவ்விதமகிதங்களை (மிகுவித்து) நன்மையோடு நுகர்வித்தொழித்தல் செய்பவனுமாகியும், தலைவன் சலமிலன் - (அதுபற்றி) இறைவன் சலமுடையனாவானல்லன் என்க.

---

1. திருவாசகம், குழைத்தபத்து, எ.

(பொ - ரை.) நீயே எனக்கு உள் நின்று செய்கின்றாயாக லின் என்னாற் செய்யப்படும் இதம் அகிதம் எல்லாம் நீ செய்யுஞ் செயலேயென்றும், நீயே பிறரைக்கொண்டு செய்வித்துஞ் செய் கின்றாயாகலிற் பிறரால் எனக்கு வரும் இதம் அகிதங்களும் நீ செய்யுஞ் செயலே பிறிதில்லையென்றும், இங்ஙனம் அவன் அருளையல்லது ஒன்றனையுங் கருதாராய்த் தமையிழந்து நிற்கப் பெறுவார்மாட்டு, அஞ்ஞானகன்மம் பிரவேசிக்கமாட்டாதாய் ஒழிந்துவிடுமாகலான், அப்பெற்றித்தாகிய மெய்யுணர்வான் அடைக்கலம் புக்காரைத் தன்னையேபோலச் சுத்தராகச் செய்து பாதுகாத்தலும், மந்திரவலியான் அடங்கி இரைநுகரப்பெறாது கிடக்கும் பாந்தள் யாதானும் ஓர் இலக்கு வந்து வாய்த்துழி வறிது கிடவாதவாறுபோல, அவர்மாட்டெழுந்தும் அவரைச் சாரமாட்டாது ஒழிந்துகிடந்த அவ் வாகாமியவினை, அவர்க்கு இதம் அகிதங்களைச் செய்வார் பிறர்உளராயவழி அவ்வியைபு பற்றி ஆண்டவ்விதம்அகிதங்களுக்குத் துணையாய்த் தலைக் கூடற்பாலதாகலின், அதனை யவ்வாறு செலுத்திப் பிறர் செய் யும் அவ்விதம் அகிதங்களை மிகுவித்து நுகர்வித்தொழித்தலுஞ் செய்வன் ஆகலான், அதுபற்றி இறைவன் சலமுடையனாவா னல்லன்[1] எ - ம்.

ஆக்கிக்காப்பன்என இயையும்.

பிறரை யூட்டி யொழித்தலே அவரை வினை நணுகாமற் காப்பது எனக் கொள்க.

பிறரை அங்ஙனம் ஊட்டுதலுங் கருணையேயாம் என்பார் ஊட்டி யென்றொழியாது 'ஒழிப்பானு'யென்றும் 'நலமுடனே' யென்றுங் கூறினார்.

'உலகினில் என்செயல் எல்லாம் உன்விதியே நீயே உள்நின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றாய் என்றும், நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலேயென்றும் நினைவார்க்' கென்றதனால் அரன்பணியின் நின்றிடலாவது இதுஎனத் தெரித்துக் கூறியதூஉம் ஆயிற்று.

இறைபணியின் நிற்கும் இவன் பாதகத்தைச் செய்திடினும் பணி யாக்கிவிட்டு இவனுலகில் இதமகிதஞ் செய்த எல்லாம் இதமகிதம் இவ னுக்குச் செய்தார்பால் இசையச்செய்தல் இறைவனுக்குச் சலமாய் முடி யும் போலும் என்பாரை நோக்கி, அதனைத் தெரித்துணர்த்திச் சல மின்மை காட்டியவாறு. (௪

நாடுகளிற் புக்குழன்றுங் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்துந் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்

1. 'சார்ந்தாரை' சிவஞான போதம், ௧0. அதி. ௨-௨.

ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும்இறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியுங் கும்பிட்டே யிருப்பர்.

(ப - ரை.) நாடுகளிற் புக்குழன்றும் - புண்ணியதேயங்களிற் சென்று புண்ணியதல புண்ணிய தீர்த்தங்களைத் தரிசித்தும் ஆடியும், காடுகளிற் சரித்தும் - வனத்திலேசென்று கந்தமூல பலாதிகளை அயின்றும், நாகமுழை புக்கிருந்தும் - மலையிலுள்ள குகையில் யோகத்திருந்தும், தாகமுதல் தவிர்ந்தும் - (அவ் யோகப்பயிற்சி வலியினாற்) பசிநீர் வேட்கை முதலியன ஒழிந்தும், நீடு பல காலங்கள் நித்தராயிருந்தும் - நெடுங்காலம் மரணம் இல்லாதிருந்தும், நின்மல ஞானத்தையில்லார் - நிருமலமான இறைபணியின் நிற்றலாகிய மெய்த்தொண்டு செய்யும் ஞானம் இல்லாதார், பிறப்பில் நிகழ்ந்திடுவர் - சனனத்துட்படுவர், ஏடுதரும் மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே எறிபடு விழியின் கடைக்கே கிடந்தும் - இதழ்பொருந்திய மலர்மாலையணிந்த கூந்தலையுடைய மங்கையர் கொங்கையிடம் அல்குல் வீசப்பெற்ற கட்கடை முதலிய அவயவங்களைத் தோயப்பெறினும், இறை ஞானங் கூடும் அவர் - அரன்பணியின் நிற்றலாகிய ஞானத்தைப் பெற்றோர், கூட அரிய வீடும் கூடிக் குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே யிருப்பார் - பெறுதற்கரிய வீட்டினைத் தலைக்கூடிச் சிவந்த குஞ்சித பாதத்தின்கண் அடங்கி நிற்பர் என்க.

(பொ - ரை.) ஏனைப் பெரும்பேறெல்லாங் கொடுக்க வல்லனவாய எத்துணை நன்மைகளும், இங்ஙனம் அரன்பணியின் நிற்றலாகிய மெய்த்தொண்டு செய்யும் ஞானத்தால் தரப்படும் பேற்றைக் கொடுக்கவல்லுவன அல்ல; எல்லாப் பெரும் பேற்றையுங் கெடுக்கவல்லனவாய எத்துணைத் தீமைகளும், இதனால் தரப்படும் பெரும்பேற்றைக் கெடுக்கவல்லனவும் அல்ல; அத்துணைப் பெரியதோர் சிறப்பிற்று இவ்விறைபணி நிற்கும் ஞானம் எ - ம்.

அரன்பணி நிற்றலது ஆற்றல் கூறியவாறு.

சாக்கிரத்தே யதீதத்தையென்னுஞ் செய்யுளில், சாக்கிரத்தே யதீதத்தைப் புரிந்தவர்கள் சாக்கிரத்தின்நிற்றல் ஒப்புமை மாத்திரையே பற்றி அவரை யெல்லாரோடும் ஒப்பவைத்து இகழற்க என அவரது பெருமை யுணர்த்துவார், ஆக்குமுடி கவித்து அரசாண்டு நுங்கிடாவே யென ஆண்டுக் கூறினர்; அதனையே அரன்பணியின் நிற்றலான் ஆகற்பாலதன்கண் மற்றொன்றாற் செய்யக்கடவ தொன்றில்லையென அத்தொண்டின் பெருமை யுணர்த்துவார், ஈண்டும் எடுத்தோதினர். இங்ஙனம் கருத்துவகையாற் பொருள்வேறுபாடு உண்மையிற் கூறியது கூறலாகாமை கண்டுகொள்க. (௫)

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்
ஔடதமந் திரம்உடையார்க் கருவிடங்கள் ஏறா
எங்கித்தைக் கன்மமேலாஞ் செய்தாலும் ஞானிக்
கிருவினைகள் சென்றணையா முற்செய்வினை யிங்குத்
தங்கிப்போம் பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமுங் கந்தித்துச் சுழலு மாபோல்
மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா
மலங்களும்பின் காயமோடு மாயு மன்றே.

(ப-ரை.) அங்கித் தம்பனை வல்லார்க்கு அனல்சுடாதாகும் - (சுடுதற்கு ஏதுவாகிய) அங்கியைத் தம்பனஞ்செய்யவல்லார் அவ்வங்கி (யுள் மூழ்கிக் கிடப்பினும் அதுபற்றி யவர்மாட்டுச்) சூடு நிகழாதவாறும், மந்திரம் ஔடதம் உடையார்க்கு அருவிடங்கள் ஏறா - (கொலைத் தொழிற்கு ஏதுவாகிய விடங்களைத்தடுக்க வல்ல) மந்திர மருந்துகளைப் பெற்றுடையார் அவ்வரிய விடங்களையெல்லாம் நிறையப் பருகினும் (அதுபற்றி அவர்மாட்டுக்) கொலைத்தொழில் நிகழாதவாறும்போல, ஞானிக்கு எங்கித்தை (நின்று) கன்மமெலாஞ் செய்தாலும் - (விருப்பு வெறுப்புக்கள் நிகழ்தற்கு ஏதுவாகிய இந்திரியங்களை மேற்கூறிய முறையின் நின்று தம்வழிப்படுத்தவல்ல) ஞானிகள் எவ்விந்திரியங்களின் நின்று எத்தொழிலைச் செய்தாராயினும், இருவினைகள் சென்றணையா - (அதுபற்றி) அவர்மாட்டு விருப்பு வெறுப்பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லாமையானும், முன்செய்வினை மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் - ஏனைப் பிராரத்த வினையும் (தற்பணிநீத்த அவர்மாட்டுத் தலைக்கூடமாட்டாது வெந்தபடம்போலச்) சத்தி கெட்டேபோய் வாதனைமாத்திரையாய் நின்று சிறிதே தாக்கும் (அவ்வளவேயன்றி வாதனையாற் செய்யக்கடவது பிறிதில்லையாதல்), இங்குத் தங்கிப்போம் பாத்திரமுங் கந்தித்து - காயம் இருந்து ஒழிந்த பாத்திரத்தில் (அவ்வாதனை கிடந்து) கந்தித்தும் (ஒரு கறிக்கு உபயோகமாதலின்மையும்), குலாலன்வினை தவிர்ந்த சக்கரமும் சுழலுமா போல் - குயவனுவான் (குடத்தை வனையும் அளவும் சுழற்றிவிட்ட) திகிரியில் அவ்வாதனைகிடந்து தன் வேகம் உள்ளளவும் அதனை மெலிதாகச் சுழல்வித்து (மற்றொன்றனை வனைதற்கு உபயோகம் ஆதல் இன்மையும்) போலும் ஆகலானும், எல்லா மலங்களும் பின் காயமொடு மாயும் அன்றே - (வாதனை மாத்திரைக்குத் துணையாய் நின்ற) ஏனை மலவாதனைகளும் பின் அவ்வுடம்பு (மாயுங்காலத்து வேறொரு பற்றின்மையான் அத)னோடு மாய்ந்தொழியும் என்க.

(பொ-ரை.) சுடுதற்கு ஏதுவாகிய அங்கியைத் தம்பனஞ் செய்யவல்லார் அவ்வங்கியுள் மூழ்கிக் கிடப்பினும் அதுபற்றி அவர்மாட்டுச் சூடு நிகழாதவாறும், கொலைத்தொழிற்கு ஏதுவாகிய விடங்களைத் தடுக்கவல்ல மந்திர மருந்துகளைப் பெற்றுடையார் அவ்விடங்களையெல்லாம் நிறையப் பருகினும் அதுபற்றி அவர்மாட்டுக் கொலைத்தொழில் நிகழாதவாறும் போல், விருப்பு வெறுப்புக்கள் நிகழ்தற்கு ஏதுவாகிய இந்திரியங்களை

மேற்கூறிய முறையின்நின்று தம் வழிப்படுத்தவல்ல ஞானிகள் எவ் விந்திரியங்களின் நின்று எத்தொழிலைச் செய்தார்களாயினும் அதுபற்றி அவர்மாட்டு விருப்பு வெறுப்பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லாமையானும், ஏனைப் பிராரத்த வினையுந் தற்பணி நீத்த அவர்மாட்டுத் தலைக்கூடமாட்டாது வெந்தபடம்போலச் சத்திகெட்டே போய் வாதனைமாத்திரையாய் நின்று சிறிதே தாக்கும் அவ்வளவேயன்றி வாதனையாற் செய்யக்கடவது பிறிதில்லையாதல், காயம் இருந்து ஒழிந்த பாத்திரத்தில் அவ்வாதனை கிடந்து கந்தித்தும் ஒருகறிக்கு உபயோகமாதல் இன்மையுங் குயவனுவான் குடத்தை வனையும் அளவுஞ் சுழற்றிவிட்ட திகிரியில் அவ் வாதனை கிடந்து தன் வேகமுள்ள அளவும் அதனை மெலிதாகச் சுழல்வித்து மற்றொன்றனை வனைதற்கு உபயோகமாதலின்மையும் போலும் ஆகலானும், வாதனைமாத்திரைக்குத் துணையாய் நின்ற ஏனை மலவாதனைகளும் அவ்வுடம்பு மாயுங்காலத்து வேறொரு பற்றின்மையான் அதனோடு மாய்ந்தொழியும் எ - ம்.

இங்குத் தங்கிப்போம் பாத்திரம் தீவிரவாதனைக்கும், வினைதவிர்ந்த சக்கரம் மந்தவாதனைக்கும் உவமையாயின.

எங்கென்பது, எங்கித்தையென மரீஇயிற்று. நின்றென்பது: சொல்லெச்சம்.

கந்தித்து என்னும் வினையெச்சம் எச்சப்பொருள் தாராது செவ்வெண் மாத்திரையே குறித்து நின்றது; "பயந்துகாத்தழிக்கும் மற்றை மூவர்' என்றாற்போல.

மங்கியென்றொழியாது போயென்றார் வலியுறுத்துதற்கு. உவமையெடுத்துக் காட்டியதும் அதனைத் தெளிவித்தற்பொருட்டு.

இச்செய்யுள் மேல் ஒருவாற்றான் வலியுறுத்தப்பட்ட மூன்றாங் கூற்றை வருஞ்சூத்திரத்தின் இயைபுபற்றி யெடுத்துக்கொண்டு தடைவிடைகளாற் சாதித்தற் பொருட்டு ஈண்டுத் தோற்றுவாய் செய்து கொள்ளுமுகத்தானே, மேலைச்செய்யுளின் ' எறிவிழியின் படுகடைக்கே கிடந்துங் கும்பிட்டே யிருப்ப' என்றதனை உவமைகளின் வைத்துணர்த்தி இனிது விளக்கியவாறு.

இவை நான்கு செய்யுளானும் இரண்டாம் கூற்றின்கட் படுமாறெல்லாம் வகுத்துக் கூறப்பட்டன. (௬)

**பத்தாம் சூத்திரம் முடிந்தது.**

**ஆகத் திருவிருத்தம் - ௩0௬.**

---

1. திருவாசகம், திருச்சதகம், ௩0.

# பதினொராஞ் சூத்திரம்

இங்ஙனம் பத்தாஞ் சூத்திரத்தாற் பெத்தத்தினின்று நீங்கப்பெற்றார்க்கு முத்திப்பயன் பெறுமாறு வகுத்துக் கூறுதற் கெழுந்தது பதினொராஞ் சூத்திரம். முத்தியென்றது ஈண்டுத் தலைமைபற்றிச் சிவப்பேற்றின் மேல்நின்றது.

காயம்ஒழிந் தாற்சுத்த னாகி ஆன்மாக்
காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்
கேயும்உயிர் காட்டிக்கண் டிடுமா போல
ஈசன்உயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயும்அறி வுடையனாய் அன்பு செய்ய
அந்நிலைமை யிந்நிலையில் அடைந்தமுறை யாலே
மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீழ் இருப்பன்
மாறாத சிவானுபவம் மருவிக் கொண்டே.

(ப-ரை.) காட்டக் கண்டிடும் தன்மை உடைய கண்ணுக்கு-காட்டக்காணுந் தன்மையுடைய கண்ணிந்திரியத்துக்கு (ஓர் உருவத்தைக் காணும்படி), ஏயும் உயிர் காட்டிக் கண்டிடுமாபோல - பொருந்திய உயிர் (அத்துடனாய் நின்று) காட்டுதன் மாத்திரையே யன்றி (அக்கண்ணொளியோடு கூடச்சென்று அவ்வுருவத்தை)க் காணுதலுஞ் செய்து உபகரிக்குமாறுபோல, உயிர்க்கு - உயிர்க்கு (ஓர்விடயத்தை அறியும்படி), ஈசன் காட்டிக் கண்டிடுவன் - முதல்வன் (உடன்நின்று) அறிவித்தன் மாத்திரையே யன்றி (அவ்வுயிருணர்வோடுகூட அத்துவிதமாய்ச் சென்று அவ்விடயத்தை) அறிதலுஞ்செய்து உபகரித்துவரும் ஆகலான், காயம் ஒழிந்தால் சுத்தனாகி ஆன்மா - (எல்லாமலங்களும் பின்காயமொடு மாயும் என மேலைச்சூத்திரத்து இறுதியிற் கூறியவாற்றாற்) காயம் ஒழிந்தான் (மும்மலங்களும் நீங்கப்பெற்றுச்) சுத்தனுவோனாகிய ஆன்மா, இத்தை ஆயும் அறிவு உடையனாய் - (முதல்வன்) இங்ஙனம் அத்துவிதமாய் நின்று உபகரித்துவரும் உரிமையைக் கடைப்பிடித்தறிந்துகொண்டு நிற்கப்பெறின், அன்புசெய்ய - (அத்தொடர்பு பற்றிய அம்முதல்வன் திருவடிகளைத் தலைப்படுதற்கண்) இச்சை இடையறாது நிகழும் அங்ஙனம் அறிவு இச்சைகள் இரண்டும் பிறிதொன்றிற் சேறலின்றி அவ்வத்துவித நிலையொன்றேபற்றி முதல்வன் திருவடிக்கண்ணவாய் ஒருங்குநிகழவே, அந்நிலைமை இந்நிலையில் அடைந்தமுறையாலே - காயம் ஒழிந்தபின் மலநீங்கிச் சுத்தனாய் நிற்குமுறைமை காயத்தோடு நிற்புழித் தானே கைகூடப் பெறுதலால், மாயம் எலாம் நீங்கி - (ஏனைக் கிரியையுமே) எல்லாமலங்களையும் (இம்மையே) நீத்தொழித்து (அவ்வறிவிச்சைகளோடொப்ப ஒருவழிக்கொண்டு), அரன் மலர் அடிக்கீழ் மாறாத சிவாநுபவம் மருவிக்கொண்டே இருப்பன் - அம்முதல்வனது செங்கமல மலர்போலுந் திருவடியைத் தலைக்கூடப்பெற்று மாறுபடாத சிவாநுபூதியே சுவாநுபூதியாகக் கொண்டு வாழ்வன் என்க.

(பொ - ரை.) கண்ணிந்திரியம் ஓர் உருவத்தைக் காணும்படி உயிர் அத்துடனாய் நின்று காட்டுதன் மாத்திரையேயன்றி அக்கண்ணொளியோடு கூடச் சென்று அவ்வுருவத்தைக் காணுதலுஞ் செய்து உபகரிக்கும்; அதுபோல, உயிர் ஒரு விடயத்தையறியும்படி முதல்வன் உடன்நின்று அறிவித்தன் மாத்திரையேயன்றி அவ்வுயிருணர்வோடுகூட அத்துவிதமாய்ச் சென்று அவ்விடயத்தை அறிதலுஞ்செய்து உபகரித்துவரும்; ஆகலான், எல்லா மலங்களும் பின்காயமொடு மாயும் என மேலைச்சூத்திரத் திறுதியிற் கூறியவாற்றாற் காயம் ஒழிந்தான் மும்மலங்களும் நீங்கப்பெற்றுச் சுத்தனாவோனாகிய ஆன்மா, முதல்வன் இங்ஙனம் அத்துவிதமாய் நின்று உபகரித்து வரும் உரிமையைக் கடைப்பிடித் தறிந்துகொண்டு நிற்கப்பெறின், அத்தொடர்பு பற்றிய அம்முதல்வன் திருவடிகளைத் தலைப்படுதற்கண் இச்சை இடையறாது நிகழும்; அங்ஙனம் அறிவிச்சைகள் இரண்டும் பிறிதொன்றிற் சேறலின்றி அவ்வத்துவிதநிலை யொன்றே பற்றி முதல்வன் திருவடிக்கண்ணவாய் ஒருங்கு நிகழவே, காயமொழிந்தபின் மலநீங்கிச் சுத்தனாய் நிற்கு முறைமை காயத்தோடு நிற்புழித் தானே கைகூடப் பெறுதலால், ஏனைக் கிரியையுமே எல்லா மலங்களையும் இம்மையே நீத்தொழித்து அவ்வறிவு இச்சைகளோடு ஒப்ப ஒருவழிக்கொண்டு அம் முதல்வன் திருவடியைத் தலைக்கூடப் பெற்று, சிவானுபூதியே சுவானுபூதியாகக்கொண்டு வாழ்வன் எ - ம்.

அத்துவிதநிலை விளக்குவதாகிய காணும் உபகார மாத்திரையே ஈண்டுக் கூறப்புகுந்தார், இனிது விளங்குதற்பொருட்டு ஐந்தாஞ் சூத்திரத்துட் கூறிப்போந்த காட்டும் உபகாரத்தையும் அனுவதித்து உடன் கூறினார். ஈண்டுக் காணும் உபகாரமாத்திரையே கூறுதல் கருத்து என்பது முதனூலின் [1]'உளளத்தைக் கண்டுகாட்டல்' என்பதற்கு 'அவனுமவற்றது விடயத்தையுணரும் என்றது' எனக் காணும் உபகார மாத்திரையே வேறு எடுத்துக்கொண்டு உரைத்த கண்ணழிப்புரையானும் உணர்க. காட்டும் உபகார மாத்திரையேயன்றி அதன்பின்னாக உடன்நின்று காணும் உபகாரமும் வேண்டப்படும் என்பது [2]எவ்விடத்தும் என்னுஞ் செய்யுளின் விளங்கக் காட்டுதும்; ஆண்டுக் காண்க.

காயமொழிந்தாற் சுத்தனாகி ஆன்மா இத்தையாயும் அறிவுடையனாய் என வியையும்.

ஆகியென்றது பெயர்.

அந்நிலையென்பதற்கு வேறுவேறுரைப்பாருமுளர். அகரச்சுட்டு அடுக்க நின்றதனை யொழித்து வேறொன்றனைச் சுட்டுதல் செல்லாமையும் பிறவும் அவர் நோக்கிலர்.

1. சிவஞானபோதம், பதினொராஞ் சூத்திரம்.
2. இச்சூத்திரம் 7-வது செய்யுள்.

இருவகைப்பயனும் ஒருங்கே சேரவைத்து விளக்குவாராய், மேலைச் சூத்திரத்து வேறுகூறாக வையாது ஒருவாறு வலியுறுக்கப்படும் மூன்ருங் கூற்றைக் காயமொழிந்தாற் சுத்தனுகியெனவும், அந்நிலைமை இந்நிலையி லடைந்த முறையாலே மாயமெலா நீங்கியெனவும், அதனெழி பாக ஈண்டெடுத்துக் கொண்டாராகலின், அதனேடுளப்பட்ட இச் செய்யுள் முக்கூற்றதாயவாறு கண்டுகொள்க. (க)

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்
தருஞானம் போகஞா திருஞான ஞேயந்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகுந்
திருஞானம் இவையெல்லாங் கடந்தசிவ ஞானம்
ஆதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்.

(ப - ரை.) பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் - இத்தை ஆயும் அறிவெனப்பட்ட பரஞானத்தால் அச்சிவத்தை(த் தெளிய) நோக்கி அன்புசெய்யப்பெற்ருர், பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் - அவ்வொன்றனையே உணர்ந்துகொண்டு நிற்பரன்றி (மேற் கூறிய பிராரத்தவாதனை தாக்குதற்குரிய ஏனை)ப் பதார்த்தங்களை(ச் சிறிதுங்) காண்பாரல்லர், பார்க்க வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம் - (அவற்றைக்) காண வருஞானங்களாவன (கருவிகளைப் பற்றி நின்றறியுங் காட்சி அனுமானம் உரையெனப்) பலவகைப்பட்ட (அளவை) ஞானங்கள் (அவையெல்லாஞ்) சுட்டுணர்வின் பேதமாகலானும், வாச்சிய வாசகஞானம் கலக்கந்தரு வயிந்தவத்தின் ஞானம் - (ஏனைக் கேட்டலின் கண்ணதாகிய) சாத்திரஞானம் ஐயந்தருவதாய் (நால்வகை வாக்கைப்பற்றி நிகழும்) விந்துஞானமேயாகலானும், போகத் தங்கிய ஞாதிரு ஞான ஞேயஞானம் சங்கற்பனை ஞானமாகும்- (அக்கலக்கந் தருஞானம்) போம்படி (சிந்தித்துத் தெளிதற்கண்ண தாய்த்) தங்கிய பேதஞானமும் பாவனைஞானமாதலே யன்றி (அனுபூதி) ஞானமாகாமையானும், இவையெல்லாங் கடந்த சிவஞானம் திருஞானம் - இவையனைத்திற்கு மேலாய் (ஈண்டுக் கூறப்பட்ட இச்) சிவஞானம் (ஒன்றே பதார்த்தங்களைப் பார்க்கவராத) சிறப்புடைய ஞானம், ஆதலால் சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர் - ஆகலான் (இதனைப்பெற்ற) சீவன்முத்தர் சிவம் ஒன்றே கண்டிருப்பர் (அன்றி ஏனைப் பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்த வாதனையிற் படுவாரல்லர்) என்க.

(பொ - ரை.) இத்தையாயும் அறிவு எனப்பட்ட பரஞானத்தால் அதனைத் தெளிய நோக்கி அன்பு செய்யப்பெற்ருர், அவ்வொன்றனையே உணர்ந்துகொண்டு நிற்பரன்றி மேற்கூறிய பிராரத்தவாதனை தாக்குதற்குரிய ஏனைப் பதார்த்தங்களைச் சிறிதுங் காண்பாரல்லர்; அவற்றைக் காண வரு ஞானங்களாவன: கருவிகளைப்பற்றி நின்றறியுங் காட்சி அனுமானம் உரையெனப் பல

வகைப்பட்ட அளவைஞானங்கள்; அவையெல்லாஞ் சுட்டுணர்வின் பேதமாகலானும், ஏனைக் கேட்டலின் கண்ணதாகிய சாத்திர ஞானம் நால்வகை வாக்கைப்பற்றி நிகழும் விந்துஞானமே யாகலானும், சிந்தித்துத் தெளிதற் கண்ணதாகிய பேதஞான மும் பாவனைஞான மாதலேயன்றி அநுபூதி ஞானமாகாமை யானும், இவையனைத்திற்கும் மேலாய் ஈண்டுக் கூறப்பட்ட இச் சிவஞானம் ஒன்றே பதார்த்தங்களைப் பார்க்க வராத சிறப் புடைய ஞானம் ஆகலான், இதனைப் பெற்ற சீவன் முத்தர் சிவம் ஒன்றே கண்டிருப்பரன்றி ஏனைப் பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்த வாதனையிற் படுவாரல்லர் எ - ம்.

சிவமே கண்டிருப்பரென்றது முடிந்தது முடித்தல். ஏகாரம் பிரி நிலை.

ஈண்டு அஞ்ஞானம் என்றது சுட்டுணர்வின் மேற்று.

கலக்கம் - ஐயம். கேட்டல் அறிவு மேற் சிந்தித்துத் தெளியும்படி ஐயத்தை விளைத்தல்பற்றி, அதனைக் கலக்கந்தரு ஞானம் என்றார். போகத் தங்கிய ஞானம் என்றது அக் கலக்கந்தருஞானம் போம்படி அவ்வாறு தங்கிய ஞானம் என்றவாறு.

சீவன்முத்தர் பிறிதொன்றனைப் பாரார் என வற்புறுத்து ஓதிய இதனானே, பிராரத்தவினை மங்கிப்போயவழியும் மங்காது நின்று உழல் விப்பதாகிய அதன் வாதனை பற்றறக் கழியுமாறு சாதிக்கப்பட்டது. (உ)

அநாதியுடல் ஒன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மால்
ஆய் அழிந்து வருதலால் அந்தம் இல்லை
பிஞதியருள் பெற்றவர்கள் நித்தஉரு வத்தைப்
பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே யிதுவும்
இஞதுநிலை யிதுதானுங் காயம் உண்டேல்
இருங்கன்மம் மாயைமலம் எல்லாம் உண்டாம்
மஞதிதரும் உடலாதி காரியத்தால் அநாதி
மலமறுக்கும் மருந்தற்றால் உடன்மாயுங் காணே

(ப - ரை.) உடல் அநாதி ஒன்றினைவிட்டு ஒன்றுபற்றிக் கன்மால் ஆய்ப் பின் அழிந்து வருதலால் அந்தம் இல்லை - உடம்பாவது அநாதியாய் (உயிரைப்பற்றி நீரோட்டம்போல)த் தொடர்ச்சியாய்க் கன்மத்திற்கேற்ப ஆகியும் பின்னர் அழிந்தும் வருவதாகலான் அதற் கொரு முடிவு கூறுதல் பொருந்தாமையின், ஆதி அருள் பெற்றவர்கள் நித்த உருவத்தைப் பெற்றிருக்கை முத்தியெனில் - (உருவசிவசம வாதிகள்) முதல்வனருளைப் பெற்றவர்கள் (இவைபோலன்றி) நித்திய சுத்த மங்களமயமான திப்பிய சரீரத்தைப்பெற்றிருத்தல் முத்தி யென்பர் எனின், காயம் உண்டேல் மாயை இருங் கன்மம் மலம் எல்லாம் உண்டாம் - உடம்புளதாகவே (அதற்குக் காரணமாகிய) மாயையும் (அதன்கண் நிகழும் உண்டிவினைகட் கேதுவாகிய) மிக்க கன்மமும் (அதனை இயைவிப்பதாகிய) ஆணவமலமுமாகிய அனைத்தும்

விட்டு நீங்குதலில்லை, இதுதானும் இனாது நிலை - அதுவும் இன்னுமை யைப் பயக்கும் நிலையேயாம், இதுவும் பதமே பெறும் - (ஆகவே) அதனை (முத்தியென்பதற்குத் தாற்பரியம்) பதமுத்தியென்பதேயாம், மனாதி தரும் உடல் காரியத்தால் ஆதி - மனமுதலிய புரியட்டக உடம்பி னின்றுந் தோன்றுவதாகிய இவ்வுடம்பு அக்காரியப்பாட்டால் ஆதியாய், அநாதி மலம் அறுக்கும் மருந்து அற்றால் உடன் மாயுங் காணே - அநாதியாகிய மலநோய் தீர்தற்கு மருந்தாய் (வரும் இஃது அக்காரண) நீங்கிய வழித் தானும் உடன்நீங்குவதாம் (ஆகலான் அது பொருந்தாது) என்க.

(பொ - ரை.) உடம்பாவது அநாதியாய் உயிரைப் பற்றி நீரோட்டம் போலத் தொடர்ச்சியாய் வருவதாகலான் அதற் கொருமுடிபு கூறுதல் பொருந்தாமையின, முத்தியினும் இவை போலன்று நித்தியசுத்த மங்களமயமான திப்பிய சரீரம் உண் டென்னும் உருவசிவசமவாதிகள் மதம் அடாது, உடம்புள தாகவே அதற்குக் காரணமாகிய மாயையும் அதன்கண்நிகழும் உண்டிவினைகட் கேதுவாகிய கன்மமும அதனை இயைவிப்ப தாகிய ஆணவமலமும் விட்டுநீங்குதலின்மையின் அதுவும் இன்னுமையைப் பயக்கும் நிலையேயாகலானும், ஆகவே யதனை முத்தியென்பதற்குத் தாற்பரியம் பதமுத்தியென்பதேயாம் ஆகலானும், மனமுதலிய புரியட்டக உடம்பினின்றுந் தோன்று வதாகிய இவ்வுடம்பு அக் காரியப்பாட்டால் ஆதியாய் அநாதி யாகிய மலநோய் தீர்தற்கு மருந்தாய்வரும்; இஃது அக் காரணம் நீங்கியவழித் தானும் உடன் நீங்குவதன்றி நிற்றற்கோர் இயை பின்மையான் அந்தமாதற்கண் ஆசங்கையின்மையானும் எ - ம்.

இதனானே மாயாமலம் பற்றறக்கழியுமாறு தடைவிடைகளாற் சாதிக்கப்பட்டது. (௩)

தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்கும்இங்கே சீவன்முத்த னாகும்
உரியமலம் ஔடதத்தால் தடுப்புண்ட விடமும்
ஒள்ளெரியின் ஒளிமுன்னர் இருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும் போலாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயந்
திரியுமள வும்உளதாய்ப் பின்பு காயஞ்
சேராத வகைதானுந் தேயும் அன்றே.

(ப - ரை.) தெரிவு அரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்தவாறே - (மேற் கூறிய) தெரிதற்கரிய மெய்ஞ்ஞானத்தைப் பெற்றவழியும், சிவம் பிரகாசிக்கும் - (அதனாற்) சிவம் பிரகாசித்தவழியும், இங்கே சீவன் முத்தனாகும் - (அதனால்) ஈண்டுச் சீவன்முத்தராயவழியும் (முறையே), தேற்றின் வருபரல் சேர் நீர் மருவு கலங்கலும் - தேற்றாமரத்துண் டாகிய வித்தினால் தேற்றப்பட்ட நீரின்மருவிய கலங்கலும், ஒள்

எரியின் ஒளி முன்னர் இருளும் - மிக்க அக்கினிப்பிரகாசத்திற்கு முன்னர் இருளும், ஔடதத்தால் தடுப்புண்ட விடமும் போலாகி - மருந்தினுல் தடைப்பட்ட நஞ்சமும்போல, உரிய மலம் மாயாதே தன் சத்தி மாய்ந்து காயம் திரியும் அளவும் உளதாய் - சகசமாகிய ஆணவ மலங்கெடாது தனது சத்திகெட்டு (வாதனை மாத்திரையாய்) அவ்வுடம்பு உள்ள அளவும் நின்று, பின்பு காயம் சேராதவகைதானும் தேயும் அன்றே - மற்றொரு பிறவிக்கு ஏதுவாதலின்றி அதனோடு கழிந்தொழியும் என்க.

(பொ - ரை.) மேற்கூறிய மெய்ஞ்ஞானத்தைப் பெற்ற வழியும், அதனுற் சிவம் பிரகாசித்தவழியும், அதனுற் சீவன் முத்தராய வழியும், முறையே தேற்றின் வருபரல்சேர் நீர்மருவு கலங்கன் முதலிய மூன்றும்போல ஆணவமலந் தனது சத்தி கெட்டு வாதனை மாத்திரையாய் அவ்வுடம்பு உள்ள அளவும் நின்று, மற்றொரு பிறவிக்கு ஏதுவாதலின்றி அதனோடு கழிந்தொழியும். எ - ம்.

தேற்றின் வருபரல்சேர் நீர்மருவு கலங்கல் பரஞானஞ் சேரப்பெற்றூர்மாட்டு மாய்ந்து கிடக்கும் மலசத்தி ஒருகாரணத்தான் மேற்படினும் ஒட்டின்றி யங்ஙனம் விண்டொழிதற்கும், சிவம் பிரகாசித்தார்மாட்டு ஒள்ளெரியினெளிமுன் இருள் அஃதாண்டைக்குச் சிறிதாயினும் இயைபின்றியுஞ் சேய்மைக்கண்ணுள்ளதுபோலத் தோன்றுதற்கும், ஔடதத்தால் தடுப்புண்டவிடம் சீவன்முத்தராகப்பெற்றூர்மாட்டு ஒருவாற்றானும் இயைபின்றியும் அந்நிலையின் மெலிவு பார்த்திருத்தற்கும் உவமையாயின. எதிர்நிரல் நிறையாக வைத்துக் கண்டுகொள்க.

ஒள்ளெரியென விசேடித்ததனுல் விளக்கு முதலிய அற்ப எரியின் ஒளிகள் நீக்கப்பட்டன.

இதனுனே ஆணவமலம் பற்றறக் கழியுமாறு கூறப்பட்டது. (ச)

ஆணவந்தான் அனதியந்த மடையா தாகும்
அடையின்அந்த ஆன்மாவும் அழியும்எனிற் சேம்பிற்
காணலுறுங் களிம்பிரத குளிகைபரி சிக்கக்
கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோம் அன்றே
தாணுவின்தன் கழலிணையத் தவிரும்மலந் தவிர்ந்தால்
தான்சுத்த னுயிருக்கை முத்திஅரன் தாளைப்
பூணவேண் டுவதோன்றும் இல்லையேனின் அருக்கன்
புகுதஇருள் போம்அடியிற் பொருந்தமலம் போமே.

(ப - ரை.) ஆணவந்தான் அநாதி அந்தம் அடையாதாகும் - (முற்கூறப்பட்ட) ஆணவமலம் அநாதி (நித்தமாதலால்) நாசமடைவதின்று, அடையின் அந்த ஆன்மாவும் அழியுமெனின் - நாசமுறுமாயின் அவ்வான்மாவும் அழியு (மெனப்பட்டு நித்தமாதற்கு இழுக்காய்முடியும்) எனின் (அற்றன்று), இரதகுளிகை பரிசிக்கச் செம்பில் காணலுறு களிம்பு கழியும் - இரதகுளிகை பரிசித்த மாத்திரையே செம்போடு சகசமாய் நின்ற களிம்பு நீங்கும் (நீங்கவே), செம்பு உரு நிற்கக்

*கண்டோம் அன்றே - செம்புரு வேறுநிற்றல் கண்டாமாகலின் (அது போல), தாணுவின்றன் கழல் அணைய மலம் தவிரும் - அரன் திருவடியாகிய மெய்ஞ்ஞானஞ் சார்ந்த மாத்திரையே (உயிரோடு சகசமாய் நின்ற) ஆணவமலம் நசிக்கும், தவிர்ந்தால் தான் சுத்தனாய் இருக்கை முத்தி - நசித்தவழி உயிர் வேறாய் நிற்றல் முத்தி (என்றற்கோரிழுக்கின்மையான் முத்தி நிலையினுஞ் சகசமல நீங்குமாறில்லையென்னும் பாடாணவாதசைவர்மதமும்), அரன்தாளைப் பூணவேண்டுவது ஒன்றும் இல்லையெனின் - (மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலநீங்கப் பெறும் அதுவே முத்தியாதல் அமையும் அதன்மேலும்) அரன் திருவடியைக் கலத்தல்வேண்டாவெனப் பேதவாதசைவர் கூறுவரெனின், அருக்கன் புகுத இருள்போம் - அருக்கன் ஒளி மேவியவழி (அருக்கனோடு கண்ணொளி கலந்தாலே) இருள் பற்றறக் கழியும் (அதுபோல), அடியில் பொருந்தவே மலம் போம் - (மெய்ஞ்ஞானஞ் சேரினும் சிவம்பிரகாசித்துத்) திருவடியை உயிர் பொருந்தினாலே ஆணவமலம் பற்றறக்கழியும் (ஆதலால் அவர் மதமும் அடா) என்க.*

**(பொ - ரை.)** *இரதகுளிகை பரிசித்தமாத்திரையே செம்போடு சகசமாய் நின்ற களிம்பு நீங்கச் செம்புரு வேறுநிற்றல் கண்டாமாகலின், அதுபோல மெய்ஞ்ஞானஞ் சார்ந்த மாத்திரையே உயிர் வேறாய் நிற்ப உயிரோடு சகசமாய் நின்ற ஆணவமலம் நசிக்குமென்றற்கு ஓர் இழுக்கின்மையான், முத்தியினுஞ் சகசமலம் நீங்குமாறில்லையென்னும் பாடாணவாதசைவர் மதமும், அருக்கன் ஒளி மேவினும் அருக்கனொடு கண்ணொளி கலந்தாலன்றி இருள் பற்றறக் கழியாதவாறுபோல மெய்ஞ்ஞானஞ் சேரினும் சிவம் பிரகாசித்துத் திருவடியை உயிர் பொருந்தினாலன்றி ஆணவமலம் பற்றறக் கழியுமாறின்மையின், மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலம் நீங்கப்பெறும்; அதுவே முத்தியாதல் அமையும் அதன்மேலுந் திருவடியைக் கலத்தல் வேண்டா என்னும் பேதவாத சைவர் மதமும் அடா எ - ம்.*

*இதனானே தடைவிடைகளான் மேலது சாதிக்கப்பட்டது.* (௫)

நெல்லினுக்குத் தவிடுமிகள் அநாதி யாயே
நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பால் இல்லை
தோக்கிருந்து மற்றொருநெல் தோன்றி டாவாம்
மேல்லஇவை விடும்அறவே யிவைபோல அணுவை
மேவும்மலம் உடல்கன்மம் அநாதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கும் ஆதலால் நாசமும்இன் றாமே.

**(ப - ரை.)** *நெல்லினுக்கு அநாதியாயே முளை தவிடு உமிகள் நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர் - அரிசியொடுஞ் சகசமாய் நின்ற முளை தவிடு உமிகள் அவ்வரிசியைவிட்டுக் கெட்டொழிய*

அரிசி கேடின்றி நிலைபெறுதல் (கண்டாம் அவ்வியல்பு) கூறுவீராக (எனின்), தொக்கு இருந்தும் மற்று ஒருநெல் தோன்றிடாவாம் - (அம் மூளை முதலியன) அடங்கிநிற்குமேனும் (அவ்வரிசி முன்போல) வேறொரு நெல்லுத் தோன்றுதற்குக் காரணமாதல் செல்லாவாம் (அங்ஙனஞ் செல்லாமையான்), சொல்லியிடின் துகள் அற்ற அரிசியின்பால் இல்லை மெல்ல இவை அறவேவிடும் இவைபோல - (அவை) சொல்லுமிடத்துக் குற்றமற்ற (அவ்) வரிசியின்கண் அடங்கி நிற்குமென்றற்கோர் இயைபின்மையின் மெல்ல (மெல்ல நீங்கி) அவை ஆண்டில்லையென்பதே தேற்றம் அவைபோல, அநாதி அணுவை மேவுமலம் உடல் கன்மம் நல்ல சிவமுத்தியின்கண் விட்டே நீங்கும் - அநாதியே உயிர்களோடு சகசமாய் நின்ற மல மாயை கன்மங்களாகிய மும்மலங்களும் நல்ல சிவமுத்தி நிலைக்கண் விண்டொழியும் என்றே கொள்க, பெத்தான்மாவை நணுகி நிற்கும் ஆதலால் நாசமும் இன்றாமே - (ஆண்டு) விண்டொழியினும் (ஏனைப்) பெத்தரிடத்துக் காணப்படுதலால் அவை நித்தப்பொருளாதற்கும் இழுக்கில்லை என்க.

(பொ - ரை.) அரிசியொடுஞ் சகசமாய் நின்ற மூளை தவிடு உமிகள் கெட்டொழிய அரிசி கேடின்றி நிலைபெறுதல் கண்டாம்; அவ்வரிசி முன்போல வேறொரு நெல்லுத் தோன்றுதற்குக் காரணமாதல் செல்லாமையான் அவை யவ்வரிசியின்கண் அடங்கி நிற்கும் என்றற்கு ஓரியைபின்மையின், அவை ஆண்டில்லை யென்பதே தேற்றம். அவைபோல அநாதியே உயிர்களோடு சகசமாய் நின்ற மும்மலங்களும் முத்திநிலைக்கண் விண்டொழியு[1] மென்றே கொள்க. ஆண்டு விண்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்துக் காணப்படுதலால் அவை நித்தப்பொருளாதற்கும் இழுக்கில்லை எ - ம்.

[2]'இத்தைவிளை வித்தன்மலம்' என்பதூஉமறிக.

மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலம் பற்றறக்கழியுமென்பாரையும் ஈண்டு மறுப்பார்,[3] மெல்லவிவை விடும் அறவே யென்றுங் கூறினர். ஏகாரந் தேற்றம்.

இனம் பற்றியும் உவமேயம் பற்றியும் மூளையும் உடன் வைத்துரைக்கப்பட்டது.

இதனானே இரதகுளிகை பரிசித்த செம்பிலுங் களிம்பு தொக்கிருக்குமெனக் கோடும் என்பாரை நோக்கித் தொக்கிருத்தல் செல்லாமை அநுபலத்தியேதுவின் வைத்துணர்தற்பொருட்டு, வேறுமோருவமை கூறுமுகத்தான் அம்மூன்றும் ஒருங்கே வலியுறுத்தப்பட்டன.

இவை யைந்து செய்யுளும் மேலைச்சூத்திரத்தின் அகலுங் குற்றமென்ற இறுதிக்கூற்றின் ஒழிபாய் இயையுபற்றி ஈண்டுவைக்கப் பட்டன. (௬)

1. முத்தியின் மலம் நீங்கும்
2. மலம் நித்தியம் உண்மை விளக்கம், ௫௧.
3. மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலம் நீங்கப்பெறாது.

# முதல் அதிகரணம்

எவ்விடத்தும் இறையடியை யின்றியமைந் தொன்றை
யறிந்தியற்றி யிடாஉயிர்கள் ஈசன் தானுஞ்
செவ்விதினில் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்ற
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
அவ்வுயிர்போல் நின்றிடுவன் ஆத லான்நாம்
அரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே

(ப - ரை.) எவ்விடத்தும் இறை அடியை இன்றி உயிர்கள் அமைந்திடா - பெத்தமுத்தியிரண்டினும் இறைவன் திருவடியையின்றி ஆன்மாக்கட்கு (அறிவுசெயல்கள் விளங்குதலும் விளங்கியபின் விடயத்திற் சென்று பற்றுதலும்) அமையமாட்டா (அதுபற்றி), ஈசன்தானும் - இறைவனும், அம் முதலெழுத்துக்கெல்லாமாய் நிற்கும் அவ்வுயிர்போல் இவ்வுயிர்கள் தோற்றும்போது அவனையின்றித் தோற்ற இவற்றினுக்கு நின்றிடுவன் - அக்கரங்களை இயக்குதற்பொருட்டு அவற்றுடன் நிற்கும் அகரம்போல அவ்வான்மாக்கட்கு அறிவுசெயல்கள் விளங்குங்கால் அவனையின்றி விளங்காமையின் அவை விளங்குதற்பொருட்டு அவ்வுயிர்களோடு கலந்து நிற்பன், ஒன்றை அறிந்து இயற்ற - (அங்ஙனம் விளங்கிய அறிவுசெயல்கள்) ஒரு விடயத்திற் சென்று பற்றுதற் பொருட்டு, செவ்விதினில் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து சேட்டிப்பித்து எங்குமாய்ச் செறிந்து நிற்பன் - அவ்வுயிர்களை அதிட்டித்துக்கொண்டு அவை செல்லுமாறெல்லாம் அறிந்து செலுத்தி அவ்விடயங்களினும் உடனாகக் கலந்து நிற்பன், ஆதலால் நாம் அரன் அடியை அகன்று நிற்பது எங்கேயாமே - ஆகலான் (ஆணவமலத்தினீங்கி வேறுநின்ற) உயிர்கள் (அதுபோல) இறைவனை விட்டுத் தனித்துநிற்றல் ஓரிடத்தினும் இல்லை என்க.

(பெ - ரை.) ஆன்மாவுக்கு அறிவு செயல்கள் விளங்குதலும் விளங்கியபின் விடயத்திற் சென்று பற்றுதலும் இறைவன் திருவடியையின்றி யமையமாட்டா; அதுபற்றி இறைவனும் அக்கரங்களை இயக்குதற்பொருட்டு அவற்றுடன் நிற்கும் அகரம்[1] போல, அறிவுசெயல்கள் விளங்குதற் பொருட்டு உயிர்களோடுங் கலந்து நிற்பன். அங்ஙனம் விளங்கிய அறிவு செயல்கள் பின் விடயத்திற் சென்று பற்றுதற்பொருட்டு அவ்வுயிர்களை யதிட்டித்துக்கொண்டு அவை செல்லுமாறெல்லாம் அறிந்து செலுத்தி அவ்விடயங்களினும் உடனாகக் கலந்து நிற்பன்; ஆகலான் ஆணவ மலத்தின் நீங்கி வேறுநின்ற உயிர்கள் அதுபோல இறைவனை விட்டுத் தனித்து நிற்றல் ஓரிடத்துமில்லை எ - ம்.

---

1. 'அகர முதல' திருக்குறள்: க.

எவ்விடத்தும் பெத்தமுத்தி இரண்டினும் என்க.

இதனுள் உயிர்கள் அறிந்து இயற்றியிடா எனவும் ஈசன்தானுஞ் செறிந்து நிற்பன் எனவுங் கூறியது ஆன்மாவின் அறிவுசெயல்கள் விடயித்தற்கட்படும் இயல்பிற்கும், தோற்றும்போது அவனையின்றித் தோற்ருது எனவும் ஈசன் அவ்வுயிர்போல் நின்றிடுவன் எனவுங் கூறியது அவை விளங்குதற்கட்படும் இயல்பிற்கும் எனக்கொள்க.

இவ்விருதிறத்துள் உயிரிற் கலந்துநின்று அறிவு செயல்களை விளக்குதலே காட்டும் உபகாரம் எனவும், அவ்வுயிரை யதிட்டித்துக் கொண்டு சென்று விடயத்திற் கலந்துநிற்றலே காணும் உபகாரம் எனவுங் கொள்க.

உயிர் ஒன்றனை விடயித்தல் இறைவன் அவ்விடயத்தும் உடன் சென்று கலந்தாலன்றி உயிரிற் கலத்தன் மாத்திரையால் அமையா தென்பது, கண்ணொளி விளக்கின் சோதியொடு கலந்தும், விளக் கொளி கலந்தவற்றையன்றிக் காண்டல் செல்லாமையின்' வைத் துணர்ந்து கொள்க. [1]'அறிவானுந்தானே யறிவிப்பான்ருனே, என்ற பின், 'அறிவா யறிகின்ருன்ருனே' என்ற அம்மை திருவந்தாதியும் இது.

இதனனே அநாதியுடன் நின்ற ஆணவமலத்தை விட்டுநீங்கி இறைவனேடு கூடுமாயின் அம்முறைபற்றி இறைவனையும் ஒரோவழி விட்டு நீங்கப்பெறும் போலுமென்னும் அவ்வாதிகளை நோக்கி, அது கூடாமைக்கு ஏதுக்கூறுமுகத்தான் ஈசனுயிர்க்குக் காட்டிக் கண்டிடு வன் என்ற முதற்கூறு தெரித்துணர்த்தி வலியுறுத்தப்பட்டது. (எ)

---

1. அற்புதத் திருவந்தாதி, உ0

# இரண்டாம் அதிகரணம்

எங்குந்தான் நிறைந்துசிவன் நின்றா னாகில்
எல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னில்
இங்குந்தான் அந்தகருக் கிரவியிரு ளாகும்
ஈசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்
பங்கந்தான் எழும்பதுமம் பக்குவத்தை யடையப்
பரிதியலர்த் திடுவதுபோற் பருவஞ்சேர் உயிர்க்குத்
துங்கஅரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே.

(ப - ரை.) சிவன் எங்குந் தான் நிறைந்து நின்றானாகில் - முதல்வன் (அத்துணைக் கலப்புடையனாய்) எங்குஞ் செறிந்து நின்று உபகரித்துவரின், எல்லாருங் காணவே வேண்டுந்தான் என்னில் - யாவரும் அறிய வேண்டுமெனின், இங்குந்தான் இரவி அந்தகருக்கு இருளாகும் - இவ்விடத்தே ஆதித்தன் (விளக்கமாயிருந்தும்) அந்தகருக்கு இருளாயே நின்றாற்போல, ஈசன் ஒளியாயே அருட்கண் இல்லார்க்கு இருளாம் - முதல்வன் உபகாரம் விளக்கமாயிருந்தும் (அஃது) அருட்கண்ணுடையார்க்கன்றி அறிய வாராது, பங்கந்தான் எழும் பதுமம் பக்குவத்தை அடையப் பரிதி அலர்த்திடுவதுபோல் - சேற்றில் தோன்றிய பக்குவமுடைய தாமரைமலரை ஆதித்தன் அலர்வித்திடுதல்போல, பருவம் சேர் உயிர்க்கு - (அவ்வருட்கண்ணும்) பக்குவமுடையார்க்கன்றி (க் கிடைக்கப்பெறாது அப்பேறும் முதல்வனையின்றி அமையாது), ஞானக்கண் அரன் துங்க அருளினாலே கொடுத்து - (ஆதலான் அப்பெற்றித்தாகிய) அருட்கண்ணை முதல்வன் பெருங்கருணையாற் (பருவம்பார்த்திருந்து) கொடுக்க (அதனைப் பெற்றுடையார்க்கே), சோதிக்குள் சோதியாய்த் தோன்றிடுவன் காணே - அவன் அறிவுக்கறிவாய் நின்று அவ்வாறுபகரித்துவரும் (அத்துவிதநிலை) இனிது விளங்கும் என்க.

(பொ - ரை.) முதல்வன் அத்துணைக் கலப்புடையனாய் எங்குஞ் செறிந்துநின்று உபகரித்துவரினும், அஃது அருட்கண் உடையார்க்கன்றி அறிய வாராது; அவ்வருட்கண்ணும் பக்குவம் உடையார்க்கன்றிக் கிடைக்கப்பெறாது; அப்பேறும் முதல்வனை யின்றி யமையாது; ஆகலான் அப்பெற்றித்தாகிய அருட்கண்ணை முதல்வன் பருவம் பார்த்திருந்து கொடுக்கப்பெற்றுடையார்க்கே அவனறிவுக் கறிவாய்நின்று அவ்வாறுபகரித்துவரும் அத்துவித நிலை இனிது விளங்கும் எ - ம்.

இத்தையாயும் அறிவுடையனாதற்கு உரிமை கூறியவாறு.

பருவம் எய்தாததூஉம் எய்தியதூஉம் ஓரிடத் தொருங்கு காட்டுவார், பங்கந்தானெழும் பதுமம் என வேறு உவமை கூறினார். (அ)

சென்றணையு நிழல்போலச் சிவன்நிற்பன் என்னிற்
சென்றணையும் அவன்முதலி சிவத்தையணைந் தோன்றாய்
நின்றதுயிர் கெட்டேன்னிற் கெட்டதணை வின்றாம்
நின்றதேற் கேடில்லை யணைந்துகெட்ட தென்னிற்
போன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகல்நீ
போன்றுகையே முத்தியெனிற் புருடன்நித்தன் அன்றாம்
ஒன்றியிடும் நீரோடுநீர் சேர்ந்தாற்போல் என்னின்
ஒருபொருளாம் அதிபதியோ டுயிர்பொருளொன் றன்றே.

(ப - ரை.) சென்றணையும் நிழல்போலச் சிவன் நிற்பனென்னின் - (அரன் கொடுத்துத் தோன்றுவான் எனல்வேண்டா) பதிகராற் சென்று அணையப்படும் மரம்நிழல்போல முதல்வன் (விகாரமின்றி) நிற்ப (உயிர்தானே பருவஞ்சேர்ந்தவழி ஞானக்கண்ணைப்பெற்று அரனைத் தலைக்கூடுதல் அமையும், என ஈசுர அவிகாரவாதி மதம்பற்றிக் கூறின், சென்றணையும் அவன் முதலி - (மரநிழலுக்குச் சுதந்திரமின்றிச் சென்றணைவார்க்கு அச் சுதந்திரம் ஆமாறுபோல முதல்வனுக்குச் சுதந்திரமில்லை) அவனைத் தலைக்கூடுவதாயுள்ள உயிருக்கே சுதந்திரம் (எனப்பட்டு வழுவாம்), உயிர்கெட்டுச் சிவத்தை அணைந்து ஒன்றாய் நின்றதெனின் - இனிப் பரிணமவாதிகள் உயிர்கெட்டுக் கூடி அரனடியில் ஒன்றாய்ப்போம் என்பர் எனின், கெட்டது அணைவு இன்றாம் - கெட்டாற் கூடுமாறு இன்மையானும், நின்றதேல் - (கெடாது) நின்று கூடுமெனின், கேடு இல்லை - (அவ்வாறு கூடியவழிக்) கேடின்மையின் (ஒன்றுதல் பெறப்படாமையானும்), அணைந்து கெட்டதென்னின் - கூடியபின் கெட்டதெனின், பொன்றினதேல் முத்தியினைப் பெற்றவர் ஆர் நீ புகல் - கெட்டவழி (முத்திபெறுவதொன்றின்மையானும்) அம்முத்தியினைப் பெற்றவர் யாவர் நீ கூறுவாயாக, பொன்றுகையே முத்தியெனின் - கேடே முத்தியெனின், புருடன் நித்தன் அன்றாம் - உயிர் நித்தமாதல் செல்லாமையானும் (அதுவும் வழுவாம்), நீரொடு நீர் சேர்ந்தாற்போல் ஒன்றியிடும் என்னின் - இனி ஐக்கவாதிகள் * நீரிலே நீர் சேர்ந்தாற்போல (உயிர் அரனடியைச் சேர்ந்து) ஒன்றும் என்பர் எனின், ஒரு பொருளாம் அதிபதியோடு உயிர் பொருள் ஒன்று அன்றே - (நீரும் நீரும்போல) ஒப்பற்ற பொருளாகிய முதல்வனும் உயிரும் (தம்முட்) சமப்பொருளாதல் செல்லாமையின் (அவர் மதமும் அடாது) என்க.

(பொ - ரை.) அரன் கொடுத்துத் தோன்றுவான் எனல் வேண்டா, பதிகராற் சென்றணையப்படும் மரநிழல்போல முதல்வன் விகாரமின்றி நிற்ப, உயிர் தானே பருவஞ்சேர்ந்தவழி ஞானக்கண்ணைப் பெற்று அரனைத் தலைக்கூடும் என அமையும் என ஈசுரஅவிகாரவாதி மதம்பற்றிக் கூறின், மரநிழலுக்குச் சுதந்திரமின்றிச் சென்றணைவாருக்கு அச் சுதந்திரம் ஆமாறுபோல, முதல்வனுக்குச் சுதந்திரமில்லை; அவனைத் தலைக்கூடுவதாகிய உயிர்க்கே சுதந்திரம் எனப்பட்டு வழுவாம். இனிப் பரிணமவாதிகள் உயிர்கெட்டுக் கூடி அரனடியிலொன்றாய்ப் போம் என்பர்.

கெட்டாற் கூடுமாறின்மையானும், கெடாதுநின்று கூடுமெனின் அவ்வாறு நின்று கூடியவழிக் கேடின்மையின் ஒன்றுதல் பெறப் படாமையானும், கூடியபின் கெட்டதெனிற் கெட்டவழி முத்தி பெறுவதொன் றின்மையானும், கேடே முத்தியெனின் உயிர் நித்தமாதல் செல்லாமையானும், அதுவும் வழுவாம் இனி ஐக்கவாதிகள் நீரிலே நீர் சேர்ந்தாற்போல உயிர் அரனடியைச் சேர்ந்து ஒன்றும் என்பர். நீரும் நீரும்போல முதல்வனும் உயிருந் தம்முட் சமமாதல் செல்லாமையின், அவர் மதமும் அடாது என - ம்.

அரன் மலரடிக்கீழிருக்கும் இயல்பு வேறு வேறாகக் கூறும் அவ்வம் மதங்களைப் பரிகரித்தவாறு. (௬)

செம்பிரத குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடும்எனிற் பொன்போல் அல்லன்
நற்குளிகை போலஅரன் நணுகுமலம் போக்கி
அம்பொன்அடிக் கீழ்வைப்பன் அருங்களங்கம் அறுக்கும்
அக்குளிகை தானும்பொன் னாகா தாகும்
உம்பர்பிரான் உற்பத்தி யாதிகளுக் குரியன்
உயிர்தானுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே.

(ப - ரை.) செம்பு இரதகுளிகையினால் களிம்பு அற்றுப் பொன்னாய்ச் செம்பொனுடன் சேரும் - (களிம்புள்ளளவும்) செம்பு (பொன்னுடன் ஒத்தொன்றுமாறில்லையாயினும்) இரதகுளிகையினாற் களிம்பு நீங்கியவழிப் பொன்னாய்ச் செம்பொன்னுடன் ஒத்து ஒன்றுதல் செல்லும் (அதுபோல,) மலஞ்சிதைந்தால் சீவன் நம்பனுடன் கூடுமெனின்- மலநீங்கியவழி உயிர் முதல்வனோடு ஒத்தொன்றும் எனின் (அஃதும் அடாது), நற்குளிகைபோல அரன் பொன்போல் அல்லன் - (உயிர்க்கு மலத்தை நீக்கும் ஆற்றலுடைய முதல்வனைச் செம்பிற்குக் களிம்பு நீக்கும் ஆற்றலுடைய) நன்மையாய இரதகுளிகைகளோடு ஒப்புறுத்த லன்றி (அவ்வாற்றலில்லாத) பொன்னோடு ஒப்புறுத்துதல் ஈண்டைக் கேலாமையானும், நணுகும் மலம் போக்கி அம்பொன் அடிக்கீழ் வைப்பன் - (முதல்வன்) பொருந்திய மலத்தை நீக்கிப் பொன்போலுந் திருவடிக்கீழ் (உயிரை) வைப்பனாயின், அருங் களங்கம் அறுக்கும் அக் குளிகை பொன்தானும் ஆகாது - மிக்க களிம்பை ஒழித்த அக்குளிகைகளாகப் பொன்னாகாது (அதுபோல), உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்குமே உரித்து - (மலநீங்கியவழியும்) உயிர் சிவாநுபவம் ஒன்றற்கே சுதந்திரமாம், உற்பத்தி ஆதிகளுக்கு உம்பர் பிரான் உரியனாகும் - ஐந்தொழில் எல்லாவற்றிற்கும் முதல்வனே சுதந்திரனாவன் (ஆகலின் உயிர் முதல்வனோடு ஒத்தொன்றுதல் செல்லாமையானும்) என்க.

(பொ - ரை.) களிம்பு உள்ளளவுஞ் செம்பு பொன்னுடனொத்து ஒன்றுமாறில்லையாயினுங் களிம்பு நீங்கியவழி ஒத்

தொன்றுதல் செல்லுமென்பதும் அடாது; உயிர்க்கு மலத்தை நீக்கும் ஆற்றலையுடைய முதல்வனைச் செம்பிற்குக் களிம்பு நீக்குமாற்றலுடைய இரதகுளிகைகளோ டொப்புறுத்துதலன்றி அவ் வாற்றலில்லாத பொன்னோடு ஒப்புறுத்துதல் ஈண்டைக் கேலாமையானும் மலநீங்கியவழியுஞ் சிவானுபவம் ஒன்றற்கே சுதந்திரமாய உயிர், ஐந்தொழில் எல்லாவற்றிற்குஞ் சுதந்திர னாகிய முதல்வனோடு ஒத்தொன்றுதல் செல்லாமையானும் எ - ம்.

ஒன்றினுக்கும் என்னும் உம்மை முற்றும்மை.

'சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே யென்ற இதனானே' சிவா னுபவத்திற்கும் உரித்தன் றென்னுஞ் சுத்த சைவர் மதமும் மறுக்கப் பட்டது. (௧௦)

சிவன்சீவன் என்றிரண்டுஞ் சித்தோன்றும் என்னிற்
சிவன்அருட்சித் திவன்அருளைச் சேருஞ்சித் தவன்தான்
பவங்கேடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்தும் இவன்தான்
அவன்தானே யறியுஞ்சித் தாதலினால் இரண்டும்
அணைந்தாலும் ஒன்றாகா தநந்நியமா யிருக்கும்
இவன்தானும் புத்தியுஞ்சித் திவனாமோ புத்தி
யிதுஅசித்தேன் றிடில்அவனுக் கிவனும்அசித் தாமே.

(ப - ரை.) சிவன் சீவன் என்ற இரண்டும் சித்து ஒன்றுமென் னின் - முதல்வன் உயிரென்கிற இருபொருளும் சித்தேயாகலான் ஒத்து ஒன்றும (என்றலே அமைவுடைத்தன்றி உயிர்தானுஞ் சிவானு பவமொன்றினுக்கு முரித்தேயென வேற்றுமைப்படுத்துக் கூறுதல் ஆண்டைக்கமையாதா) லெனின் (அற்றன்று), சிவன் அருட்சித்து இவன் அருளைச் சேரும் சித்து - முதல்வன் அருளாகிய சித்தாம் உயிர் அவ்வருளைச் சேரும் சித்தாம், அவன்தான் பவம் கேடு புத்தி முத்தி பண்ணும் சித்து (இவன்) அவற்றிற்படியும் சித்து - முதல்வன் பவத் தினைக் கெடுத்துப் புத்திமுத்தியளிக்குஞ் சித்தாம் உயிர் அவைகளில் அழுந்துஞ்சித்தாம், அவன்தானே அறியும் சித்து இவன்தான் அறிவிக் கப்படும் சித்தும் - முதல்வன் தானேயறியும் சித்தாம் உயிர் அறிவிக்க அறியுஞ் சித்தாம், இரண்டும் அணைந்தாலும் அநந்நியமாய் இருக்கும் ஒன்றாகாது ஆகலினால் - (ஒளியென்னும் பொதுமையால் ஒத்து ஒன்று மாயினும் வியஞ்சகத்தையின்றி அமையாதாய் அதுவதுவாய் மூந்திக் காணுங் கண்ணொளிக்கும் அதுபோலத் தனக்கொரு வியஞ்சகம்வேண் டாது தானே வியஞ்சகமாய் எல்லாவற்றையும் ஒருங்கே விளக்கிநிற்கும் ஞாயிற்றினொளிக்கும் தம்முள் வேற்றுமை பெரிதாயினாற்போல இங் ஙனஞ் சித்து இரண்டிற்கும் தம்முள் அந்தரங்க வேற்றுமை பெரிதும் உண்மையான்) அவ்விரு பொருளுந் தம்முட் கூடியவழியும் அத்துவித மாய் நிற்றலேயன்றி ஒன்றாய்ப்போமாறில்லை யாகலான், இவன்தானும் புத்தியும் சித்து புத்தி இவனாமோ - உயிரும் புத்தி தத்துவமுஞ்

சித்தெனக் கூறப்படினும் புத்திதத்துவம் உயிராதலில்லை, இது அசித்து என்றிடில் அவனுக்கு இவனும் அசித்தாமே - புத்திதத்துவஞ் சடம் என்றிடின் (ஏனைத்தத்துவங்களை நோக்க உயிர் சித்தேயாயினும்) முதல்வனை நோக்க உயிர் அசித்தேயாம் என்க.

(பொ - ரை.) இருபொருளுஞ் சித்தேயாகலான் ஒத்து ஒன்றும் என்றலே அமைவுடைத்தன்றி, உயிர்தானுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தேயென வேற்றுமைப்படுத்துக் கூறுதல் ஆண்டைக்கு அமையாதால் எனின், அற்றன்று; ஒளியென்னும் பொதுமையால ஒத்து ஒன்றுமாயினும் வியஞ்சகத்தையின்றியமையாதாய் அதுவதுவாய் முந்திக் காணுங் கண்ணொளிக்கும் அதுபோலத் தனக்கொரு வியஞ்சகம் வேண்டாது தானே வியஞ்சகமாய் எல்லாவற்றையும் ஒருங்கே விளக்கிநிற்கும் ஞாயிற்றின் ஒளிக்குந் தம்முள் வேற்றுமை பெரிதாயினாற் போல, சித்து இரண்டற்குந் தம்முள் அந்தரங்க வேற்றுமை பெரிதும் உண்மையான், அவ்விருபொருளுந் தம்முட் கூடிய வழியும் அத்துவிதமாய் நிற்றலேயன்றி ஒன்றாய்ப் போமாறில்லை எ - ம்.

நீரும்நீரும்போல ஒத்தொன்றாய் நிற்குமென்னும் ஐக்கவாதிகளை மறுத்தற்கு எழுந்த இவ்விரண்டு செய்யுளும், ஒத்து வேறாய் நிற்கும் என்னும் **அருவ சிவசமவாதிகளை** மறுத்தற்கும் உரியவாறு காண்க. (கக)

இரும்பைக்காந் தம்வலித்தாற் போல்இயைந்தங் குயிரை
எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையனல் அழிப்பதுபோன் மலத்தை
அறுத்தமலன் அப்பணைந்த உப்பேபோல் அணைந்து
விரும்பிப்போன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தான்எல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பன்அந்த முத்தியினிற் கலந்தே.

(ப - ரை.) காந்தம் இரும்பை வலித்தாற்போல் (அமலன்) அங்கு உயிரை இயைந்து - காந்தம் (விகாரமின்றி நின்றே) இரும்பை வலிப்பவுங்கண்டாம் அதுபோல இறைவனும் (விகாரமின்றியே) உயிரைத் தன்வழிப்படுத்து நிற்பன் ஆகலாற் (சென்று அணையும் நிழல்போலச் சிவன் நில்லாமை பற்றிச் சிவன் நிருவிகாரியாதற்கு இழுக்கில்லை), எரி இரும்பைச் செய்வதுபோல் அனல் இத்து அரும்பு இந்தனத்தை அழிப்பதுபோல் (அமலன்) இவனைத் தானாக்கி மலத்தை அறுத்து - எரி இரும்பை (க் கெடுத்தலின்றி) த் தன்வண்ணமாக்கி (த் தன்வண்ணமாக்குதற் குரித்தாகாது) அவ்விரும்பின்கண் உடன்தோன்றி நிற்குங் கறைமாத்திரங் கெடச்செய்யும் அதுபோல இறைவனும் உயிரைத் தன் வண்ணமாகச் செய்து (தன்வண்ணமாக்குதற் குரித்தாகாது அவ்வுயிரின்கண் உடன்தோன்றி நிற்கும்) மலமாத்திரங்கெடச் செய்யும்

ஆகலாற் (பொன்றுகை முத்தியாகாமை பற்றி ஒன்ருதற்கு இழுக்கில்லை), அப்பு அணைந்த உப்பேபோல் விரும்பி அமலன் அணைந்து - நீரோடு சேர்ந்த உப்புத் (தன்சுவை முழுதும் அந்நீர்க்காக்கித் தன்னேடொப்பச் சமன்செய்து நிற்கும் அது) போலவிரும்பி (உயிரைச்சேர்ந்த) இறைவனும் தனக்குரிய எண்குணங்களையும் அவ்வுயிரின்கட் பதிப்பித்துத் தன்னேடு ஒப்பச்செய்து நிற்பனுகலான் (நீரொடு நீர் சேர்ந்தாற்போல் அல்லாமைபற்றிச் சிவசமமாதற்கு இழுக்கில்லை), குளிகை (மேளித்துப்) பொன்னினை ஒளிப்பதுபோல் தான் எல்லாம் மேளித்து வேதிப்பானுகி அடக்கி - இரதகுளிகை (செம்பையுருக்கித் தன்னேடு கூட்டி (வேதித்துப் பொன்னுகச்செய்தும்) பொன்னியல்பைக் காட்டாது தன்னுள் அடக்கி நிற்குமாறுபோல இறைவன் (உயிரை) அவ்வாறெல்லாஞ் செய்தும் (அதனியல்பு சிறிதுந் தோன்ருது அறிவிறந்து நிற்குமாறு) தனது வியாபகத்துள் அடக்கிநிற்கும் ஆகலான் (அப்பணைந்த உப்புப்போல் அணைந்து ஒப்பச் செய்தமைபற்றி உம்பர்பிரான் ஒருவனே உற்பத்தியாதிகளுக்கு உரியனுதற்கு இழுக்கில்லை), கரும்பைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக் கட்டியைக் கலந்தே ஒத்து (அமலன்) அந்த முத்தியினில் இருப்பன்-கருப்பஞ்சாறு தேன் பால் கனியிரதம் கற்கண்டு சருக்கரை முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன்ருகக் கலந்தவழி (புளதாகிய சுவை இவ்வியல்பிற்று எனப் பிரித்தறியவாராமைபோல) இறைவனும் பரமுத்தியில் (உயிரின்கண் அங்ஙனங் கலந்தவழி இவ்வியல்பிற்று எனப் பிரித்தறிய வாராத ஆனந்த சொரூபமாய்) நிற்பன் ஆகலான் (அறிவு இறந்து நிற்றல்பற்றி உயிர்தானுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தாதற்கு இழுக்கில்லை) என்க.

(பொ - ரை.) காந்தம் விகாரமின்றி நின்றே இரும்பை வலிப்பவுங் கண்டாம்; அதுபோல இறைவனும் விகாரமின்றியே உயிரைத் தன்வழிப்படுத்து நிற்பன்ஆகலாற் சென்றணையும் நிழல்போலச் சிவன் நில்லாமை பற்றிச் சிவன் நிருவிகாரியாதற்கிழுக்கில்லை. எரி இரும்பைக் கெடுத்தலின்றித் தன்வண்ணமாக்கித் தன்வண்ணமாக்குதற்கு உரித்தாகாது இவ்விரும்பின்கண் உடன்தோன்றி நிற்குங் கறைமாத்திரங் கெடச்செய்யும்; அதுபோல இறைவனும் உயிரைத் தன்வண்ணமாகச் செய்து தன்வண்ணமாக்குதற்கு உரித்தாகாது அவ்வுயிரின்கண் உடன்தோன்றி நிற்கும் மலமாத்திரங் கெடச்செய்யும் ஆகலான், பொன்றுகை முத்தியாகாமைபற்றி யொன்ருதற்கு இழுக்கில்லை. நீரோடு சேர்ந்த உப்புத்[1] தன்சுவை முழுவதும் நீர்க்காக்கித் தன்னேடு ஒப்பச் சமஞ்செய்து நிற்கும்; அதுபோல உயிரைச் சேர்ந்த இறைவனுந் தனக்குரிய எண்குணங்களையும் அவ்வுயிரின்கட் பதிப்பித்துத் தன்னேடு ஒப்பச்செய்துநிற்பன் ஆகலான், நீரோடுநீர் சேர்ந்தாற்போல் அல்லாமைபற்றிச் சிவசமமாதற்கு இழுக்கில்லை, இரதகுளிகை செம்பையுருக்கித் தன்னெடு கூட்டி வேதித்துப் பொன்னுகச் செய்தும் பொன்னியல்பைக்காட்டாது

1. 'நட்பிற் குறுப்புக்' திருக்குறள், அ0௨.

தன்னுளடக்கி நிற்குமாறுபோல, இறைவன் உயிரை யவ்வாறெல் லாஞ் செய்தும் அதனியல்பு சிறிதுந் தோன்றாது அறிவிறந்து நிற்குமாறு தனது வியாபகத்துளடக்கி நிற்கும் ஆகலான், அப் பணைந்த உப்பேபோல் அணைந்து ஒப்பச்செய்தமைபற்றி உம்பர் பிரான் ஒருவனே உற்பத்தியாதிகளுக்கு உரியனாதற்கு இழுக் கில்லை. கருப்பஞ்சாறு முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன் றாகக் கலந்தவழி யுளதாகிய சுவை, இவ்வியல்பிற்றெனப் பிரித் தறிய வாராமைபோல, இறைவனும் உயிரின்கண் அங்ஙனங் கலந்தவழி இவ் வியல்பிற்றெனப் பிரித்தறிய வாராது ஆனந்த சொரூபமாய் நிற்பனாகலான், அறிவிறந்து நிற்றல்பற்றி உயிர் தானுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தாதற்கு இழுக் கில்லை எ - ம்.

சென்றணையும் நிழல்போலச் சிவன் நிற்பன் என்பது முதலாகக் கூறும் வாதிகளை மேலே மறுத்தவழி அவர் கூறும் ஆசங்கைகளை முறையே பரிகரித்துச் சித்தாந்தம் வலியுறுத்தற்பொருட்டு, இங்ஙனம் வெவ்வேறு உவமைகளின் வைத்துக்காட்டி ஒருங்கு கூறியவாறு.

மலரடிக்கீழ் வைப்பன் எனவும், பாதநிழற்கீழ் நிற்க எனவும் ஏகனாகிநின்றிட எனவும், அரன் மலரடிக்கீழிருப்பன் எனவுங் கூறிய இந்நான்கு சூத்திரங்கட்குந் தம்முட் பொருள்வேற்றுமையில்லைபோலும் என மயங்காமைப்பொருட்டு இறுதிக்கண் அவற்றைத்தொகுத்து எடுத் துக்கொண்டு சிவரூபம் முதலிய நான்காக வகுத்து வைத்துணர்த்திய வாறுமாம்.

நின்மல சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையுந் தெரித்துக்கூறியவாறு என்றலும் ஒன்று.

மதங்கத்துட் கூறப்படும் எழுவகை முத்திகளை வகுத்துக்கூறியது என்று உரைப்பாருமுளர்.

இத்துஅரும்புஇந்தனம் எனவும் ஆகியடக்கியெனவும் கலந்து ஒத்துஎனவும் இயையும்.

இத்துஎன்புழி அன்சாரியையும் இல்லுருபும் விகாரத்தால் தொக்கன.

அனலான் அழிக்கப்படுதல் ஒப்புமைபற்றி இருப்பின் கறையை இந்தனமாக உருவகஞ் செய்தார்.

அணைந்துஎனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

மேளித்தல் - கூட்டுதல். ஆகியும் எனச் சிறப்பும்மை விரித் துரைக்க.

கலந்தவழியென்பது கலந்து எனத் திரிந்து நின்றது.

அரும்பித்திந்தனத்தை அனலழிப்பதுபோல் என்பதற்கு இவ்வா றுரைக்க அறியாது விறகின்மேல் வைத்து உரைப்பாருமுளர்; விறகை யழித்தற்கட்படும் விசேடம் இன்மையானும், ஏனைபோலே உயிரோடு இயைபுடைத்தாதற்குரிய உவமையன்மையானும், அரும்பித்தென ஒரு

சொல்லின்மையானும், அவ்வுரை போலியென்றொழிக. அல்லதூஉம், தீ இரும்பைச் செய்வதுபோற் சீவன்தன்னைப் பந்தனையை அறுத்துத் தானாக்கியென அறுத்தல் ஆக்குதல்இரண்டும் இரும்பின்மேல்வைத்தே மேற்கூறிய ஆசிரியர்க்கு, ஈண்டும்அதுவே கருத்தாதல் உணர்ந்து கொள்க.

மேளித்துத்தான்எல்லாம் வேதிப்பானாகியென்றதனை அடக்கியென்பதனோடு வையாது வேறுவைத்துரைப்பின், ஏனையவற்றிற்கெல்லாம் உவமை தனித்தனியெடுத்துக்காட்டி இது மாத்திரைக்கு உவமை கூறாமை குன்றக்கூறலாய் முடியும்என்று ஒழிக.

இவையைந்து செய்யுளானும் இரண்டாங் கூற்றிற்கு அவ்வம்மதம் பற்றி நிகழும்ஆசங்கைகளைப் பரிகரிக்குமுகத்தாற் சித்தாந்தங் கூறப்பட்டது. (கஉ)

பதினோராஞ் சூத்திர முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் - ௩உக.

---

# பன்னிரண்டாஞ் சூத்திரம்



இவ்வாறு பத்தாஞ் சூத்திரத்தானும் பதினொராஞ் சூத்திரத்தானும் முறையே பாசநீக்கமுஞ் சிவப்பேறுமாகிய பயன்பெற்றார்க்குச் சீவன் முத்திநிலைக்கண் நிகழும் இயல்பு வகுத்துக் கூறுதற்கு எழுந்தது பன்னிரண்டாஞ் சூத்திரம்.

செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
திரிமலங்கள் அறுத்தீசன் நேசரோடுஞ் செறிந்திட்
டங்கவர்தந் திருவேடம் ஆலயங்கள் எல்லாம்
அரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி
எங்குமியாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யார்அடியார் அடியோம்[1] என்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.

(ப - ரை.) செங்கமலத் தாள் இணைகள் சேரல் ஒட்டாத் திரிமலங்கள் அறுத்து - செந்தாமரை மலர்போலுந் திருவடிகளை அணையவொட்டா(து அயர்த்தலைச் செய்விக்கும் பற்றறக்கழிந்த) மும்மலங்கள் (விளக்கற்றம்பார்க்கும் இருள்போல அறிவற்றம் பார்த்து நிற்பனவாகலான் அவற்றை யஞ்சிப்) பரிகரித்து, ஈசன் நேசரொடும் செறிந்திட்டு - (பரிகரித்தற்குத் துணையாகிய) சிவபிரானுடைய மெய்யன்பரோடு பயின்று, அங்கு அவர்தம் திருவேடம் ஆலயங்கள் எல்லாம் அரனெனவே தொழுது இறைஞ்சி ஆடிப்பாடி - (அப்பயிற்சி நிலைபெறும்படி) அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் அரனெனக்கண்டு வழிபாடியற்றி (ஆனந்தமேலீட்டால்) ஆடல் பாடல்களைச் செய்து, எங்கும் ஒருவர்க்கும் யாம் எளியோம் அல்லோம் யாவர்க்கும் மேலானோம்என்று இறுமாப்பு எய்தி - (இப்பேறு பெறமாட்டாரது சிறுமையை நோக்கி) எவ்விடத்துமுள்ள ஒருவர்க்கும் யாம் எளியராதலின்றி (த் திருவடியைத் தலைக்கூடப் பெற்றமையான்) யாவர்க்கும் மேலானோம்எனக் களித்து, திங்கள் முடியார் அடியார் அடியோம்என்று திரிந்திடுவர் - பிறையினை யணிந்த திருமுடியையுடைய சிவபிரான் திருவடியைத் தலைக்கூடப் பெற்று (ரது பெருமையை நோக்கி அவ)ர்க்கடிமையென வாழ்வார், சிவஞானச் செய்தியுடையோரே - (இச்செய்கையை இயல்பாகவுடையார்) சீவன்முத்தர் என்க.

(பொ - ரை.) பற்றறக் கழிந்த மும்மலங்கள் விளக்கற்றம் பார்க்கும் இருள்போல, அறிவற்றம் பார்த்து நிற்பன ஆகலான் அவற்றை யஞ்சிப் பரிகரித்தலும், பரிகரித்தற்குத் துணையாகிய

1. 'தில்லைவாழ்' சுந்தரர், ௩௯-௧.

மெய்யன்பரோடு பயிறலும், பயிற்சி நிலைபெறும்படி அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் அரனெனக் கண்டு வழி படுதலும் உடையராய், இப்பேறு பெறமாட்டாரது சிறுமையும் பெற்றாரது பெருமையும் நோக்கிக் களித்து வாழ்தல், சீவன் முத்தர்க்குரிய இயல்பு எ - ம்.

ஒட்டாஎன்னும் பெயரெச்சமறை ஏதுப்பெயர்கொண்டு முடிந்தது.

இச்செய்யுள் முதனூல் பன்னிரண்டாஞ் சூத்திரம்போல மூக்கூற்றது ஆமாறு கண்டுகொள்க. (௧)

## இரண்டாம் அதிகரணம்

ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும்அன் பில்லார்
பேசுவதென் அறிவில்லாப் பிணங்களைநாம் இணங்கிற்
பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ
ஆசையோடும் அரன்அடியார் அடியாரை அடைந்திட்
டவர்கருமம் உன்கருமம் ஆகச் செய்து
கூசிமொழிந் தருள்ஞானக் குறியில் நின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.

(ப - ரை.) (காமுகனுவான் ஒருவன் ஒரு வனிதையிடத்து அன்புடையன்என்பது அவளொக்கலைக் கண்டுழி நிகழும் அன்பின் அளவு பற்றியே தெளியப்படும் அதுபோல, ஈசனுக்கு அன்புடைமை அவனடியவரைக் கண்டுழி நிகழும் அன்பின் அளவுபற்றியே தெளியப்படும் ஆகலான்) அடியவர்க்கு அன்பு இல்லார் ஈசனுக்கு அன்பு இல்லார் - அடியவர்மாட்டன்பில்லாதார் ஈசன்மாட்டும் அன்பில்லாதாரே (அங்ஙனம் ஈசனுக்கு அன்புடையார்போல் ஒழுகுதல் நாடகமாத்திரையே பிறிதில்லை), எவ்வுயிர்க்கும் அன்பு இல்லார் - (எவ்வுயிர்க்கண்ணும் உளனுகிய ஈசனிடத்து அன்புஉடையார்க்கே அத்தொடர்புபற்றி எவ்வுயிர்க்கும் அன்புடையராதல் கூடும் அங்ஙனம் ஈசனிடத்து அன்புஇல்வழி) எவ்வுயிர்க்கும் அன்புஇல்லாதாரேயாவர், தமக்கும் அன்புஇல்லார் நாம் பேசுவது என் - (இவ்விடங்களின் அன்பில்லாதார்) தம்முயிர்க்கு உறுதி செய்து கொள்ளுவாரல்லர் ஆகலின் (அதனை) நாஞ் சொல்லுவதென்னை (கழிகாமத்தராயினுர்க்கு அத்தொடர்புடையாரது இணக்கம் அக் காமப் பைங்கூழை வளர்க்கும் நீராதல்பற்றி அதன்கட் கழிபேருவகையாமாறுபோல, நீ அரன் அடியார் அடியாரை அடைந்திட்டு அவர் கருமம் உன் கருமமாக அருண்ஞானக் குறியில் நின்று ஆசையொடும் செய்து - (மாருத சிவானுபவம் மருவிக் கொண்டு அரன்மலரடிக் கீழிருக்கப்பெற்ற) நீ (அதனை வளர்க்கு நீர்மையராகிய) அத்தொடர்புடையாரோடு இணங்கி அவர் பணியை உன் பணியாகவே தற்போதம் முனைத்தலின்றி உவகை மிகுதியுடன் செய்து (காமுகரல்லாதாரிணக்கம் அக்காமப் பைங்கூழைப் பாறச் செய்யுங் களையாதல் பறறி அதன்கண் வெறுப்பு மிகுதியாமாறுபோல), அறிவில்லாப் பிணங்களை இணங்கில் பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் விடு - (அச்சிவானுபவத்தைக் கெடுக்கும் நீர்மையராகிய) அறிவில்லாப் பிணம் போன்றவரோடு இணங்கிற் பிறப்பிறப்பிற் படுத்துவர் ஆதலின் (அதன்கண் வெறுப்பு மிகுதியால் அதனை) விட்டுநீங்கி, கூசி மொழிந்து - (அடியாரது உயர்வும் உனது இழிவும்நோக்கிக்) கூசி நயமொழி கூறி, கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே - (உவகைமிகுதியாற்) கும்பிட்டுக் கைகொட்டிக் கூத்துமாடித் திரிவாயாக என்க.

(பொ - ரை.) கழிகாமத்தராயினார்க்கு, அத்தொடர்புடையாரது இணக்கம் அக் காமப் பைங்கூழை வளர்க்கும் நீராதல் பற்றி அதன்கட் கழிபேருவகையும், அல்லாரது இணக்கம் அதனைப் பாறச் செய்யுங்களையாதல் பற்றி அதன்கண் வெறுப்பு மிகுதியும், உளவாமாறுபோல, மாறாத சிவானுபவம் மருவிக் கொண்டு அரன் மலரடிக்கீழிருக்கப் பெற்றார்க்கு, அதனை வளர்க்கு நீர்மையராகிய அத்தொடர்புடையாரோடு இணங்குதற்கண் உவகைமிகுதியும் அதனைக் கெடுக்கு நீர்மையராகிய பிறரோடு இணங்குதற்கண் வெறுப்பு மிகுதியும், இயல்பானுளவாம் எ - ம்.

விதிமுகத்தாற் கூறினார், சுவைப்பொருட் டுண்ணப்படும் பால் மருந்துமாமாறு போலச் சாதனமுமாமா றுணர்த்துதற்கு. முன் வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

காமுகனாவான் ஒருவன் ஒரு வனிதையிடத்து அன்பு உடையன் என்பது, அவள் ஒக்கலைக் கண்டுழி நிகழும் அன்பின் அளவு பற்றியே தெளியப்படும்; அதுபோல ஈசனுக்கு அன்புடைமை அவனடியவரைக் கண்டுழிநிகழும் அன்பினளவு பற்றியே தெளியப்படும் ஆகலான், அடியவர்க் கன்பில்வழி ஈசனுக்கு அன்புடையார்போல் ஒழுகுதல் நாடக மாத்திரையே பிறிதில்லை யென்பார், அடியவர்க்கு அன்பில்லார் ஈசனுக்கு அன்பில்லார் என்றும், எவ்வுயிர்க் கண்ணும் உளனாகிய ஈசனிடத்து அன்புடையார்க்கே அத்தொடர்பு பற்றி எவ்வுயிர்க்கும் அன்புடையராதல் கூடும் என்பார், ஈசனுக்கு அன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார் என்றும், இவ்விடங்களில் அன்பில்லாதார் தம்முயிர்க்குறுதி செய்துகொள்ளுவாரல்லரென்பார், தமக்கும் அன்பில்லார் என்றுங் கூறினார். [1]'அன்பிலார் எல்லாந் தமக்குரியர்' என்புழித் தம்மென்றது, உடம்பை நோக்கியாகலின் அஃதீண்டைக்கு முரணாமை யறிக. இதன் எதிர்மறைமுகத்தால் அடியவர்க்கு அன்புடையாரது பெருமையுங் கண்டுகொள்க. அவர் கருமம் உன் கருமமாகச்செய்தலுந் தற்போதம்முனைத்து நின்று செய்யிற் குற்றமாம் என்பார், அருண் ஞானக் குறியின் என்றார்.

கூசுதல், அவருயர்வுந் தன்னிழிபும் நோக்கி நிகழ்வது.

கும்பிடுதலுந் தட்டமிடுதலுங் கூத்தாடுதலும் உவகைமிகுதியினிகழு மெய்ப்பாடு.

இதனானே இரண்டாங் கூறு தெரித்துணர்த்தப்பட்டது.

முதற்கூறு செங்கமலத்தாளிணைகள் சேரலொட்டாத் திரிமலங்களென ஆண்டே உடம்பொடு புணர்த்தோதி வலியுறுத்தமையின், வேறு கூறிற்றிலர். (௨)

---

1. திருக்குறள், அன்புடைமை, ௨.

## மூன்றுமதிகரணம்

அறிவரியான் தனைஅறிய யாக்கை ஆக்கி
அங் கங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத் தருளாற்
செறிதலினால் திருவேடஞ் சிவனுருவே யாகுஞ்
சிவோகம்பா விக்கும்அத்தாற் சிவனும் ஆவர்
குறியதனால் இதயத்தே அரனைக் கூடுங்
கொள்கையினால் அரனவர் குறியோடுதாம் அழியும்
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவர் என்றால்
நேசத்தால் தொழுதிடுநீ பாசத்தார் விடவே.

(ப - ரை.) *அறிவு அரியான் - அசிந்திதனாய் நின்ற பரம்பொருள், தனைஅறிய - (உலகத்துள்ளார்) தன்னை அறிதற்பொருட்டு, யாக்கை ஆக்கி - திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது வடிவத்தைத் தன்னன்பர்க்கு அளித்து, அங்கு அங்கே உயிர்க்கு உயிராய் அறிவு கொடுத்து - யாங்கணும் உயிர்க்குயிராய் அறிவினை விளக்கி, அருளாற் செறிதலினால் - அருளாற்கலத்தலாலும், திருவேடம் சிவன் உருவே ஆகும் - அத்திருவேடமுடைய மெய்யன்பர் சிவமேயாதல் தெளியக்கிடத்தலின், சிவோகம்பாவிக்கும் அத்தால் - சிவோகம் பாவனை யானும், சிவனும் ஆவர் - சிவமேயாதல் தெளியக்கிடத்தலின், இதயத்தே குறியதனால் அரனைக் கூடுங்கொள்கையினால் - இருதயத் தானத்தில் ஒரு குறியின்கண் வைத்து முதல்வனைக் கூடுஞ் செயலானும், அரன் ஆவர் - சிவமேயாதல் தெளியக்கிடத்தலின், குறியொடு தாம் அழியும் நெறியதனால் - குறியுடனே தாம் என்பது ஒன்று இன்றாகிய தன்மையானும், சிவமேயாய் நின்றிடுவர் என்றால் நேசத்தால் நீ தொழுதிடு - சிவமேயாதல் தெளியக் கிடத்தலின் (அதுபற்றி அவரை அரன் எனவே தேறி) அன்பொடு நீ வழிபடுக, பாசத்தார் விடவே - ஏனைப் பாசப்பற்றுடையாரது பற்றுவிட்டொழிதற் பொருட்டு என்க.*

(பொ - ரை.) *வேடத்தானும் பாவனையானுஞ் செயலானுந் தன்மையானுந் திருவேடமுடைய மெய்யன்பர் சிவமே யாதல் தெளியக்கிடத்தலின், அதுபற்றி யவரை அரன் எனவே தேறி வழிபடுக, ஏனைப் பாசப் பற்றுடையாரது பற்று விட்டொழிதற் பொருட்டு எ - ம்.*

*சிவமாதல் தெளிந்து கோடற்கு வேடமுதலியவற்று ளொன்றே யமையும் என்பார், சிவமாதலை யவற்றோடு தனித்தனி கூட்டிக் கூறினார். அவ்வேடமுடையாரென்று எடுத்துக்கொண்டு உரைக்க.*

*பாசத்தார் : ஆகுபெயர்.* (௩)

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தால் எனநினையும் அவர்க்கும்
உளன்எங்கும் இலன்இங்கும் உளன்என் பார்க்கும்

விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோன்
மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண ஒண்ணுத பால்முலைப்பால் விம்மி [பர்க்கே.
யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவன்அன்

(ப - ரை.) திருக்கோயிலுள் இருக்கும் திருமேனி தன்னையே - (பகுத்துணர்தலின்றித்) திருஆலயத்துள் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கம் முதலிய திருமேனிகளையே, சிவனெனக் கண்டவருக்கு - சிவமெனக் கண்டு வழிபடுஞ் சரியையாளர்க்கு, சிவன் அங்கே உறைவன் - சிவபிரான் ஆண்டு வெளிப்படாது நின்று அருள்செய்வன், மந்திரத்தால் உருக்கோலியென நினையுமவர்க்கும் - (அருவப்பொருளாகிய சிவபிரான்) ஈசானுதிமந்திரங்களாற் சிவலிங்கமுதலிய திருவுருக் கோலினுன் எனக் கருதி (மந்திரநியாசத்தால்) வழிபடுங் கிரியையாளர்க்கும், உளன் எங்கும் இலன் இங்கும் உளன் என்பார்க்கும் - (யோகிகள்) உள்ளமெங்கணும் இல்லமாக வாழுஞ் சிவபிரான் இத்திருமேனியிலும் வீற்றிருந்து பூசைகொண்டருளுவன் எனக்கருதி (ச்சாத்தியமந்திரங்களால்) வழிபடும் யோகிகட்கும், இந்தனத்தின் எரிபோல் மந்திரத்தில்விருப்பாய வடிவாகி (அங்கே) வந்து உதித்தும் - (முறையே) விறகைக்கடைந்த வழித்தோன்றும் எரி (யும் கறந்தவழித் தோன்றும்பாலும்) போல் அவ்வம் மந்திரங்களால் அவரவர் விரும்பிய வடிவாய் அத்திருமேனிகளில் (அப்போதப்போது) தோன்றிநின்று அருள்செய்வன்; அன்பர்க்கே - அவர்போல் ஏகதேசமாய்க் குறித்தலின்றி அன்பு மாத்திரையான் ஆண்டு வழிபடு) ஞானிகட்கு, மிகும் உரு எங்கும் காண ஒண்ணுத பால் சுரபிக்கு முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல (அங்கே) வெளிப்பட்டு அருளுவன் - மேம்பட்ட வடிவம் எங்கணுங் காணப்படாத பால் (கன்றை நினைந்த) புனிற்றுவின் முலையின் விம்மியொழுகுவதுபோல (க்கருணை மிகுதியால் அவ்வன்பே தானுய் எப்போதும்) ஆண்டு வெளிப்பட்டு நின்று அருள்செய்வன் (ஆகலான் அஃதறிந்து வழிபடுக) என்க.

(பொ - ரை.) பகுத்துணர்தலின்றிச் சிவலிங்கம் முதலிய திருமேனியே சிவமெனக் கண்டு வழிபடுஞ் சரியையாளர்க்குச் சிவன் ஆண்டு வெளிப்படாதுநின்று அருள்செய்வன். அருவப் பொருளாகிய சிவன் ஈசானுதி மந்திரங்களாற் சிவலிங்கம் முதலிய திருவுருக்கோலினுன் எனக் கருதி மந்திர நியாசத்தால் வழிபடுங் கிரியையாளர்க்கும், யோகிகளுள்ளம் எங்கணும் இல்லமாக வாழுஞ் சிவன் இத்திருமேனியிலும் இருந்து பூசை கொண்டருளுவன் எனக்கருதிச் சாத்திய மந்திரங்களால் வழிபடும் யோகிகட்கும், கடைந்த வழித் தோன்றும் எரியுங் கறந்தவழித் தோன்றும் பாலும்போல, அவ்வமந்திரங்களால் அவரவர் விரும்பிய வடிவாய் அத் திருமேனிகளில் அப்போதப்போது தோன்றி நின்று அருள்செய்வன். அவர்போல் ஏகதேசமாய்க் குறித்தலின்றி அன்புமாத்திரையான் ஆண்டுவழிபடு ஞானிகட்கு, கன்றை நினைந்த புனிற்றுவின் முலைப்பால்போல, கருணைமிகுதி

யால் அவ்வன்பே[1] தானாய் எப்போதும் ஆண்டு வெளிப்பட்டு நின்று அருள்செய்வன்; ஆகலான் அஃதறிந்து வழிபடுக எ-ம்.

ஆகலானஃதறிந்து வழிபடுக என்பது குறிப்பெச்சம்.

அங்கே யென்பது யாண்டுஞ் சென்றியையும், மந்திரத்தால் உருக்கோலி யென மாறுக. கோலியென்பது பெயர்.

உளன் உள்ளம்.

இலனென்பது இல்லெனும் இடைப்பெயரடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று.

இங்கும்என்னும் உம்மை இறந்தது தழீஇயிற்று.

அன்பர்க்கு விம்மி யொழுகுவது போலெனவே யோகிகட்குக் கறக்க ஒழுகும் பால்போல் என்பது பெறப்பட்டது.

அன்பர்என்றது ஈண்டு ஞானிகள்மேற்று, "அன்பரொடுமரீஇ" என்புழிப்போல.[2]

திருவேடஞ் சிவனெனத் தெளியுமாறு தொழப்படுவாரது கருத்து வகைபற்றிக் கூறினர், சிவாலயத்தைச் சிவனெனத் தெளியுமாறு தொழுவாரது கருத்துவகைபற்றிக் கூறினரென வுணர்க. (௪)

ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்
நாதன்தன் பணிஞானி நாலினுக்கும் உரியன்
ஊனமிலா யோகமுதன் மூன்றினுக்கும் உரியன்
யோகிகிரி யாவான்தான் ஒண்கிரியை யாதி
யான இரண் டினுக்குரியன் சரியையினில் நின்றோன்
அச்சரியைக் கேயுரியன் ஆகலினால் யார்க்கும்
ஈனமிலா ஞான குரு வேகுருவும் இவனே
ஈசன்இவன் தான்என்றும் இறைஞ்சி யேத்தே.

(ப - ரை.) (மேலைச் செய்யுளிற் கூறிய நால்வகைக் கருத்தும் அவரவர் மாத்திரைக்கே உரித்தாயிருக்கச் சரியையாளரைப் போல ஞானி வழிபடுதல் எற்றுக் கெனின்) ஞானயோகக் கிரியா சரியை நான்கும் நாதன்தன்பணி - ஞானயோகக் கிரியா சரியையென்னும் நான்கு பாதத்தின் நிகழுங் கிரியை யெல்லாம் கருத்தாவினது உண்மைப்பணியாகலான் (உலகின் மருவாத இன்பத்துள் வைத்த குருவின் உபகாரத்தைக் கருதி நால்வகைத் தொழிலும் ஞானி செய்தலே கடப்பாடு என்பது உள்தொழில்செய்வார் புறத்தொழிற்கும் உரியர் என்னும் முறைமைபற்றி, ஞானிநாலினுக்கும் உரியன் - அந்த ஞானி ஞான முதல் நான்கினுக்கும் உரியன் என்றும் (ஏனையோர் தத்தந்தொழிற்கே உரியர்என்பது புறத்தொழில் செய்வார் உள்தொழிற்கு உரியரல்லர் என்னும் முறைமைபற்றி), யோகிஊனம் இலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன் - யோகி குற்றமில்லாத யோகமுதல் மூன்றினுக்கும்

1. 'அன்பும் சிவமும்' திருமூலர், உ௭0.
2. சிவஞானபோதம், பன்னிரண்டாஞ்சூத்திரம்.

உரியன்என்றும், கிரியாவான்றான் ஒண்கிரியை ஆதி ஆன இரண்டி னுக்கு உரியன் - கிரியாவான் ஒள்ளியகிரியை முதலிய இரண்டினுக்கும் உரியன் என்றும், சரியையினில் நின்றோன் அச்சரியைக்கே உரியன் - சரியாவான் அச்சரியையொன்றிற்கே உரியன்என்றும் (உணர்ந்து கொள்ளப்படுவன), ஆகலினால் யார்க்கும் ஈனம் இலாஞானகுருவே குருவும் - ஆகலினால் (இனி அந்நால்வகைப் பாதத்தின் நிற்கும் மாணாக் கர்க்கு ஆசிரியன்மார் உபதேசித்தற்கட்படும் உரிமையும் இவ்வாறே வைத்துணர்ந்து) எல்லார்க்கும் (உபதேசித்தற்குரிய) குறைவில்லாத ஞான குருவே தலையாய குருவென்றும், ஈசனிவன்றான் இவனே என் றும் இறைஞ்சி ஏத்தே - (ஈண்டுக்கூறிய) தாபர (சங்கம)ங்களும் இக் குருவடிவின் வேறல்ல என்றுந் (தேறி அவ்விரண்டினும்) வழிபடுக என்க.

(பொ - ரை.) மேலைச் செய்யுளிற் கூறிய நால்வகைக் கருத் தும் அவரவர் மாத்திரைக்கே உரித்தாயிருக்கச் சரியை யாள ரைப்போல ஞானி வழிபடுதல் எற்றுக்கெனின், நாலுபாதத் தின் நிகழுங் கிரியையெல்லாங் கர்த்தாவினது உண்மைப்பணி யாகலால், உலகின் மருவாத இன்பத்துள் வைத்த குருவின் உப காரத்தைக் கருதி நால்வகைத் தொழிலும் ஞானி செய்தலே கடப்பாடுஎன்பது உள்தொழில் செய்வார் புறத்தொழிற்கும் உரியர்என்னும் முறைபற்றியும், ஏனையோர் தத்தந் தொழிற்கே உரியர் என்பது புறத்தொழில் செய்வார் உள்தொழிற்கு உரியர் அல்லர் என்னும் முறைபற்றியும் உணர்ந்து கொள்ளப்படுவன. இனி அந்நால்வகைப் பாதத்தின் நிற்கும் மாணாக்கர்க்கு ஆசிரி யன்மார் உபதேசித்தற்கட் படும் உரிமையும் இவ்வாறே வைத் துணர்ந்து, எல்லார்க்கும் உபதேசித்தற்குரிய ஞானகுருவே தலையாய குருவென்றும், ஈண்டுக் கூறிய தாபரசங்கமங்களும் இக்குருவடிவின் வேறல்லஎன்றுந் தேறி, அவ்விரண்டினும் வழி படுக எ - ம்.

மேற்கூறிய நால்வகைக் கருத்துக்கும் உரியவராவாரைக் கூறு வார், அவற்றை யுள்ளடக்கி நிற்கும் ஞானம் முதலியவற்றையுடையா ரது இயல்பின்மேல் வைத்துக் கூறினார்.

சொற் பல்காது மாட்டேற்றின்மேல் வைத்துணர்ந்துகோடற் பொருட்டு, ஆதலினால் இறைஞ்சி யேத்தே யென்பதனையும் ஈண்டுடன் கூறினார்.

திருவேடம் ஆலயங்களெல்லாம் அரன்எனவே தொழுது இறைஞ் சுதற்கட்படும் விசேடங்கூறியவாறு.

ஈசன்இவன் என்புழி இவன்என்பது பகுதிப்பொருள் விகுதி. ஈண்டு ஈசனென்றது திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனியை.

என்றும் என்னும் உம்மையை எதிரது தழீஇயிற்றாக்கித் திரு வேடமும் இவனேயென் றிறைஞ்சி யேத்து எனவும் உரைத்துக் கொள்க.

இவை மூன்றுசெய்யுளானும் மூன்றாங்கூறு தெரித்துணர்த்தி வலி யுறுத்தப்பட்டது. (ரு)

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தவியோ கத்தான்
மணியிரத குளிகையினுன் மற்றும் மற்றுந்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத
சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்
அந்தமிலா அணிமாதி ஞானங்கள் எல்லாம்
அடைந்திடும் ஆசான்அருளால் அடிசேர் ஞானம்
வந்திடும்மற் றென்றாலும் வாரா தாகும்
மற்றவையும் அவனருளான் மருவும் அன்றே.

(ப - ரை.) *மந்திரத்தால்* - மந்திரங்களாலும், *மருந்துகளால்* - மருந்துகளாலும், *வாய்த்த யோகத்தால்* - சிறந்த யோகத்தாலும், *மணி இரத குளிகையினுல்* - மணியாகிய இரசகுளிகையினுலும், *மற்றும் மற்றும் தந்திரத்தே சொன்ன முறைசெய்ய* - வேறுவேறு சாத்திரங்களிலே கூறியபடி செய்தலாலும் (வருஞ்சித்திஞானங்களும்), *வேதம் சகலகலை ஞானங்கள்* - வேதாகம முதலிய கலைஞானங்களும், *திரிகால ஞானம்* - திரிகால ஞானங்களும், *அந்தம் இலா அணிமாதி ஞானங்கள் எல்லாம்* - முடிவில்லாத அணிமாமுதலிய ஞானங்களுமாகிய அனைத்தும், *அடைந்திடும்* - (ஆசிரியனையின்றியும்) அமையும், *அடிசேர் ஞானம் ஆசான் அருளால் வந்திடும் மற்றென்றாலும் வாராதாகும்* - பொருந்திய திருவடிஞானம் ஆசிரியன் அருளால் அமைதலேயன்றி ஒருவாற்றானும் (அவனையின்றி) அமையப்பெறாது, *அவன் அருளால் மற்றவையும் மருவும் அன்றே* - அக்குருவருளால் முற்கூறியனவும் அமையப்பெறும் (ஆகலால் இவனே ஈசனிவன்றானென்றும் இறைஞ்சியேத்து) என்க.

(பொ - ரை.) ஏனை ஞானங்களெல்லாம் ஆசிரியனையின்றியும் அமையும், திருவடிஞானம் ஒருவாற்றானும் ஆசிரியனையின்றி யமையாது; ஆகலால் இவனேயீசன் இவன்றானென்றும் இறைஞ்சியேத்து எ - ம்.

ஆகலாலிவனேயீசன் இவன்றான் என்றும் இறைஞ்சியேத்து என்பது குறிப்பெச்சம்

அவ்வாறு ஏத்துதற்குரிய பெருமை கூறியவாறு.

மற்றவையும் அவன் அருளான் மருவும் என்றது இயைபின்மை நீக்குதற் பொருட்டு. (௬)

பரப்பிரமம் இவன்என்றும் பரசிவன்தான் என்றும்
பரஞானம் இவன்என்றும் பராபரன்தான் என்றும்
அரன்றருஞ்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும்
அருட்குருவை வழிபடவே யவன் இவன்தான் ஆயே
இரங்கியவா ரணம்யாமை மீன்அண்டஞ் சினையை
இயல்பினுடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதாம் ஆக்குமா போற்சிவமே யாக்கும்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே.

(ப-ரை.) பரம் பிரமம் இவனென்றும் - சொரூபசிவமுங் குருமூர்த்தமே யெனவும், பரசிவன்ருன் (இவன்) என்றும் - தடத்த சிவமும் குருமூர்த்தமேயெனவும், பரஞானம் இவன் என்றும் - பரஞானத்தை யுடையாருங் குருமூர்த்தமேயெனவும், பராபரன்ருன் (இவன்) என்றும் - ஏனைத் தாபரமூர்த்தங்களும் குருமூர்த்தமேயெனவும், அரன் தருஞ்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும் - அறுபத்து மும்மை நாயன்மார் முதலிய சிவபத்தர் பொருட்டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையு மூர்த்தங்களெல்லாங் குருமூர்த்தமேயெனவுந் (தேறி), அருட்குருவை வழிபடவே - ஞானசாரியனை (வழிபடுக அங்ஙனம்) வழிபடப் பெறின், அவன் இவன்தானுயே - சிவபிரான் இக் குருவை ஆவேசித்து நின்று, இரங்கிய வாரணம் யாமை மீன் இவை - இரக்கமுற்ற கோழி யாமை மீனுகிய இவைகள், அண்டஞ் சினையை இயல்பினெடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும் பரிந்து தாமாக்குமா போல் - (முறையே) அண்டமாகிய முட்டையை இயல்பாகத் தீண்டியும் கருதியும் நோக்கியும் பரிவுற்றுத் தன்வண்ணமாகச் செய்யுமாறுபோல, பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும் சிவமே யாக்குந்தானே-(நாடோறுஞ் செய்யும்) பரிச முதலிய மூன்ருனும் (அவ்வுயிரைத்) தன்வண்ணமாகச் செய்தருளுவன் என்க.

(பொ-ரை.) சிவபேதம் அனைத்துங் குருமூர்த்தமேயெனத் தேறி ஞானசாரியனை வழிபடுக; அங்ஙனம் வழிபடப்பெறின், சிவன் இக் குருவை யாவேசித்து நின்று நாடோறுஞ் செய்யும் பரிசம் முதலிய மூன்றினும் அவ்வுயிரைத் தன்வண்ணமாகச் செய்தருளுவன் எ - ம்.

அவ்வாறேத்தினர்க்கு வரும்பயன் கூறியவாறு.

பரம்பிரமம் என்றது சொரூபசிவத்தை யெனவும், பரசிவன் என்றது தடத்தசிவத்தையெனவும், பரஞானம் என்றது ஆகுபெயரான் அதனையுடையாரை யெனவும், பராபரன் என்றது ஏனைத் தாபர மூர்த்தத்தையெனவும், அரன்தருஞ் சீர்நிலையென்றது அறுபத்து மும்மை நாயன்மார் முதலிய சிவபத்தர் பொருட்டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையும் மூர்த்தங்கள் எல்லாவற்றினையும் எனவுங் கொள்க.

பரஞானம் இவன் என்றும் பராபரன்தான் என்றும் வழிபடுதல் அதிகாரப்பட்டமையின் ஏனையவும் உடன்கூறினர். (எ)

பன்னிரண்டாஞ் சூத்திரம் முடிந்தது.

ஆகத் திருவிருத்தம் - ௩௨அ.

---

சிவஞான சித்தியார் சுபக்கம் முற்றிற்று.

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.

சிவஞானயோகிகள் திருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

---

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

